# தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
ம. துரை
(பதிவு எண்: 694)

நெறியாளர்
முனைவர் ஆ.சீனிவாசன்
தமிழ் உயராய்வு மையம்
அழகப்பா அரசு கலைக்கல்லூரி
காரைக்குடி - 630003




## அழகப்பா பல்கலைக்கழகம்

**(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் ~A+|(CGPA:3.64) தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல் தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

அக்டோபர் - 2021

# தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

ம. துரை

(பதிவு எண்: 694)

நெறியாளர்

முனைவர் ஆ.சீனிவாசன்

தமிழ் உயராய்வு மையம்

அழகப்பா அரசு கலைக்கல்லூரி

காரைக்குடி - 630003






அழகப்பா பல்கலைக்கழகம்

**(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் ~A+|(CGPA:3.64) தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல் தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

அக்டோபர் - 2021

முனைவர் ஆ. சீனிவாசன்
உதவிப்பேராசிரியர், (பணி நிறைவு)
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி - 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**'தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் திரு. **ம.துரை** அவர்கள் பகுதிநேர முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா அரசு கலைக் கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவர் ஆய்வுசெய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(ஆ.சீனிவாசன்)**
நெறியாளர்

தமிழ்த்துறைத் தலைவர்

ம. துரை

முனைவர்பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்),

பதிவு எண் : 694,

தமிழ் உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி,

காரைக்குடி - 630 003.

நாள் :

# ஆய்வாளர் உறுதிமொழி

‘**தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்**” என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

ஆய்வாளர்

(ம.துரை)

நெறியாளர்

**முனைவர் ஆ. சீனிவாசன்,**

உதவிப்பேராசிரியர், (பணி நிறைவு)

தமிழ் உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி,

காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

**'தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் மற்றும் ஆய்வுப்புல முதன்மையர் ஆகியோர்க்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன். மேலும் பணியின் போதே பகுதி நேரமாக ஆய்வு மேற்கொள்ள அனுமதி தந்த கல்லூரிக் கல்வி இயக்குநர் அவர்களுக்கும் அழகப்பா அரசு கலைக்கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என்னை ஆய்வாளராக ஏற்று, பதிவு செய்தது முதல் இவ்வாய்வு செம்மையாக நிகழ்ந்தேற நாள்தோறும் நல்லாற்றுப்படுத்தியும் நூல்கள் வழங்கியும் உறுதுணையாக இருந்து பல உதவிகள் புரிந்த எனது வழிகாட்டி மதிப்பிற்குரிய ஆய்வு நெறியாளர் அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தின் மேனாள் உதவிப்பேராசிரியர் முனைவர் ஆ. சீனிவாசன் அவர்களுக்கு எனது அகம் குளிர்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களையும் ஆலோசனைகளையும் வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக நூலகர் முனைவர் திருநாவுக்கரசு அவர்களுக்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகர் அவர்களுக்கும், தமிழ்த்துறை நூலகத்திற்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தன் சுகம் மறந்து என் உயர்வையே உயிராகக் கொண்டு முழுமூச்சாய் என்னை வளர்த்து இந்நிலைக்கு ஆளாக்கிய தியாகத்தின் திருவுருவமாய்த் திகழும் அன்பு அண்ணன் திரு. ம. சண்முகம் அவர்களுக்கு என் உளப்பூர்வமான நன்றியினை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

என் ஆய்வுக்குப் பலநிலைகளிலும் ஆலோசனைகள் வழங்கி, ஆய்வேடு செம்மையுற உதவிய இணைப்பேராசிரியர் - நண்பர் முனைவர் ச.முருகேசன், முனைவர் க.சொல்லேருழவன் மற்றும் அன்பிற்கினிய சகோதரிகள் முனைவர் ப.சு. செல்வமீனா, முனைவர் அ.பாரதிராணி, சகோதரர் முனைவர் ரெ.முத்துராசன் அவர்களுக்கும், திருச்சி தேசியக் கல்லூரிப் பேராசிரியர் சகோதரர் முனைவர் சி.காந்தி அவர்களுக்கும் என் உணர்வுபூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னை ஆய்வில் ஊக்கப்படுத்தித் துணைநின்ற அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வுமையத்தின் பேராசிரிய நண்பர்களுக்கும், பிற துறைப்பேராசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது அனைத்து நிலைகளிலும் துணைநின்ற எனது இல்லறத் துணைவியார் திருமதி து. மாலதி அவர்களுக்கும், என் அன்புச் செல்வங்கள் செல்வி யாழினி, செல்வி இளவேனில், செல்வி முழுமதி ஆகியோருக்கும் என் உள்ளம் மகிழ்ந்த நன்றியை நவில்கிறேன்.

ஈன்ற பொழுதினும் பெரிதுவந்த என் அன்னைக்கும், தோளில் சுமந்து என்னை ஆளாக்கித் தெய்வமாய் நிற்கின்ற தந்தைக்கும் என் மனப்பூர்வமான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வேட்டைச் சிறப்புறத் தட்டச்சு செய்து, வடிவமைத்துக் கொடுத்த கணினி நிறுவனத்தார்க்கும் நன்றியினைப் புலப்படுத்தி மகிழ்கிறேன்.

ஆய்வாளர்

**ம. துரை**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ, | - | அடி |
| அ.ப, | - | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| அ-ள், | - | அடிகள் |
| இ.ப.த.ம. | - | இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் |
| மன்றம் | | |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| க.ம. | - | கல்மரம் |
| குறள். | - | திருக்குறள் |
| கோ.க. | - | கோவேறு கழுதைகள் |
| சோ.சு.பெ, | - | சோலை சுந்தரப்பெருமாள் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| ம.ச. | - | மலரும் சருகும் |
| ம.ப, | - | மறுபதிப்பு |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| மூ.ப. | - | மூன்றாம் பதிப்பு |
| மேலது | - | மேலே கூறப்பட்ட நூல் |
| மொ.ஆ, | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| வ. | - | வரி |
| p. | - | page |
| pp. | - | pages |

## ஆய்வு முன்னுரை

தமிழ் இலக்கியங்களைக் கால அடிப்படையில் சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பிய இலக்கியம், பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், இக்கால இலக்கியம் என்று வகைப்படுத்துவர். இவை பரந்துபட்ட களங்களைக் கொண்டவையாகும். தொன்மைத் தமிழிலக்கியங்கள் பண்டைத் தமிழகத்தின் மக்கள்நிலை, வாழ்வியல், அரசியல், பொருளாதாரம், கலை, வாழ்வியல் மேம்பாடு முதலானவற்றை எடுத்துரைத்தன. அவை ஓரளவில் மக்கள் இலக்கியங்களாக இருந்தன. புராணங்களும், சமயச் செல்வாக்கும் வலுவடைந்த காலகட்டத்தில், இலக்கியங்களின் போக்கில் சமயங்களின் ஆதிக்கம் தலைதூக்கியது. இதனால் மக்களைப் பற்றிய இலக்கியப் படைப்புகள் பின்னுக்குத் தள்ளப்பட்டன.

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் உரைநடையிலான இலக்கியங்கள் உருவாக்கம் பெற்றன. அவற்றுள் 'புதினம்' என்னும் இலக்கிய வகைமை அனைத்து மக்களின் வாழ்வியல் நிலைகளையும் கதைப்போக்கில் வெளிப்படுத்துவதாக அமைந்தது. தொடக்க காலப் புதினங்களில் கற்பனைக் கூறுகள் மிகுந்திருந்தாலும், பிற்காலத்தில் எதார்த்தப் போக்கில் அமைந்த புதினங்கள் மக்கள் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டுவனவாக அமைந்தன. இவ்வகையான இலக்கியங்களால் அவ்வக்காலத் தொழில்நிலை, இனம், மதம், அரசியல், ஆட்சி, அதிகாரம், வாழ்வியல் சிக்கல்கள், தீர்வுகள் ஆகியவற்றை இனம்காண முடிந்தது.

இந்திய விடுதலைக்கு முன்னும் பின்னும் மார்க்சியமும் காந்தியமும் எதிரெதிர் முரணில் இலக்கியங்களில் இடம்பிடித்தன. மார்க்சியம் வலியுறுத்தும் பொதுமைப்படுத்தப்பட்ட ஏகாதிபத்தியத்திற்கெதிரான, புரட்சிமயமான போராட்ட உணர்வும், காந்தியம் வலியுறுத்திய அகிம்சை வழியும் சமூகத்தில் பெரும் மாற்றத்தை உருவாக்கும் என மக்கள் நம்பினர். இவ்விரு கொள்கைகளாலும் சமூகத்தில் புரையோடிக்கிடந்த சாதி, தீண்டாமை, ஆணவப் போக்கு, அடக்குமுறை, பொருளாதாரச் சுரண்டல், உரிமை மறுப்பு, பெண் விடுதலை, ஒடுக்கப்பட்டோர் விடுதலை முதலான போக்குகளை ஒழிக்கும் முயற்சி ஏற்பட்டது. இந்த நிலையில் உலக மயமாக்கல் சிந்தனை இலக்கியப் போக்கினை மடைமாற்றம் செய்தது. எல்லார்க்கும் எல்லாமும் என்ற சிந்தனை பரவலாக்கம் பெற்றது. பொதுமையும் புரட்சியும் உலகெங்கிலும் தலைதூக்கின. இலக்கியத்திலும் இதன் தாக்கம் மிகுந்தது. இதனால் பொதுவுடைமைச் சிந்தனையைப் பிரதிபலிக்கும் இலக்கியங்கள் தோற்றம் பெற்றன. இவ்வகையான புதினங்கள் பல்வேறு ஆய்வுக் களங்களைக் கொண்டவையாக அமைந்தன.

### ஆய்வுச் சிக்கல்

இலக்கியங்கள் காட்சிப்படுத்தும் நிகழ்வுகளின் உண்மைத் தன்மை, அதன் நம்பகத் தன்மை குறித்த வினாக்கள் இன்றைக்கு எழுப்பப்பட்டு வருகின்றன. கலை கலைக்காகவே; கலை வாழ்க்கைக்காகவே என்ற இலக்கியக் கொள்கைகளில் 'கலை வாழ்க்கை'க்கானதாகப்

படைக்கப்பட வேண்டும்; கலையால் மானுட மலர்ச்சி ஏற்பட வேண்டும். சமூகத்தில் புரையோடிக்கிடக்கும் நிகழ்வுகளைச் சுட்டுவதோடு நில்லாது, நிகழ்வுகளுக்கான காரணங்களையும் பின்னணிகளையும், பிரச்சினைகளுக்குரிய தீர்வுகளையும் காலச்சூழலோடு பொருத்தும் விதத்தில் படைத்தளிப்பதாக இலக்கியத்தின் போக்கு இருக்கவேண்டும் என்று பொதுவுடைமை இயக்கம் வற்புறுத்துகிறது. இச்சிந்தனைகள் தமிழ்ப் புதினங்களில் இடம்பெற்றுள்ளதாக ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். இப்புதினங்கள் உண்மையிலேயே பொதுவுடைமை இயக்கச் சிந்தனை அறிதலுக்குத் துணைசெய்யுமா? என்பதே ஆய்வின் சிக்கலாக அமைந்திருக்கிறது.

**ஆய்வுத் தலைப்பு**

காலம் காலமாக ஆதிக்கச் சாதி மக்களாலும், தொழிற்சாலை முதலாளிகளாலும், அதிகாரிகளாலும் சமூக இழிவுகளுக்கும், பொருளாதார, உழைப்புச் சுரண்டலுக்கும், பாலியல் வன்முறைகளுக்கும் உள்ளாகி, உரிமைகளை இழந்து தவிக்கும் ஒடுக்கப்பட்ட தொழிலாளர்களுக்கான விடுதலைக் கருத்துக்களைக் கருவாகக் கொண்டு எழுந்தவையே பொதுவுடைமை இயக்கப் பின்னணி கொண்ட புதினங்கள் ஆகும். இவற்றில் அடித்தட்டு மக்கள் படும் தொழிலியல் துயரங்கள், பொருள் சுரண்டல், உழைப்புச் சுரண்டல், ஆதிக்கச் சாதிகளால் அடக்குமுறைக்கு உள்ளாகும் நிலை, கல்வி மறுப்பு, பொருளாதார, சாதிச் சமத்துவமின்மை, அரசுகளின் தெளிவற்ற போக்கு, தொழிற்சங்க உருவாக்கத்தின் தேவை ஆகியன புலப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுக்கான தோற்றப் பின்னணியும், வர்க்கப் போராட்டமும், அதனால் எழுந்த விளைவுகளும் இப்புதினங்களில் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. அதனை மையமிட்டுத் **“தமிழ்ப் புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்”** என்பது ஆய்வின் தலைப்பாக அமைகிறது

**கருதுகோள்**

மார்க்சியப் பொதுவுடைமை இயக்கத்தின் புரிதலுக்கும், அறிதலுக்கும் உரிய கையேடுகளாகப் பொதுவுடைமைக் கலை, இலக்கியங்கள் பார்க்கப்படுகின்றன. இவை பொதுவுடைமை இயக்க அறிவின் வளர்ச்சிக்கு உரிய சான்றுகளாகவும், தரவுகளாகவும் திகழ்கின்றன. பொதுவுடைமை இயக்கம் மானுட வளர்ச்சி ஒன்றை மட்டுமே கருத்தில் கொண்டு செயலாற்றுகிறது. புதிய அறிவியல் கண்ணோட்டம் கொண்ட இத்தகைய கருத்துப் போராட்டத்தினால் ‘‘வர்க்க முரண்பாடுகளை ஒழிக்கவும், சமுதாய உற்பத்தி உறவில், தொழிலாளி வர்க்கமும், வறுமைக் கோடுகளைக் களையவும், பெண்களும் சமபங்கு வகிக்கவும், தாழ்வு நிலையை ஒழிக்கவும், சமுதாயத்தை மாற்றியமைக்கவும், பாட்டாளி வர்க்க அதிகாரத்தை நிலைநாட்டவும் இயலும் என்னும் பொதுவுடைமை இயக்கச் சிந்தனை, தமிழ்ப் புதினங்களில் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன’’ என்ற கருதுகோளை முன்வைத்து இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

### ஆய்வு நோக்கம்

ஆய்வு வகைமையில் குறிக்கோளியல் ஆய்வானது சிந்தனைகளால் கட்டமைக்கப்பட்டுள்ளது. கம்யூனிசச் சிந்தனை, குறிக்கோளியல் சார்ந்த வகைமையியல் ஆய்வாக அமைந்திருக்கிறது. அது சமூகத்தையும் பொருளாதாரத்தையும் சாதியத்தையும் பெண்ணியத்தையும் நிலவுடைமையையும் சமமாக வைத்து எண்ண வேண்டுமென்ற முற்போக்குச் சிந்தனையை இலக்கியத்தில் பொருத்திப் பார்க்கிறது. இத்தகைய முற்போக்குச் சிந்தனைகள் தமிழ்ப் புதினங்களில் எவ்வாறு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன என்பதையும், இதனால் நிகழ்ந்துள்ள சமூக மாற்றங்களைக் கண்டறிவதும் ஆய்வின் முதன்மை நோக்கமாக அமைந்திருக்கிறது. இவற்றோடு பொதுவுடைமைச் சிந்தனைகள் வலியுறுத்தும் விவசாயக் கூலித் தொழிலாளர்கள், அவர்தம் வாழ்வியலின் ஒடுக்கப்பட்ட நிலை, சாதியின் பெயரால் ஒதுக்கப்படும் நிலை, விவசாயக் கூலிகள் தொழிலாளர்களாக மாற்றம் பெற்ற சமூக நிலை, தொழிலாளர் சிக்கல்கள், பொருள் சுரண்டல், தொழிற்களத் துயரங்கள், பெண் தொழிலாளர்கள் நிலை, தொழிற்சங்க வரலாறு, தொழிற்சங்க உருவாக்கம், ஒன்றுபட்ட தொழிலாளர் எழுச்சி, போராட்டமும் தீர்வும் ஆகியன புதினங்களில் இடம்பெற்றுள்ள திறத்தினைக் கண்டறிந்து வெளிப்படுத்துவதும் இவ்வாய்வின் நோக்கங்களாக அமைகின்றன.

### ஆய்வு முன்னோடிகள்

தமிழில் பொதுவுடைமைச் சிந்தனை கொண்ட புதினங்கள் அண்மைக் காலத்தில் மக்கள் கவனத்தைப் பெற்றுள்ளன. தொழிலாளர் உரிமை மீட்டெடுப்பு, சுயசார்பு, பணிப் பாதுகாப்பு மற்றும் விடுதலைக்கு அவை வழிவகுத்துள்ளன. இதனால் பொதுடைமைச் சிந்தனை கொண்ட இலக்கியங்கள் மீதான திறனாய்வுகள், கட்டுரைகள், ஆய்வேடுகள் வெளிவரத் தொடங்கியுள்ளன. அவ்வகையில் இவ்வாய்வுக்கு, கோவை ஞானியின் 'மார்க்சியமும் தமிழ் இலக்கியமும்' என்னும் நூலும், கோ. தான்யாவின், 'தமிழ்க் கவிதைகளில் பொதுவுடைமைச் சிந்தனைகள்' என்னும் ஆய்வு நூலும், க. பூரணச்சந்திரன் தொகுப்பில் வெளிவந்த 'தமிழ் இலக்கியத்தில் ஒடுக்கப்பட்டோர் நிலையும் மேம்பாடும்' என்னும் நூலும் ஆய்வுக்குரிய முன்னோடித் தடத்தை ஏற்படுத்தித் தந்துள்ளன.

இவர்களின் வழித்தடத்தில் வேளாண் தொழிலாளர்கள், கட்டடத் தொழிலாளர்கள், தூய்மைப் பணியாளர்கள், தோல் பதனிடும் தொழிலகத் தொழிலாளர்கள் ஆகியோரின் பிரச்சினைகளை மையமிட்டுக் காட்டும் புதினங்களில் இடம்பெறும் தொழிலாளர் சிக்கல்களை எடுத்துரைக்கும் தனிநிலை ஆய்வாக இவ்வாய்வு திகழ்கிறது.

### ஆய்வு எல்லை

பொதுவுடைமை இயக்கப் பின்னணியில் ஏராளமான புதினங்கள் வெளிவந்திருந்தாலும், ஆய்வுக் காலத்தின் அருமையையும், ஆய்வேட்டின் பக்க வரையறையையும் கருத்தில்

கொண்டு டி. செல்வராஜ், சோ. தர்மன், பூமணி, சோலை சுந்தரபெருமாள், திலகவதி, இமையம், அறிவழகன் போன்றோரால் எழுதப்பட்ட எட்டுப புதினங்கள் இவ்ஆய்வுக்குரிய எல்லையாகக் கொள்ளப்பெறுகின்றன.

**ஆய்வு மூலங்கள்**

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

பொதுவுடைமை இயக்கச் சிந்தனைப் போக்கின் பின்னணியில் தொழிலாளர்களைப் பாத்திரங்களாகக் கொண்டு தமிழில் வெளிவந்துள்ள,

1. பூமணி - பிறகு (1979)
2. இமையம் - கோவேறு கழுதைகள் (1994)
3. சோலை. சுந்தரபெருமாள் - செந்நெல் (2000)
4. அறிவழகன் - கழிசடை (2003)
5. தர்மன், சோ., - கூகை (2005)
6. செல்வராஜ், டி., - மலரும் சருகும் (2011)
7. திலகவதி, - கல்மரம் (2012)
8. செல்வராஜ், டி., - தோல் (2017)

என்னும் எட்டுப் புதினங்கள் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

புதினத் திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுக்கட்டுரைகள், கம்யூனிசம், மார்க்சியம், அம்பேத்கரியம் முதலான சிந்தனைகள் குறித்த நூல்கள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியவை இவ்வாய்வின் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

புதின இலக்கிய வளர்ச்சி, பொதுவுடைமை இயக்கச் சிந்தனை, தொழிலாளர் வர்க்கம், பெண் வர்க்கம் ஆகியவற்றை விளக்கிச் செல்வதில் பகுப்பாய்வு அணுகுமுறையும், ஒடுக்கப்பட்டோர் வாழ்வியல், தொழிலாளர் எழுச்சி ஆகியவற்றைச் சமூகவியல் நோக்கில் அணுகுவதால் சமூகவியல் அணுகுமுறையும், புதினங்களில் அமையும் வர்க்கப்போராட்டம் குறித்து விளக்குவதில் விளக்கமுறைத் திறனாய்வும் என ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**இயல் பகுப்பு**

இவ்வாய்வு ஆய்வு முன்னுரை, ஆய்வு நிறைவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை:

1. **பொதுவுடைமை இயக்கமும் புதின இலக்கிய வளர்ச்சியும்**
2. **புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் தொழிலாளர் வர்க்கமும்**
3. **புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் ஒடுக்கப்பட்டோர் வாழ்வியலும்**
4. **புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் பெண் வர்க்கமும்**
5. **புதினங்களில் வர்க்கப் போராட்டமும் தொழிலாளர் எழுச்சியும்**

என்பனவாகும்.

'ஆய்வு முன்னுரையில்' ஆய்வுப்பொருள், ஆய்வுச்சிக்கல், ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் நோக்கம், கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறை, இயல் பகுப்பு, இயல் விளக்கம் ஆகியன இடம்பெற்றுள்ளன.

**'பொதுவுடைமை இயக்கமும் புதின இலக்கிய வளர்ச்சியும்'** என்னும் முதல் இயலில் ஆதிகாலப் பொதுவுடைமைச் சமுதாய நிலை, பொதுவுடைமை தோற்றச்சூழல், தேசியமும் தொழிலாளர் ஒடுக்க நிலையும், பொதுவுடைமையும் சமுதாயமும், பொதுவுடைமைச் சமுதாயத்தின் பண்புகள், பொதுவுடைமையும் மார்க்சியமும், மார்க்சியத் தத்துவக் கோட்பாடுகள், அடிமைச் சமூகம், நிலப்பிரபுத்துவச் சமூகம், முதலாளித்துவச் சமூகம், வர்க்கப் போராட்டம், அரசியல் போராட்டங்கள், தத்துவார்த்தப் போராட்டங்கள், பொதுவுடைமை இயக்கத்தின் வளர்ச்சிநிலை, இந்தியாவில் பொதுவுடைமை, தமிழகத்தில் பொதுவுடைமை இயக்கத் தோற்றம், பொதுவுடைமை இயக்கத்தால் விளைந்த பயன், புதின இலக்கியத்தின் தோற்றம், மார்க்சிய இலக்கியக் கோட்பாடுகள், கலை இலக்கியத்தில் பொதுவுடைமைச் சிந்தனைகள், புதின இலக்கியத்தின் விளக்கம், புதின இலக்கியத்தின் சமூகவியல் தன்மை, புதின எழுத்தாளரின் கடமை, இருபதாம் நூற்றாண்டுச் சமூகப் புதினங்கள், விளிம்புநிலை மக்கள் குறித்த பதிவுகள், புதினங்களும் சமூகப் பிரச்சனைகளும், இருபதாம் நூற்றாண்டில் புதின வளர்ச்சி ஆகியவை குறித்து ஆராயப்பெறுகின்றது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களின் கதைச் சுருககமும் அறிமுக நிலையில் சுட்டப்படுகின்றது.

**'புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் தொழிலாளர் வர்க்கமும்'** என்ற இரண்டாம் இயல், தொழிலாளர் சிறப்பு, ஆதிச்சமூகத்தில் வர்க்கநிலை, தமிழகத்தில் வர்க்கப் பிரிவின் தோற்றம், சங்க இலக்கியத்தில் ஒடுக்கப்பட்டோர், மக்கட்பிரிவு, முதலாளியும் தொழிலாளியும், தொழிலாளர் நிலை, பொதுவுடைமையும் தொழிலாளர்களும், சோசலிசம், புதினங்களில் அடிமைகள், பண்ணை அடிமைகள், தொழிற்சாலை அடிமைகள், அடிமைத் தொழிலாளர்கள், அடிமைகளின் எதிர்க்கவியலா மனநிலை, தொழிலாளர் வர்க்க உருவாக்கம், சிறுதொழிலகங்களில் கொத்தடிமைகள், தொழிலாளர் சிக்கல்கள், தொழிலியல் துயரங்கள், தொழிற்களப் பாதுகாப்பின்மை, உழைப்பை உறிஞ்சி வாழும் தன்மை, ஏளனம் செய்யும் நிலை, கூலி குறைவாகத் தருதல், தண்டனை அளித்தல், தீராநோய்க்கு ஆளாதல், குடிப்பழக்கத்திற்கு அடிமையாதல், மருத்துவ வசதியின்மை, முதலாளிகளின் இரக்கமற்ற

தன்மை, தொழிலாளர் அடக்குமுறைகள், காவலர் ஒடுக்குதல்கள், தொழிலாளர்களைச் சிறையிலடைத்தல், சிறைச்சாலைக் கொடுமைகள், சிறைச்சாலை தரும் மாற்றங்கள், பொருளாதார ஒடுக்குதல்கள், பொருள் சுரண்டல், ஊழலால் பாதிப்படைதல், விலைவாசி ஏற்றமும் பதுக்குதலும், பதுக்குதலால் தொழிலாளர்கள் பாதிப்புக்கு உள்ளாதல் ஆகியவற்றை ஆராய்வதாக அமைகிறது.

**'புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் ஒடுக்கப்பட்டோர் வாழ்வியலும்'** என்னும் மூன்றாம் இயலில் இலக்கியம் மானுட வாழ்வின் பதிவு, சமூகம் என்பதன் விளக்கம், சமுதாயச் சிக்கல், இலக்கியமும் சமுதாயப் பிரச்சினைகளும், பொதுவுடைமையின் தனித்துவம், ஒடுக்கப்பட்ட தொழிலாளர்களின் வாழ்விடச் சிக்கல்கள், வசிப்பிடச் சிக்கல்கள், சாதிப்பாகுபாடு, தொழிலாளர்களிடம் சாதிப்பிரிவினையை ஏற்படுத்துதல், சாதியின் பெயரால் ஒடுக்கப்படுதல், கிராமத்திற்குள் உள்ளே அனுமதிக்காத நிலை, சாதி வன்கொடுமைகள், சாதி ஆணவப் போக்கு, சாதி ஆதிக்கம், சாதிக் கொலைகள், தண்டனைகள் தருதல், சாதியின் பெயரால் ஒதுக்கிவைத்தல், சாதியின் பெயரால் வசைபாடுதல், சாதிப் பெயரைச் சொல்லி அவமதித்தல், ஒடுக்கப்பட்டோர் வாழ்வின் மேன்மையால் எழும் பொறாமை உணர்வு, காதல் மற்றும் மதத்தில் சாதி ஆணவ நிலை, மதப்பாகுபாடு, மதத்தில் சாதிப் பாகுபாடு, தேர்தலில் வாக்குரிமை மறுப்பு ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

**'புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் பெண் வர்க்கமும்'** என்னும் நான்காம் இயல் பெண்ணடிமை, பெண்ணிய எழுச்சி, வர்க்கப் பேராட்டத்தில் பெண், கம்யூனிச இயக்கத்தில் பெண்கள் பங்களிப்பு, மார்க்சியமும் பெண்ணியமும், பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள், தொழிற்களத்தில் பெண்கள், பெண் உழைப்பு மூலதனமாதல், தொழிற்களத்தில் பாதுகாப்பின்மை, பெண்கல்வி மறுக்கப்படுதல், சாதியின் பெயரால் ஒருமையில் பேசுதல், பெண்கள் மீதான வன்முறைகள், பெண்களின் துணிவின்மை, பாலியல் வன்முறை, வன்முறைக்குப் பலியாதல், குடும்ப வாழ்வில் பெண்கள் படும் இன்னல்கள், குடும்ப வாழ்வில் வறுமை, குடும்ப வன்முறை, பெண்ணியம், வன்முறைக்கு எதிரான பெண்ணியச் செயற்பாடுகள், சோசலிசப் பெண்ணியம், தலைமை ஏற்கும் பெண்கள் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறது.

**'புதினங்களில் வர்க்கப் போராட்டமும் தொழிலாளர் எழுச்சியும்'** என்ற ஐந்தாம் இயலில், வர்க்கம் என்பதன் விளக்கம், வர்க்கப் போராட்டம், வர்க்கமும் பொதுவுடைமை இயக்கமும், உழைப்பாளர் துயர் தீர வழிமுறைகள், சாதியச் சமத்துவத்தை ஏற்படுத்துதல், வறுமை ஒழிக்கப் போராடுதல், நிலங்களை மீட்டெடுத்தல், கல்வியின் சிறப்பினை உணர்த்தல், தொழிலாளர்களை வர்க்கமாக ஒன்றிணைத்தல், தொழிற் சங்கம் ஏற்படுத்தல், வேலை நிறுத்தம் மற்றும் போராட்டங்கள் மேற்கொள்ளல், சட்டத்தின் வழியாக உரிமைகளைப் பெறுதல், ஆட்சி அதிகாரத்தில் பங்குபெறல், வாழ்வியல் முன்னேற்றமும் பொதுவுடைமையும் புதினங்களில் இடம்பெற்றுள்ள திறம் குறித்து ஆராயப்படுகிறது.

ஒவ்வொரு இயலிலும் பெறப்பட்ட ஆய்வுமுடிவுகள் தொகுப்புரையாக அவ்வவ்வியலின் இறுதியில் சுருக்கித் தரப்பட்டுள்ளன. ஆய்வின் நிறைவினைக் கருதி ஆய்வில் கண்டறிந்த மெய்ம்மைகள் ஆய்வு நிறைவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

ஆய்வுக்குட்படுத்தப்பெற்ற மூல நூல்கள், சான்றாதாரங்கள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வுக்கோவைகள் முதலான அனைத்தும் அகரவரிசைப்படுத்தப்பட்டுத் துணைநூற்பட்டியலில் வழங்கப்பட்டுள்ளன.

# பொருளடக்கம்

## இயல் - 1

## பொதுவுடைமை இயக்கமும் புதின இலக்கிய வளர்ச்சியும்

### முன்னுரை

இலக்கியம் சமுதாயத்தின் விளைபொருள் ஆகும். கலையும், இலக்கியமும் மானுடசமூகத்தின் உடைமைப் பொருள் ஆகும். சமுதாயத்தில் நிலவும் ஏற்றத் -தாழ்வுகள், அவலங்கள், சிக்கல்கள், போராட்டங்கள் மனித வாழ்வியலைப் பாதிப்படையச் செய்கின்றன. சமத்துவம், சகோதரத்துவம் என்ற கொள்கையை முன்னிறுத்தி உழைக்கும் மக்கள் விடுதலையைப் பொதுவுடைமை இயக்கம் கலை, இலக்கியத்தில் பேசுபொருளாக்கியது. பொதுவுடைமை இயக்கத்தின் தோற்றச் சூழல், வளர்ச்சி, கொள்கை, இலக்கியத்தில் பொதுவுடைமையின் தாக்கம், இலக்கிய வளர்ச்சியில் பொதுவுடைமை இயக்கத்தின் பங்கு, புதினங்களில் பொதுவுடைமை இயக்கப் போக்குகள் ஆகியன குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

### ஆதிகாலப் பொதுவுடைமைச் சமுதாயம்

மனித சமுதாயம் பல்வேறு காலங்களில் பலவிதமான மாறுதல்களுக்கு உட்பட்டு வளர்ந்து வந்துள்ளது. புராதனக் காலகட்டத்தில் பொதுவுடைமைச் சமூகமே நிலவியது. ஆதி காலத்தில் மக்கள் சமூகத்தில் நிலவிவந்த ஒரு சமுதாயம்தான் பொதுவுடைமைச் சமுதாயம் ஆகும். இதில் அனைவருக்கும் ஒரே மாதிரியான செல்வாக்கும் செயல்பாடுகளும் இருந்தன. இவர்கள் கூட்டு வாழ்க்கை வாழ்ந்ததோடு, தங்களுக்குள்ளேயே அனைத்தையும் பொதுவாகப் பகிர்ந்துகொண்டு வாழ்ந்தார்கள். உணவும், உடையும் நிலமும் என அனைத்தும் அனைவருக்கும் பொதுவானது என்ற கருத்து அவர்களிடையே இருந்தது.

மனிதர்கள் இணைந்து கூட்டமாக வேட்டையாடி வாழ்ந்த காலத்தில் அவர்களில் யாரும் எந்தவிதமான சொத்துரிமையையும் தனக்கென வைத்துக் கொள்ளவில்லை. வேட்டைக் கருவிகள், பொருள்கள் உட்பட அவர்களிடம் இருந்த அனைத்தும் அனைவருக்கும் பொது உரிமையுடையனவாக இருந்தன. ஆதலால், தனியுரிமையைப் பற்றிய சிந்தனை அவர்களிடம் எழவில்லை. இவர்தம் குழுவில் பெண்கள் சிறப்பிடம் பெற்றிருந்தனர். பெண்கள் தலைமை தாங்கிய குழுக்களாகவே பொதுவுடைமைச் சமுதாயங்கள் இருந்தன. இவர்களைத் தான் ‘ஆதிகாலப் பொதுவுடைமைச் சமுதாயம்’ என அழைக்கிறோம்.

அந்தச் சமூகத்தில் இருந்த அனைத்து மனிதர்களும் ஒரே அளவு அறிவுத்திறன் கொண்டிருக்கவில்லை. காலப்போக்கில் அவர்கள் வெவ்வேறு அறிவுத்திறன் கொண்டவர்களாக விளங்கினர். ஆதலால் அவர்கள் வெவ்வேறு அளவில் உழைப்பை ஈந்தார்கள். என்றாலும் அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தேவைக்கேற்பப் பொருட்களைப் பகிர்ந்து கொண்டார்கள். எல்லோர்க்கும் சமமான பணி; சமமான ஊதியம் என்ற நிலை நிலவியது. திறமைக்கு ஏற்ற

பங்கீடு என்னும் விதிமுறை அமலில் இருந்தது. ஆனால், உழைக்கும் பருவத்தில் உள்ள யாரும் உழைக்காமல் இருந்தது இல்லை. உழைக்காமல் இருப்பதைப் பற்றிக் கற்பனை செய்யவும் முடிந்ததும் இல்லை.

ஆதிகாலச் சமூகத்தில் பொய்சொல்லுதலும் ஏமாற்றுதலும், களவாடுதலும், தண்டித்தலும் இல்லை. அதனால் மக்களைக் கட்டுப்படுத்தும் அரசு என்னும் அமைப்பும் அப்போது தேவைப்படவில்லை. அச்சமூகத்தில் தாங்கள் வாழ்வதற்கும், தங்கள் குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதற்கும் தேவையான அளவிற்கு மட்டுமே பொருட்களை ஈட்ட முடிந்தது.

அவர்கள் தங்கள் அறிவுத்திறத்தாலும் முயற்சியினாலும் வேட்டைக் கருவிகளைச் சீர்செய்தனர்; அவற்றைக் கூர்மைப்படுத்தினர். கருவிகளால் நிலத்தை அகழ்ந்தனர். நிலத்தில் கிடைத்த கிழங்குகளையும் கனிகளையும் உண்ணத் தொடங்கினர். விதைகள் மண்ணில் வீழ்ந்து மீண்டும் மீண்டும் வளர்வதைக் கண்டு, காலப்போக்கில் வேளாண்மை செய்யக் கற்றுக் கொண்டனர். இதனால் அவர்களின் உற்பத்தித் திறன் வளர்ந்தது. அவர்களால் தாங்கள் வாழ்வதற்கும், தங்கள் சந்ததிகளைப் பெருக்கி வளர்ப்பதற்கும் தேவைப்படும் பொருட்களைவிட அதிகமான பொருட்களை உற்பத்தி செய்யும் அளவுக்கு வளர்ச்சியடைந்தனர்.

விவசாய உற்பத்தியும் உற்பத்திப் பெருக்கமும் எப்பொழுதும் வேலை செய்துகொண்டே இருக்க வேண்டும் என்ற நிலையை மாற்றி, மனமகிழ்விற்காக ஓய்வு எடுத்துக் கொள்வதற்கு வழிவகுத்தது. இந்நிகழ்வு சோம்பேறிகளை உருவாக்கியது. அவர்கள், மற்றவர்கள் வேலை செய்யத் தாங்கள் மட்டும் சுகமாக வேலை செய்யாது இருக்கலாம் என எண்ணினர். அவ்வாறு வேலை செய்யாது இருந்தாலும் அனைத்து மக்களுக்கும் தேவையான பொருட்கள் உற்பத்தியாகும் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டனர்.

மிகை உற்பத்திப் பொருட்களின் அளவு அதிகரிக்க, அதிகரிக்க உழைக்க மனம் இல்லாதோரின் ‘சும்மா இருப்பதே சுகம்’ என்ற மனப்பாங்கு வலுவடைந்தது. இந்நிலையில் உழைக்க மறுக்கும் கூட்டத்தார் மூத்தவர்களின் சொற்களுக்குக் கட்டுப்படாமல், கலகம் செய்து உழைக்காமல் உண்பதனை வழக்கமாக்கிக் கொண்டனர். உழைக்கும் கூட்டத்தார் இதை எதிர்த்தபோது அவர்களை ஒடுக்க வன்முறையைப் பயன்படுத்தினர். உழைக்காமல் இருப்பதைக் கேவலமாக நினைத்த மக்களை மிகக் கொடூரமான முறையில் ஒடுக்கி அடிமைகளாக நடத்த ஆரம்பித்தனர். இவ்வாறுதான் அடிமைச் சமூகம் தோன்றியது.

முதலாளித்துவச் சிந்தனைகள் அவர்களிடையே உதித்த போது, அவர்கள் பொதுவுடைமை என்பதைத் தூக்கியெறிந்து போட்டி மனப்பான்மையும் வலியவன், சிறியவன் போன்ற கருத்துக்களோடு முதலாளிகள் ஆயினர். நிலப்பிரபுத்துவச் சமூகம் உருவாகியதைத் தொடர்ந்து அது, முதலாளித்துவச் சமூகத்திற்கு வழி செய்தது.

## பொதுவுடைமைத் தோற்றச்சூழல்

பொதுவுடைமை இயக்கத் தோற்றக் காரணிகளுக்குத் தேசியம் குறித்த சிந்தனையும் ஒன்றாக அமைந்திருக்கிறது.

தேசத்திலுள்ள அனைத்துத் தேசமக்களையும் இணைத்தே 'தேசியம்' என்ற ஒன்று தோன்றுகிறது. ஆனால் நடைமுறையில் உலகமானது பல தேசங்களாய்ப் பிரிந்து இருக்கிறது. இதனால் ஒவ்வொரு தேசத்தாரிடையேயும் பிரிவினைகள் மேலோங்கி நிற்கிறது. இவ்வாறான சிந்தனைப்போக்கு ஒற்றுமைக்கு வழியேற்படுத்தாது, நாட்டின் பெயரால் மக்களைப் பிரிப்பதற்கே துணைபோவதாக அமைந்துவிடும் என்பதனை, "அந்தந்த தேசத்தில் வாழ்கின்றவர்கள் தங்கள் சுகதுக்கங்களைக் கருதி நடக்கிறார்களே ஒழிய, உலகில் வாழும் மக்கள் நலத்தைப் பெரிதாகக் கருதுவதில்லை. தன் தேசம் செல்வத்திலும், ஆதிக்கத்திலும், செல்வாக்கிலும் மேம்பட்டிருக்க வேண்டும் என்ற கோரிக்கைப் பல நிலைகளில் அந்தந்த தேசத்தாரை உட்படுத்துகின்றன"[1] என்கிறார் சிங்காரவேலர். எல்லா நாடுகளும் ஒன்றுக்கொன்று தங்களுக்குள் பிரச்சனைகளை ஏற்படுத்திக்கொண்டு மோதிக் கொண்டே இருக்கின்றன. இதனால் எந்தவொரு நன்மையும் கிடைப்பதில்லை என்பதே உண்மை.

ஒவ்வொரு நாட்டவரும் தனது நாட்டின் மேன்மையைப் பாடிப் பிற நாட்டை இகழ்கின்றனர். இதன் மூலம் தங்களது தேசப்பற்றை நிலை நாட்டுகின்றனர். இந்த தேசப்பற்றானது சுயநலத்தைத் தூண்டும் சக்தியாகும். இது எனது நாடு, எனது பூமி, எனது சொந்தம் என்ற குறுகிய வட்டத்தையே ஏற்படுத்துகிறது.

## தேசியமும் தொழிலாளர் ஒடுக்கநிலையும்

தேசியமானது தனது நாட்டின் மீதுள்ள பற்றால் ஒருவரிடம் சுயநலத்தை உருவாக்குமேயானால் அதனால் எவ்வித நன்மையும் ஏற்படுவது இல்லை. தேசியத்தால் தொழிலாளர் பாதிப்படைகிறார்களே தவிர, அவர்கள் எந்த நிலையிலும் பாதுகாக்கப்படுவதில்லை. தேசியத்தைக் காரணம் காட்டி ஏழைத் தொழிலாளர்கள் ஒடுக்கப்படுகிறார்கள். இவ்வாறான நிலை தேசியத்தால் நிலவுவதை,

> "தேசியத்தால் இல்லாதவர்களை யுத்தத்திற்குத் தூண்டுதல் செய்வர். இருப்பவர் பெரும்பாலும் கற்றவர்கள் ஆதலால், கல்லாதவர்களை ஏமாற்றுவது எளிது. கற்றவர்கள் பல விருத்தமான செய்திகளைக் கூறிக் கல்லாத தொழிலாளியை அடிமையாக்குவான்"[2]

என்று சிங்காரவேலா் குறிப்பிட்டுச் செல்கிறாா்.

## சமதர்மம் (**Socialism**)

> "சமதர்மம் என்பது முதலாளித்துவ உற்பத்தி முறையை ஒழித்துத் தொழிலாளர்களின் சர்வாதிகாரத்தை நிறுவுவதன் பயனாக உற்பத்திச் சாதனங்களை நாட்டுடமை ஆக்குவதை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய சமுதாய அமைப்பாகும்"[3]

என்பது சமதா்மத்திற்கான விளக்கமாக அமைகிறது.

சமதர்மச் சமுதாயத்தில் நட்புறவு முறையில் அமைந்த இருவர்க்கங்களே இருக்கும். பாட்டாளிகளும், கூட்டுப் பண்ணைத் தொழிலாளர்களும் சேர்ந்து ஒரு வர்க்கமாகவும் அறிவு உழைப்பாளர்கள் ஒரு வர்க்கமாகவும் இருப்பார்கள். இவ்விரு வர்க்கங்களுக்கிடையில் உள்ள ஏற்றத்தாழ்வுகளும் மெல்ல மெல்லக் குறையும். இந்த வர்க்கங்களுக்கு இடையிலான உறவுகளின் முக்கிய அம்சம் என்னவென்றால் அது சமுதாய, அரசியல், தத்துவ ரீதியான உறவுகளாக இருப்பதும் சமதர்ம நாடுகளுக்கிடையில் உள்ள உறவுகள் நட்புறவுக்கும், கூட்டுறவுக்கும் ஒருவருக்கொருவர் சகோதர பாசத்துடன் உதவி செய்து கொள்வதற்கும் எடுத்துக்காட்டாக இருப்பதுமே ஆகும்.[4]

## பொதுவுடைமையும் சமுதாயமும்

கம்யூனிசம் எனப்படும் பொதுவுடைமை சோசலிசங்களுக்கும் சமதர்மத்திற்கும் மாறுபட்டதும், விஞ்ஞான சோசலிசம் எனப்படும் சமதர்ம வாதத்தின் வளர்ந்த நிலையும் ஆகும். இது விஞ்ஞான வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட வரலாற்று வளர்ச்சி பற்றிய மிக மேலான அறிவை ஆதாரமாகக் கொண்டு அமைந்த பொதுவுடைமைத் தத்துவங்களின் நடைமுறை விளக்கமாகிறது. இது மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகிய இருவரால் உருவாக்கப் பெற்றது. சமுதாயத்தைப் பொதுவுடைமைப் புனரமைப்பாக மாற்றி அமைப்பது, ஒரு வரலாற்றுத் தேவை என்பது பொதுவுடைமைக் கொள்கையின் அடிப்படை அம்சமாகும். அது பொதுவுடைமைத் தத்துவத்தின் இரு படி நிலைகளாக விளக்கப்படுகிறது. முதல்படி சமதர்மம்; இரண்டாம்படி பொதுவுடைமை.

சமதர்மத்திற்கும் பொதுஉடைமைக்கும் இடையே சிறு வேறுபாடு உண்டு. சமதர்மத்தின் வளர்ந்த நிலையே பொதுவுடைமை. சமதர்மத்தில் பொருள்களைப் போருக்குப் பயன்படுத்துவதற்குப் பதிலாக ஒவ்வொருவரின் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்றவாறு மக்களுக்கு "From each according to his ability, to each according to his work" என்னும் கோட்பாட்டுக்கு ஏற்பப் பொருள்கள் பகிர்ந்தளிக்கப்படுகின்றன.[5] ஆனால், பொதுவுடைமை நலிந்தவர்களையும் சமமாகப் பாவிக்கக் கற்றுத் தருகிறது.

### பொதுவுடைமைச் சமூகத்தின் பண்புகள்

பொதுவுடைமைச் சமூகத்தில் மக்களே முதன்மையானவர்கள்; அது மக்கள் எல்லோரையும் ஒருபடித்தான நிலையில் வைத்து நோக்குகிறது. மக்களினத்தில் உயர்வு - தாழ்வு, ஆண்டான் - அடிமை, ஆண் - பெண் பாலின பேதங்கள் இல்லை என்று கற்பிக்கிறது. உலகில் முதலாளித்துவ நாடுகளின் ஆதிக்கம் அழியவேண்டும் என்றும், சமத்துவமும் சமதர்மமும் நிலைநாட்டப்பட வேண்டும் என்று அறிவுறுத்துகிறது. பொதுவுடைமைச் சமூகம் மக்களை, மக்கள் இயக்கமாக இணைந்து செயல்பட வைக்கிறது.

பொதுவுடைமைச் சமூகத்தில்,

- உற்பத்தி மார்க்கம், உடைமைகள் என்பனவற்றை அரசு மக்களின் சார்பில் பொதுவுடைமையாக வைத்திருக்கும்.
- எதை, எப்படி உற்பத்தி செய்வது என்பதை அரசின் வல்லுநர் குழு ஒருமைப்படுத்தப்பட்ட முறையில் தீர்மானிக்கும்.
- மக்கள் உழைத்து தமக்குரிய பொருளாதாரப் பங்கினைப் பெறுவர். அப்பங்கு, பங்களிப்பின் அடிப்படையில் அமையாமல் எல்லோர்க்கும் பொதுவானதாக இருக்கும்.

கொள்கை நோக்கில் பொதுவுடைமைப் பொருளாதார முறையில் அனைத்தும் அரசே முடிவெடுப்பதால் சமூகத்தின் வளங்களும், செல்வங்களும் தனிமனித முதலாளிகளிடம் முடக்கப்படுவது தவிர்க்கப்படுகிறது. மேலும் இந்த வளங்களைக் கொண்டு பொதுவாக ஏகாதிபத்திய முதலாளித்துவ சமூகக் கோட்பாடுகளால் வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டு உழைக்கும் சாமானிய மக்களின் வாழ்க்கைத் தரம் மேம்படுத்தப்படுகிறது.

### பொதுவுடைமையும் மார்க்சியமும்

சித்தாந்தம், கொள்கை, தத்துவம், கோட்பாடு என்பன ஓர் இயக்கத்தின் செயல்முறை வடிவங்களைக் காட்டுவதாக அமைந்திருக்கின்றன. ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் மார்க்சியக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு உருவானதே ‘பொதுவுடைமைச் சித்தாந்தம்’ ஆகும். அது மார்க்சின் தத்துவார்த்தமாகவும் அணுகப்படுகிறது.

“மார்க்சின் கருத்துக்களின், போதனையின் முழுத்தொகுப்பு முறையே மார்க்சியம்”[6]

என்னும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது.

ஜெர்மானிய அறிஞரான காரல்மார்க்சும் (1818 - 1883), இங்கிலாந்து அறிஞரான பிரெடரிக் ஏங்கெல்சும் (1820 - 1895) இணைந்து உருவாக்கிய சமூகவியல் கருத்துக்களின் தொகுதியே மார்க்சியம் ஆகும்.[7] மார்க்சியம் சமுதாயத்தைக் காட்சிப்படுத்துவதோடு நின்றுவிடாமல், அச்சமூகத்தைப் பலனுள்ள சமூகமாக எப்படி மாற்றுவது என்ற வழியையும்

விஞ்ஞானபூர்வமாக எடுத்துரைக்கிறது. இக்கருத்தை அரண் செய்யும் வகையில் ‘‘பிரபஞ்ச மாற்றம் பற்றிய விஞ்ஞான அறிவு மார்க்சியத் தத்துவம்’’[8] என்று நா. வானமாமலை கூறிச் செல்கிறார்.

‘‘மனித வரலாறு ஒன்றை உருவாக்கி ஒவ்வொரு சமுதாயமும் தன் தேவைகளை எப்படி உற்பத்தி செய்து கொள்கிறது, அதைத் தங்களுக்குள் எத்தகைய உறவில் பங்கிட்டுக் கொள்கிறது என்ற பொது விதியிலிருந்து மனித சமுதாயத்தை விளக்கியது மார்க்சியம்’’[9] என்னும் கருத்தும் ஈண்டு இணைத்து நோக்கற்பாலது.

காரல்மார்க்சும், பிரெடரிக் ஏங்கெல்சும் தமது ஆய்வுகளில் தொடக்கக் காலத்தில் மனிதர்கள் வாழ்ந்த வாழ்க்கைமுறை, மானுடத்தின் படிப்படியான வளர்ச்சி நிலை, எதிர்காலத்தில் அமையவிருக்கும் மானுடத்தின் தன்மை ஆகியன குறித்து அவர்கள் அறிவியல் முறைப்படி ஆய்வு செய்து பல்வேறு கருத்துக்களை வெளியிட்டனர். இதனால் எதிர்காலத்தில் சுரண்டல் இல்லாத - வர்க்க பேதங்கள் இல்லாத - எல்லார்க்கும் எல்லாம் கிடைக்கின்ற சமுதாய வாழ்வு மலரும் என ஆய்வு அடிப்படையில் தெளிவுறுத்தினர். அத்தகைய புது வாழ்க்கை முறையினையே அவர்கள் ‘பொதுவுடைமை’ என்று குறித்தனர்.

இக்கருத்துக்களால் மார்க்சியம் என்பது இயற்கையின்வழிச் சிந்தனை-யையும், சிந்தனையின்வழி மாற்றமடையும் சமுதாயத்தையும் அறிவியல் பூர்வமாக விளக்குவது என்பது தெளிவாகிறது.

**மார்க்சியம் உருவான சூழல்**

‘‘இடைக்கால ஐரோப்பாவில் தொழிற்புரட்சியின் பயனால் ஏற்பட்ட உற்பத்திப் பெருக்கத்தாலும், புதிய கடல்வழிகள் கண்டுபிடிக்கப்பட்டு, சந்தைகள் விரிவாக்கப்பட்டதாலும் முதலாளித்துவம் தலைதூக்கி வளர்ந்தது. ஆனால், அது இலாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருந்தது. முதலாளிகள் தொழிலாளிகளுக்கு மிகக்குறைந்த கூலியைக் கொடுத்து மிக அதிகமான உழைப்பை வாங்கினர். முதலாளிகளின் செல்வச் செழிப்பிற்காகத் தொழிலாளிகள் கசக்கிப் பிழியப்பட்டனர். இதன் விளைவாக முதலாளி - தொழிலாளி என்ற முரண்பாடுகள் நாளும் தீவிரத்தன்மை அடைந்தன. தங்களது அவலங்களை எண்ணிய தொழிலாளர்கள் சினமுற்றனர். ஆதலால், முதலாளிகளுக்கு எதிரான போராட்டங்களை நடத்தினர். புதிதாக வந்த இயந்திரங்களை அடித்து உதைத்தனர். ஆலைகளைத் தீயிட்டுக் கொளுத்தினர். ஆனால், திட்டமும் தெளிவும் இல்லாமல் நடத்தப்பட்டதால் அந்தப் போராட்டங்கள் தோல்வியில் முடிந்தன. ஆதலால், முதலாளித்துவத்தை எதிர்ப்பதற்குத் தெளிவான தத்துவம் தேவைப்பட்டது. இந்தச் சூழலில் தான் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகியோர் தங்கள் சிந்தனைகளை எழுப்பினர்.’’[10] இதுவே மார்க்சியம் உருவான சூழல் ஆகும்.

முதலாளித்துவத்தின் உற்பத்திச் சாதனங்களை மார்க்சியம் மதிக்கிறது. ஆனால், பணத்தின் மேலாதிக்கத்தால் மனித உறவுகள் சீர்குலைந்து கிடப்பதையும் மனித மாண்புகள் புறக்கணிக்கப்படுவதையும் அது சுட்டிக் காட்டுகிறது. முதலாளித்துவத்தின் இழிநிலை இயல்புகளை மார்க்சியம், சமுதாயத்தில் எங்கும் எதிலும் இலாபநோக்கமே குறிக்கோளாக உள்ளது. மனித மாண்புகள் மதிப்பிழக்கின்றன. உண்மையான சுதந்திரம் இல்லை. பொருட்களை வாங்கவும் விற்கவுமான வணிகச் சுதந்திரம் ஒன்றே உள்ளது. மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், சமயக் குருக்கள், கலைஞர்கள், அறிவியல் அறிஞர்கள் முதலானோர் கூலிக்கு உழைப்பவர்களாக ஆக்கப்படுகின்றனர். குடும்ப உறவுகள் பொருளாதார உறவுகளாகச் சிறுமை அடைகின்றன. பெண்கள் குழந்தைகளைப் பெறும் இயந்திரங்களாகக் கருதப்படுகின்றனர். பொருளற்ற பெண்கள் விபச்சாரத்திற்குத் தூண்டப்படுகின்றனர்; உழைப்பு சுவையற்றதாகிறது; இயந்திரத்தின் துணை உறுப்புகளாக ஆக்கப்படுகின்றனர். சொத்துக்கள் சிலரிடம் குவிவதால் அதிகாரம் சிலரிடமே குவிகிறது. கிராமங்கள் நகரங்களுக்கு அடிமையாகும் சூழ்நிலை உருவாகிறது என்பது கம்யூனிஸ்ட் அறிக்கையாக இடம் பெறுகிறது.[11]

பொதுவுடைமைச் சமுதாய உருவாக்கத்தால் தான் இத்தகைய இழிநிலைகளை மாற்றமுடியும் என்கிறார் காரல் மார்க்ஸ். இதனால் உழைக்கும் மக்கள் மேலெழுந்து வருவதற்கு மார்க்சியமே வழியமைத்துத் தரும் என்று தெளிவுறுத்தப்படுகிறது.

**மார்க்சியத்தின் தத்துவக் கோட்பாடுகள்**

மார்க்சியத் தத்துவக் கோட்பாடுகளைப் பொதுநிலையில்,

- இயக்கப் பொருள்முதல்வாதம் (Dialectical Materialism)
- வரலாற்றுப் பொருள்முதல்வாதம் (Historical Materialism)
- வர்க்கப் போராட்டம் (அ) மும்முனைப் போராட்டம்

என்று மூன்று கூறுகளாகப் பகுத்துரைப்பர்.

**இயக்கப் பொருள்முதல்வாதம் (Dialectical Materialism)**

உலகத்தில் உள்ள இயற்கைப் பொருட்கள் அனைத்தின் இயக்கம் பற்றிப் பேசுவது இயக்கப் பொருள்முதல் வாதம் ஆகும். சமுதாய வளர்ச்சி மாற்றங்களில் புதுமையும் பழமையும் எவ்வாறு தமக்குள் இணைந்துள்ளன என்பதை விளக்குவது இக்கோட்பாடாகும். எல்லாப் பொருள்களும் இயக்கத்தில் இருக்கின்றன; மாற்றமடைகின்றன; அதன் காரணமாகப் புதிய பொருள் ஒன்று உருவாகிறது. இத்தகைய இயக்கத்தில் பழைய ஒரு பொருள் மறுக்கப்பட்டு, நீக்கப்பட்டு, அதிலிருந்து புதிய பொருள் தோன்றுகிறது. இந்தப் புதிய பொருளும் மறுக்கப்பட்டு மீண்டும் பழைய பொருள் உற்பத்தியாகிறது. ஆனால், இது பழையது அல்ல. இந்தப் பழைய பொருளைவிட உண்மையில் வளர்ச்சி மிக்கதும்

வளர்ந்ததுமான பொருள் தோன்றுகிறது என்பதை அறிய வேண்டும். இதுவே வளர்ச்சியின் போக்கு. இதுவே நிலை மறுப்பின் நிலை மறுப்பு (Negation of Negation) என்ற கோட்பாடாகும்.

### வரலாற்றுப் பொருள்முதல்வாதம் (Historical Materialism)

இயற்கை, சிந்தனை, சமுதாயம் ஆகியவற்றுக்கிடையே இடையறாது நிகழும் இயக்கத்தினால் ஏற்படும் மாற்றமும் வளர்ச்சியுமாகிய இயக்கப் பொருண்மைவாதம் ஒவ்வொரு காலத்திலும் எவ்வாறு இருந்தது அல்லது இயங்கியது என்பதனை விளக்குவதே வரலாற்றுப் பொருள்முதல் வாதம் ஆகும். இதன் மூலம் ஒவ்வொரு காலகட்டத்திலும் எப்படி எப்படி உற்பத்தி உறவுகளும், உற்பத்திக் கருவிகளும் வளர்ந்தன; மாற்றமடைந்தன என்பதை வரலாற்று அடிப்படையில் பார்க்க இயலும்.

வரலாற்று அடிப்படையில் காலத்தைப் பகுத்தும், அக்காலத்தில் இருந்த சமுதாய அமைப்புகளின் முறைகளையும் இக்கோட்பாடு விளக்குகிறது. மார்க்சியம் மனித சமுதாய வரலாற்றினைப் பின்வருமாறு,

- ஆதிகாலப் பொதுவுடைமைச் சமுதாயம் (Primitive Communism)
- அடிமைச்சமுதாயம் (Slavic Society)
- நிலப்பிரபுத்துவச் சமுதாயம் (Feudalism)
- முதலாளித்துவச் சமுதாயம் (Capitalism)
- விஞ்ஞான சோசலிசச் சமுதாயம் (Scientific Socialism)

என்னும் ஐந்து நிலைகளில் பகுத்தாராய்கிறது. இந்தச் சமுதாய நிலை நிலவிய அந்தந்தக் காலகட்டங்களில் உற்பத்தி உறவுகளும், உற்பத்திக் கருவிகளும், சிந்தனையும் எப்படியெல்லாம் வளர்ந்தன என்பதைப் பொருள்முதல்வாதக் கண்ணோட்டத்துடன் பார்ப்பதே வரலாற்றுப் பொருள்முதல்வாதம் ஆகும்.

எல்லோரும் குழு மனப்பாங்குடன் பாடுபட்டுச் சமநிலையில் பங்கிட்டுக் கொண்டிருந்த ஆதிகாலத்தில், வேலையைப் பிரித்துச் செய்யும் பாங்கினால் மேய்ச்சல் சமூகமும் வேலைப் பிரிவினைகளும் தோன்றின. இதன் காரணமாகவே ஆதி பொதுவுடைமைச் சமூகம் வீழ்ச்சியடைந்தது. தலைவன் அல்லது முதலாளி என்கிற அமைப்பின்கீழ் அடிமைச் சமுதாயம் உருவாக்கம் பெற்றது.

### அடிமைச் சமூகம்

அடிமைச் சமூகத்தின் தோற்றத்தின் காரணமாகத் தலைவனான சொத்துடைமைக்காரன், அடிமைகளைக் கைதிகளாக்கித் தனக்குக் கீழ்ப்படிந்த வர்களாக ஆக்கிக் கொண்டான். இதனால் சமுதாயம் ஆண்டான் - அடிமை என்ற இருகூறானது. இந்த அடிமைகளின்

உழைப்பு, அவர்களுக்கு உணவைத் தந்ததுடன் நிலவுடைமையாளனுக்கு உபரி உற்பத்தியையும் செல்வத்தையும் உருவாக்கித் தந்தது.

செல்வம் சேரச்சேர இந்தச் சிறு தனியுடைமையாளர் - பண்ணையார் போன்றோரின் தகுதியும், அதிகாரமும் நாளும் விரிவடைய சமுதாய மாற்றம் ஏற்பட்டது. இந்த அடிமைச் சமுதாயத்தின் வளர்ச்சியாக நிலப்பிரபுத்துவச் சமுதாயம் தோன்றவும் வளரவும் செய்தது.

**நிலப்பிரபுத்துவச் சமுதாயம்**

அடிமைகளை வைத்து வேலை வாங்கி அதன் மூலம் உற்பத்திகளை அனுபவித்த சிறிய சிறிய தனியுடைமையாளர்களின் கைகளில் மேன்மேலும் விளைநிலங்களும், உற்பத்திக் கருவிகளும் சேர்ந்தன. உணவுப்பொருட்களும், கைத்தொழில் பொருள்களும் வளர்ந்தன. இதனால் ஏற்கெனவே இருந்த நிலப்பிரபு, அடிமை, விவசாயம் செய்வோன், கைத்தொழில் செய்வோன் என்பதோடு புதிதாக இடைத்தரகர்களாகிய வியாபாரிகளும் தோன்றினர். இவர்களின் பண்டமாற்று வியாபாரங்களுக்கு அடையாள அளவுக் குறியீடாக நாணயங்களையும் பயன்படுத்தினர். இதன்மூலம் இவர்களிடமும், இவர்களோடு சேர்ந்த நிலப்பிரபுக்களிடமும் உழைப்பு ஏதும் இல்லாமலே பணம் குவிய ஆரம்பித்ததனால் அரசையும், ஆளும் வர்க்கத்தையும் நிர்ணயிக்கும் சக்திகளாக இவர்கள் மாறினர். இத்தகைய நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தின் உச்சக்கட்ட வளர்ச்சியாக முதலாளித்துவம் வளரத் தொடங்கியது.

**நவீன முதலாளி வர்க்கம்**

முதலாளித்துவம் இதுவரையில் அரசியல் ஆதிக்கம் பெற்றிருந்த நிலப்பிரபுத்துவத்தை முறியடித்து அரசைக் கைப்பற்றித் தமது கைப்பாவையாக மாற்றிக் கொண்டது. ஒருபுறம் உற்பத்திக் கருவிகளின் சொந்தக்காரரான முதலாளியாகவும், மறுபுறம் அவர்களே நிலப்பிரபுக்களாகவும் விளங்கினர். இவர்களே அரசுகளை ஆளும் வர்க்கமாகவும் மாறினர். இத்தகைய முதலாளிகளை மார்க்சும், ஏங்கெல்சும் 'பூர்ஷ்வாக்கள்', அதாவது 'நவீன முதலாளி வர்க்கம்' என்று அழைத்தனர்.

இவர்களை "இந்த நவீன முதலாளிகள் சமுதாயப் பொருளுற்பத்திச் சாதனங்களின் சொந்தக்காரர்கள்; கூலிக்கு ஆட்களை அமர்த்தி வேலை வாங்குபவர்கள்"[12] என்று குறிப்பிட்டனர்.

இந்த பூர்ஷ்வாக்களின் வேலை, மக்களிடையே மேலும் மேலும் பிளவு உணர்ச்சியை வளர்ப்பதும், முதலாளி - தொழிலாளி; சுரண்டுபவன் - சுரண்டப்-படுபவன்; உழைப்பவன்- உறங்குபவன் என்ற போராட்டத்தை உருவாக்குவதும் ஆகும். இவர்களின் இருப்பிடம் நகரப்பகுதியாகும். உற்பத்திக் கருவிகளின் சொந்தக்காரர்களாகவும் திகழ்ந்த இவர்கள்,

இலாபத்தை மூலதனத்தில் மேலும் மேலும் இட்டு நிரப்பி, மூலதனக்குவிப்பைப் பெருமளவில் அதிகரித்துக் கொண்டனர்.

மார்க்சும், ஏங்கெல்சும் இவர்களால் நிகழ்ந்த தாக்குரவினை, ‘‘பிறரைப் பற்றி அக்கறை கொள்ளாத ஒரே சுதந்திரத்தை பூர்ஷ்வா வர்க்கம் ஏற்படுத்தி விட்டது’’[13] என்று குறிப்பிட்டனர்.

இத்தகைய முதலாளித்துவ மூலதனக் குவிப்பின் காரணமாகத் தொழிலாளி வர்க்கமும் பல்கிப் பரவியது. ஒரு முனையில் மூலதனக் குவியலும், மறுமுனையில் வறுமையின் வளர்ச்சியும் ஏற்படத் தொடங்கின. வறுமையில் தவித்த தொழிலாளர்களால் பல்வேறு வர்க்கப் புரட்சிகளும், தேச விடுதலைப் புரட்சிகளும் தோன்றின. இப்புரட்சிகளின் உச்சகட்டமாகச் சோசலிசச் சமுதாயம் உருவானது.

**வர்க்கப் போராட்டம்**

வர்க்க முரண்பாடுகளின் கூர்மையின் காரணமாக வர்க்கமற்ற சமுதாயத்தை, சோசலிசச் சமுதாயத்தை, பொதுவுடைமைச் சமுதாயத்தை அமைக்கவும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தை ஏற்படுத்தவும் தொழிலாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை ஏற்படுத்தவும் தொழிலாளி வர்க்கம் முனைந்து செயல்பட்டது. எனவே முதலாளித்துவச் சமுதாயத்தின் அடுத்த கட்டமாகச் சோசலிசச் சமுதாயம் ஏற்பட்டது.

> ‘‘முதலாளித்துவச் சமுதாயத்தில் முதலாளி வர்க்கம், தொழிலாளி வர்க்கம் என்று இரண்டு முக்கியமான வர்க்கங்கள் இருக்கின்றன என்றும், இவ்விரு வர்க்கங்களுக்கிடையே வர்க்கப் போராட்டம் இடைவிடாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கிறதென்றும், இப்போராட்டம் இறுதியில் தொழிலாளி வர்க்கத்தின் அரசு அமைவதில் முடிவடையுமென்றும், எனவே, சோசலிசச் சமுதாயம் தவிர்க்க முடியாதது என்றும் மார்க்ஸ் குறிப்பிடுகிறார்’’[14]

என்னும் கூற்று, வர்க்கப்போராட்டம் குறித்த வரையறையாக அமைகிறது.

குறைந்த கூலிக்கு அதிகப்படியான உழைப்புச் சக்தியை விலைபேசி விற்கக்கூடிய எண்ணிக்கையில் அதிகமாக இருக்கக்கூடிய இக்கூலி உழைப்பாளர்களின் சமுதாய மாற்றத்திற்கான அடிப்படைப் போராட்டங்களே இம்மும்முனைப் போராட்டங்கள் ஆகும்.

இக்கூலி உழைப்பாளர்களை மார்க்சும், ஏங்கெல்சும், ‘‘வர்க்கப் போராட்டங்களே பொதுவுடைமைச் சமுதாயத்திற்கு அடித்தளம் ஆகும். தமக்கென்று சொந்தமான உற்பத்திச் சாதனங்களைப் பெற்றிராதவர்களும், வாழ்க்கை நடத்துவதற்குத் தமது உழைப்புச் சக்தியை விலைபேசி விற்க வேண்டிய நிலைமைக்குத் தாழ்த்தப்பட்டிருப்பவர்களுமான நவீனகாலத்துக் கூலி உழைப்பாளி வர்க்கம்’’[15] என்று குறிப்பிட்டனர். இக்கூலி உழைப்பாளர்களின் வர்க்கப் போராட்டங்கள்,

- பொருளாதாரப் போராட்டங்கள்
- அரசியல் போராட்டங்கள்
- தத்துவார்த்தப் போராட்டங்கள்

என்று மூன்று நிலைகளில் அமையும் என்கிறது மார்க்சியம்.

**பொருளாதாரப் போராட்டங்கள்**

வாழும் உலகில் பொருளே முந்தியது என்று கூறும் மார்க்சியம், சமுதாயத்தின் அடிப்படைக்கும் பொருளாதாரமே காரணம் என்று காட்டுகிறது. சமுதாயத்தின் அடித்தளமான (Basic Structure) பொருளாதாரமே, சமுதாய மேல்மட்ட அமைப்புக்களான (Super Structure) அரசு, கலை, சமயம், இலக்கியம் ஆகிய இன்னபிறவற்றையும் நிர்ணயிக்கும் சக்தியாகும் என்று தெளிவுறுத்துகிறது.

இதன்வழி, சமுதாயத்தின் அடித்தளமான இந்தப் பொருளாதாரத்தில் ஏற்படும் ஆதிக்கமே, சமுதாயத்தின் மேல்மட்ட அமைப்புகளிலும் ஆதிக்கம் செலுத்தும். அவ்வகையில் பொருளாதார ஆதிக்கத்தை, தனியுடைமைச் சுரண்டலை, எதிர்க்கும் பொருளாதாரப் போராட்டமே சமுதாயத்தின் உண்மையான போராட்டம் ஆகும் என்பது தெளிவாகும்

> “பொருளாதார ஆதிக்கத்திலிருந்து விடுபடும் விடுதலையே அரசியல், சமுதாய விடுதலைகளுக்கு வழிவகுக்கும்”[16]

என்று மார்க்சியம் அறிவுறுத்துகிறது. இதற்கான வழிகளையும் வகுத்துக் கொடுக்கிறது. உற்பத்திச் சாதனங்களின் தனியுடைமையை ஒழித்து, உற்பத்திச் சாதனங்-களைச் சமுதாய உடைமை ஆக்கவேண்டும் என்கிறது மார்க்சியம். இதற்கான இடையறாத போராட்டங்களே பொருளாதாரப் போராட்டங்களாகும்.

**அரசியல் போராட்டங்கள்**

பொருளாதாரப் போராட்டங்களை நடத்தும்போது பொருளாதார ஆதிக்கக் காரர்களின் கைப்பாவையாக இயங்கும் அரசும், அதன் அதிகாரங்களும் இவ்வகைச் செயல்பாடுகளுக்குத் தடைகளாக இருக்கின்றன. ஆகையால் அரசினை எதிர்த்தும், அரசு அதிகாரங்களை எதிர்த்தும் போராட வேண்டிய நிலை ஏற்படுகிறது. இத்தகைய பொருளாதாரப் போராட்டங்களுடன் சேர்ந்து அரசியல் போராட்டங்களையும் நடத்துவதன் மூலம் இறுதியில் பாட்டாளி வர்க்கச் சார்பில் சர்வதேசியத்தை நிலைநாட்ட முடியும் என்று மார்க்சியம் கூறுகிறது. இதற்காக உருவாக்கப்பட்ட இயக்கமே பொதுவுடைமை இயக்கம் ஆகும்.

**தத்துவார்த்தப் போராட்டங்கள்**

வர்க்கப் போராட்டத்தின் இறுதிக்கட்டப் போராட்டமாக அமைவது தத்துவார்த்தப் போராட்டமாகும். தத்துவார்த்த அடிப்படையில் மக்கள் மத்தியில் நிலவிவரும் பழமையான நியாயப்படுத்தும் அநியாயக் கருத்துக்களை மாற்றம் பெறத்தக்க வழிகளைக் கொண்டு கற்பிக்கும் முறை இதுவாகும். உதாரணமாக, ஆண்டான்-அடிமைத் தத்துவம், கருத்து முதல்வாதத் தத்துவம், ஆன்மிகவாதத் தத்துவம், மாறாநிலைத் தத்துவம் போன்றவற்றிற்கு அறிவுப் பூர்வமான விளக்கங்களைக் கொடுத்து மக்களைப் போராட்டத்தில் ஈடுபடுத்துவதாகும். இதற்காக இப்போராட்டமானது புரட்சிகரமான கலை, இலக்கியங்களைப் பயன்படுத்திக் கொள்கிறது.

புதிய அறிவியல் கண்ணோட்டம் கொண்ட இத்தகைய கருத்துப் போராட்டத்தினால் வர்க்க முரண்பாடுகளை ஒழிக்கவும், சமுதாய உற்பத்தி உறவில், தொழிலாளி வர்க்கமும், வறுமைக்கோடுகளும், பெண்களும் சமபங்கு வகிக்கவும், தாழ்வு நிலையை ஒழிக்கவும் சமுதாயத்தை மாற்றியமைக்கவும், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிலைநாட்டவும் இயலும் என்கிறது மார்க்சியம்.

**பொதுவுடைமை இயக்கத்தின் வளர்ச்சி நிலை**

தொழில்துறையில் ஏற்பட்ட புரட்சியின் காரணமாகப் பொதுவுடைமை இயக்கம் தோன்றியது. பின்னர் உலகெங்கிலும் பரவியது. இந்தியாவில் நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகப் பொதுவுடைமை இயக்கம் காலூன்றியது.

சமூக, பொருளாதார மற்றும் அரசியல் நடவடிக்கைகள் காரணமாகக் கிராமச் சமூகத்திலும் புதிய மதிப்புகளும், சிந்தனைகளும் உருவாயின. பழைய வாழ்க்கை முறைக்கு எதிரான சக்திகள் முளைவிட்டன. தாங்களும் மனிதர்கள்தான்; சுயமரியாதை மிக்கவர்கள்தான் என்ற உணர்ச்சியால் உந்தப்பட்டு, அதற்குத் தடையாக இருக்கின்ற சமூக இழிவுகளையும், பொருளாதார அடிமைத்தனங்களையும் உடைத்தெறிய உழைக்கும் மக்கள் தயாரானார்கள். ஏற்கெனவே நகர்ப்புறத் தொழிலாளர்களிடையே உருவாகி வளர்ந்திருந்த தொழிற்சங்கம் கிராமங்களில் உழைக்கும் மக்களிடையேயும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இந்நிலையிலேயே பொதுவுடைமை இயக்கச் சிந்தனை வலுப்பெற்ற ஓர் அமைப்பாக உருவெடுத்தது.

**இந்தியாவில் பொதுவுடைமையின் தோற்றம்**

1871-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15-இல், பொதுவுடைமை அகிலத்தின் பேரவைக் கூட்டம் காரல்மார்க்ஸ் தலைமையில் நடைபெற்றது. ஏங்கெல்ஸும் அக்கூட்டத்தில் கலந்துகொண்டார். ஆனால், அதற்கு இந்தியாவின் தொழில் வர்க்கம் தயாராக இருக்கவில்லை. இந்தியாவில் பொதுவுடைமைக் கட்சி உருவாக அரைநூற்றாண்டுக் காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. என்றாலும் கம்யூனிஸ்டுகள் ஆங்காங்கே சிறுசிறு குழுக்களாகவே இயங்கி வந்தனர்.

1925ஆம் ஆண்டு டிசம்பரில் கான்பூரில் பொதுவுடைமைக் கட்சி உருவானது என்பது இந்தியப் பொதுவுடைமைக் கட்சியின் கருத்தாக இருக்கிறது. ஆனால், மார்க்சியப் பொதுவுடைமைக் கட்சியோ, 1920 -அக்டோபரில் தாஷ்கண்ட் நகரில் அமைக்கப்பட்டது என்று கூறுகிறது. அதிகாரப் பூர்வமாக 1920 -ஆம் ஆண்டு அக்டோபர் 17ஆம் நாள் சோவியத் நாட்டின் தாஷ்கண்ட் நகரில் இவ்வியக்கம் உருவாக்கப்பட்டது. தொடக்கத்தில் 10 உறுப்பினர்கள் மட்டுமே இதில் இடம் பெற்றிருந்தனர். 1921-ஆம் ஆண்டு முதல் உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமானது. உலக கம்யூனிஸ்டு இயக்கம் 1934இல் இந்திய கம்யூனிஸ்டு கட்சிக்கு உரிய அங்கீகாரம் அளித்தது.

> ‘‘பொருளியல் அடிப்படையில் இருப்பவன் - இல்லாதவன் என்னும் பாகுபாட்டைக் களைந்தெறியத் தோன்றியதே மார்க்சியக் கோட்பாடு என்ற எண்ணம் ரஷ்யப் புரட்சிக்குப் பின் உலகெங்கும் வேகமாகப் பரவத் தொடங்கியது. இந்தியாவிலும், அதன் தாக்கம் வெளிப்பட்டது. மார்க்சியச் சிந்தனையின் விளைவாக இந்தியப் பொதுவுடைமைக் கட்சி 1925ஆம் ஆண்டு இந்தியாவில் அமைக்கப்பட்டது”[17]

இதனைத் தொடர்ந்து மார்க்சின் பொருளியல் சிந்தனை, கலை இலக்கியவாதிகள் மத்தியிலும் செல்வாக்குப் பெறத் தொடங்கியது.

பொதுவுடைமை இயக்கம் இந்தியாவில் தோன்றுவதற்கு முன்னரே, இந்திய தேசிய காங்கிரஸ் தோற்றம் (1885), வங்காளப் பிரிவினை (1905) காந்தியடிகளின் இந்திய வருகை (1915), ஜாலியன் வாலாபாக் படுகொலை (1919), ஒத்துழையாமை இயக்கம் (1920) போன்ற முக்கிய போராட்ட நிகழ்வுகள் நடைபெற்றன என்றாலும், சோவியத்தின் சோசலிசக் கருத்துக்கள் போராளிகளுக்குப் புதிய ஆற்றலையும் உற்சாகத்தையும் கொடுத்தன.

இந்தியாவில் பொதுவுடைமை இயக்கம் 1934ஆம் ஆண்டு தடை செய்யப்பட்டது. என்றாலும், தொழிற்சங்கங்கள் வளர்ந்தபோது பொதுவுடைமை இயக்கமும் அமைப்பு அடிப்படையிலான வளர்ச்சியைப் பெற்றது.

**தமிழகத்தில் பொதுவுடைமைச் சிந்தனை**

கம்யூனிஸ்ட் கட்சிக்குத் தொடக்கக் காலத்தில் இந்தியாவில் இருந்த நிலைமைதான் தமிழகத்திலும் நிலவியது. இயக்கத்திற்கு வெளியே இருந்துதான் பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் இயக்க வளர்ச்சிக்கு உதவியுள்ளனர். தமிழகத்தின் முதல் கம்யூனிஸ்டு என்று சிங்காரவேலர் குறிக்கப்படுகிறார். கம்யூனிஸ்ட் கட்சியின் இயக்கக் கொள்கைகள் ‘லேபர் கிசான் கெசட்’, ‘தொழிலாளன்’, ‘குடியரசுப் புரட்சி’, ‘புது உலகம்’ போன்ற இதழ்களில் வெளிவந்தன. பொதுவுடைமைச் சிந்தனைகளைத் தமிழக மக்களிடத்தில் உணர்வுப் பூர்வமாகக் கொண்டு சேர்த்ததில் சிங்காரவேலர், திரு.வி.க., பெரியார் ஆகியோர் தனித்து விளங்குகின்றனர்.

இருபதாம் நூற்றாண்டின், நாற்பதாம் ஆண்டுகளில் இந்தியக் கிராமப் புறங்களில் நிலப்பிரபுத்துவத்தின் சுரண்டலையும், அடக்குமுறைகளை எதிர்த்து விவசாயப் பாட்டாளிகள் நடத்திய பல்வேறு போராட்டங்களும், தெளிவான சோசலிசச் சிந்தனையால் முடுக்கிவிடப்பட்டு நடத்தப்பட்டன. கிராமப்புறங்களில் நிலப்பிரபுத்துவத்தை எதிர்த்த போராட்டத்தைப் போலவே, நகர்ப்புறங்களில் முதலாளித்துவத்தை எதிர்த்த போராட்டமும் இக்கால கட்டத்தில் உச்ச நிலையை அடைந்திருந்தது.

மார்க்சியப் பார்வையில் இலக்கியம்

சமூகம் வர்க்கங்களாகப் பிளவுபடாத ஒரு புராதனக் காலகட்டத்தில் கலையும், இலக்கியமும் மக்களோடும், மக்கள் வாழ்வோடும் இரண்டறப் பின்னிக் கிடந்தன. அவை மக்களின் இன்பத்திலும், துன்பத்திலும், பிறப்பிலும் இறப்பிலும் கலைவழியே வெளிப்பட்டன. தன்னைச் சூழ்ந்த இயற்கையை வெற்றிகொண்டு மனிதன் வளர்ச்சி அடையத் தொடங்கியபோது மனித இனம் உடல் உழைப்பாளர்கள், அறிவு உழைப்பாளர்கள் என்னும் இரண்டு பிரிவினரைக் கொண்டதாகப் பிளவுபட்டது. அறிவு வெளிப்பாடே இலக்கியங்கள்.

காலப்போக்கில் கலை, இலக்கியங்கள் யாவும் முதலாளிகளின் சொத்துரிமையாக மாறிவிட்டன. இந்நிலையை,

> ‘‘இவ்வெழுத்து இலக்கியம் பழங்காலத்தில் மக்களிடம் இருந்து விலகிச் சென்றன. இவை மக்களைப் பற்றிப் பேசவில்லை. மக்களுக்காகவும் படைக்கப்படவில்லை; மக்களால் படிக்கப்படவில்லை; சமூகத்தில் மேல்தட்டிலே இருக்கின்ற சிறுபான்மையோர் சொத்தாக இவை ஒதுங்கிவிட்டன. அவர்களின் வாழ்க்கையையும் அருமை பெருமைகளையும் ஆசாபாசங்களையுமே முதன்மையாக இவை வெளியிட்டன. எழுத்து வடிவம் அற்ற நாட்டுப்புற இலக்கியங்கள் மட்டுமே மக்கள் இலக்கியமாகத் தொடர்ந்து நிலவிவந்தன’’[18]

என்னும் கூற்றில் காணமுடிகிறது

இலக்கியம் எவ்விடத்திலிருந்து தொடங்குகிறது; திறனாய்வு நோக்கில் இலக்கியம் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதே இலக்கிய மார்க்சியப் பார்வை ஆகும். உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் இயங்குகின்றன என்ற இயக்கவியல் பொருள்முதல்வாதமும் (Dialectical Materialism), பல்வேறு சமூகக் காலகட்டங்களை விளக்கும் வரலாற்றியல் பொருள்முதல்வாதமும் (Historical Materialism), மார்க்சியத் தத்துவம் உருவாகக் காரணங்களாக இருக்கின்றன. இதனடிப்படையிலேயே சமுதாய அமைப்பினைத் தமக்குள் செயல்பாட்டு உறவுடைய இரண்டு கட்டுமானங்களாக மார்க்சியம் பகுக்கிறது. வாழ்க்கையின் பயனாய்ப் பெறப்பட்ட பொருளாதார உற்பத்தி உறவுகளை அடிக்கட்டுமானம் (Basic Structure) என்றும், இந்தக் கட்டுமானமே சமயங்கள், அரசுகள்,

மரபுகள், அழகியல்கள், கலை இலக்கியங்கள் ஆகியவற்றுக்கு அடிப்படையாக அமையும் இவ்வமைப்பை மேல்கட்டுமானம் (Super Structure) என்கிறது மார்க்சியம். இவை இரண்டும் தனித்து இயங்குவன அல்ல; மேல்கட்டுமானமும், பொருளாதார உற்பத்தி உறவுகளால் அமைந்த அடிக்கட்டுமானத்தைப் பாதிக்கிறது. அதாவது, பொருளாதார அமைப்பு இலக்கியத்தைப் பாதிக்கவும், இலக்கியம் பொருளாதாரத்தைப் பாதிக்கவுமாகிய நிலையில் இலக்கியத்தின் இடம் இருப்பதாக மார்க்சியம் அறிவுறுத்துகிறது.

அடிக்கட்டுமானமாகிய பொருளாதார உறவு, உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் அமையும் மேல்கட்டுமானமாகிய சமயம், அரசு, கலை, இலக்கியங்கள் அனைத்தும் அடிக்கட்டுமானமாக இருக்கும் மக்களுக்குப் பயன்பாடு உடையதாகவே இருக்க வேண்டும் என்கிறது மார்க்சியம். ‘கலை கலைக்காகவே’ என்பவர்களின் கோட்பாட்டை மார்க்சியம் மறுத்துரைக்கிறது. வெறும் புனைவியலாகவே கனவுச் சிந்தனைகளையும், விரக்திப் புலம்பலகளையும் கொண்டிருக்கும் இலக்கியம் எவ்வகையிலும் மக்களை உயர்த்தாது.

உள்ளீட்டைப் புறக்கணித்துவிட்டு எந்த இலக்கியமும் நிலைபெற்றுவிட முடியாது. உள்ளீடு மக்களை மேன்மையுறச் செய்ய வல்லதாக இருக்க வேண்டும். மக்களுக்காகவே கலை என்பதை மார்க்சியம் நம்புவதால் “இலக்கியத்தின் உள்ளீடு சமுதாயத்திற்கு உதவக்கூடியதாக இருக்க வேண்டும்”[19] என்று மார்க்சியம் எதிர்பார்க்கிறது. இதுவே மார்க்சியத்தின் தலையாய இலக்கியக் கோட்பாடாக விளங்குகிறது.

**மார்க்சிய இலக்கியக் கோட்பாடுகள்**

மார்க்சியம், மார்க்சின் தத்துவக் கருத்துக்களை மக்கள் மத்தியில் கொண்டு சென்று நடைமுறைப்படுத்துவதற்கும், அதன்மூலம் தொழிலாளி வர்க்கத்திற்கும், பாட்டாளி வர்க்கத்திற்கும் உதவிசெய்து பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிலைநாட்டவும் கருதி, ஓர் இயக்கத்தை ஏற்படுத்தியது. அந்தப் புரட்சிகர இயக்கமே பொதுவுமைக்கட்சி அல்லது இயக்கம் ஆகும். இச்சிந்தனைப் போக்கில் எழுதப்படும் இலக்கியங்களே மக்களுக்குப் பயனுள்ளதாக அமைந்திருக்கும் என்று மார்க்சியம் அறிவுறுத்துகிறது.

கலை மக்களுக்காகவே என்பதால் மக்களை மேன்மையுறவைக்கும் இலக்கியங்களையே இலக்கியவாதிகள் படைத்தளித்தல் வேண்டும். மக்களுக்கு நெருங்கியதாக இலக்கியம் இருக்க வேண்டுமே அன்றி, இலக்கியம் மனிதனுக்கு அப்பாற்பட்டது என்ற அந்நியமாதலின் நோக்கில் இலக்கியத்தைப் படைத்தல் கூடாது என்று மார்க்சியம் எடுத்துரைக்கிறது.

மரபார்ந்த கலை இலக்கியம் யாவற்றையும் மக்களின் சொத்தாகப் பார்க்கிறது மார்க்சியம். அதனை உரிமை கொண்டாட யாவருக்கும் உரிமை இல்லை என்றும் அறிவுறுத்துகிறது.

மார்க்சியத் தாக்கம் பெற்ற இலக்கியத்தின் சிறப்பினை,

> “மக்களுக்கான இலக்கியம், மனிதனை மேம்படுத்துவதற்கான இலக்கியம், மனிதாபிமான நோக்குடன் எழுதப்படும் இலக்கியம் என்று பல தொடர்களால் முற்போக்கு இலக்கியம் விளக்கப்படுகிறது”[20]

என்னும் கோவை ஞானியின் கூற்று பளிச்சிட்டுக்காட்டுகிறது.

> “வர்க்க சமுதாயத்தை அதன் பகுதியாகிய சுரண்டும் வர்க்கத்தோடு சேர்த்து நேசிப்பது மனிதாபிமானமாகாது. சுரண்டும் வர்க்கத்தினை மேம்படுத்துவதற்காக நாம் இலக்கியம் படைக்கவும் முடியாது. மனிதனின் தொடர்ந்த இடைவிடாத வளர்ச்சிக்குத் தடையாக உள்ள சுரண்டும் வர்க்கத்தை ஒழிப்பதற்காக நடைபெறும் மாபெரும் வர்க்கப் போராட்டத்திற்கு இலக்கியம் உதவியாக இருக்க வேண்டும்”[21]

என்பதே மார்க்சிய இயக்கத்தின் இலக்கியக் கோட்பாடாக விளங்குகிறது.

எனவே, இலக்கியம் சமுதாயப் பயனைக் கொண்டதாக அமைதல் வேண்டும் என்பதே மார்க்சியத்தின் இலக்கியக் கோட்பாடாக விளங்குவது தெளிவாகிறது.

**கலை இலக்கியத்தில் பொதுவுடைமைச் சிந்தனை**

1934இல் சோவியத் நாட்டில் சோவியத் எழுத்தாளர் மாநாடும், 1935இல் பாரீஸில் உலக எழுத்தாளர் மாநாடும் நடைபெற்றதைத் தொடர்ந்து 1936ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் லக்னோவில் ‘முற்போக்கு எழுத்தாளர் சங்கம்’ உதயமானது. இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் தோற்றம் உலக அரங்கில் மார்சிம் கார்க்கி, ரோமன் ரோலண்ட், ஹென்றி பார்பஸ் போன்றோர் தூவிய முற்போக்கு இலக்கிய விதைகளின் விளைவாகக் கருதப்பட்டது.

1924இல் சரத்சந்திரர் எழுதிய ‘இலக்கியத்தில் கலையும் சீரழிவும்’ என்ற கட்டுரையில் இடம்பெற்றுள்ள

> “வெறும் அரசர்கள், ஜமீன்தாரர்களின் வாழ்க்கையைப் பற்றி எழுதுவதை நிறுத்திவிட்டு, வாழ்க்கையின் அடிமட்டத்தில் உழலும் மக்களின் உணர்வுகளையும், வறுமையையும், சோவியத் எழுத்தாளர்கள் சித்திரிக்-கிறார்கள். அதுபோன்று நாமும் எழுத வேண்டும். அப்போதுதான் நாமும் உலக அரங்கில் இடம்பெற முடியும்”[22]

என்னும் கூற்று, இந்திய எழுத்தாளர்களை உலகப் பொதுவுடைமைச் சிந்தனையாளர்களாக வேண்டியதன் தேவையை வலியுறுத்துகிறது.

பொருளாதார நெருக்கடி ஒரு புறம், ஜெர்மனியில் ஹிட்லர் வடிவில் புறப்பட்ட பாசிச அடக்குமுறை மறுபுறமுமாக, உலகம் முப்பதுகளில் தத்தளித்தபோது, உலகெங்கும் ஒலித்த

முற்போக்குக் குரல் இந்தியாவிலும் ஒலித்தது. சஜ்ஜாத் ஜாஹீர், முல்க்ராஜ் ஆனந்த், இரவீந்திரநாத் தாகூர், பிரேம்சந்த், சரோஜினி நாயுடு போன்ற எழுத்தாளர்கள் இக்குரலால் ஈர்க்கப்பட்டனர்.

சர்வதேச மனிதநேயத்தை அடித்தளமாகக் கொண்டு இந்தியாவில் முற்போக்கு எழுத்தாளர் சங்கம் உருவானது. "விமர்சன ஆர்வ எழுச்சியைத் தூண்டாத, நமது உணர்வை விழிப்புறச் செய்யாத, உறுதியான மனவலியோடு கொடிய வாழ்க்கையின் எதார்த்தத்தை எதிர்நோக்குவதற்கான வலிமை தராத இலக்கியத்தால் இன்றைக்கு நமக்கு எவ்விதப் பயனுமில்லை. அதை ஒரு இலக்கியமாகவே அழைக்கக்கூடாது"[23] என்ற பிரேம்சந்தின் கூற்றிற்கு ஏற்ப, முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் தோற்றம் போலவே அதன் கொள்கை அறிக்கையும் மகத்துவம் நிறைந்ததாகக் காணப்பட்டது.

மேலைநாட்டில் தோன்றி வளர்ந்த புதின இலக்கியம் ஆங்கிலேயர் வருகைக்குப்பின் ஏற்பட்ட அச்சு இயந்திரம், பத்திரிகைக் கலை ஆகியவற்றின் விரிவால் நம்நாட்டிலும் காலூன்றத் தொடங்கியது. 'பங்கிம் சந்திரர் வங்காளியில் 1865-ஆம் ஆண்டு எழுதிய 'துர்க்கேச நந்தினி' என்பதே இந்திய மொழிகளில் முதன்முதலான எழுதப்பட்டு வெளிவந்த புதினமாகிறது. மாயூரம் வேதநாயகம் பிள்ளை 1879-ஆம் ஆண்டு வெளியிட்ட 'பிராதப முதலியார் சரித்ததிரம்' தமிழின் முதல் புதினமாகிறது. அதற்கடுத்ததாக, 1880-இல் 'ராஜசேக சரித்திரமு' என்னும் தெலுங்குப் புதினம் வெளிவந்தது. இதன் ஆசிரியர் ராஜமகேந்திரம் அரசினர் கல்லூரியில் தெலுங்கு பண்டிதராயிருந்த வீரேசலிங்கம் பந்துலு. இதனையடுத்து அப்பு நெடுங்காடி எழுதிய 'குண்டலதா' என்னும் மலையாளப் புதினம் 1887-இல் வெளிவந்தது. இவ்வாறு இந்திய மொழிகளில் தோற்றங்கண்ட புதின இலக்கியம் பல்வேறு விளக்கங்களைக் கொண்டதாக அமைகிறது.

**புதின இலக்கியத்தின் விளக்கம்**

தமிழில் புதுமையைப் படைக்கும் நோக்கோடு 'புதினம்' என்னும் புதிய இலக்கிய வகை தோன்றியது. 'உரைநடையில் அமைந்த புனைகதை அல்லது மாந்தர்களின் உணர்ச்சி நிறைந்த வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சித்தரித்துக் காட்டுவது[24] என்று சேம்பர்சு அகராதி புதினத்திற்குப் பொருள் கூறுகிறது. மேலும்,

> "வாழ்க்கையைச் சித்திரிக்கும் இலக்கிய வகைகளில் நாவல் ஒன்றாகும். அதாவது வாழ்க்கையில் காணக்கூடிய பாத்திரங்களையும் அவர்களுக்கு நேரக்கூடிய நிகழ்ச்சிகளையும் கொண்டு ஆசிரியர், நம் கண்முன் வாழ்க்கை நடப்பது போன்ற அரிய படைப்பைச் செய்கிறான்"[25]

என்று புதினத்திற்கு விளக்கம் தருகிறது கலைக்களஞ்சியம். எனவே தான் கடந்தகால நிகழ்கால வாழ்வினை உணர்த்தவல்ல பாத்திரங்கள் உணர்ச்சிகள் ஆகயவற்றைச் சிக்கலான

கதைப்பின்னலில் அமைத்துப் பல பாகங்களாக, நீளமாக எழுதப்படுகின்ற, உரைநடையில் அமைந்த புனைகதை என்பது பொதுவாகப் புதினத்திற்குரிய இலக்கணமாகக் கருதப்படுகிறது. ஹென்றி லூயிஸ் என்பார். "மனிதனின் தவறுகளையும் கொடுமைகளையும் விளக்குவதே புதினத்தின் முக்கிய நோக்கமாகும். வேறெந்தக் கலையும் இந்த நோக்கத்திற்காக இந்த அளவு பயன்படவில்லை"[26] என்று கூறுவதன் மூலம் புதின இலக்கியத்தின் சமுதாய நோக்குப் புலனாகிறது.

**புதின இலக்கியத்தின் சமூகவியல் தன்மை**

அறிவூட்டலுக்காகவும் மகிழ்வுட்டலுக்காகவும் தொடக்கக் காலப் புதினங்கள் படைக்கப் பெற்றன. கால ஓட்டத்திற்கேற்ப அவற்றின் பாடுபொருள் சமுதாய நோக்கில் அமைந்தன. இதனைத் தெளிவுபடுத்தும் வகையில்,

> "நம்முடைய சமகால வாழ்க்கையின் சமூகச் சிக்கல்கள், பொருளாதரச் சிக்கல்கள், தனிமனித, குடும்பச் சிக்கல்களைச் சமூகப் பின்னணியில் படைப்பது. மாறிவரும் சமூக மதிப்புகள் போன்றவை புனைகதை இலக்கியத்தின் பாடுபொருளாகின்றன"[27]

என்னும் கூற்று அமைகிறது.

சமூக மாற்றத்திற்கும் மேம்பாட்டிற்கும் உறுதுணைபுரியும் புதின இலக்கியம் சமூக ஆவணமாகவும் திகழ்கிறது. "தமிழ்ச் சமுதாயத்தின் நிலையை அறிந்திட சங்க இலக்கியங்கள் உதவுவது போலத் தற்காலச் சமுதாயத்தின் மாற்றங்களையும் சிக்கல்களையும் அறிந்து கொள்ள நாவல்கள் உதவுகின்றன"[28] என்னும் கூற்று ஈண்டு நோக்கற்பாலது.

> "சமுதாயத்தை நுணுக்கமாகப் பிரதிபலிப்பது மட்டுமின்றி, அதனை மாற்றி அமைக்கும் பணியில் பங்கு பற்றுவதுடன், அப்பணி வெற்றி பெறுவதற்குரிய மாற்றங்களை இலக்கியப் பொருளாகத் துணிந்து ஏற்றுக் கொள்வதும் இன்றைய தேவையாகிறது"[29]

என்பர் க. கைலாசபதி. இக்கருத்து, சமுதாயப் பிரச்சனைகளை மையமாகக் கொண்ட புதின இலக்கியம், சமுதாய மாற்றத்திற்கான கருவியாகவும் விளங்குவதைப் படம்பிடித்துக் காட்டுகிறது. நாவலின் சமூகவியல் தன்மை குறித்து மைக்கேல் கிரா.ஃபி,

> "நாவல் தான் வரலாற்றுக் கண்ணோட்டத்திலும், சமூகக் கண்ணோட்டத்திலும் மனிதனை விளக்கமாகச் சித்திரித்துக் காட்டும் முதல் கலை வடிவமாக விளங்குகிறது"[30]

என்று குறிப்பிடுகிறார். இக்கூற்றோடு,

“பல்வேறு காரணங்களினாலே ஒருமைப் பாட்டை இழந்த சமூகத்தில் குடும்பம், சாதி, வாழிடம், குலத் தொழில் முதலியவற்றிலிருந்து தனிமைப்பட்டும், விலகியும் வாழநேரும் மக்களே தனிமனிதராவர். வழிவழிவந்த நம்பிக்கைகள், நியதிகள், சமூக உணர்வுகள் ஆகிவற்றிற்கும் தனிமனிதருடைய வாழக்கை நிலைக்கும் பொருந்தாமை ஏற்படும் பொழுது முரண்பாடு தோன்றுகிறது. இந்த முரண்பாட்டினை, அதாவது மனிதருக்குள்ளும் மனிதனுக்கும் சமூகத்திற்கும் இடையேயும் தோன்றும் மோதலை அடிநிலையாகக் கொண்டதே நாவலிலக்கியம்”[31]

என்னும் கருத்து ஒப்புநோக்கத்தக்கது. சமுதாயச் சிக்கல்களை எடுத்துக்காட்டி, அவற்றைத் தீர்ப்பதற்குரிய நெறிகளையும் சுட்டிக் காட்டிச் சமுதாயத்தை மாற்றியமைக்கும் பணியில் புதின இலக்கியங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. “புதிய சமூக உருவாக்கத்திற்கு அதன் எழுத்தறிவு வளர்ச்சிக்கு நவீன இலக்கியம் துணை செய்கிறது”[32] என்னும் கூற்றின் மூலம், சமுதாயச் சீரமைப்பில் புதின இலக்கியத்தின் பங்கினை அறியமுடிகிறது. மேலும் புதின ஆசிரியர்கள் பலர், சமூகவியல் தன்மையோடு பல புதிய இலக்கியங்களைப் படைப்பதன் மூலம் சமுதாயச் சீரமைப்பைத் தம் கடமையாகக் கொண்டுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**புதின எழுத்தாளரின் கடமை**

ஓர் ஏழுத்தாளர், சமுதாயத்தால் தான் பாதிக்கப்படுவதை அடிப்படையாகக் கொண்டே இலக்கியம் படைப்பதால் அதன்மூலம் சமுதாயத்தையும் மக்களின் வாழ்க்கையையும் செம்மைப்ப டுத்துகின்ற பணியினைச் செய்கின்றார். “எழுத்தாளன் சமுதாயத்தினால் பாதிக்கப்படுகின்றான்: சமுதாயம் அவனால் பாதிக்கப்படுகிறது. இலக்கியம் வாழ்க்கையை உருவாக்கித் தருவதோடு அதனைச் சீரமைக்கவும் செய்கிறது”[33] என்னும் கூற்று இதற்கு அரண் சேர்க்கிறது.

சமுதாயத்தில் அவ்வக் காலத்திற்கேற்பப் பல்வேறு சிக்கல்கள் தோன்றுகின்றன. அவற்றை தீர்க்க, இலக்கியப் படைப்பாளர்கள் தம் படைப்புகளின் வாயிலாகப் பெரிதும் முயன்று வருகின்றனர். “தாம் நினைத்தவற்றை மக்கள், சமூகத்தில் விதைத்து வேரூன்றிச் செய்யும் ஆற்றல் படைத்தவர் படைப்பாளர். இவர்களின் எழுத்து வன்மையால் ஒரு சமுதாயத்தைச் செப்பனிடவும் முடியும்”[34] என்னும் கருத்திற்கு ஏற்ப சீர்குலைந்து போயிருக்கும் சமுதாயத்தைச் சீரமைக்கவும் முனைகின்றனர் என்பது தெளிவாகிறது.

“அறிவுபூர்வமாகவும் ஊக்கத்துடனும் சமூகத்தின் மறுஊருவாக்கத்தில் தனது பங்கைச் செலுத்துமாறு அனைவருக்கும் அழைப்பு விடுப்பது தான் அவனது எழுத்தின் அவசரமான அத்தியாவசிமான செய்தியாக இருக்க வேண்டும்”[35] என்பது எழுத்தாளனின் கடமை பற்றிய சரியான மதிப்பீடு என்றே கருதமுடிகிறது.

> "மதத்தின் பேரில் சாமியின் பேரில் மக்களை ஏமாற்றி அவர்களது மத்தியில் கலகம் விளைவிப்பதை அம்பலப்படுத்தி மனித நேயத்தையும் மக்களிடையே நல்லுறவையும் வளர்க்கப் பாடுபடுவதையும் இன்று கலை இலக்கிய ஈடுபாடு உடையோர் தங்களது தேசப் பக்திகடமையாகக் கொள்ளவேண்டிய காலம் இது! இடையூறுகளைச் சந்திக்க வேண்டி வந்தாலும் மக்களின் சார்பு நிறுவனம் இலக்கியத்திற்கு உரமூட்டுகிறது."[36]

இக் கூற்று சமுதாயத்திற்குத் தொண்டாற்றும் இலக்கியவாதியைச் சரியான திசை வழிப்படுத்துகிறது என்று கூறமுடிகிறது. சமுதாயத் தீமையை எதிர்த்துக் குரல் கொடுப்பதையும் சமுதாய மாற்றத்திற்குப் பேனாவை ஆயுதமாகப் பயன்படுத்துவதையும் தம் கடமையாகக் கொண்டனர் எழுத்தாளர்கள். இதற்குச் சான்றாக அகிலனின்,

> "ஒவ்வொரு காலக் கட்டத்திலும் புதுப் புதுப் பிரச்சனைகளும் தொல்லைகளும் துன்பங்களும் தீமைகளும் சமுதாயத்துக்கு ஏற்பாடுவது உண்டு. அவற்றை வெளிப்படுத்துவதும் அவற்றோடு பேனா முனையால் போராடுவதும் எழுத்தாளனின் கடமைகள் என்றே நான் கருதுகிறேன்"[37]

என்னும் கருத்தைக் குறிப்பிட முடிகிறது. மேலும்,

> "சமுதாயத்தில் காணப்பெறும் குறைபாடுகளை எடுத்துக்காட்டி அதைத் திருத்த வேண்டிய கடப்பாடு புதின ஆசிரியனுக்கும் உண்டு"[38]

என்னும் கருத்தின் மூலம் குறையைச் சுட்டுவதோடு அன்றி அதனைத் திருத்துவதும் எழுத்தாளனின் முக்கியக் கடமை என்பதை அறியமுடிகிறது. 'பேரறிவாளர்களால் இலக்கியம் படைக்கப் படுகின்றது. புதின ஆசிரியர்களும் பேரறிவாளர்களே'[39] என்னும் இ.எம். ஃபாஸ்டரின் கூற்றுப்படி பல்துறை அறிவுப் பெற்றுள்ள புதின ஆசிரியர்கள் பொதுவுடைமைச் சமுதாயத்தை அமைப்பதையே பெரு நோக்கமாகக் கொண்டுள்ளனர் என்பது புலனாகிறது.

**புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனைகள்**

சமூகத்தின் நலிவுகளை எடுத்துரைப்பதற்கேற்ற இலக்கிய வடிவங்களில் புதினமே தலைசிறந்து விளங்குகிறது. பொதுவுடைமை எழுச்சியின் விளைவினைக் கதைப்போக்கில் அறிவித்தற்கும், அறிதற்கும் ஏற்றதோர் இலக்கிய வடிவமாக அமைந்துள்ளது. சான்றாக,

> ''ஐரோப்பியர்களின் ஆட்சி விளைவினால் இலக்கியம், நாவல் - சிறுகதை - புதுக்கவிதை என்ற புத்திலக்கிய வகைகளைப் பெற்றது. இவ்வகை இலக்கியங்கள்தான் மக்களுக்காக மக்களால் படைத்துக்கொள்ள வழியமைத்துக் கொடுத்தன. இவற்றுள்ளும் ஒரு படைப்பினுள்ளேயே வாழ்வின் அனைத்து அம்சங்களையும் வெளிப்படுத்த அல்லது குறிப்பிட்ட சமுதாயத்தை வெளிப்படுத்த சிறுகதை, புதுக்கவிதை வகைகளைவிட நாவல் வகை சிறந்ததாகிறது''[40]

என்னும் கருத்தினைக் குறிப்பிடமுடிகிறது.

காலந்தோறும் பல்வேறு இலக்கிய வகைகள் உருவாக்கம் பெற்று வருகின்றன. ஆனால் வேறு எந்தவொரு இலக்கிய வகையையும் விட தொழிற்புரட்சிக்குப் பின் தோன்றி சமூகத்தோடு மிக நெருங்கிய தொடர்புடைய ஊடக ஆவணமாய்ப் படைக்கப்பட்டு வரும் இலக்கிய வகை புதினம் ஆகும். சமகாலச் சமூகப் பதிவுகள், அவற்றின் சிறப்பம்சம் ஆகும். பல்வேறு வாழ்வியல் முரண்பாட்டு நிகழ்ச்சிகளால் பாதிக்கப்பட்ட படைப்பாளர்கள் தமது அனுபவங்களைப் பொது மனித வாழ்க்கை நடப்பு பற்றியதாய்ச் சித்திரித்து இடையிடையே தவிர்க்கமுடியாத தங்களது கருத்துக்களையும், உட்புகுத்தி இவ் இலக்கிய வகை உயிர்ப்புடன் விளங்குவதற்குத் துணை செய்கின்றனர்.

வர்க்கப் போராட்டத்தை விளக்குவதற்கும் விரிவாக எடுத்துரைப்பதற்கும் புதினமே சிறந்த கலை வடிவமாகும். இதனை,

> “வாழ்க்கையை விவரிக்க, விளக்க, வாழ்க்கைக்குப் பொருள்தர முயலும் தற்கால இலக்கிய வடிவங்களுள் முதன்மையானது நாவல். ஒரு நாவல் மகத்தானதாக இருக்க வேண்டுமானால், அது வரலாற்றின் ஒரு பகுதியாக விரிந்துவிட வேண்டும். மனிதர்கள் ஓட்டத்தில் இருப்பவர்கள். ஓட்டத்தை உருவாக்குபவர்கள், மனிதர்களின் செயல்களை, சிந்தனைகளை இவ்வாறு வரலாற்றுப் பின்னணியில்தான் விளங்கிக் கொள்வது சாத்தியம்”[41]

என்னும் கூற்றின் வாயிலாக அறியவியலுகிறது. எனவே வர்க்கப் போராட்டங்களை விளக்குவதற்கு உகந்த வடிவமாகப் புதினங்களே திகழ்வது தெளிவாகிறது.

**புதின வளர்ச்சி**

வேதநாயகம் பிள்ளை தொடங்கி வைத்த புத்திலக்கிய முயற்சி, பின்னர் வேகமாக வளர்ச்சியடைந்தது. கல்வியும், வேலைவாய்ப்புக்களும், நடுத்தர வர்க்க மக்களைக் கதை இலக்கியங்கள்பால் ஈர்த்தன. படித்த வர்க்கத்தினர் பொழுது போக்கிற்காகப் புதினங்களைப் படிக்கலாயினர். தொடக்கக் காலத்தில் நிலவி வந்த புராண, ராஜாராணிக் கதைகள் என்ற நிலை மாற்றம்பெற்று, நமது குடும்பங்களில் நடைபெறும் நிகழ்வுகளையும், குடும்ப உறவுகளில் ஏற்படும் மாற்றங்களையும் விளக்கும் விதத்தில் கதைகள் படைக்கப்பட்டன.

எண்ணற்ற படைப்பாளர்கள் தமிழ்ப் புதின இலக்கியத்திற்கு வளம் சேர்த்துள்ளனர். அவற்றில் சமூக, அரசியல், பொருளாதாரக் காரணிகள் தமிழ்ப் புதினங்களுக்குரிய பாடுபொருளாக்கப்பட்டன. ஆ. மாதவையா, கு.ப.ரா., கல்கி, மு.வ., ஜெயகாந்தன், தி. ஜானகிராமன், சுந்தரராமசாமி போன்றோர் தத்தமது வாழ்க்கை அனுபவங்களுக்கேற்ப கதைகளைப் படைத்தனர். இப்புதினங்கள் முன்வைக்கும் வாழ்வியல் அனுபவங்களும், அரசியலும் வெவ்வேறானவை. ஒவ்வொரு நாவலாசிரியரும் அவரவர்தம் வாழ்க்கை அனுபவப்

பகிர்தலுக்கேற்ற வகையில் கதை நிகழ்வுகளையும் மொழிநடையையும் கையாண்டுள்ளனர். இந்நிலை தமிழ்ப் புதின வளர்ச்சிக்குப் புதிய வரவினைத் தந்தது. புதினங்களின் பாடுபொருள் பலவாறாக அமைந்தன. சரித்திரக் கதைகள், சமுதாயக்கதைகள், விடுதலை வேட்கையைத் தோற்றுவிக்கும் கதைகள், இச்சிந்தனை மரபிலிருந்தே உருவாக்கம் பெற்றன.

**சமூகப் புதினங்கள்**

தமிழின் தொடக்கக் காலப் புதினங்கள் பொதுத்தளத்தில் அமைந்தன. முன்னரே குறித்தவாறு அவற்றில் அடித்தட்டு மக்கள் பிரச்சனைகள் எதுவும் பேசப்படவில்லை. மேலும் அவை, புராண, காப்பியப் போக்கிலிருந்து விடுபட வில்லை. மேல்தட்டு மக்கள் அதில் மாந்தர்களாக இடம்பெற்றனர். அவர்களது வாழ்வியல் நிகழ்வுகள் கதைகளில் இடம்பெற்றன. இதன்பின்னர் தமிழ்ப் புதினங்கள் பரந்துபட்ட களங்களைக் கொண்டவையாக மலர்ந்தன. அவ்வாறு வளர்ச்சி பெற்ற புதின இலக்கியக் களத்தில் ஒருவகைமையே சமூகப் புதினங்கள் ஆகும்.

சமூகத்தின் நலனுக்காக, சமூகத்தின்மீது அக்கறை கொண்ட படைப்பாளர்களால் படைக்கப்படும் புதினங்களே சமூக புதினங்கள் ஆகும். சமூகத்தின் மீதான அழுத்தமான பார்வையைச் செலுத்தி, சமுதாய அவலங்களை வெளிப்படுத்தும் புதினங்களை இவ்வகையில் அடக்கலாம். இதன் வளர்ச்சிப் போக்கில் முதலாளித்துவ எழுத்தாளர்களும், இடதுசாரி எழுத்தாளர்களும் பல பாட்டாளி வர்க்கக் கதாபாத்திரங்களைப் படைத்து, அதன்மூலம் வாசகர்கள் மனத்தில் எழுச்சியை உண்டாக்கினர்.

**இருபதாம் நூற்றாண்டுச் சமூகப் புதினங்கள்**

இருபதாம் நூற்றாண்டின் தொழிற்பெருக்கம், நகர்மயமாதல், அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி, கல்வி, வேலைவாய்ப்பு, அகதிகள் நிலை போன்றவை சமூகக் கட்டமைப்பை மாற்றம் பெறச் செய்துள்ளன. இவற்றில் நேரும் சிக்கல்களையும், வாழ்வியல் அவலங்களையும் போராட்டங்களையும் படைப்பாளர்கள் கதைப்போக்கில் பதிவுசெய்துள்ளனர்.

தமிழ்ப்புதின வளர்ச்சியில், பொதுவுடைமைச் சிந்தனைப் போக்கினைக் கொண்டு படைக்கப்பட்ட புதினங்களாகக் கே.எஸ்.வேங்கடரமணியின் 'முருகன் ஓர் உழவன்', அகிலனின் 'எங்கே போகிறோம்', கல்கியின் 'அலைஓசை', ராஜம் கிருஷ்ணனின் 'வேருக்கு நீர்', 'ரோஜா இதழ்கள்', 'அலைவாய்க் கரையில்', 'உத்தரகாண்டம்', நா.பார்த்தசாரதியின் 'குறிஞ்சிமலர்', ஜெயகாந்தனின் 'கருங்காலி,' இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப்புனல்', 'தந்திரபூமி', ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்', டி, செல்வராஜின் 'தேநீர்', 'மலரும் சருகும்', சின்னப்பபாரதியின் 'சங்கம்', பொன்னீலனின் 'கரிசல்', திலகவதியின் 'கனவைச் சூடிய நட்சத்திரம்', 'கல்மரம்', பெருமாள் முருகனின் 'தகப்பன் கொடி', சுப்ரபாரதிமணியனின் 'பிணங்களின் முகங்கள்', 'சமையல் அறைக் கலயங்கள்', 'தேநீர் இடைவேளை' சுமதியின் 'கல்மண்டபம்', மா.

நடராசனின் ‘ஊர் கலைஞ்சு போச்சு’, பாமாவின் ‘வன்மம்’, ராஜ்கௌதமனின் ‘சிலுவைராஜ் சரித்திரம்’, ‘காலச்சுமை’, சிவகாமியின் ‘பழையன கழிதலும்’, சு. தமிழ்ச்செல்வியின் ‘மாணிக்கம்’, ‘அளம்’இ ‘கீதாரி’, சந்திரகாந்தனின் ‘தழல்’, உமா மகேஸ்வரியின் ‘யாரும் யாருடனும் இல்லை’, கி.ரா.வின் ‘கோபல்ல கிராமம்’, சி.எம். முத்துவின் ‘வேரடிமண்’, எம். கோபாலகிருஷ்ணனின் ‘மணல்கடிகை’, சல்மாவின் ‘இரண்டாம் ஜாமங்களின் கதை’, சோலை சுந்தரபெருமாளின் ‘செந்நெல்’, ‘பெருந்திணை’இ சோ. தர்மனின் ‘கூகை’, ‘சூல்’ ச. பாலமுருகனின் ‘சோளகர் தொட்டி’, ஜோ.டி. குரூஸின் ‘ஆழிசூழ் உலகு’, ஸ்ரீதர கணேசனின் ‘வாங்கல்’, ‘சந்தி’, அறிவழகனின் ‘கழிசடை’, செ.யோகநாதனின் ‘கிட்டி’, ‘நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே..!’, சு.வெங்கடேசனின் ‘காவல் கோட்டம்’, மீரான் மைதீனின் ‘அஜ்னபி’, ஸர்மிளா ஸெய்யத்தின் ‘உம்மத்’, அன்வர் பாலசிங்கத்தின் ‘கருப்பாயி என்கிற நூர்ஜஹான்’, பூமணியின் ‘பிறகு’, ‘வெக்கை’ ‘அஞ்ஞாடி’, வண்ணநிலவனின் ‘கடல்புரத்தில்’, பொன்னீலனின் ‘தேடல்’இ செந்தில்குமாரின் ‘காலகண்டம்’ போன்றவற்றைக் குறிப்பிடலாம். இப்புதினங்கள் சமூக நிகழ்வுகளையும், சமூகத்தில் நிகழும் அவலங்களையும் படம்பிடித்துக்காட்டுவதோடல்லாமல், சமூக வரலாற்று நிகழ்வுகளை எடுத்துரைக்கும் வகையிலும் அமைந்திருக்கின்றன.

**தற்காலச் சமூகப் புதினங்களின் போக்கு**

தமிழ் மக்கள் பெற்ற மாற்றங்களின் விளைவு புதினம். எனவே, ‘தமிழ்ச் சமூகப் புதினங்கள் தமிழ்ச் சமூகத்தையும், தமிழ் மக்களிடையே காணும் மாற்றங்களையும் அறிவிக்கும் காலச் சங்குகள் எனலாம்’[42] என்பது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. சமுதாய நாவல் ஒவ்வொன்றும், சமூகவியலாளர் கலைச்சொல்லில் கூற வேண்டுமானால், ஒரு நிகழ்வியல் (ஊயளந ளுவரனல) ஆகும். தனிமனிதனைப் பற்றியோ, ஒரு குடும்பத்தைப் பற்றியோ, ஒரு சமூகத்தைப் பற்றியோ எழுதப்படுகின்ற நிகழ்வியல் சமுதாயத்தைப் பற்றிய எவ்வளவோ தரவுகளை இப்புதினங்களில் காணலாம்.[43] சமூகப் புதினங்கள் சமூகத் துன்பத்தை வெளிக்காட்டுவதையும், துன்பப்படுவோர் மீது பரிவுகொள்ளச் செய்வதையும், அவற்றை உணரும் அனுபவத்தை, புதினத்தைப் படிப்பவர் பெறச் செய்வதையும் பணியாகக் கொண்டுள்ளன. ஒருவகையில், சமூகப் புதினங்கள் மனித உறவை நேரடியாகப் பாதிக்கின்றன.

தமிழ்ப் புதின எழுத்தாளர்களைக் கைலாசபதி மூன்று வகையாகப் பிரிக்கின்றார். சமுதாயச் சிக்கல்களையும், முரண்பாடுகளையும், துன்ப துயரங் -களையும் எதிர்நோக்காதவராய், அவற்றுடன் நேரடியாகத் தொடர்புகொள்ளாமல் இன்பமூட்டுவதையே எழுத்தின் தலையாய நோக்கமாகக் கொண்டு, அதற்கிடையே கற்பனை நிகழ்ச்சிகளையும், கதைகளையும், உணர்ச்சிகளையும் இலக்கியமாக்குகின்ற எழுத்தாளர்கள் முதற்பிரிவினர்; சமுதாயச் சிக்கல்களைச் சுட்டிக்காட்டுவதுடன் நிறைவு பெறுகின்றவர்கள் இரண்டாம் பிரிவினர்; காலப்போக்கில் சமுதாயம் திருந்தும் என்ற நம்பிக்கை இவர்களுக்கு உண்டு. சமுதாயத்தை நுணுக்கமாகப் பிரதிபலிக்கின்றவர்கள் மூன்றாம் பிரிவினர். சமுதாயத்தை மாற்றி அமைக்கும் பணியில் பங்கு பெறுவதுடன், அப்பணி வெற்றி பெறுவதற்குரிய மாற்றங்களை இலக்கியப்

பொருளாகத் துணிந்து ஏற்றுக்கொள்வது இன்றைய தேவை என இவர்கள் அதிகமாக வற்புறுத்துகின்றனர்.

> ‘‘கைலாசபதி கூறும் முதற்பிரிவினர் நமக்குத் தேவையில்லை. இரண்டாம் பிரிவினரும், மூன்றாம் பிரிவினரும் நமக்கு வேண்டியவர்கள். இவர்களுடைய படைப்புகளையே நான் விளக்க இலக்கியம், விதி இலக்கியம் என்ற கோட்பாட்டில் விளக்கி இருக்கிறேன்’’[44]

என்பார் முத்துச்சண்முகம். இதனடிப்படையில் எழுந்த புதினங்களே மானுட சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டுவதாகவும், மக்களுக்கான வரலாற்றுப் பதிவுகளாகவும் விளங்குகின்றன.

**தமிழ்ப் புதினத்தில் விளிம்புநிலை மக்கள் குறித்த பதிவுகள்**

சமூகத்தைத் தற்காலத்தில் சமூகவியல் ஆய்வு மேற்கொள்பவர்கள் மையம் எனவும், விளிம்பு எனவும் பிரித்துப் பார்க்கின்றனர். மையம் என்பது ஆதிக்கத்தையும், அதன்வழி உருவாகும் அதிகாரத்தையும், பொருளாதார வல்லாண்மையையும் குறித்து வருகின்றது. விளிம்பு என்பது தாழ்த்தப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிக்கிறது.

காலனிய வரலாறு எழுத்தியல் மற்றும் தேசிய வரலாறு எழுத்தியல் ஆகிய இரு நெறிகளுமே மக்களின் தன்னெழுச்சியான பங்களிப்பை, மேட்டிமைச் சக்திகளைச் சார்ந்திராத சுயேச்சையான பங்களிப்பை மறுத்தன அல்லது கண்டுகொள்ளவில்லை. இவ்வாறு மேட்டிமை அணுகல் முறை என்பது வரலாற்று இயக்கத்தின் வெகுமக்கள் சார்பைப் புறக்கணிக்கிறது என அடித்தள நோக்கினர் விமர்சித்தனர். அடித்தள மக்களின் அரசியல் என்பது மேட்டிமை நிறுவனங்களைச் சார்ந்திராமல் சுயேச்சையான புலத்தில் இயங்குகின்றது. உத்திகள், செயல்பாடுகள், அணி திரட்டல்கள் என எல்லா அம்சங்களிலும் இது வெளிப்பட்டு நிற்கிறது. இவற்றை வெளிக்கொணர்வதும் எழுதுதலும் அடித்தள மக்களின் ஆய்வுகளின் நோக்கமாகிறது.

> ‘‘காலனியவாதிகள் மற்றும் அவர்களை மறுத்த தேசியவாதிகள் ஆகிய இரு சாராரின் வரலாறுகளுமே மேட்டிமை வரலாறுகளாகவே இருந்தன. மேட்டிமை நோக்கை விமர்சித்து எழுந்த வரலாற்றெழுத்தியலை அடித்தள மக்கள் ஆய்வுகள் எனலாம்.’’[45]

இதுவரை எழுதப்பட்ட வரலாறுகள் அனைத்துமே நிலைபெற்ற மையங்களின் வரலாறுகளாகவே இருந்துள்ளன. மையங்கள் வலுவாக இருந்த காலம்தான் பொற்காலங்களாகவும் போற்றப்பட்டன. இவ்வகையில் சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம் என வரலாறு காலப்பாகுபாடு செய்யப்பட்டதனையும், மையங்கள் வலுக்குறைந்த காலங்கள் இருண்ட காலங்களாகக் குறைக்கப்பட்டதனையும் விளிம்பு நிலை ஆய்வாளர்கள் கடுமையாக விமர்சிக்கின்றனர்.

கடந்தகால வரலாற்றாய்வாளர்கள் யாருமே மையங்களிலிருந்து புவியியல் அடிப்படையிலும், அரசியல் பொருளாதார ரீதியிலும், கருத்தியல், கலாச்சார மட்டங்களிலும் தூர விலகியிருந்த விளிம்புகளைக் கணக்கில் கொள்ளவில்லை என்பது சமூக வரலாறு காட்டும் உண்மையாகும்.

> ''மையத்திற்கும் விளிம்புக்குமான உறவு ஆராயப்படவில்லை. விளிம்புகளைத் தமக்குள் இழுப்பதே மையங்களின் முயற்சியாகவும், மையங்களிலிருந்து தப்பித்தோடுவதே விளிம்புகளின் செயல்பாடாகவும் வரலாறு முழுமையும் அமைகின்றன. பொருளியல், அரசியல், கலாச்சாரம், கருத்தியல் என எல்லாத் தளங்களிலும் இவ்விரு முயற்சிகளையும் நாம் அடையாளம் காணமுடியும். விளிம்புகளின் நோக்கில் வரலாற்றை அணுகும்போது நமது பணி இவ்வாறு தப்பித்தோடுதல் மற்றும் தப்பித்தோடியவர்களின் வரலாறுகளை எழுதுவதே என்றாகிறது''[46]

என்னும் கூற்று விளிம்புநிலை வரலாறு பதிவு செய்யப்பட வேண்டியதன் இன்றியமையாமையைத் தெளிவுபடுத்துகிறது.

விளிம்புகள் என்பவை வர்க்கவியல் ஆய்வுகளோடு பெரிதும் ஒருங்கிணைந்து செல்கின்றன. அவை காலகட்டத்தின் குரலாகப் பதிவானவையாவதால் அவை குறித்த ஆய்வுகள் அவசியமானவை ஆகின்றன.

''விளிம்புகள் ஒருபடித்தானவை அல்ல. ஒற்றைக் கருத்தியல் கொண்டவையும் அல்ல. விளிம்பு என்பது ஒரு ஒப்பீடான கருத்தாக்கமும்கூட. ஒரு மையத்திற்கு விளிம்பாக இருக்கும் ஒன்று அதனினும் விளிம்புடன் ஒப்பிடும் போது மையமாகச் சொல்லப்படுகின்ற வாய்ப்பும் உண்டு. விளிம்புகளுக்கிடையே இத்தகைய வேறுபாடுகள் மையமாகச் செயல்படுகின்ற வாய்ப்பும் உண்டு. விளிம்புகளுக்கிடையே இத்தகைய வேறுபாடுகள் இருந்த போதிலும் மையத்தை எதிர்ப்பது, மையத்திலிருந்து விலகியோடுவது என்கிற அடிப்படையில் அவற்றின் பொதுக்கூறு அமைந்திருக்கும். விளிம்பு என்பது வர்க்க அடிப்படையிலான வரலாறே அல்ல. வர்க்கம், சாதி, பால், நிறுவனம் எனப் பல்வேறு கூறுகளால் கீழ்நிலைப்படுத்தப்பட்ட சக்திகளாக நாம் விளிம்புநிலை மக்களைக் காண்கிறோம் என்பது முக்கியம்''[47] என்பது அ. மார்க்சின் கருத்தாகும்.

**புதினமும் சமூகப் பிரச்சனைகளும்**

தனுஷ்கோடி இராமசாமி 'தோழர்'' என்னும் புதினத்தில் (1985) தலித் மக்களின் அவல நிலையும் படித்துப் பதவிக்கு வந்தபின்னர் தலித்துகளில் சிலர் உயர்சாதியினரின் பண்பாட்டு நடவடிக்கைகளையும், பாவனைகளையும் தத்து எடுத்துக் கொள்வதும் பழனி முருகன் என்ற கதைமாந்தர் பிரெஞ்சு நாட்டுக்காரர்களோடு நடத்தும் உரையாடல் வாயிலாக உணர்த்தியிருக்கிறார்.

மார்க்சியக் கொள்கையில் நம்பிக்கையுடைய டி.செல்வராசு, பொன்னீலன், சின்னப்பபாரதி, தனுஷ்கோடி இராமசாமி ஆகிய படைப்பாளிகள் தலித் மக்களைப் பண்பாட்டு ஒடுக்குமுறைக்கு உள்பட்டவர்களாக எடுத்துக் கொள்ளாமல் பொருளாதாரச் சுரண்டலுக்கு ஆட்பட்டவர்களாகக் கொண்டு அவர்களுடைய பொருளாதார விடுதலைக்கு உண்மையான அக்கறையுடன் குரல் கொடுத்திருக்கிறார்கள். இவர்களுடைய படைப்புகள் தொடர்பாக ராஜ்கௌதமன், “பொதுவுடைமைக் கட்சி இலக்கியமே, மொத்த அமைப்பை எதிர்த்துக் குரலிட்டதாக அமைந்தது. வர்க்க அரசியலைக் கவனப்படுத்திய இவ்விலக்கியம் குடும்பம், சாதி ஆகியகூற்றில் கோட்டை விட்டது”[48] எனக் குற்றம் சாட்டுகிறார். இதனால் இவ்வகையான இலக்கியங்கள் கொள்கை விளக்கப் பதிவுகளாகவே அமைந்துவிட்டதனைக் காட்டுவது தெளிவாகிறது.

நாட்டு விடுதலைக்குப்பின் சமூகச் சீர்திருத்த எண்ணம் கொண்ட புதிய எழுத்தாளர்கள், இளமைத் திருமணம், உடன்கட்டை ஏறுதல் போன்ற செயல்களைக் கண்டித்து புதினங்களில் எழுதத் தொடங்கினர். சமுதாயத்தில் புரையோடிப் போயிருந்த மூடநம்பிக்கையின் காரணமாக விளையும் தீமைகளைப் பற்றியும், ஆணாதிக்கம், பெண்ணடிமை போன்ற கொடுமைகளைப் பற்றியும் எழுதத் தொடங்கினர். இதற்கிடையில் சமுதாயத்தில் காணும் உண்மைக் குறைகளையும், நிறைகளையும், பண்பாட்டின் அடிப்படையில் புதிய புதினங்கள் தோன்றின. இவற்றையெல்லாம் கண்டுணர்ந்த வகையில் மக்களின் அடிப்படைக் குறைகளைப் போக்குவது பொதுவுடைமைக் கொள்கைகள் என விரும்பிய எழுத்தாளர்கள் தம் கொள்கைகளை வெளிப்படுத்துவதற்குரிய வாயில்களாகப் புதினங்களைப் படைக்கத் தொடங்கினர். அயல்நாட்டுப் புதின ஆசிரியர்களான மார்க்ஸிம், கார்க்கி, ஜாக்லண்டன், மார்க் ட்வையின், அலெக்கி டால்ஸ்டாய், இலயா, ஏரன்பர்க் போன்றவர்களின் புதினங்களும் இந்திய எழுத்தாளர்களில் பிரேம்சந்த், சரத்சந்திரர், முல்க்ராஜ், ஆனந்த் போன்றவர்களின் புதினங்களும் பொதுவுடைமைக் கருத்துக்களைத் தாங்கி வெளிவந்தன.

சமுதாயத்தில் வர்க்க முரண்பாட்டுடன் போராடும் இருபெரும் மக்களின் அணிகளைக் காட்ட, இயக்கவியல் பொருள் முதல்வாதமும் அளிக்கும் ஒளியின் துணைகொண்டு தங்கள் புதினப் படைப்புகளை மார்க்சிய எழுத்தாளர்கள் தந்துள்ளனர். அப்பாதையில் முதல் அடி எடுத்து வைத்தவர் தொ.மு.சி. ரகுநாதன். விடுதலை அடைந்த தமிழகத்தில் உழைக்கும் நெசவாளிகளும் இடைநிலைப்பட்ட வணிகர்களும் பெரிய பணக்கார முதலாளிகளின் வலையில் சிக்கித் துடிப்பதையும் வலையை அறுத்து வெளியே வரத்துடிக்கும் போராட்டப் போக்கையும் ‘பஞ்சும் பசியும்’ என்ற புதினம் (1953) வாயிலாக எடுத்துக் காட்டினார்.

வாழ்வு நோக்கிப் புறப்படும் பாட்டாளி மக்களின் அணிவகுப்பில் வாழ்வுக்குரிய கொள்கை ஒளிகள் வான்பிளக்க வெளிப்படுவதைக் காட்டி அப்புதிய உணர்வு வெள்ளத்தில் மக்கள் நன்னம்பிக்கை கொள்ளும் செவ்விய மனப்பாங்கை உறுதியுடன் வெளிப்படுத்துகிறார் ரகுநாதன். நடப்பியல் நெறியில் தொழிலாளர் அணி எப்படிப் பொங்கி எழும் என்பதை

அரசியல் உணர்வும், கலை அழகும் கலக்க வெளிவந்த முதல் மார்க்சீய நாவல் ‘பஞ்சும் பசியும்’ என்பதில் ஐயமில்லை.

ஒரு புதினம் முழுமையாக இருக்க வேண்டுமெனில் அதை விளக்கிய ஆசிரியர்க்கு மூன்று காலத்தையும் நன்குணரக் கூடிய உயர்ந்த கொள்கைப் பிடிப்பும் உணர்வும் இருக்க வேண்டும் என ரால்.ஃ.பாக்ஸ் கூறியதை முழுதும் ஏற்றுக் கொண்டு ரகுநாதன் வழியில் ‘மலரும் சருகும்’ (1996), ‘தேநீர் (1973), தோல் (2010) போன்ற புதினங்களை எழுதியுள்ளார் டி.செல்வராஜ். அவரது புதினங்கள், நெசவுத் தொழிலாளர் துயர வாழ்க்கையையும், வயலில் பாடுபடும் உழவர்கள் படும் துன்பத்தையும், மலையிலுள்ள தேயிலைத் தோட்டத் தொழிலாளர்படும் தொல்லைகளையும் வெளிப்படையாக உலகுக்கு உணர்த்துவதில் முன்னடிவைக்கின்றன. வளரும் சமுதாயத்தில் கிராமவாழ்வு கட்டுக் குலைகிறது. பழைய சாதி அடுக்கு நிலைகள் தலைகுப்புறச் சாய்ந்து விழும்படி புதிதாக எழுகின்ற பொருளாதார மாற்றங்கள் விரைவாகவும் ஆனால் அதே சமயத்தில் பிறராணைக்குக் கட்டுப்படாமலும் செயல்படுவதையும் துல்லியமாக வரையறுத்துக் காட்டுகிறார்.

கு.சின்னப்ப பாரதியின் ‘தாகம்’ என்ற புதினம் (1975) நிலத்தை உழுகின்ற ஆணும் பெண்ணும் நிலத்தை நம்பியே வாழும் தனி வாழ்க்கையில் எந்தப் புதிய மாற்றத்தையும் உணராத பழமை மூடிய நிலையில் மாரப்பனும் அவன் மனைவியும் அவர்கள் வளர்த்து வந்த உயிரினங்களும் வாழ்க்கை வாழ்கின்றனர். நிலக்கிழார்கள் அந்த அறியாமையைப் பயன்படுத்திப் பண அறுவடை செய்வது மட்டுமின்றி மாரப்பனின் நில உடைமையைப் பறிப்பதுடன் புதுமை உணர்வு கொள்ளும் புதிய கதிர்களை மறைக்கப் பயன்படுத்தும் பழைமையைக் காக்கும் கருவியாகவும் மாற்றிக் கொள்கின்றனர். இந்நிலையில் தான் மாரப்பனின் மகனே பழைய கட்டுக்களிலிருந்து வெளியேறி கீழ்ச் சாதிப் பெண்ணை மணப்பதுடன் பழைய நிலவுடைமைக்கு எதிராகக் கொடி பிடிப்பதுடன் நிலஅடிமை மக்களின் விலங்குகளை உடைக்கவும் முன்வருகிறான். இப்படிப்பட்ட விடுதலை தாகமே, சமுதாயத் தாகமாக மாறுகிறது ஆளவந்தார் தெருவிலேயே அடிமைகளின் உரிமைக்குரல் எழுவது இப்புதினத்தின் வழியாக உணர்த்தப்படுகிறது.

**இருபத்தோராம் நூற்றாண்டில் புதின இலக்கிய வளர்ச்சி**

‘‘இருபதாம் நூற்றாண்டின் கடைசிப்பத்துக்களில் யதார்த்தவாதப் போக்கு பின்னடைந்துவிட்டது எனப் பின்நவீனத்துவவாதிகள் பேசினாலும், இருபத்தியோராம் நூற்றாண்டில் யதார்த்தவாதப் போக்கு தமிழ் நாவல் இலக்கியத்தில் பல புதிய பரிமாணங்களுடன் எழுச்சி பெற்றுள்ளது. இரண்டாயிரத்திற்குப் பின் சோசலிசம், வர்க்கப்போராட்டம் எனப் பேரரசியலைப் பேசக்கூடிய படைப்பாளிகளும் தலித், சிறுபான்மையினர், மூன்றாம் பாலினத்தார் ஆகிய விளிம்புநிலை மக்களின் நுண்ணரசியலைப் பேசும் படைப்பாளிகளும் யதார்த்தவாத எழுத்து முறையினை நுட்பமாகக் கையாண்டுள்ளனர். பேரரசியல் பேசும் முற்போக்கு நாவலாசிரியர்கள் இக்காலப் பகுதியில் மிகப்பெரிய ஆவண

நாவல்களை உருவாக்கியுள்ளனர். இவ்வகையில் பொன்னீலனின் 'மறுபக்கம்', டி.செல்வராஜின் 'தோல்', சு.வெங்கடேசனின் 'காவல் கோட்டம்' ஆகிய மூன்று நாவல்கள் குறிப்பிடத்தக்கன.''[49]

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களின் கதைச் சுருக்கம் அறிமுக நிலையில் தரப்படுகிறது.

**கோவேறு கழுதைகள்**

'கோவேறு கழுதைகள்' இமையத்தின் முதல் புதினமாகும். தமிழ்ப் புதினங்களில் முக்கியமான ஒரு பாய்ச்சலாக இது கொண்டாடப்படுகிறது. ஒரு ஊரின் பறையர்களுக்குக் குடி வண்ணானாக இருக்கும் சவுரி - ஆரோக்கியம் குடும்பத்தின் கதை. அவர்களின் மகள் மேரி; மருமகன் திரவிய ராஜ், மகன் ஜோசப் மருமகள் சகாயம் மற்றும் கடைசி மகன் பீட்டர் ஆகியோரை கதை மாந்தர்களாகக் கொண்டது. ஆரோக்கியமே புதினத்தின் தலைமைப் பாத்திரம். வீடுவீடாகத் துணிகளை அள்ளி வருவது மட்டுமின்றி பிரசவம் பார்ப்பது, மாரில் பால் கட்டிக்கொண்டிருக்கும் போது அதைச் சரி செய்து மீட்பது, களத்துக்குச் சென்று நெல் தூற்றுவது, மரண வீடுகளில் முக்கியமான சடங்குகளை நிகழ்த்துவது என ஒரு ஊருக்கு எல்லாமுமாக இருக்கிறாள். ஆனால் அவளுக்கு முறையாகச் சேர வேண்டிய தானியத்தையும், பன்றித் தலையையும் குடலையும்கூட அவளுக்கு அளிக்க மறுக்கிறார்கள். வாழ்க்கைமுறை மாறி வருகிறது. முந்தைய காலகட்டங்களின் உரிமையும் சலுகையும் குறைந்தோ இல்லாமலோ ஆகி வருகிறது. ஆனால் அதே வேளையில் அதன் பொருட்டு அவ்வாழ்வை உதறிச்செல்ல அவர்களுக்கு உரிமையில்லை என விதிக்கப்படுகிறது. வெளியேறிச் சென்ற ஜோசெப்பின் பொருட்டு அவள் கண்டிக்கப்படுகிறாள். சவுரிக்கும் கருப்பாயிக்குமான உறவு சன்னமாக கோடிட்டுக் காட்டப்படுகிறது. சடையன் மேரியை வன்புணர்வு செய்தபோது எவ்வித எதிர்வினையும் இன்றி அமைதியாக அவர்கள் அதைக் கடக்க வேண்டியிருக்கிறது. ஆரோக்கியத்திற்கும் மருமகள் சகாயத்திற்குமான உறவு இப்புதினத்தின் முக்கிய சரடு. ஒருவகையான அன்பும் ஊடலும் கடந்த உறவு. இரு தலைமுறை, இருவேறு வாழ்க்கைப் பார்வைகளுக்கு இடையிலான முரண்பாடுகளை இப்புதினம் கதைப்போக்கில் விளக்குகிறது.

**மலரும் சருகும்**

டி.செல்வராஜ் 'மலரும் சருகும்' என்ற புதினத்தில் தாழ்த்தப்பட்ட கதைமாந்தர்களின் வாழ்க்கை நிலையைச் சித்திரித்திருக்கிறார். தாழ்த்தப்பட்ட மக்களின் உழைப்பைச் சுரண்டுதல், அவர்களுக்குத் தீண்டாமைக் கொடுமை இழைத்தல், தலித் மக்களின் எதிர்ப்புணர்வு மற்றும் அவர்களின் பண்பாடு முதலியவற்றை நிலைப்படுத்தித் தலித் இலக்கியச் சிந்தனை கொண்ட புதினமாகப் படைத்திருக்கிறார்.

'மலரும் சருகும்' புதினம், வர்க்கப் போராட்டத்தையும், சமுதாய மாற்றத்தையும் மையமாகக் கொண்டது. இப்புதினத்தில் மூன்றுதலைமுறைகள் அடங்கியுள்ளன. பழைய தலைமுறையைச் சேர்ந்தவன் மாடசாமி குடும்பன்; மதம் மாறிய அவன் மகன் ஈசாக்கு, மத

நம்பிக்கை மிகுந்த அவன் மனைவி பூரணம், புதிய தலைமுறையைச் சேர்ந்த ஈசாக்கின் மகன் மோசே.

மோசே பணம் படைத்தவர்களுக்கு எதிராகப் போராட்டக் குரல் எழுப்புகிறான். தன் தந்தை வாங்கிய கடனுக்காகத் தன் நிலத்தைக் காந்திமதிநாதம் பிள்ளையிடம் இழந்து, அந்த நிலத்திலேயே கூலிக்கு வேலை செய்ய வேண்டிய நிலைக்கு ஆளாகிறான். பின்னர் விவசாயச் சங்கத்தில் சேர்ந்து காந்திமதிநாதபிள்ளைக்கு எதிராகப் போராடிச் சிறை செல்கிறான்.

கதையின் உச்சக்கட்டமாய் விவசாயப் புரட்சி எழுகிறது. ராணுவ வீரன் ரெங்கன் தலைமை ஏற்கிறான். காவல்துறை சிறைப்படுத்துகிறது. காவல் துறை வாகனத்திற்குப் பின்னால் மாடசாமி குழந்தையோடு ஓடுகிறான். அடிபட்டுப் பிணமாகச் சாய்கிறான். அவனது மார்பில் கிடந்த குழந்தை துள்ளுகிறது. மாடசாமி சருகாகி உதிரும்போது, குழந்தை மொட்டாக உயிர்க்கிறது. தலைமுறைகள் உதிரும்போது புதிய தலைமுறைகள் எழுவதை அற்புதமான புதினமாக்கியுள்ளார் டி.செல்வராஜ். எந்த ஓர் இயக்கமும் மனிதமேம்பாட்டுக்காக இயங்கும்போது முற்றுமாக அழிந்துபடுவதில்லை. மாறாகப் புதிய எழுச்சியோடு போராடத் தொடங்குகிறது என்பதனை வெளிப்படுத்துவதாக இப்புதினம் அமைந்துள்ளது.

**கல்மரம்**

திலகவதி எழுதிய ‘கல்மரம்’ என்னும் புதினம் 2005ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுள்ளது. கிராமப்புறங்களில் வாழும் விவசாயிகள், வறட்சி காரணமாகவும் மக்களின் வாழ்க்கைமுறை நகரத்தையும் நாகரிகத்தையும் சார்ந்ததாக மாறிவிட்ட காரணத்தினாலும் புலம் பெயர்ந்து, பிழைப்புத்தேடி நகரத்தை நோக்கிய பயணங்களை மேற்கொள்கின்றனர். கிராமங்களில் சிறு குறு விவசாயிகளாகச் சீரும் சிறப்புமாக வாழ்ந்த இவர்கள் தற்போது பட்டணங்களில் நிலத்தில் முளைக்கும் கல்மரங்களைக் கட்டும் கொத்தனார்களாகவும், சித்தாள் என்கிற எடுபிடிகளாகவும் அவர்களை இந்தச் சமுதாயம் மாற்றி வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது. இத்தகைய கட்டடத் தொழிலாளர்களின் வாழ்க்கையில் தொடர்கதையாகிவிட்ட துயரங்களைக் ‘கல்மரம்’ புதினத்தில் திலகவதி நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

இரவும் பகலும் கடுமையாக உழைக்கும் கட்டடத் தொழிலாளர்களின் வாழ்வில் நிலவும் வலியும் வேதனையும் இப்புதினத்தின் ஜீவநாடியாகத் திகழ்கிறது. குறிப்பாக மென்மைத் தன்மை உடைய பெண்கள் வயிற்றுப் பிழைப்புக்காக கட்டடத் தொழிலாளிகளாக அவர்கள் சந்திக்கும் அவலங்கள் பெண் கொடுமையின் உச்சகட்டமாகும். இத்தகையச் சமூகச் சூழலை மாற்ற வேண்டிய கட்டாயம் இலக்கியத்திற்கும் எழுத்தாளர்களுக்கும் இருக்கிறது என்பதையே திலகவதியின் ‘கல்மரம்’ காட்டுகிறது எனலாம். எடுத்துக்காட்டாக, “திலகவதியின் புதினங்கள், சிறுகதைகள் யாவும் இன்றைய மாறிவரும் வாழ்வியல் தளத்தில்

பெண் சந்திக்க நேரும் சிக்கல்கள் பழையனவும், புதியனவுமாகப் பெண்மீது ஏற்றப்பட்ட சுமைகள் அவளைச் சுரண்டி, ஒடுக்க முயலும் அதிகாரக் கட்டமைப்புகள் ஆணாதிக்கச் செயல்பாடுகள் பற்றி வெகுவாகப் பரிசீலிக்கின்றன”[50] என்று குறிப்பிட்டுச் செல்வது இங்குக் குறிக்கத்தக்கது.

**தோல்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே தமிழ்ப் புதினங்களில் தலித் மக்களின் சித்திரிப்புகள் காணப்பட்டாலும் அவை அவர்களின் சமூக விடுதலைக்கான களமாக அமையவில்லை. 1980களில் தமிழ் இலக்கியத்தில் படித்த மத்திய தர வர்க்கப் படைப்பாளிகள் வாயிலாகக் கால் பதிக்கத் தொடங்கியுள்ளது. ஆனால் துரதிர்ஷ்ட வசமாகப் பெரும்பாலான தலித் படைப்புகள், அம்மக்கள் அனுபவிக்கும் இன்னல்கள், அவலங்கள், கேவலங்கள், அவஸ்தைகள் ஆகியவை பற்றியே சித்திரிக்கின்றனவே அல்லாமல் ஏனோ, இந்த அவஸ்தைகளையும், அவமானங்களையும் எதிர்த்துச் சமர்புரியும் தலித் இன மக்களையும் அவர்களது போராட்டங்களையும் இலக்கியத்தில் கொண்டு வர மறுக்கின்றன என்பதைக் கருத்தில் கொண்டு எழுத்தாளர் டி. செல்வராஜ் தன்னுடைய ‘தோல்’ புதினத்தை சோசலிச யதார்த்தவாதச் சிந்தனையோடு இம்மக்களின் பிரச்சனைகளையும் அவற்றிற்கான தீர்வுகளையும் இப்புதினத்தில் பதிவு செய்துள்ளார். இப்புதினம் சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றுள்ளது.

> “டி. செல்வராஜின் இந்த நாவல் தோல் தொழிலாளர்களைப் பற்றிய முதல் இலக்கியப் பதிவு. திண்டுக்கல் மாவட்டத் தோல் தொழிலாளர்களின் அவலம் நிறைந்த சமூக வரலாற்றைப் பொதுவுடைமை இயக்கத்தின் வரலாற்றோடு இணைத்துச் செல்கிறது. விளிம்பு நிலை மக்களின் வாழ்வைப் போராட்ட உணர்வோடும், நம்பிக்கையோடும் எழுச்சியோடும் சித்திரிக்கிறது”[51]

என்று குறிப்பிடுவதன் மூலம் இதன் சிறப்பினை அறிந்து கொள்ள இயலுகிறது.

**செந்நெல்**

கூலி உயர்வு கேட்ட தலித் இன விவசாயக் கூலிகளை இரக்கமின்றிக் கொன்று குவித்த நிகழ்வினைப் படம்பிடித்துக் காட்டுவதாகச் சோலை சுந்தரபெருமாளின் ‘செந்நெல்’ புதினம் படைக்கப்பட்டுள்ளது. ஆதிக்கச் சாதியினரின் பழிவாங்கல்கள், நிலத்தில் வேலை செய்யும் கூலித்தொழிலாளர்களை வதைத்தல், அவர்களின் வாழ்க்கையைச் சூறையாடுதல், அடித்தட்டு மக்களிடையே பிரிவினையை ஏற்படுத்துதல் என்ற நிகழ்வுகளை இப்புதினம் நடப்பியல் போக்கில் எடுத்துரைக்கிறது.

கழிசடை

மனிதக் கழிவை மனிதனே அகற்றும் செயல்பாடு தவிர்க்கப்பட வேண்டும் என்பதற்கான காரணங்களை வெளிப்படுத்தும் ஆவணப் புதினமாக அறிவழகனின் 'கழிசடை' புதினம் படைக்கப்பட்டுள்ளது.

மலத்தோடு, சாக்கடைக் குழிகளோடு, குப்பையோடு குடும்பம் குடும்பமாக வாழ நிர்பந்திக்கப்பட்டிருக்கிறது ஓர் இனம். இவர்களைப் பற்றி, அனுமந்தய்யா எனும் துப்புரவுத் தொழிலாளர்வழி தொழிலியற் சிக்கல்களை எடுத்துரைப்பதாக இப்புதினம் படைக்கப்பட்டுள்ளது.

ஊர்க்காளி முனியன், ஆவை ஆகியோரின் மகன் இராசப்பன் பள்ளியில் படித்துவருகிறான். இவன் பெற்றோரின் வறுமையினால் மணியக்காரரின் வீட்டு வேலை செய்யும் படியாளாகிறான். முனியன் மேல்சாதித் தொழிலாளி ஒருவரின் நண்பராவார். ஆவை ஆஸ்துமா நோயினால் இறந்துபோகிறாள். மேல்சாதிக்காரர்கள் தொழுநோயாளியின் தற்கொலைக்குக் காரணம் முனியன்தான் என்று சொல்லி, அவனை அடித்துத் துன்புறுத்திச் சிறையில் அடைக்கின்றனர். முனியனின் மகன் ராசப்பனையும் ஊரை விட்டு அடித்துத் துரத்துகின்றனர். தப்பி ஓடிவந்து நகரம் ஒன்றில் அடைக்கலமாகும் ராசப்பன் துப்புரவுத் தொழிலாளி ஒருவரின் மகள் கொண்டையம்மாளின் உதவிபெற்று அனுமந்துவாக மாறி, நகராட்சியில் துப்புரவுத் தொழிலாளி ஆகிறான். கொண்டையம்மாளை மணந்து கொள்கிறான். மலம் அள்ளும் தொழிலில் ஈடுபடுவதால் கொண்டய்யா குடிப்பழக்கத்திற்கு ஆளாகிறான். சுகாதாரமற்ற முறையில் குப்பைகளை அள்ளுதல், கழிவறை, கால்வாய் சுத்தம் செய்தல், நாய் பிடித்தல் போன்ற வேலைகளைச் செய்வதால் அவனது உடல்நலம் நோய்வாய்ப்படுகிறது. இதோடு மதுப்பழக்கத்திற்கு அடிமையாவதால் வட்டிக் கடன் அளவு கூடுகிறது. இந்நிலையில் கொண்டம்மா இராசமாணிக்கம் என்ற தலித் இளைஞனுடன் கள்ளத் தொடர்பு கொள்கிறாள். மகன் சீனய்யா வாலிபனானாலும் பொறுப்பில்லாமல் நடந்து கொள்கிறான்.

சகத் தொழிலாளிகளான ஏசுரத்தினம், சுப்பையா ஆகியோருடன் தன் உறவினரான பிணம் எரிக்கும் தொழிலாளி சுடலை வாங்கிக் கொடுக்கும் நாட்டுச்சாராயம் குடிக்க, அதனால், உடல்நலம் கெட்டு மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறான் அனுமந்தையா. அப்போது அனுமந்து ராசப்பனாக இருந்த பொழுது, உடன் கல்வி கற்ற மணியக்காரரின் மகன் குமார் நகராட்சியில் நல்வாழ்வுத்துறை அதிகாரியாக வருகிறார். இதன்மூலம் தன் மகன் சீனய்யாவுக்குத் துப்புரவு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறான். ஆனால், எதிர்பாராத விதமாக நடந்த சாக்கடைத் தொட்டியைச் சுத்தம் செய்தபோது ஏற்பட்ட விபத்தில் சீனய்யா அனுமந்துவின் கண்முன்பாக இறந்துபோகிறான். அனுமந்தய்யா அழுது புலம்புவதாகக் கதை அமைந்துள்ளது.

### பிறகு

'பிறகு' பூமணியின் படைப்புகளில் முதன்மையானது என்பதுடன், தமிழில் எழுதப்பட்ட நவீனச் செவ்விலக்கியப்பிரதிகளில் ஒன்று என்றும் இன்று பொதுவாக ஏற்கப்பட்டுள்ளது.

### கூகை

சோ. தர்மனின் 'கூகை' புதினம் ஒடுக்கப்பட்ட அடித்தட்டு மக்களின் வாழ்வியல் வளர்ச்சியை நிகழ்வுகளின் போக்கில் எடுத்துரைக்கிறது. சீனிக்கிழவனின் அயராத உழைப்பும், செயற்திறனும், நடராஜ ஐயரின் பொதுவுடைமைச் சிந்தனைக் கருத்தியல் ஊக்கமும் அடித்தட்டு மக்களை எழுச்சியுறச் செய்து, தன்னிறைவுடன் வாழ்வதற்கான வழியமைத்துக் காட்டுவது கதைப்போக்கில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### தொகுப்புரை

வரலாற்றுக்கு முற்பட்ட ஆதிகாலத்தில் பொதுவுடைச் சமுதாயமே நிலவியதை வரலாறுகள் காட்டுகின்றன. வேட்டைக் கருவிகள், உற்பத்திப் பொருள்கள் யாவும் பொதுச்சொத்தாக இருந்தன. இதனால் மக்களிடையே வேலைப்பகிர்வும், உற்பத்திப் பகிர்வும் இருந்துள்ளது. வேளாண் தொழிற் பெருக்கமும் உபரி உற்பத்தியும் உடைமைச் சமூகத்திற்கு வழி வகுத்துள்ளன. சங்க காலத்தில் குறிக்கப்படும் மருத நிலம் உற்பத்திக் கேந்திரமாக விளங்கியதைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன.

சங்க காலத்திலேயே பொதுவுடைமைச் சிந்தனைப்பட்ட கருத்தியல்கள் இருந்துள்ளன. அறஇலக்கியங்கள், புத்திலக்கியங்களில் பொதுவுடைமைச் சிந்தனை மேலோங்கி இருந்துள்ளது.

ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் மார்க்சியக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு உருவானதே 'பொதுவுடைமைச் சித்தாந்தம்' ஆகும். அது மார்க்சின் தத்துவார்த்தமாகவும் அணுகப்படுகிறது.

'பொதுவுடைமை' என்ற சொல் மார்க்ஸுக்கு முன்னதாகவே வழக்கில் இருந்து வந்துள்ளதனை ஆய்வாளர்கள் காட்டியுள்ளனர். எனினும் பொதுவுடைமையைப் பரவலாக்கம் செய்து, நிலைபெறச் செய்தவர் மார்க்ஸ் என்பது தெளிவாகிறது.

காரல்மார்க்சும், பிரெடரிக் ஏங்கெல்சும் தமது ஆய்வுகளில் தொடக்கக் காலத்தில் மனிதர்கள் வாழ்ந்த வாழ்க்கைமுறை, மானுடத்தின் படிப்படியான வளர்ச்சி நிலை, எதிர்காலத்தில் அமையவிருக்கும் மானுடத்தின் தன்மை ஆகியன குறித்து அவர்கள் அறிவியல் முறைப்படி ஆய்வு செய்து பல்வேறு கருத்துக்களை வெளியிட்டனர். இதனால் எதிர்காலத்தில் சுரண்டல் இல்லாத – வர்க்க பேதங்கள் இல்லாத – எல்லார்க்கும் எல்லாம் கிடைக்கின்ற சமுதாய வாழ்வு மலரும் என ஆய்வு அடிப்படையில் தெளிவுறுத்தினர்.

அத்தகைய புது வாழ்க்கை முறையினையே அவர்கள் ‘பொதுவுடைமை’ என்று குறித்தனர். இதனை இயக்கச் சிந்தனையாகவும் வளப்படுத்தினர்.

உற்பத்திச் சாதனங்கள் மக்களின் உடைமையாக அரசின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். திறமைக்கு ஏற்ற உழைப்பு, தேவைக்கு ஏற்ற பங்கீடு கிடைக்கச் செய்ய வேண்டும். வா்க்க பேதம் இல்லாத சமுதாயம் அமைய வேண்டும் என்பனவற்றை வலியுறுத்தும் அரசியல் கோட்பாடாகவும் மார்க்சியம் திகழ்கிறது.

பொதுவுடைமைச் சமூகத்தில் மக்களே முதன்மையானவர்கள்; அது மக்கள் எல்லோரையும் ஒருபடித்தான நிலையில் வைத்து நோக்குகிறது. மக்களினத்தில் உயர்வு - தாழ்வு, ஆண்டான் - அடிமை, ஆண்-பெண் பாலின பேதங்கள் இல்லை என்று கற்பிக்கிறது. உலகில் முதலாளித்துவ நாடுகளின் ஆதிக்கம் அழியவேண்டும் என்றும், சமத்துவமும் சமதர்மமும் நிலைநாட்டப்பட வேண்டும் என்று அறிவுறுத்துகிறது.

பொருளாதாரப் போராட்டங்கள், அரசியல் போராட்டங்கள், தத்துவார்த்தப் போராட்டங்கள் வழியாகத் தீர்வுகளைக் காண வழிசெய்கிறது. பொருளாதார ஆதிக்கத்திலிருந்து விடுபடும் விடுதலையே அரசியல், சமுதாய விடுதலைகளுக்கு வழிவகுக்கும் என்று கருதமுடிகிறது. தொழிலாளர் நலன்களுக்காக ஆளும் அரசுகளை எதிர்த்துப் போராடும் விடுதலையை அரசியல் போராட்டங்கள் என வரையறுக்கிறது. மக்களை மழுங்கடிக்கும் பழைமைவாதங்களை ஒழித்து, அவற்றிற்கு அறிவுப்பூர்வமான விளக்கங்களைக் கொடுத்து மக்களை ஈடுபடுத்திப் போராடுவது தத்துவார்த்தப் போராட்டம் எனக் குறித்தது. இப்போராட்டங்களின் வழியே மானுட விடுதலை காண வகை செய்வதைக் காணமுடிகிறது.

இலக்கியங்கள் மக்களுக்கானதாக இருக்க வேண்டும்; மக்களுக்குரியதாக இருக்க வேண்டும் என்று பொதுவுடைமை இயக்கம் வலியுறுத்துகிறது. மக்களைப் பற்றிப் பேசாத இலக்கியங்களால் மக்களுக்கு எவ்விதப் பயனுமில்லை என்று மார்க்சியம் வலியுறுத்தியது. இதனை மெய்ப்பிக்கும் விதத்தில் மக்களைப் பற்றிய இலக்கியங்கள் மார்க்சியத் தாக்கத்தால் எழுதப்பட்டன என்று ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

தொழிற்துறையின் பெருக்கத்தால் உருவான இலக்கிய வகைகளில் புதினமும் ஒன்றாகும். படித்த, நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த படைப்பாளர்கள் தங்கள் பிரச்சினைகளைக் கதைப்போக்கில் உரைநடையில் எடுத்துரைத்தனர். மார்க்சியச் சிந்தனை கொண்ட எழுத்தாளர்கள் பொதுவுடைமை இயக்க வளர்ச்சிக்குக் கலை, இலக்கியத்தையே நாடினர். அவ்வகையில் உருப்பெற்றவையே மார்க்சியத் தாக்கம் பெற்ற புதினங்கள் ஆகும். இதில் அடித்தட்டு மக்கள், விளிம்புநிலையினர், பெண்கள், நலிவடைந்தோர், தொழிலாளர்கள், விவசாயக் கூலிகள் ஆகியோர் பிரச்சினைகள் பொருளாக்கப்பட்டன. இவ்வகையான சிந்தனைப் போக்குடைய இலக்கியங்கள், மக்களுக்கான இலக்கியம், மனிதனை மேம்படுத்துவதற்கான

இலக்கியம், மனிதாபிமான நோக்குடன் எழுதப்படும் இலக்கியம் என்று பல தொடர்களால் சிறப்பிக்கப்பட்டன.

சாதிய ஏற்றத் தாழ்வுகளும், நிலவுடைமைச் சமூகமும் நிலவிய இந்தியாவில் இத்தகைய பொதுவுடைமைக் கொள்கைகள் மிகவும் தேவையான ஒன்றாகக் கருதப்பட்டன. அவ்வகையில் பொதுவுடைமைச் சிந்தனைகள் தமிழ்ப் புதினங்களில் வெளிப்படுத்தப்பட்டன. குறிப்பாகப் பெண்விடுதலை, உழைக்கும் வர்க்கம், சாதீயம் போன்றவற்றை மையக் கருத்தாகக் கொண்டு புதினங்கள் தோற்றம் பெற்றன.

இலக்கியம் மக்களுக்காகவே என்பதால் மக்கள் பிரச்சினைகளைச் சுட்டிக்காட்டி எழுதிவிட்டுப் போய்விடுவதோடு இலக்கியத்தின் பணி முடிந்து விடுவதில்லை. சமூகப் பிரச்சினைகளைச் சுட்டிக் காட்டுவதோடல்லாமல், அதை மாற்றுவதற்கும் வழிவகை செய்தல் வேண்டும் என்கிறது மார்க்சியம். அவ்வகையில் மார்க்சியச் சிந்தனை கொண்ட புதினங்கள் பொதுவுடைமை இயக்க வரலாற்றின் ஆவணமாகவும் விளங்குவது ஆய்வின் வழி தெளிவாகிறது.

**சான்றெண் விளக்கம்**


1. சிங்காரவேலர், பொதுவுடைமை, ப. 173.
2. மேலது, ப. 175.
3. ந. பிச்சமுத்து, இலக்கிய இயக்கங்கள், ப. 156.
4. மேலது, ப. 157.
5. மேலது, ப. 157.
6. வி.இ.லெனின், மார்க்சிய லெனினியத்தின் அடிப்படைகள், ப. 24.
7. Encyclopedia Brittanicca, Vol. 14, p. 988.
8. நா. வானமாமலை, மார்க்சிய சமூகஇயல் கொள்கை, ப. 2.
9. ஞானி, (தொ.ஆ.), மார்க்சியத்தின் எதிர்காலம், ப. 61.
10. காரல் மார்க்ஸ், பிரெடரிக் ஏங்கெல்ஸ்., கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை, பக். 43-56.
11. மேலது, ப. 45.
12. மேலது, ப. 45.
13. மாசேதுங், கலையும் இலக்கியமும், ப. 43.
14. காரல் மார்க்ஸ், பிரெடரிக் ஏங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை, ப. 46.
15. ஏ.எஸ்.கே., கடவுள் கற்பனையே, ப. 107.
16. கார்ல் மார்க்ஸ், பிரெடரிக் ஏங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை, ப. 46.
17. கோ.தானியா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம், ப. 45.
18. James Vaughan, Socialist Realism Origin and Theory, p. 4.
19. கோவை ஞானி, மார்க்சியமும் இலக்கியமும், ப. 413.
20. மேலது, ப. 413.
21. அருணன், இந்திய கம்யூனிஸ்ட் இயக்க வரலாறு, பக். 41 - 43.
22. நியூ செஞ்சுரி ஆசிரியர் குழு, வர்க்கங்களும் வர்க்க உறவுகளும், ப.5.
23. செம்மலர், மேற்குவங்கத்தில் முற்போக்குக் கலாச்சாரம், ப.23.
24. கொ.ஆறுமுகம் (கட்.ஆ) ‘பெரிய புராணம் புலப்படுத்தும் சமுதாய உணர்வுகள்’, சூ.இன்னாசி, (ப.ஆ) சமயமும் சமுதாயமும், ப.11.
25. மேலது, பக்.11-12.
26. கி.முத்துக் கூரி (கட்.ஆ) ‘பூமணியின் நல்ல நாளில் சமூகச் சித்திரிப்பு’,இ.ப.த.ம., முப்பத்தோராம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி - 3, ப.1393.
27. ந.பிச்சமுத்து., மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப. 8.
28. ஏங்கல்ஸ், குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், சோமசுந்தரம் (மொ.பெ.ஆ), பக்.90-91.

29. பொன். சௌரிராஜன், (கட்.ஆ) குமுதம் (1993 இதழ்கள்) உணர்த்தும் சமுதாய விழிப்புணர்வு, இ.ப.த.ம. முப்பத்தோராம் கருத்தரங்கு, ஆய்வுக்கோவை, தொகுதி – 2, ப.952.
30. கஸ்தூரி ஜான்சன் (கட்.ஆ), 'ஹெப்சிபா ஜேசுதாசின் புதினங்களில் குடும்ப நிறுவனம்', இ.ப.த.ம. முப்பத்திரண்டாம் கருத்தரங்க ஆய்வுக்கோவை, தொகுதி -1, ப.362.
31. சூ. இன்னாசி, (ப.ஆ), 'கிறித்துவ நாடகங்கள் புலப்படுத்தும் சமுதாய உணர்வுகள்,' சமயமும் சமுதாயமும், ப.83.
32. அகிலன், கதைக் கலை, ப.105.
33. நா.வானமாமலை, (கட்.ஆ), 'இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள்,' பாக்கியமுத்து (ப.ஆ) தற்கால இலக்கியத்தில முற்போக்குப் பார்வைகள், ப.1.
34. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.295.
35. இரா.தண்டாயுதம், சமூகநாவல்கள், ப.25.
36. மா.இராமலிங்கம், நோக்குநிலை, ப.15.
37. ச.முத்துச் சிதம்பரம், 'தமிழும் சமூகவியலும்' கடிகாசலம்.ந. (ப.ஆ), தமிழும் பிறதுறைகளும், ப.137.
38. மேலது, ப.142.
39. சு.வேங்கடராமன், புனைகதை இலக்கியம், ப.108.
40. நா. சந்திரசேகரன், சமூகக் கடப்பாட்டுப் படைப்பழகியல், ப. 79.
41. கோவை ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப. 318.
42. தா.வே. வீராசாமி, தமிழில் சமூக நாவல்கள், ப. 4.
43. மேலது, ப. 5.
44. முத்துச்சண்முகம், தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், ப. 128.
45. அ. மார்க்ஸ், (க.ஆ.), விளிம்புநிலை ஆய்வுகளும் தமிழ்க்கதையாடலும், ப. 24.
46. மேலது, ப. 31.
47. மேலது, ப. 31.
48. ராஜ்கௌதமன், தமிழக தலித்தும் தலித் இலக்கியமும், ப. 32.
49. பா. ஆனந்தகுமார், அண்மைக் காலத் தமிழ் நாவல்களின் போக்குகள் - சில மதிப்பீடுகள், கீற்று.காம்., 30 மார்ச் 2015.
50. தி.கமலி, பெண்ணியப் படைப்பிலக்கியம், ப.6.
51. பதிப்பகத்தார், தோல், முன்னுரை, ப.ஐ.

## இயல் - 2

## புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் தொழிலாளர் வர்க்கமும்

### முன்னுரை

கலை, இலக்கியம் யாவும் அனைத்து மக்கள் இலக்கியமாக, அனைத்து மக்களுக்கான இலக்கியமாகத் திகழவேண்டும் வேண்டும் என்று பொதுவுடைமை இயக்கம் வலியுறுத்துகிறது. ஆனால், இதுவரை எழுதப்பட்ட இலக்கியங்கள் யாவும் மக்களில் ஒரு சாராரைப் பற்றியதாகவே இருந்து வந்துள்ளன. சங்க இலக்கியத்திலும் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் உயர்நிலை மாந்தர்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். அடிமைகளும், சேவகர்களும், விவசாயக் கூலிகளும் இரண்டாந்தரமாகவே சித்திரிக்கப்பட்டு வந்துள்ளனர். ரஷ்யப் புரட்சிக்குப் பின்னர் ஏற்பட்ட பொதுவுடைமைச் சித்தாந்தம் கலை, இலக்கியத்தை மக்கள் வாழ்வோடு பிணைத்துப் பார்த்தது. இதனால் சமூகத்தின் கீழ்நிலையினர் என்று கருதப்பட்ட மக்களின் வாழ்வியற் போராட்டங்கள் இலக்கியத்தின் வழியாக வெளிப்படுத்தப்பட்டன. அத்தகு நிலையிலேயே பண்ணை அடிமைகள், விவசாயக் கூலிகள், தொழிலாளர்கள் விடுதலை குறித்த சிந்தனைகள் தமிழ்ப் புதினங்களில் கதைப்போக்கில் எடுத்துரைக்கப் பெற்றன. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் புலப்படுத்தும் தொழிலாளர் வாழ்வியல் சிக்கல்களும், வர்க்கப்போராட்டச் சூழலும், பொதுவுடைமையின் தேவையும் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

### தொழிலாளர் சிறப்பு

உலகில் தொழில்கள் பல்வகைப்பட்டவை. தொழிலாளர் இயக்கம் இல்லாமல் மானுட இயக்கம் இல்லை. ஆதி காலம் தொட்டு இன்றைக்கு வரை உழைக்கும் வர்க்கம் தன் உழைப்பால் மனிதத் தேவைகளை நிறைவேற்றித் தந்துகொண்டு வந்துள்ளது. இவர்களைப் பணியாளர், சேவகர், உழைப்பாளர், தொழிலாளர், கூலிகள் என்று பல பெயர்களால் அழைக்கின்றனர். பல்வகைக் கருவிகளின் துணையுடன் தொழில்களைச் செய்வதால் 'தொழிலாளர்' என்று சிறப்பித்து உரைக்கப்பெற்றனர். இத்தொழிலாளர்களையும் மக்களில் ஒருவராக மதித்து, அவர்களின் தொழில்நிலையை உணர்ந்து, அவர்களுக்கு உரிய உழைப்பின் கூலியையும், மரியாதையையும் சமூக மதிப்பையும் மனநிறைவுடன் வாழ்வதற்கேற்ற வழிகளையும் அளித்துக் காத்திட வேண்டும் என்பதனை நோக்கமாகக் கொண்டே தமிழ்ப்புதினங்களில் தொழிலாளர் சிக்கல்கள் பேசப்பட்டுள்ளன.

பாவேந்தர் பாரதிதாசன், இவ்வையகத்தின் சிறப்புக்கள் எல்லாம் தொழிலாளர்களின் வியர்வைத் துளிகளால் உருவானவை என்பதனை,

"சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கிய நல்வாய்க்காலும் வகைப்படுத்தி

நெற்சேர உழுதுழுது பயன்வி ளைக்கும்

நிறையுழைப்புத் தோள்களெலாம் எவரின் தோள்கள்?

கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்

கருவியெல்லாம் செய்துதந்த கைதான் யார்கை?

பொற்றுகளை கடல்முத்தை மணிக்கு லத்தை

போய் எடுக்க அடக்கியமூச் செவரின் மூச்சு?”[1]

என்று பாடிப் பெருமைப்படுத்தியுள்ளார். சிற்றூரும், வயல்களும். வாய்க்கால்களும், வெட்டி உழுதொழிலை மேன்மை செய்த விவசாயத் தொழிலாளர்களையும். மலைகளைக் குடைந்தும் அகழ்ந்தும் கருவிகள் எல்லாம் உருவாக்கிய தொழிலாளர்களையும், ஆழ்கடலில் மூழ்கி முத்தெடுத்து வளப்படுத்தும் மீனவர்களின் சிறப்பினையும் இப்பாடல் சிறப்பித்துரைக்கிறது. இத்தகு சிறப்புகளுக்கெல்லாம் உரிமையுள்ள தொழிலாளர்கள் வாழ்நிலையோ பின்னோக்கியே இருந்து வருகின்றமை அறியத்தக்க செய்தியாகும்.

**ஆதிச் சமூகத்தில் வர்க்கநிலை**

மனிதன் காட்டுமிராண்டி நிலையில் வேட்டைச் சமூகமாக வாழ்ந்த காலகட்டத்தில் தம் சமூகத்திற்கென எந்தவொரு தனிச்சொத்தும் வைத்துக் கொள்ளவில்லை. நிலமும், காடும், விளைபொருளும் மக்கட்சமூகம் முழுமைக்கும் பொதுவானதாக இருந்தன. அவற்றின்மீது எந்தவொரு தனிமனிதனும் உரிமை கொண்டாடவில்லை. மனிதன் பயன்படுத்திய வேட்டைக் கருவிகளும், அவனது வாழ்விடங்களான குடிசைகளும், வீட்டு உபயோகப் பொருள்களும் மட்டுமே சமூகத்தின் பொதுச்சொத்தாக இருந்தன. வேட்டைச் சமூகம் மேய்ச்சல் சமூகமாக மாற்றமடைந்த நிலையில் கால்நடைகள் சமூகத்தின் சொத்துக்கள் ஆயின. நிலத்தைத் திருத்திப் பயிர்ச் சாகுபடியில் ஈடுபட்ட பிறகு, விளைந்து வந்த உணவுப் பொருள்களான வரகு, தினை, பயறு வகைகள் முதலியனவும் சேமிக்கப்பட்டு சமூகத்தின் பொதுச்சொத்தாகவே பயன்படுத்தப்பட்டன. கால்நடைகளை மந்தையாகத் திரட்டி மேய்த்து வளர்க்கத் தொடங்கியபோது, கால்நடைகளும் அவற்றில் இருந்து கிடைத்த பாலும், இறைச்சியும், தோலும், கழிவும் ஆகியன யாவும் சமூகத்தின் பொதுவுடைமையாகவே இருந்தன. இவை தனிமனிதனின் சொத்துக்கு உரியதாக அதுவரை ஆகவில்லை.

சமூகத்தின் மக்கள் அனைவரும் ஒன்றிணைந்து உழைத்துப் பாடுபட்டு உற்பத்தி செய்த இச்செல்வம் யாவும் சமூகத்தின் மக்கள் அனைவருக்கும் சொந்தமான சமூகத்திற்குப் பொதுவான சொத்தாகவே இருந்தன.

ஆதிகாலப் பொதுவுடைமைச் சமூகத்தில் பொதுச்சொத்துடைமை கூட்டு உழைப்பு, சமத்துவ அடிப்படையிலான விநியோகம் முதலியவை ஆதிக்கம் செலுத்திய வரையில் சமூகம் வர்க்கங்களாகப் பிளவுபடவில்லை. தனிச்சொத்துடைமை பற்றிய சிந்தனை யாருக்கும்

எழவில்லை. அத்தகைய சிந்தனை தோற்றம் பெறுவதற்குரிய சமூகச்சூழலும் அப்போது தோன்றவில்லை. இதனை ஏங்கெல்ஸ்,

> “கணசமூகத்தில் உடைமைகள் அனைத்தையும் மக்கள் அனைவரும் எவ்விதப் பாகுபாடும் இல்லாமல் தமக்குள் சமஅளவில் பங்கிட்டுக் கொண்டனர். சமூகத்தில் ஏற்றத்தாழ்வு இருந்ததில்லை. உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பேதம் இருந்ததில்லை. சமத்துவம் நிலவியது. அனைத்தும் அனைவர்க்கும் என்ற சிந்தனையே செயல்பட்டது”[2]

என்று குறிப்பிட்டுச் செல்வது இங்குச் சுட்டத்தக்கது.

இவ்வாறு தொல்சமூகத்தில் ஏற்படுத்தப்பெற்ற நிலைமை குறித்தமையும்,

> “இந்நிகழ்வுகள் தனியுடைமைச் சிந்தனையும் ஆணாதிக்கமும் தலைதூக்கியதையும், சமூகத்தில் பெண்களும் அடித்தட்டு மக்களும் அடிமை நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டதையும் தெளிவாக உணர்த்துகின்றன. ஆண்டைகளான ஆண்கள் உயிருடன் இருக்கும்போது மட்டுமல்ல, இறந்த பின்னும் அவர்களுக்குப் பெண்களும் அடித்தட்டு மக்களும் அடங்கி நடக்க வேண்டும்; பணிந்துபோக வேண்டும் என்ற சுரண்டும் வர்க்கத்தவரின் ஆதிக்க மனப்பான்மையையும் அதிகார மமதையையும் வெளிப்படையாக உணர்த்துகின்றன”[3]

என்னும் கருத்தும் இங்கு நினைவுகூரத் தக்கது.

**தமிழகத்தில் வர்க்கப் பிரிவின் தோற்றம்**

சங்ககாலத்தில் அரசச் சமூகமும், நிலப்பிரபுத்துவச் சமூகமும் நிலை பெற்றிருந்தன. சங்கத் தமிழகத்தில் பிற நிலங்களைவிட மருதநிலத்தில் சமூக மாற்றம் முன்னதாகவே ஏற்பட்டுவிட்டது. மருத நிலமானது உற்பத்திப் பெருக்கத்தின், உபரி வருவாயின் வாயிலாக அமைந்தது. இங்கு வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலை மேற்கொண்டனர். இவர்கள் ஆளும் அரசுகளின் அடிமை எஜமானர்களும், ஆண்டைகளும் ஆவர். ‘கிழவன்’ என்ற சொல்லுக்கு நிலத்துக்கும் அடிமைகளுக்கும் உரிமை உடையவன் என்பது பொருளானது. உழவர், உழத்தியர், கடையர், கடைசியர், களமர், தொழுவர் என்போர் கீழ்மக்கள் எனப்பட்டனர். இவர்கள் ஆண்டைகளிடம் அடிமைகளாகவே வாழ்ந்துள்ளனர். ‘தொழும்பர்’ என்ற சொல்லுக்கு அடிமைகள் என்றே நிகண்டுகள் பொருளுரைப்பது அறியத்தக்க செய்தியாகும்.

தமிழக வரலாற்றில் அடிமைகளும், அவர்களின் உழைப்பைச் சுரண்டிக் கொழிக்கும் ஆண்டைகளும் எனச் சமூகம் இரண்டு வர்க்கங்களாகப் பிளவுபட்டது. அடிமைச் சமூகத்தில் அவர்களின் உழைப்பால் உற்பத்தி மிகுதியாகப் பெருகினாலும், அதன் பயன் மக்களைச் சென்று சேரவில்லை. அடிமைகளின் கடினமான உழைப்பினால்தான் அரண்மனைகளும், வளமனைகளும் கோட்டைகளும் கொத்தளங்களும் அகழிகளும் கட்டப்பட்டன. காடு கொன்று

நாடாக்கி, குளந்தொட்டு வளம் பெருக்கும் பணிகளையும் அடிமைகளே செய்தனர். அதனால் ஆண்டைகள் அடிமைகளைச் சுரண்டிக் கொழுத்தனர். ஆண்டைகளின் சுகங்களுக்காக அடிமைகளின் உழைப்பு உறிஞ்சப்பட்டது. உழைக்கும் மக்கள் அடிமையாக்கி ஒடுக்கப்பட்ட செய்தியைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகவே அறிவிக்கின்றன.

**சங்க இலக்கியத்தில் ஒடுக்கப்பட்டோர்**

சங்க காலத்தில் மக்களிடையே பிரிவினைகள் அவரவர்தம் செய்யும் தொழிலின் அடிப்படையில் இருந்துள்ளன. தொழிற்பாகுபாட்டின் அடிப்படையில் அவர்களது நிலை மிக கீழானதாகவே இருந்துள்ளது. அடியவர், வினைவலர், இழிந்தோர் குறித்துவரும் ஈ, தா, கொடு என்னும் கிளவிகள், சங்க காலத்தில் ஒடுக்கப்பட்டோர் நிலைமையைக் காட்டுகிறது. தொல்காப்பியத்தில்,

"அடியவர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்"[4]

என்னும் நூற்பாவிலும்,

"அன்னராயினும் இழிந்தோர்க் கில்லை"[5]

என்னும் நூற்பாவிலும் இடம்பெற்றுள்ள இச்சொற்கள் ஒடுக்கப்பட்டோரைத்தான் குறித்து அமைகின்றன. இதனை,

> "அடியவர் பிறருக்கு அடிமைத் தொழில் செய்தவர்; வினைவலர் பிறருக்குக் குற்றேவல் புரிந்தவர்; இவர்கள் இழிந்தவர்கள். இழிந்தவர் என்ற சொல் வழக்கே இவர்கள் சமூக நிலையை விளக்கப் போதுமானது. இவர்கள் இடம்பெறத் தக்கதாகக் கூறப்படும் கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களில் இவர்கள் நாணுக் குறைபாடு உடையவர்களாகவும், வேட்கை வழியே சாரக் கருதுபவராகவும் கேவலமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர்"[6]

என்னும் கருத்துத் தெளிவுபடுத்துகிறது. இதனால் சங்கச் சமூகத்தில் நிலவிய அடிமைகளின் சமுதாய நிலை புலனாகிறது.

**சங்கச் சமூகத்தில் மக்கட்பிரிவு**

ஒவ்வொரு நிலத்துக்கும் உரிய மக்கள் தலைமக்கள் என்றும் கீழ் மக்கள் என்றும் பிரிக்கப்படுகின்றனர். மருதநில வயல்களில் விவசாயத் தொழிலில் நேரடியாக ஈடுபடுவோர் கீழ்மக்கள். இவர்கள் சங்க இலக்கியத்தில் களமர், தொழுவர், வினைஞர், கடைசியர் என்று குறிப்பிடப்படுகின்றனர். 'களமர்' எருதுகளைப் பூட்டி உழுதவர் என்று மதுரைக்காஞ்சி (259, 60) மலைபடுகடாம் (469-70) நற்றிணை 129வது பாடல் ஆகியன குறிப்பிடுகின்றன. 'தொழுவர்' நெற்கதிர்களை அறுவடை செய்தனர் (புறம். 24; 209; நற். 95); 'கடைசியர்' நாற்று நட்டனர்,

களை பறித்தனர் (புறம். 7) ‘வினைஞர்’ நெல்லரிந்தனர், போரடித்தனர் (புறம். 161; மது. காஞ். 26-62) என்ற குறிப்புகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் (நாடுகாண் காதை 125-130) வினைஞர், களமர், கடைசியர், மூவரும் ஒரேஇடத்தில் தொகுத்துப் பேசப்படுகின்றனர். ‘வினைஞர்’ என்பதற்குப் பள்ளர், பறையர் முதலாயினோர் என்றும், ‘களமர்’ என்பதற்கு உழவர் குடிக்கீழ் மக்கள் என்றும் அடியார்க்கு நல்லார் உரை தருகிறார். ‘கடைசியர்’ என்பது இவ்வின மக்களின் பெண்களைக் குறித்துவரும் சொல்லாகும். இவர்களின் சமூக நிலை குறித்த விரிவான செய்திகள் எதுவும் காணப்படவில்லை. சங்க காலத்தில் நிலத்தொடு பிணிக்கப்பட்ட அடிமைகள் இருந்தனரா என்பதற்குத் தெளிவான சான்றுகள் எதுவும் இல்லாவிடினும், கடைசியர் என்று அழைக்கப்பட்டோரது நிலை ஏறக்குறைய அடிமைகளின் நிலை போன்றே இருந்தமை புலப்படுகிறது.

### முதலாளி - தொழிலாளி

இவ்வுலகிலுள்ள மனிதர்களைச் சொத்துக்காரர்கள், சொத்தில்லாதவர்கள் என்று இரு வகுப்பினராகப் பிரிக்கலாம். இவ்விரு வகுப்பினரிடையே எப்போதும் போராட்டம் இருந்து கொண்டே இருக்கும். சொத்துக்காரர்களிடம் மூலதனம் முழுவதும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. சொத்து இல்லாதவர்களிடம் உழைப்பு இருக்கிறது. முதலாளி இன்னின்ன நிபந்தனைகளின் மீதுதான் மற்றவர்கள் உழைப்பைப் பெற்றுக்கொள்கிறேன் என்று சொல்கிறான். அவன் சொல்கிற நிபந்தனைக்கு இணங்கித் தொழிலாளர்கள் தங்கள் உழைப்பை விற்க வேண்டியவர்களாய் இருக்கிறார்கள். விவசாயத் தொழிலாளரும் சரி, வேறு தொழிலாளரும் சரி, பசிப்பிணியால் பீடிக்கப்பட்டிருப்பதால் முதலாளி சொல்வதைக் கேட்கிறார்கள். உழைப்பால் பொருள் உற்பத்தி அதிகமாகிறது. உற்பத்தியான பொருளைச் செலவழிக்க புதியபுதிய மார்க்கங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. இவ்வாறாக முதலாளி, உலகம் முழுதுமுள்ள பொருள் உற்பத்திச் சாதனங்களில் எல்லா உரிமையையும் பெற்று, உழைப்பாளர்களோ தம் உரிமையை இழந்து கூலிக்கு வேலை செய்யும் அடிமைகளாகின்றனர். தொழிலாளிக்குச் சொத்துச் சுதந்திரமில்லை. வீடு வாசல் இல்லை. இதனால் குடும்ப வாழ்க்கையின் கட்டு தளர்கிறது. தானும் தன் குடும்பமும் பிழைப்பது முதலாளியின் தயவைப் பொருத்ததாகிறது

உலகில் தொழில்முறைச் சமூகம் என்றைக்கு நிலைபெற்றதோ, அன்றைக்கே அவரவர்களுக்குரிய தொழில்களும் நிரந்தமாக்கப்பட்டன. விவசாயக் கூலிவேலைகள் செய்தல், நெசவுசெய்தல், துணிகள் வெளுத்தல், பிணங்களைப் புதைத்தல் என மக்கள் சார்ந்த தொழில்கள், அவரவர்கள் உடைமைப் பொருளாக ஆக்கப்பட்டன. இயந்திரங்கள் பெருகிய காலகட்டத்தில் இயந்திரங்களின் சொந்தக்காரன் ‘முதலாளி’ என்றும் அவனிடம் பணியாற்றுபவன் ‘தொழிலாளி’ என்பதுமான நிலை ஏற்பட்டது. ஆதலால் பண்ணையில் வேலைசெய்து கூலி பெறும் தொழிலாளியும், இயந்திரங்களை இயக்கிக் கூலிபெறும் தொழிலாளியும் அடிமைகளே என்பது தெளிவாகும்.

தொழிலாளர்கள் அல்லது கூலியாள் என்போரின் சிறப்பினை, "தொழிலாளர்கள் என்று சொல்லப்படுவோரெல்லாம் தொழிலாளிகள் அல்லர். அவர்கள் எல்லாம் நாட்டின் நன்மைக்காக ஒரு தொழிலைக் கற்று, அத்தொழிலைத் தானாகவே சுயேச்சையுடன் செய்து அதன் பலன் முழுவதை யும் தானும் தன் நாட்டு மக்களும் அடையும்படியான முறையில் தொழில் செய்பவன் தான். எவன் ஒருவன் ஒரு தொழிலைச்செய்து அது எவ்வளவு அற்புதமானதாய், மதிப்புக்கூற முடியாததாய் இருந்தாலும் அவனுடைய அரிய முயற்சியின் பயனாய் உழைப்பின் பயனாய் அதன் முழுப்பயனையும் பெறமுடியாதவனாய், இவ்வளவுக்கும் பிரதிபிரயோசனமாய் அவனது அன்றாட வாழ்வுக்கு ஏற்ற கூலி மாத்திரம் பெற்றுக்கொண்டு மேலும் தொழில் செய்வதற்கு என்றே உயிர் வாழ்பவன் தான் கூலியாள் எனப்படுவான்"[7]

என்னும் கூற்றின் மூலம் அறியலாம்.

தொழிலாளர் நிலை

தன் உழைப்பால் தொழிலை வளப்படுத்தியும் அதற்குரிய பலனை அனுபவிக்க இயலாதவனே தொழிலாளி, காண்பதெல்லாம் அவனே செய்தும் அவனுக்குக் கிடைப்பது வறுமை என்பதே இன்றுவரை நடைமுறையாக உள்ளது.

உலகெங்கிலும் வாழும் தொழிலாளர்கள் வறுமையின்பிடியில் சிக்கித் தவிக்கின்றனர். அதிலும் தொழிலாளர்களின் வாழ்வியல் சிக்கல் நிறைந்ததாக உள்ளது. உழைக்கும் வர்க்கத்தின் உழைப்பைத் தங்களது மூலதனம் என்று ஆக்கிக் கொண்ட முதலாளிகள் சுரண்டல் தீமையானது என்பதை ஒருபோதும் கருதுவதில்லை. அப்படிக் கருதியிருந்தால் உழைக்கும் வர்க்கம் நிம்மதியாக வாழ்ந்திருக்கும். ஆனால், முதலாளிகள் தங்களது பொருளாதாரத்தை மேம்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதற்காகத் தொழிலாளர்களின் கண்ணீரையும் பாராமல் சுரண்டுகின்றனர்.

உழைக்கும் வர்க்கம் நாட்டின் முதுகெலும்பாகச் செயல்படுகிறது. உழைப்பாளர்கள்தான் உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க வீடும் உலகுக்கு அளித்துக் காக்கின்றனர். ஆனால், அந்தப் பாடுபடும் பாட்டாளித் தோழர்களின் வாழ்க்கை வளம்பெறவில்லை. உழைத்து உழைத்து ஓடாகிப் போகிறார்கள். உழைக்கக் கூடிய தொழிலாளர் வர்க்கமே சமுதாயத்தை இயக்கும் சக்தியாகத் திகழவேண்டும் என்பது மார்க்சியக் கொள்கை. ஆனால், இந்தியத் தொழிலாளர்களின் நிலை மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ளது. உழைப்பை மட்டுமே நம்பி வாழும் அனைத்து மக்களும் சமுதாயத்தில் அடிமைகள் போன்று உரிமைகள் இழந்து அவலங்கொண்டு விளங்குவதை யதார்த்த உணர்வுடன் இன்றைய படைப்பாளர்கள் தங்களது படைப்புக்களில் படைத்து வருகின்றனர்.

சமூகம் தோன்றியது முதல் இந்த முதலாளி, தொழிலாளி என இருபிரிவுகளும் இருந்து வருகின்றன என்பதே உண்மை.

“தம்பி, சமூகம்னு ஒண்ணு எப்ப தோன்றிச்சோ. அப்ப இருந்தே அது ரெண்டாகத் தான் இருந்து வந்திருக்கு. ஒழைக்கிற மக்களைக் கொண்ட மிகப்பரந்த அடித்தளம். இந்த அடித்தளத்த ஆட்சி செய்யிய. அல்லது நிர்வாகம் பண்ணுய மிகச்சிறிய தலைமை சமூகத்தின் மிகப்பெரிய முடிவில்லாத பிரச்சனையே இந்த ரெண்டையும் ஒண்ணுபடுத்தியது தான்! அரசியல், பொருளாதாரம், பண்பாடு, மதம், முதலாளி - தொழிலாளி உறவு என்றென்றும் தொடர்ந்து வரும் சமூகப்பிரச்சினையாக அமைந்திருப்பதைக் கோடிட்டுக் காட்டுகிறது.[8]

இந்நாட்டில் முதலாளிகள் சிலராகவும், தொழிலாளர்கள் பலராகவும் உள்ளனர். சிலராக உள்ள முதலாளிகள் அரசு, ஆட்சி, அதிகாரம், சாதிப்பற்று ஆகியவற்றின் பெயரால் உழைக்கும் மக்களை அடக்கியும் ஒடுக்கியும் வருகின்றனர். முதலாளியம் ஒழிந்து பொதுவுடைமை மலரும்போது தான் நாட்டில் வறுமை ஒழியும். இதனை,

“பாட்டாளிகளின் கவலையும், தொல்லையும் தொலைய வேண்டுமானால் முதலாளித்துவம் என்பது அடியோடு ஒழிந்தே தீரவேண்டும்”[9]

என்னும் கூற்றின் வாயிலாக அறியவியலுகிறது.

**பொதுவுடைமையும் தொழிலாளர்களும்**

பொதுவுடைமைச் சிந்தனையை, புரட்சிப் போராட்டத்தைச் சோவியத் ரஷ்யாவே தொடங்கியது. கம்யூனிசத்தின் மிக முக்கியக் குறிக்கோள் ‘பொதுவுடைமை’ என்பதாகும். அது ‘எல்லார்க்கும் எல்லாமும்’ என்ற பொதுத் தத்துவத்தை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது. விவசாயக் கூலிகள், தொழிலாளர்கள் வாழ்க்கை மேம்பட வேண்டும் என்றால் பொதுவுடைமை கால் பரவ வேண்டும். அதற்குப் பொதுவுடைமைத் தத்துவமே உலகம் முழுமையும் பரவவேண்டும் என்று காரல்மார்க்ஸ் உள்ளிட்ட அறிஞர்கள் பலரும் மொழிந்துள்ளனர்.

உடைமைகள், உரிமைகள் அனைத்தும் அனைவருக்கும் பொதுவாக வேண்டும் என்பதே பொதுவுடைமை. மூடநம்பிக்கைகளும், சாதி மதக் கட்டுக்களும் அறவே நீங்கிய பொதுவுடைமை ஒன்றுதான் உலகம் உய்வதற்கான வழி என்கின்றனர். எல்லார்க்கும் எல்லாமும் கிடைக்கின்ற பொதுவுடைமைச் சமுதாயம் அமைவதற்குத் தடையாக உள்ள வகுப்புவாதம், சாதிவெறி, சாதிப்பூசல் முதலானவைகள் வீழ்த்தப்பட வேண்டும் என்று முழக்கமிடுகின்றனர்.

ஒடுக்கப்பட்ட தொழிலாளர் தோழர்களுக்காகப் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அறைகூவல் விடுத்தார். விடுதலை பெற்ற இந்தியாவில் வர்க்கப் போராட்டத்தை ஒடுக்கும் விதத்தில் தேசியம் பற்றியும், காந்தியம் பற்றியும் பேசிக்கொண்டிருந்த ஆட்சியாளர் ஒருபுறமும், மக்கள் உரிமையையும் வர்க்க முரண்பாடுகளை முழங்கியவாறே விருப்பம் கொண்டிருந்தவர்கள் மறுபுறமும். இவ்விரண்டு பிரிவினருமே உழைக்கும் வர்க்கத்தின்

புரட்சிக்குத் தடையாக விளங்கினார்கள் என்று கல்யாணசுந்தரம் கருதினார். இந்தச் சிக்கல் நிறைந்த நிலையில் தனது கவிதைகள் ஆற்ற வேண்டிய கடமை பெரிதென்று அவர் உணர்ந்தார். பாமரனுக்கும் புரியக்கூடிய எளிய வரிகளில் மார்க்சியப் பொதுவுடைமைக் கருத்துக்களை எடுத்துரைத்தார்.

> "தேனாறு பாயுது - வயலில்
> செங்கதிரும் சாயுது - ஆனாலும்
> மக்கள் வயிறு காயுது"[10]

என்னும் கவிதையால் அடித்தட்டுமக்களின் நிலையினை எடுத்துரைத்தார். நிலத்தை உழுது, பயிரிட்டு வளர்த்து, அறுத்துக் கொடுப்பவன் வாழ்வில் வறுமையே தொடர்ச்சியாக நிலவுவதற்கு உடைமையாளர்களின் சுரண்டலே காரணம் என்பதைப் புரியவைத்தார்.

**சோசலிசம்**

சமுதாய முரண்பாடுகளை எதிர்க்கும் மக்கள் போராட்டங்களை வர்க்கப் போராட்டங்களாகச் சித்திரிக்கும் போக்கு, இன்றைய புதினங்களில் பரவலாகக் காணப்படுகின்றது.

> "சமுதாயத்திற் காணப்படும் முரண்பாடுகளையும், போராட்டங்களையும் உதிரியான தனி மனிதர்களின் பிரச்சினைகளாக மாத்திரம் கண்டு காட்டாமல் அவற்றை வர்க்கங்களுக்கிடையே நிகழும் போராட்டத்தின் வெளிப்பாடுகளாகக் காண்பது இன்றியமையாததாகிறது."[11]

கம்யூனிஸ்ட் கட்சியும் மாக்சியச் சிந்தனையும் இந்தியாவில் ஏற்படாத காலத்திலேயே பாரதியிடம் இச்சிந்தனை குடிகொண்டிருந்தது. இதற்குச் சான்றாக பாரதியின்

> "முதலாளி, தொழிலாளி என்னும் இந்தக் கஷிப் பேதமே நமது நாட்டுக்குப் புதிது; நூலாசிரியரும், வீதி பெருக்குவோறும் ஓரினமாகச் சேர்ந்து வைசியர்க்கு விரோதமாகப் போராடுதல் நமது தேசத்தில் நேற்று வரை நினைக்கொணாததோர் செய்தியாக இருந்தது. இன்று ஸாத்தியமாகிவிட்டது. இது ஐரோப்பியத் தொழில் முறைமைகளும் கொள்கைகளும் நம்முடைய தேசத்தில் பரவுவதால் ஏற்படும் இன்றியமையாத விளைவாகும்"[12]

என்னும் கட்டுரைப் பகுதி அமைகிறது. எனவே தான் பாரதியைப் பின் தொடர்ந்து இக்கால இலக்கிய படைப்பாளர்களிடம் இச்சிந்தனை மிகவும் முதிர்ச்சி அடைந்த நிலையில் காணப்படுகிறது. மேலும் சோசலிசமே இதற்குத் தீர்வாகும் என்ற படிநிலை வளர்ச்சியையும் பெற்றுள்ளது. 'ஒடுக்கப்பட்ட பாட்டாளி மக்களின் விடுதலை உணர்வுகளிலே பொதுவுடைமைச் சமுதாயம் மலரும். வர்க்க முரண்பாட்டில் உழைப்போருக்கான உரிமைகளை இயற்கையின்

இயல்பெனக் காட்டுவது பொதுவுடைமைச் சிந்தனை.'[13] இச்சிந்தனை குறித்து ஆய்வுக்குட்படும் புதினங்களின் பார்வை குறிக்கத்தக்கதாக அமைகிறது.

**புதினங்களில் அடிமைகள்**

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இமையத்தின் 'கோவேறு கழுதைகள்', சோலை. சுந்தரபெருமாளின் 'செந்நெல்', அறிவழகனின் 'கழிசடை', சோ. தர்மனின் 'கூகை', டி. செல்வராஜின் 'மலரும் சருகும்', தோல்', திலகவதியின் 'கல்மரம்', பூமணியின் 'பிறகு' ஆகிய புதினங்கள் வெளிப்படுத்தும் தொழிலாளர் நிலையும், வர்க்கப் போராட்டச் சிந்தனையும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

இப்புதினங்களில் இடம்பெறும் தொழிலாளர்கள் பல்வகைத் தொழிற்பிரிவினர் ஆவர். விவசாயக் கூலித்தொழில், துணிவெளுத்துத் தருதல், மனிதக் கழிவுகள் அகற்றுதல், கட்டடத்தொழில் செய்தல் என்ற பல்வகைத் தொழிற்பிரிவினராக விளங்குகின்றனர். இவர்கள் தம்மிடம் நிறைந்துள்ள உழைப்பை மட்டுமே மூலதனமாகக் கொண்டவர்கள். பிறரை அண்டிப் பிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள்.

இன்றுவரை உழைப்பாளி உழைக்கும் திறம் மட்டுமே பெற்றவனாக இருக்கின்றான். வயிற்றுக்கு நிறைவான உணவும், உடுப்பதற்கு நல்ல உடையும், இருப்பதற்கு ஒரு வீடும் இல்லாது தவிக்கும் நிலையில் வாழ்வதற்குத் தள்ளப்பட்டுள்ளான் என்பது ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்களில் காட்டப்பட்டுள்ளன. அவ்வகையில், புதினங்களில் காணப்படும் உழைப்பாளர் நிலையினை,

- பண்ணை அடிமைகள்
- தொழிற்சாலை அடிமைகள்

என்று வகைப்படுத்திப் பார்க்கலாம்.

இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலும் அடிமை முறை நிலவியதை வரலாற்றுச் சான்றுகள் காட்டுகின்றன. வரலாற்றுக் காலத்திலும், ஜமீன்களின் காலத்திலும் நிலப்பிரபுக்கள் போன்று விளங்கிய பிராமணர்கள் அனைத்து அரசியல் சமயச் சலுகைகளையும் பெற்றுத் திகழ்ந்தனர். சமய, அரசியல் ஆதிக்கம் பெற்று விளங்கிய இவர்கள் சாதாரண மக்களை அடிமைகள் போல் நடத்தினர். தென்னிந்தியாவில் ஏற்பட்ட ஆரியமயமாக்கலாலும், அதன் தொடர்ச்சியாக நிகழ்ந்த சாதிப் பாகுபாட்டு முறையும் தமிழகத்தில் அடிமை முறை தோன்ற வழிவகுத்தன. இந்நிலையில் சாதியும் அடிமை முறையும் தமிழகத்தில் நிலைபெற்றதனைப் புதினங்கள் காட்டுகின்றன.

**தமிழகத்தில் பண்ணை அடிமைகள்**

வேளாண் உற்பத்தியில் அடிமைகள் ஈடுபடுத்தப்பட்டதைச் சங்க காலம் தொடங்கிச் சோழர் காலம் வரை நமக்குக் கிடைத்துள்ள பல சான்றுகளின் வழியாக அறியலாம். தமிழகத்தின் கிராம மக்கள் அனைவரும் உழைப்பையே மூலதனமாகக் கொண்டு வாழ்பவர்கள். பெரும்பான்மை விவசாயம் சார்ந்த தொழிலையே மேற்கொண்டு வாழ்பவர்கள். சிறு குறு விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், உழைக்கும் மக்களிடம் உள்ள ஒற்றுமையின்மையைப் பயன்படுத்தி மிராசுதாரர்கள், நிலப்பிரபுக்கள், ஜமீன்தாரர்கள், இனாம்தாரர்கள் ஆகிய ஆதிக்கச் சாதிகள் அவர்களை அதிகாரத்தால் பணிய வைத்தார்கள். மக்கள் தொகைப் பெருக்கமும், தொழில் வளர்ச்சி இல்லாமையும், வறட்சியும் கிராமப்புறங்களில் நெருக்கடியை ஏற்படுத்தின. அதன்விளைவாக விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் கடுமையான உற்பத்திச் சுரண்டலுக்கு உள்ளானார்கள்.

ஆதி பொதுவுடைமைச் சமூகத்தில் உற்பத்தி நடவடிக்கைகள் தீவிரப்பட்டதன் மூலமும், உழைப்புப் பிரிவினை, பண்டமாற்று ஆகியவை தோன்றியதன் மூலமும் படிப்படியாகச் சமூகத்தின் இனக்குழுப் பண்பு, பொதுவுடைமை ஆகியன முடிவுக்கு வந்தன. இனக்குழு மக்கள், பிற இனக்குழுக்களோடு போர் புரிந்து அவர்களைத் தமக்கு அடிமை ஆக்கியதன் விளைவாக அடிமைச் சமுதாயம் உருக்கொண்டது. அடிமை, எஜமானர்கள் என்ற இரண்டு பிரிவுகளுக்கு இடையிலான சுரண்டல் உறவுகளைப் பாதுகாக்க அரசும் இம்முறையை நியாயப்படுத்தும் தத்துவ அரசியல் கொள்கைகளும் உருவாக்கம் பெற்றன. அடிமைகளின் உழைப்பைச் சுரண்டி ஆண்டைகள் கொழுத்தனர். இவ்வாறான கொடுநிலையை "அடிமைகளின் எலும்புக்கூடுகளால் உருவானது இச்சமூகம்"[14] என்றுரைத்தார் லெனின்.

உயர்சாதியினரே நிலவுடைமையாளர்களாகவும், அரிசன மக்களே கூலி விவசாயிகளாகவும், குத்தகை விவசாயிகளாகவும் பெருமளவில் உள்ளனர். தம் வயல்களில் பண்ணை விவசாயம் செய்துகொண்டு மேற்பார்வை பார்ப்பதற்கும், தம்முடைய வீடுகளை, பண்ணைகளைச் சுத்தம் செய்வதற்கும், தமது துணிகளைத் துவைத்துத் தருவதற்கும், ஆண்டைகள் வசிக்கும் ஊரைச் சுத்தம் செய்வதற்கும், விவசாயத்திற்குத் தேவையான நீரைப் பாய்ச்சுவதற்கான கமலைகளைச் செய்து தருவதற்கும், ஆண்டைகளின் சாவுச்செய்திகளை அவர்களின் உறவினர்களுக்கு விரைந்துசென்று சொல்லி வருவதற்கும், ஆண்டை வீட்டுப்பெண்கள் பூப்படைந்தாலும், பிள்ளைபெற்றாலும் அவர்களின் அழுக்கு மூட்டைகளைத் துவைத்துத் தருவதற்குமென அடிமைகளை நிரந்தரமாக வருவித்துக் கொண்டனர். இவர்களுக்கென நிரந்தமான கூலி என்பது எதுவும் இல்லை. தமது வருவாயில் தரப்படும் சிறுதொகையும் அவ்வப்போது விளைச்சல் காலங்களில் தரப்படும் சிறு தானியங்களுமே அவர்களின் ஊதியமாக நிர்ணயிக்கப்பட்டதைப் புதினங்கள் காட்டுகின்றன.

‘பிறகு’ புதினத்தில் நிலவுடைமையாளர்கள் தங்கள் நிலங்களுக்குக் கமலை தைத்துக் கொடுப்பதற்காகச் சக்கிலியர்களை அழைத்துவந்து அடிமைகளாக, நிலையாக இருத்திக் கொண்ட நிகழ்வினையும் அதற்கான காரணத்தைச் சொல்லி அழைத்து வருவதனையும்,

“மணலூத்துச் சம்சாரிகள் கூப்பிட வந்திருந்தார்கள்.

...நாங்க படுற கஷ்டந்தான் ஒனக்குத் தெரியுமேப்பா. புது வாலெடுத்தாச்சுனா உருப்படியாத் தச்சுக் குடுக்க ஆளில்ல. எல்லாம் சொந்தத் தொழில வுட்டுட்டு வெவசாயத்தில எறங்கிட்டான். இருக்கிற பெய தச்சுக் குடுத்தாலும் கமல வாயி தவர மத்த எடமெல்லாம் ஊத்துது. நாங்க ஒண்ணொண்ணுக்கும் இங்கயே வந்திட்டுப் போறதுன்னா வேல மொடங்கிப் போகுது”[15]

என்று குறிப்பிடுகிறார் பூமணி. தங்கள் தேவையைச் சொல்லி அடிமைகளைப் பிற இடங்களிலிருந்து அழைத்துவந்து அடிமைகளாக அமர்த்திக் கொள்ளும் ஆண்டைகளின் நிலை இதன்வழியாக் காட்டப்படுகிறது.

பண்ணை அடிமைகள், ஆண்டைகளின் வீடுகளில் நிகழும் மரணச் செய்திகளைப் பிற ஊர்களுக்குச் சென்று சொல்லிவரும் பணியாளாகவும் அமர்த்திக் கொள்ளப்பட்டனர் என்பதனைத் ‘தோல்’ புதினத்தில்,

“வெட்டி காக்கையன் சாம்பானுக்கு இந்தத்தொழில் பரம்பரை பரம்பரையாக வந்து வாய்த்துவிட்ட தொழிலாகும். அவனுக்கு விவரம் தெரிந்த காலம் முதல் அவன் பாட்டன், அப்பன் காலத்திலிருந்து அவனுக்குக் கைவந்த தொழில் அது.

அவனது வாலிபப் பருவத்தில், குடியான தெருக்களில் பிணம் விழுந்துவிட்டால் போதும், முதலில் காக்கையனுக்குத்தான் ஓலை வரும். வேட்டியைத் தார்ப்பாய்ச்சி உருமாளைக் கட்டிக்கொண்டு, கால் கடுக்க எட்டுப்பட்டிகளுக்கும் துட்டி சொல்லிவிட்டு வரவேண்டும். இப்போது வயதாகிவிட்டதால் சுடுகாட்டில் பிணம் எரிப்பதோடு நின்றுவிடுகிறான்”[16]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ். பண்ணை மக்களின் இறப்புச் சடங்குகள் முழுவதும் தாழ்த்தப்பட்ட மக்களைக் கொண்டே செய்யப்படுகின்றன. பிணங்களை எரித்தல், புதைத்தல் முதலான அனைத்து வேலைகளையும் தாழ்த்தப்பட்ட மக்களே செய்ய வேண்டிய நிலை உள்ளது. அவ்வாறான வேலைகளைத் தாழ்த்தப்பட்டவர்கள் செய்ய மறுத்தாலும், அவர்களையே செய்யச்சொல்லி வற்புறுத்துவதோடு, அதன் பொருட்டு அவர்களை வதைக்கும் நிலைப்பாட்டினை, ‘கூகை’ நாவலில்,

“மாட்டுச் சந்தைக்குப் போன பாண்டி மாமா செத்துப் போய்ட்டாரு. பொணம் வந்துகிட்டு இருக்கு.

பள்ளக்குடியிலப் போய்ப் பாத்தா ஒரு பயலையும் காணும்.

யார்ல துட்டி சொல்லிப் போவா, யார்ல குழிவெட்டப் போவா?

ஒங்க பயலுகளுக்கு இப்ப மப்பு ஏறிப் போச்சுல"[17]

என்று காட்டுகின்றார் சோ. தர்மன். மரணச் செய்தியைச் சொல்லச் செல்லும் அடிமைகள் நடந்தே செல்லுமாறு பணிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் மாட்டு வண்டிகளிலோ, குறுக்குவழிகளிலோ செல்வதற்கு அனுமதிப்பதில்லை. அவ்வாறு மரணச் செய்தியைச் சொல்வதற்காகச் செல்லும் சுப்பிரமணியன் என்ற பண்ணை அடிமை, தன் வண்டியில் இதுவரை உட்கார்ந்து வந்திருக்கிறான் என்பது தெரிந்ததும், வண்டியில் உட்கார்ந்திருந்தவனைக் கீழே தள்ளியதோடு, அவனைக் கீழ்த்தரமான சொற்களால் வசைபாடுவதனையும் இப்புதினத்தில் நிகழ்வாக்கிக் காட்டுகிறார் சோ. தர்மன்.

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் இடம்பெறும் சவுரியும் ஆரோக்கியமும், ஊராரின் மரணச் சடங்குகளைச் செய்வதாகக் காட்டுகிறார் இமையம்.

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் கவுண்டரின் நிலத்தில் அடிமையாகத் தாழ்த்தப்பட்ட பெண்களை வைத்துக் கொண்டிருப்பதை,

"நிறமணியில் கவுண்டரின் மகள் வீடு, அங்கு கருப்பாயி அடிமைப் பறைச்சியாக வேலை செய்து கொண்டிருந்தாள்."[18]

என்று எடுத்துரைக்கிறார். இதோடு நில்லாது கருப்பாயியின் பெற்றோர்கள் கவுண்டரின் மாமானார் வீட்டில் அடிமைகளாக வாழ்ந்து வருவதனை,

"இன்றும் அவளுடைய அம்மாவும் அப்பாவும் அவர் வீட்டில் அடிமை வேலை செய்து வருகின்றனர்."[19]

என்று காட்டுகிறார். இதனால் பரம்பரை பரம்பரையாக நிலவுடைமையாளர்கள் அடிமைகளை வைத்துக் கொள்வதும் அவர்களைக் கீழ்நிலைத் தொழில்களுக்குப் பயன்படுத்திக் கொள்வதும் தெளிவாகிறது.

**மாட்டுச்சாணம் கூட்டுவதற்குக் குத்தகைக்கு எடுத்தல்**

ஆண்டைகளின் மாட்டுக்கொட்டைகளில் மாடுகளைப் பராமரிப்பதோடு, மாடுகளின் சாணத்தைக் கூட்டுவதற்கும், இடத்தைச் சுத்தம் செய்வதற்கும் சக்கிலியப் பெண்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்வதனை,

"சாணி கூட்டுறதுக்கு சம்பளம் எம்புட்டு?

முக்கா ரூவா... குத்தகைக்கு எடுத்துருக்காரு. ஒரு மொதலாளி”[20]

என்னும் கருத்தின் மூலம் அறியமுடிகிறது. ஆண்டைகளின் கால்நடைப் பண்ணைகளைப் பராமரிப்பதற்கென்று ஆட்களை அடிமைகளாக வைத்துக் கொள்வது இதன்வழியாகத் தெளிவுறுத்தப்படுகிறது.

**அடிமைத் தொழிலாளர்கள்**

உற்பத்தி முறையே ஒவ்வொரு காலகட்டத்தின் சமுதாய அமைப்பைத் தீர்மானிக்கிறது. உற்பத்தி முறை மாறும்போது உறவு முறையும், சமூகக் கட்டமைப்பும் மாறுகிறது. உழைத்து உழைத்து ஆண்ட கைகளின் கோட்டைகளை நிரப்பிய வர்க்கத்தை விலங்கினும் இழிவாக நடத்துவது இயல்பான நிகழ்வாக உள்ளது. ஆதிகாலச் சமுதாய அமைப்பில் சுதந்திரக் குடிமக்களாக விளங்கிய மக்கள், அடிமை உடைமைச் சமுதாயத்தில் அடிப்படை ஏதுமற்ற வர்க்கங்களாக மாறினர். சாதி இறுக்கமும், தொழில் முறைப் படுத்தப்பட்ட வாழ்வியல் நிலையும் அதிகார வர்க்கத்தின் ஆணவப் போக்காக மாறிவிட்டது. இதிலிருந்து மீள்வதற்குரிய வழிவகைகள் ஏதும் அற்றவர்களாக இருக்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. இதனால் அடிமைகளைச் சொல்லாலும், செயலாலும் வதைப்பதைத் தொடர்நிகழ்வாகக் கொண்டனர். இதனை ஓர் நிகழ்வின் மூலம் ‘கூகை’ புதினத்தில்,

“தலமொற தலமொறயா இருந்த ஊர் வழக்கத்த எப்பிடில இன்னைக்குன்னு மாத்த முடியும்?

ஒழுங்கா ரெண்டு பயகளும் துட்டி வீட்டு வேல செய்யற... இல்ல..

நல்ல தண்ணி எடுக்க கெணத்துக்கு வரக்கூடாது,

சாமான் வாங்க கடைக்கு வரக்கூடாது,

அதுக்கு மேல கீச் பூச்னா ரெண்டு தெருவையும் கொழுத்திச் சாம்பலாக்கிப்புடுவம்”[21]

என்று காட்டுகிறார் சோ. தர்மன். காலம் காலமாகச் சாதி இறுக்கத்திற்கு ஆட்பட்ட சமூகம் மேலெழுந்து வருவதற்குரிய அடிப்படை உரிமைகளைத் தரமறுக்கும் ஆண்டைகளின் வன்முறைப்பட்ட மனநிலையினை இப்பகுதி உணர்த்துகிறது.

**அடிமைகளின் எதிர்க்கவியலா மனநிலை**

தம் இனத்தையும் குலத்தையும் தொழிலையும் எந்தவொரு நிலையிலும் மேலெழும்பவிடாமல் தடுத்துநிறுத்தும் ஆண்டைகளுக்கு எதிராக எந்தவொரு எதிர்ப்பினையும் காட்ட இயலாத நிலையில் இருக்கும் அடிமைச்சமுதாயம் விதியை நொந்தபடியே காலம் தள்ளும் நிலையில் உள்ளனர் என்பதனை,

"காலம் இப்படியேவா போயிரும், மேடுன்னு ஒண்ணு இருந்தா, தாவுனு ஒண்ணு இருக்குமில்ல, மேட்டுல ஏறுனவன் தாவுக்கு எறங்காமயா இருந்திருவான். ஆனைக்கு ஒரு காலம் வந்தா பூனைக்கும் ஒரு காலம் வராதா!"[22]

என்று 'கூகை' புதினத்தில் காட்டக் காணலாம். பண்ணை அடிமைகளிடம் விரக்தி மனநிலை இருந்தாலும், தம் சமூகம் என்றாவது ஒருநாள் மேலெழுந்து வருவது உறுதி என்ற மனநிலையின் வெளிப்பாடு இதில் காட்டப்படுகிறது.

தொழிலாளர்கள் சிந்திப்பதற்கும் செயலாற்றுவதற்கும் எதிர்த்து நிற்பதற்கும் திராணியற்ற நிலையில் இருக்கையில் அவர்கள் தங்கள் நிலையை நொந்து கொள்ளும் நிலையினை,

"எங்க போனாலும் நாம இன்னொருத்தருக்குக் கீழ, கீழ்ச்சாதிக்குக் கீழ்ச்சாதி வேலை செய்யுறவுங்கள இப்படித்தான் செய்வாங்க..

பெறவு என்னதான் பண்றது?

நம்பளுக்கு முன்னாடி எம்புட்டோ, நம்ப சாதி சனம் இருந்துட்டுக் காலம் தள்ளினாப்ல நம்பளும் போவ வேண்டியதுான்"[23]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். காலம் காலமாக அடிமைகளாகவே மாறிப் போன சமூகத்தின் உள்ளக்குமுறல் இதன்வழி காட்டப்படுகிறது. அடிமைகளை உருவாக்கியவர்கள், அவர்களுக்கெனத் தனியான விதிகளைக் கட்டமைத்தவர்கள் ஆதிக்கச் சாதியினரே என்பதை,

"ஊரில் என்னதான் இல்லை? எதுதான் நடக்கவில்லை? மேல்குடிக்காரர்கள், காணி பூமி படைத்தவர்கள் எது செய்தாலும் அது அந்த ஊரில் பழக்கமாகிவிடும்"[24]

என்று தெளிவுபடுத்துகிறார் இமையம். இந்த நிலையில்தான் தொழிலாளர் வர்க்கம் உருவாகிறது.

**தொழிலாளர் வர்க்கம் உருவாக்கம்**

நிலப்பிரபுத்துவ பண்ணைச் சமுதாயத்திற்கு அடுத்த கட்டமாக நிலபிரபுத்துவ முதலாளித்துவச் சமுதாயம் தோன்றியது. இது, இலாபம் ஒன்றை மட்டுமே நோக்கமாகக் கொண்டு மனித மாண்புகளை மதிப்பிழக்கச் செய்தது. உண்மையான சுதந்திரத்திற்கு மாற்றாக வணிகச் சுதந்திரம் வளம் பெற்றது. இதில் உழைப்பு மேன்மையற்றதாக ஆகிவிடுகிறது. தொழிலாளர்கள் முதலாளித்துவச் சமுதாயத்தில் இயந்திரத்தின் துணைக்கருவிகள் போன்று பார்க்கப்படுகின்றனர்.

வாழ்வதற்குத் தேவை பண்டம் என்னும் நிலைமாறி பணம் சம்பாதித்து உச்சகட்ட ஆடம்பர வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும் என்ற இழிவான நோக்கம் மக்களிடம்

மேலோங்கி விட்டது. ஆகவே, வேலை இழந்த விவசாயிகள் பணத்தைத் தேடி பட்டணம் நோக்கிப் பயணப்பட்டு வருகின்றனர். அங்கே, அவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் நிலைமைகளைப் புதினங்கள் காட்டுகின்றன. பட்டணத்தில் விவசாயிகள் கட்டடத் தொழில்புரியும் இடத்தில் சில்லறைப் பணியாளர்களாக மாறிப்போன அவலத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. 'சாலைபோட, சாவடி கட்ட, போலீஸ் ஸ்டேசன் கட்ட, நீதிமன்றக் கட்டடம் கட்ட என்று மெதுவாக கட்டடத் தொழிலாளர்கள் உருவாகினர். கங்காணி மூலம் இலங்கைக்குத் தோட்டத் தொழிலாளர்களாகவும் மனிதக் கூட்டங்கள் புலம் பெயர்ந்தன. தேக்கடியில் நடைபெற்ற அணைக்கட்டும் வேலையும், ரயில்வண்டித் தொடருக்கான வண்டிப்பாதை அமைக்கும்போதும் தொழிலாளர் வர்க்கத் தன்மையில் மக்கள் உருவாகினர்.'[25]

நிலப்பிரபுக்கள் தங்கள் விலை நிலங்களில் தொழிற்சாலைகளையும் பட்டாசு உற்பத்தி ஆலைகளையும் நிறுவியபோது அங்கு, தம்மிடம் பரம்பரை அடிமைத்தொழில் செய்துவந்த மக்களைத் தொழிற்சாலைக் கூலித் தொழிலாளர்களாக மாற்றிவிட்ட நிலையினை 'கூகை' புதினத்தில்,

> "அவனோட நோக்கமே நம்பளப் பட்டணத்துக்குக் கூட்டிட்டுப் போறதுதான். தலமொற தலமொறயா அவனோட காட்ல ஓழச்சுச் சீரழிஞ்சோம். இப்ப காடு வௌயல; ஜமீன் தொழிலை மாத்திக்கிட்டான். இனி வருசம் பூராவும் அவன் என்ன வேலை சொல்றானோ அதச் செஞ்சிட்டு அவன் காலடியில் இருக்க வேண்டியதுதான்"[26]

என்று படம்பிடித்துக் காட்டுகிறார் சோ. தர்மன். கிராமத்தில் விவசாய நிலங்களில் அடிமைச் சேவகம் செய்ததனைப் போன்று, நகரத்தில் தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் கூலிகளாக மாற்றம் பெற வைத்த நிகழ்வு வரலாற்றியல் போக்கில் இங்கு உணர்த்தப்படுகிறது.

> "கோயில்பட்டியிலதான இருக்கன். மூனு தீப்பெட்டிக் கம்பெனி ஓடுது, ரோடு காண்ட்ராக்ட் எடுத்திருக்கன், ஆட்டுச் சந்தைய ஏலம் எடுத்திருக்கன். ஜின்னிங் பாக்டரி ஒன்று வேல நடக்கு. ஒங்களுக்கு வருஷம் பூராவும் வேல இருக்கும். மூனு வேளையும் சாப்பாடு என் பொறுப்பு. குடும்பத்தோட தங்குறதுக்கு வீடுக கட்டித் தாரன், ஒங்க புள்ளைகளையும் நல்ல படியா படிக்க வைக்கன்"[27]

என்று பண்ணை அடிமைகளைக் கூலித்தொழிலாளர்களாக மாற்றும் ஜமீன்களின் சூழ்ச்சி இங்கு எடுத்துரைக்கப்படுகிறது.

பண்ணை அடிமைகளிலிருந்து கூலித் தொழிலாளர்கள் உருவாக்கம் பெற்றதனையும், ஊதியமுறை உருவாக்க நிலையினையும்,

> "கிராமத்தில் எல்லோருக்கும் அடிமைச் சேவகம் செய்தவர்களும் இப்பொழுது துட்டுக்கு வேலைபார்க்கும் தொழிலாளர்களாயினர். வாரக் கடைசி நாளில் வாங்கும் கூலியைக் கணக்கிட்டபடியே கால்கள் ஓடின"[28]

என்றுரைப்பர்.

விவசாயக் கூலிகளிலிருந்து தொழில்துறைத் தொழிலாளர்கள் உருவாக்கம் பெற்றதைத் தொழிலாளர் நலவாரிய அறிக்கை “நாட்டிலுள்ள மொத்தத் தொழிலாளர்களில், வேளாண் தொழிலாளர்களின் எண்ணிக்கை ஒவ்வோர் ஆண்டும் குறைந்துவரும் அதேவேளையில், தொழில்துறையிலும், பணிகள் துறையிலும் பணியாற்றும் தொழிலாளர்களின் எண்ணிக்கைப் பெருகிவருகிறது. தற்போது பல்வேறு வேலைவாய்ப்புகள் பெருகியுள்ளன. குறிப்பாகப் பணித் துறையைப் பொருத்தமட்டில் வேலை வாய்ப்புகள் மிகவும் அதிகரித்துள்ளன. எனினும், சமூகத்தில் வேலைவாய்ப்பின்மையும், திறமைக்கேற்ற வேலையின்மையும் நிலவுகிறது. அனுபவமும், பயிற்சித் திறனும் இன்றி உடலுழைப்பினை மட்டுமே நம்பியுள்ள ஊர்ப்புறத் தொழிலாளர்கள் பெருமளவில் இருப்பதால்தான் இம்முரண்பாடு நிலவுகிறது. குறைந்த உற்பத்தித் திறன் கொண்ட தொழில்கள், வேலைவாய்ப்பின்மை, திறமைக்கேற்ற வேலையின்மை போன்றவையே ஊர்ப்புற வறுமைக்குக் காரணமாகும்”[29] என்று குறிப்பிடுகிறது.

கிராமங்களில் நாள்தோறும் ஆண்டைகளின் பண்ணைகளில் உழைத்து உழைத்து ஓடாய்த் தேய்ந்த மக்கள் நகரங்களில் கிராம முதலாளிகளால் கட்டப்பட்ட தொழிற்சாலைகளில் மனநிறைவான வேலையைப் பெற்றதாக எண்ணி மகிழ்ந்தார்கள். இவர்கள் பகுதிநேரமாக வேலை பார்க்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர்,

> “மனிதர்கள் வலியை உணரமுடியாத மனநிலையுடன் ஷிப்டுகளை நோக்கி ஒவ்வொரு நாளும் ஓடிக் கொண்டிருந்தனர்”[30]

என்பதன் மூலம் ஓய்வின்றி உழைக்கும் தொழிலாளர்களின் வாழ்க்கைமுறை உருவாக்கம் பெற்றமை தெளிவாகிறது.

**சிறுதொழிலகங்களில் கொத்தடிமையாதல்**

தீராக்கடன் சுமை, உடல்நலக்குறைவு, எதிர்பாராத மரணம், மக்கள் தொகைப் பெருக்கம், வறுமை ஆகியவற்றின் காரணமாகக் கொத்தடிமைகளாக மக்கள் வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். கடனிலிருந்து மீளமுடியாத நிலையில் குடும்பமாக இந்த இழிநிலைக்குத் தயாராகின்றனர். இவற்றோடு பணபலத்தின் காரணமாகவோ, சாதிய அடிப்படையிலோ, பரம்பரை உழைப்புக் காரணமாகவோ ஏதேனும் ஒரு வகையில் நிர்ப்பந்தப்படுத்தி மீளமுடியாத கட்டாய உழைப்புக்கு ஆளாக்கப்படுவதே கொத்தடிமை முறை ஆகும். யாரும் விரும்பி இதனை ஏற்றுக் கொள்வதில்லை.

எதன் அடிப்படையில் அமைவதெல்லாம் கொத்தடிமை முறை எனப்படும் என்பதனை உச்சநீதிமன்றம்,

- முன்பணமாகப் பெற்ற தொகையில் வட்டிக்காகப் பணியாற்ற நேர்வது.

- சமூகக் கட்டுப்பாட்டின் காரணமாகவோ அல்லது பரம்பரையாகவோ தொடர்ந்து குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட வேலை செய்யக் கட்டாயப்படுத்துவது.
- முதலாளிகளிடம் ஏதேனும் காரணமாக உதவிகள் பெறச் செல்லும்போது அதற்கு ஈடாக வேலை செய்ய வைப்பது.
- ஏதேனும் பொருளாதாரப் பயன்களைப் பெற்றதற்காகக் கட்டாயமாக வேலை செய்ய வைக்கப்படுவது.
- தாழ்த்தப்பட்ட சாதியில் பிறந்ததற்காக மற்றவரிடம் கட்டுப்பட்டு வேலை செய்ய நேர்வது.
- குடும்பத்தார் பட்ட கடனுக்காக மிகவும் குறைந்த கூலிக்கோ அல்லது கூலியில்லாமலோ வேலை செய்வது.
- வாழ்க்கை முறையில் எந்தச் சுதந்திரமுமின்றி குறிப்பிட்ட காலத்திற்கோ அல்லது கால அளவு எதுவும் இல்லாமலோ அடிமையாக உழைப்பது.

என்று வகுத்துரைத்துள்ளது."[31] இத்தகைய கொத்தடிமைத் தொழிலாளர்கள் பற்றிய நிலையும் அவர்தம் அவல வாழ்வும் ஆய்விற்கு உட்படும் புதினங்களில் காட்டப்பட்டுள்ளன.

**முறியால் மீளமுடியாத தொழிலாளர் நிலை**

எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் தங்கள் உடல் உழைப்பை மட்டுமே மூலதனமாக்கி வாழும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். இவர்களிடம் நிறைந்துள்ள உடலுழைப்பின் பயனை அடைவதற்கு முதலாளிகள் செய்யும் சதிவேலைகளில் முறி எழுதி, வேலை கொடுப்பது முதன்மையாக அமைகிறது. தோல் ஷாப்பில் முறி எழுதி வேலை செய்த நிகழ்வு,

> "ஏசுவடியாளும் ஆசீரும் அந்த ஊருக்கு வந்து அஸன் ராவுத்தர் தோல் ஷாப்பில் கூலிகளாக அமர்ந்தபோது, அட்வான்ஸாகப் பெற்ற ஐம்பது வெள்ளிக்காசுகளை எப்படியாவது தெத்துவளி பண்ணி, முறி எழுதிக் கொடுத்த அடிமைச் சாசனத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு ஊருக்குப் போய்விட வேண்டும் என்ற பிரம்மப்பிரயத்தனம் செய்தது அத்தனையும் வீணாகப் போனதே அல்லாமல் ஒன்றும் நடக்கவில்லை"[32]

என்று 'தோல்' புதினத்தில் காட்டப்படுகிறது. ஏசுவடியாளும், ஆசீரும் அஸன் ராவுத்தர் தோல் தொழிற்சாலைக்கு வந்த போது முன்பணமாகப் பெற்ற ஐம்பது வெள்ளிக்காசுகளைக் கட்டிவிட்டு, முறி எழுதிக் கொடுத்த அடிமைச் சாசனத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு ஊருக்குப் போய்விடலாம் எனக் கடும் முயற்சி செய்தது அத்தனையும் வீணாகப் போனது. முதலாளியை எதிர்த்து ஒன்றும் செய்ய இயலவில்லை. மகிமைக்காசு என்றும், வட்டிப்பணம் என்றும், உழைத்த பணம் எல்லாம் முதலாளியின் கப்பறையில் போய் அடக்கமானதே அல்லாமல் ஐம்பது வெள்ளிக்காசு வட்டியும் முதலுமாக இரட்டிப்பாகி வட்டிமேல் வட்டி குட்டிபோட்டு அவர்களை அதில் இருந்து மீளமுடியாமல் கட்டாய உழைப்புக்கு ஆளாக்கப்பட்டதையும் இப்புதினம் எடுத்துரைக்கிறது.

மக்கள் தங்கள் வயிற்றுப்பாட்டிற்காகவும், அத்தியாவசியத் தேவைகளுக்காகவும் எந்த வட்டிக்கு வேண்டுமானாலும் ஒப்புக்கொண்டு கடன் பெற்றுக் கொள்கின்றனர். முதலாளிகள், கடன்தொகைக்கு ஈடாக நிலங்களையும், பொன்னையும், பொருளையும், மக்களையும் அடமானமாக வைத்துக் கொண்டு அவர்களைத் தங்களுக்கான நிரந்தர அடிமையாக்கிக் கொள்கின்றனர். அவசரத்திற்காகப் பெறும் கடனால் அவர்கள் ஆயுள் முழுவதும் அடிமைகளாக வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் என்பதனையும் ஆட்சி, அரசியல், சாதி அதிகாரத்துவமிக்கவர்களால் இவர்களை ஒன்றும் செய்ய இயலாது என்பதனையும் பாத்திரக் கூற்றின் மூலம்,

> "முறி எழுதிக் கொடுத்திருக்கும் அந்த அப்பாவி அடிமைகளால் எப்படி அவனை எதிர்கொள்ள முடியும்?"[33]

என்றுரைக்கிறார் டி. செல்வராஜ்.

ஒரு முறை அடிமையாக முறி எழுதிக் கொடுத்துவிட்டவன் பின்னர் அதிலிருந்து மீள்வதற்கு வழியேயில்லை என்பதனையும், வேறு இடங்களுக்கு வேலை செய்யச் சென்றாலும் அவர்கள் சேர்த்துக்கொள்ள மறுப்பார்கள் என்பதனையும் 'தோல்' புதினத்தில்,

> "மம்முதன் ஓர் ஆண்டுக்கு முறி எழுதிக் கொடுத்து அஸன் ராவுத்தர் தோல் ஷாப்பில் சேர்ந்திருந்தான். ஆண்டு முழ்தபோது எழுதிக் கொடுத்த அடிமைச் சாசனத்தை மம்முதன் திருப்பிக் கேட்டபோது தான் அந்தச் சம்பவம் நடைபெற்றது.
>
> மாதச்சோத்…
>
> ஒரு தபா எழுதிக் கொடுத்தா குடுத்தது தாண்டா. வெளியே போயிடுவீகளோ என் தோல் ஷாப்பை வுட்டு?"[34]

என்று குறிப்பிடப்படுகிறது. முதலாளிகள் முறி எழுதிக் கொண்டு அடிமையாகச் சேர்த்துக் கொண்ட தொழிலாளர்களை நடத்தும் விதத்தை ஆய்வுப் புதினங்களின் வழியாக அறியமுடிகிறது.

அடிமைச் சாசனமாகிய முறி எழுதிக் கையொப்பமிட்ட பின்னர், அவர்கள் சொல்வதற்கெல்லாம் தலையாட்டிப் பொம்மைகளாக வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். எழுதப் படிக்கத் தெரியாததால் அவர்களை ஏமாற்றுவது எளிதென நினைக்கின்றனர் முதலாளிகள்.

> "தோல் ஷாப்புகளில் அடிமைச்சாசனமாக முறி எழுதி, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட எந்தவொரு தொழிலாளியும் தோல்ஷாப்பு முதலாளிகளின் உடும்புப்பிடியை உதறிவிட்டு வெளியேற முடியாது என்கிற எழுதப்படாத விதி பற்றி அந்த அப்பாவிகளுக்கு ஞானமில்லாமல் போய்விட்டது."[35]

என்ற பகுதி முதலாளிகளின் சூழ்ச்சியைப் புரிந்துகொள்ளாமல் சிக்கலில் மாட்டிக் கொள்ளும் ஏழைத் தொழிலாளர்களின் நிலையைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**சிறுவர்களை அடிமையாக்கிக் கொள்ளுதல்**

மக்கள் மேம்பாடு அடையாதிருப்பதற்கு முதன்மையான காரணம் முறையான கல்வி வாய்ப்பின்மையே. முறையான கல்வி பெறுவதற்கு வறுமையே அடிப்படைக் காரணமாக அமைந்திருக்கிறது. இதனால் பள்ளி செல்ல வேண்டிய வயதுள்ள பிள்ளைகளை ஆண்டைகளின் வீடுகளிலும், தொழுவங்களிலும், தொழிலகங்களிலும் வேலைக்குச் சேர்த்து விடுகின்றனர். தொழிலாளர்களிடம் நிறைந்துள்ள அறியாமையால் நிகழ்த்தும் செயல்பாடுகள் இதுவும் ஒன்றாகும்.

தோல் தொழிற்சாலையில் வேலைசெய்த ஆசீர்வாதம் தன் மனைவியின் இறப்புச் செலவுக்காக அஸன் ராவுத்தரிடம் பணம் கேட்பதற்காகத் தன் மகன் ஓசேப்பையும் உடன் அழைத்துக் கொண்டு போகும்போது, சிறுவனைப் பார்த்து அஸன் ராவுத்தர், பய என்னடே செய்யுறான் என்று கேட்டபோது,

> “மொதலாளி பங்குச் சாமியார் நடத்திற
>
> பள்ளிக்கூடத்துப் போயிட்டு வாரான் என்றதும்,
>
> அட, மாடா, சாமியாருக்கு வேற வேலை இல்லை. வேலையத்த வேலையைச் செய்யறான் பாரு. சாமியாரு….
>
> எண்ணெக்கிடா லே பள்ளுப்பறை எல்லாம் என்டைக்குப் பள்ளிக்கோடம் போய் படிச்சாவ. படிப்புத்தான் ஏறுமா?
>
> நீங்க அல்லாம் ஒழைக்கப் பொறந்தவங்க,
>
> ஒம்மவன் படிச்சுக் கலைக்டர் ஆவப்போரானாக்கும்”[36]

என்று சொல்லி ஓசேப்பின் கல்விக்கு இளமைக்காலத்தியே தடை ஏற்படுத்தி விடுவது காட்டப்படுகிறது. இதோடு நில்லாது,

> “ஓம் பொண்டாட்டி மையச் செலவுக்குப் பணம் கேட்டாயில்லே. நீயும் இந்தப் பொடியனும் முறியிலே கையொப்பம் வச்சிட்டு சல்லிய வாங்கிட்டுப் போ”[37]

என்பதில் சிறுவயதிலேயே முறி எழுதி, தொழிற்சாலைப் பணிக்குச் சேர்த்துக் கொள்ளும் நிலை காட்டப்படுகிறது. சாமியார் பள்ளிக்கூடத்திற்குப் போன ஓசேப்பு, தூக்குப்போணியும், கோணியுமாக அஸன் ராவுத்தர் தோல் தொழிற்சாலைக்கு அடிமை வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப்பட்டான்.

இவ்வாறு பண்ணைகளிலும், தொழிலகங்களிலும் நிரந்தர அடிமைகளாகி விட்ட தொழிலாளர்களின் வாழ்வியல் சிக்கல்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்களில் விளக்கமாகக் காட்டப்பட்டுள்ளன. முறி எழுதி அடிமையாதலைப் பொதுவுடைமை இயக்கம் எதிர்க்கும் நிலையின் பொருட்டே, இவை புதினங்களில் நிகழ்வுகளாகக் காட்டப்பட்டுள்ளமை அறியமுடிகிறது.

**தொழிலாளர் சிக்கல்கள்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்களில் காணப்படும் தொழிலாளர் சிக்கல்களை,

- தொழிலியல் துயரங்கள்
- பொருளாதாரத் தடைகள்
- தண்டனை அளித்தல்
- வட்டிக்கு வாங்குதல்

என்ற நிலைகளில் வகைப்படுத்தி ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

**தொழிலியல் துயரங்கள்**

சாக்கடைச் சுத்தம் செய்தல், மலம் அள்ளும் தொழில் செய்தல், வெட்டியான் தொழில் செய்தல், தோல்பொருட்கள் தைக்கும் தொழில் செய்வதனைப் ‘பிறகு’, ‘தோல்’, ‘கழிசடை’, ‘கூகை’ ஆகிய புதினங்கள் எடுத்துரைக்கின்றன. கட்டடத் தொழிலாளர்கள் குறித்து ‘கல்மரம்’ புதினம் எடுத்துரைக்கிறது. சலவைத் தொழில் செய்யும் வண்ணார்கள் பற்றி ‘கோவேறு கழுதைகள்’ புதினம் எடுத்துரைக்கிறது. விவசாயக் கூலிகள் குறித்து ‘செந்நெல்’, ‘மலரும் சருகும்’, ‘கூகை’ ஆகிய புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

**மனிதக்கழிவை அகற்றும் தொழிலாளர்கள் துயர்**

மனிதக்கழிவுகளை மனிதனே அகற்றும் வேலையை இந்தியாவில் மட்டுமே மனிதர்கள் செய்கின்றனர். அதிலும் குறிப்பிட்ட சாதியைச் சார்ந்தவர்களே சாக்கடையைச் சுத்தம் செய்யும் பணியைக் காலம்காலமாகச் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளனர். மனிதக்கழிவுகளை அகற்றுவதாலும், சாக்கடைகளைச் சுத்தம் செய்வதாலும், அவர்கள் தூய்மைக் கேடற்றவர்களாகக் கருதப்பட்டு உடலாலும் உள்ளத்தாலும் ஒதுக்கி வைக்கப்படுகின்றனர்.

சாக்கடையைச் சுத்தம் செய்யும் அருவருக்கத்தக்க பணியைச் செய்வதற்குத் தொழிலாளர்கள் தயங்கிநிற்கும் நிலையைக் ‘கழிசடை’ புதினத்தில் இடம்பெறும் அனுமந்தய்யாவின் கூற்றின் மூலம்,

> “கிராமத்துல மாடு தின்றவங்... சாவு மோளங் அடிக்கறவங்ன்னு ஒதுக்கி வைக்கறாங்களே... அவுங் வேலயக் காட்டியுங் மோசமான வேலையாயில்ல இருக்குது.

மாட்டு சாணிய அள்றதுக்கே மனுசன கேவலமா நெனக்கிறாங்க. மலத்த அள்ளிப் போடறதுன்னா… ச்சே… சொரண கெட்டத்தனமா நாய் பொழப்பு…”[38]

என்று காட்டுகின்றார் அறிவழகன். மனிதக்கழிவினை மனிதனே அகற்றும் வேலை, எல்லா வேலைகளிலும் இழிந்த வேலையாகக் கருதப்படுவது இதன்வழி உணர்த்தப்படுகிறது.

### கட்டடத் தொழிலாளர்கள் துயர்

கட்டடத் தொழிலை ஆண்கள், பெண்கள் இருவரும் இணைந்து மேற்கொள்கின்றனர். ஆண்கள் மேஸ்திரிகளாகவும், பெண்கள் அவர்களுக்குத் துணையாகச் சித்தாளாகவும் வேலைகள் செய்வர். 'கல்மரம்' புதினத்தில் இடம்பெறும் சித்தாள் பெண்களின் பங்கும், அவர்களது வாழ்க்கைப் போராட்டமும் காட்டப்படுகிறது.

நகரத்தில் அமைந்திருக்கும் பிரம்மாண்டமான தொழிற்சாலைகள், வீடுகள், பள்ளிகள், கல்லூரிகள் போன்ற வானுயர்ந்த கட்டிடங்கள் அனைத்தும் கட்டிடத் தொழிலாளர்களின் கைவண்ணத்தால் உருவானவையே. ஆனால் கட்டடத் தொழிலாளர்களின் நிலையோ துயரமான நிலையில் உள்ளது என்பதனை நூலாசிரியர் க. திலகவதி, புதினத்தின் முன்னுரையில்,

“கடுமையான உழைப்பைக்கொடுத்தும், கூலிக்காகக் காத்திருக்கிற கட்டிடத் தொழிலாளர்களின் அவலநிலையை என்னவென்பது? தினசரி வாழ்வையே ஓட்டமுடியாத நிலையில், செறிவான வாழ்க்கையைக் குறித்து சிந்திக்கவே முடியாத நிலையில், தங்களுடைய அடுத்த தலைமுறையினர்கூட இந்த அவலத்திலிருந்து விலகமுடியாத நிலையிலிருக்கும் கட்டிடத் தொழிலாளர்களின் வாழ்க்கை நம் கண்முன் படும் வாழ்க்கை”[39]

என்று குறிப்பிடுகிறார். இதனால் கட்டடத் தொழிலில் ஈடுபடும் தொழிலாளர்களின் வாழ்வியல் அவல நிலை தெளிவாகிறது.

### பாராட்ட மறுக்கும் முதலாளிகள்

தொழிலாளிகள் எவ்வளவுதான் திறம்பட உழைத்தாலும் முதலாளிகள் அதனைப் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை. அது முதலாளி வர்க்கத்திற்கே உரிய இயல்பான மனநிலையாகும். 'கல்மரம்' புதினத்தில் இடம்பெறும் கட்டிட முதலாளி ஆர்.ஆர்.எம். நிலையும் இதுபோன்றது தான் என்பதனை,

“நல்லா வேலை பார்க்கறாங்க நம்ம ஆளுங்க' என்று ஆர்.ஆர்.எம்.மிடம் சந்தோஷம் பொங்கச்சொன்னார் வீராசாமி.

ஆர்.ஆர்.எம். முகத்தில் எந்தவிதமான மாற்றமும் இல்லாமல், என்னவோ, கொஞ்சம் பரவாயில்ல.. என்றான்.

தொழிலாளிகள் எவ்வளவுதான் மாடாக உழைத்தாலும் அவர்களைப் பாராட்டி ஒரு வார்த்தையும் சொல்லக்கூடாது. அது அவர்களுடைய உழைப்புத் திறனைக் குறைத்துவிடும். எப்போதும் அதிருப்தியோடு நடந்து கொண்டால் தான் அவர்கள் நன்றாக வேலை செய்வார்கள் என்பது ஆர்.ஆர்.எம்.மின் தத்துவம்"[40]

என்னும் வரிகள் காட்டுகின்றன.

### பண்ணைத் தொழிலாளர் துயர்

மாட்டுக் கொட்டகைளில் வேலை பார்க்கும் கூலித் தொழிலாளிக்கு ஊதியமாகக் கிடைப்பது பழைய சோறுதான் என்பதனைப் 'பிறகு' புதினத்தில்,

"கொட்டாரத்தில் எச்சிலைகளை அள்ளிப் போட்டு பருத்திமார் வைத்துப் பாசித் துப்புரவாக்கி விட்டுக் கிளம்ப சக்கணனுக்கு நேரமாகிவிட்டது. செய்த வேலைக்குக் கொடுத்த மிச்சச் சோற்றைத் தன் பாத்திரத்தில் வாங்கி தொழுக்காடிக்குள் பத்திரமாய் வைத்திருந்தான்"[41]

என்று காட்டுகிறார் பூமணி. வெறும் பழைய உணவை மட்டுமே கொடுத்துவிட்டு உடலுழைப்பை உறிஞ்சிக் கொழிக்கும் ஆண்டைகளின் இரக்கமற்ற செயல்பாடு இந்நிகழ்வின் மூலம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

பண்ணைகள் சாப்பிட்டு மிச்சமானதையும், பழையதையும் கொடுத்து அடிமைகளிடம் வேலை பெற்றுக் கொள்வதைப் 'பிறகு' புதினத்தில்,

"வில்லிசேரி வீட்டுத்தொழுவத்தில் நகன்று கொண்டே சாணியள்ளிப் போட்டுவிட்டு தொழு எரவானத்தில் சொருகிய ஈயப் பாத்திரத்தையும், சிறட்டையையும் எடுத்து நீட்டினால் சக்கணனுக்குக் கஞ்சியும் வதக்கின மிளகாயும் போடுவார்கள்"[42]

என்று குறிப்பிட்டுச் செல்வதன் மூலம் உழைப்புக்குப் பழையதும் மிஞ்சியதுமோ கூலியாக்கப்படும் நிலை தெளிவாகிறது.

### பிணச் சடங்கு செய்யும் தொழிலாளர் துயர்

உழைப்பாளர்களிடம் வேலையை மட்டும் பெற்றுக்கொண்டு அவர்கள் செய்த வேலைக்கு உரிய கூலியைக் கொடுக்காமல் அலைக்கழிப்பதும், கடுமையான வேலையைப் பெற்றுக்கொண்டு அற்பமான அளவு கூலி கொடுப்பதும், வெறும் உணவை மட்டும் கொடுத்துவிட்டு உழைப்பைப் பெற்றுக் கொள்வதும் உழைப்பாளர்களை வஞ்சிக்கும் செயலாகும்.

‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில் இடம்பெறும் ராமசாமியின் தாய் இறந்தபொழுது சவுரி, ஆரோக்கியம் வாய்க்கரிசி போட்ட கூடையைச் சுமக்கின்றனர். இதற்குக் கூலியாக அவரது மனைவி குள்ளம்மாள் இரண்டு கைகளையும் இயல்பாகக் கூட்டி மூன்றுமுறை நெல் அள்ளிப்போடாமல், இதற்கு மாறாகத் தன் இரண்டு கைகளையும் மிகச்சுருக்கி மூன்றுமுறை மிகமிகக் குறைவான அளவே போடுகிறாள். இதனால் சவுரி, ஆரோக்கியத்திற்கு மிகுந்த ஏமாற்றமே மிஞ்சுகிறது. உரிய அளவும், எதிர்ப்பார்த்த அளவும் தானியம் கொடுக்காமல் தங்களை ஏமாற்றுவதனை அறிந்து வருத்தம் அடைகின்றனர்.

பெரும்பணக்காரர் ஒருவர் வீட்டில் சாவு நிகழ்ந்துவிட, அங்குச் செய்ய வேண்டிய சடங்குகள் அனைத்தையும் சவுரியும் - ஆரோக்கியமும் குடும்பமாகச் செய்தாலும் அவர்களுக்குத் தரவேண்டிய கூலியைக் குறைத்தே கொடுப்பதைக் ‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில்,

> “ஆரோக்கியமும் சவுரியும் தரையில் விழுந்து வணங்கி எழுந்து நின்றனர். மொட்டையன் சவுரிக்குப் போட்டான். மடியேந்தி ஆரோக்கியமும் வாங்கினான். பகீரென்றது கேட்டே விட்டாள்
>
> என்ன சாமீ... ரெண்டு ரூவாக்கூடத் தேறாது போலிருக்கு..
>
> அது போதும் போம்மா... கடகடவென்று சிரித்தான் சடையன்.
>
> பெரியவூட்டுக் காரியமுங்க சாமி. இல்லாதவுங்கன்னா கசந்து மூந்துக்கப் போறதில்லீங்க. உங்க நெயல்ல காலம் தள்ளறவுங்க சாமீ... நாங்க...
>
> அம்புட்டுத் தூரம் ஆச்சா?
>
> கயித வாய மூடு! என்று அதட்டினான் மொட்டையன்”[43]

என்று சுட்டிச் செல்கிறார் ஆசிரியர். பிணச் சடங்கில்கூட உழைப்பின் மேன்மை மதிப்புப்பெறாத, மனிதநேயமற்ற செயல் இதன்வழியாகக் காட்டப்படுகிறது.

**இரக்க உணர்வின்றி வேலை வாங்குதல்**

பண்ணை அடிமைகளிடம் முதலாளிகள் எந்தநிலையிலும் இரக்க உணர்வினைக் காட்டுவதில்லை. அவ்வாறு அவர்களிடம் இரக்கமாக நடந்துகொண்டால் தங்களுக்கான வேலைகள் எதுவும் நடக்காது என்பது அவர்களின் நம்பிக்கை. இதனால் அவர்களுக்கு எந்தவிதமான கருணையும் காட்ட மாட்டார்கள். அவர்களிடமிருந்து உழைப்பை மட்டும் பெற்றுக் கொள்வதில் ஆர்வமாக இருப்பர். குடிப்பதற்குத் தண்ணீர் கூட தராமல் வேலை வாங்கிக் கொள்ளும் ஆண்டைகளின் செயல்பாடு ‘பிறகு’ புதினத்தில், பாத்திரத்தின் கூற்றாக,

"இவுக மனுசருக்குத் தண்ணிகூட ஊத்தாம வேல வாங்குறாக"[44]

என்று குறிப்பிடுகிறார் பூமணி. ஆண்டைகளின் பண்ணைகளில் விவசாயக் கூலிகள் குடிப்பதற்குத் தண்ணீர்கூட கொடுக்காத அவல நிலை இருப்பதனை இதன்வழியாகக் காட்டுகிறார்.

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் இடம்பெறும் அழகன், கருப்பாயி ஆகியோருடைய வரகு தானியத்தைச் சவுரி, ஆரோக்கியம் மற்றும் அவர்களது பிள்ளைகளுமாகச் சேர்ந்து களத்தில் மாறி மாறித் தூற்றுகின்றனர். அவ்வாறு தூற்றியதற்குக் கூலியாகத் தரப்பட வேண்டிய மூன்று முறம் என்பதற்குப் பதிலாக இரண்டு முறம் மட்டுமே கொடுக்கப்படுக்கின்றது. தங்களுக்குக் குறைவான கூலியே தரப்பட்டதை எடுத்துச் சொல்லியும் அவர்கள் குறைவாகவே கொடுப்பதைப் பாத்திர உரையாடலின் மூலம்,

"நாங்க ஒங்களண்டி ஊழியம் செஞ்சி பொயப்ப நடத்துறவங்க சாமி

பொட்டச் சிறுக்கி நீ பேசாத!

உங்களாட்டம் நாலு பெரியவுங்க கிட்டச் சொல்லுங்களன்

ஏ. வண்ணாரக் கயித, நாயம் பொளக்க வந்துட்டயா, வடவாண்டி நாய.

இடுப்பு நாந்து சப்ப வலிக்கிற மாரி ஒயச்சதுக்கு நீங்க ரண்டுபடி மனம் குளுந்து குடுங்க சாமி. இத வச்சி மெத்த மாளியா கட்டப்போறன்?

நீ காக்காணி வச்சிருந்தாத் தெரியும், வலிவருத்தம் எல்லாம்"[45]

என்று எடுத்துரைக்கிறார். ஆண்டைகள் வேலையை மட்டும் பெற்றுக்கொண்டு கூலி தர மறுத்துவிடும் நிலையினை இதில் சுட்டிக் காட்டுகின்றார் ஆசிரியர்.

**கூலிக்காக உயிரைப் பறித்தல்**

விவசாயக் கூலிகள் தம் வேலைக்கு ஏற்றவிதத்தில் கூலியைச் சற்று உயர்த்திக் கேட்டமைக்காக அவர்களின் உயிர்களையே பலிவாங்கிக் கொண்ட ஆண்டைகளின் செயல்பாட்டினைச் 'செந்நெல்' புதினம் பதிவு செய்துள்ளது.

மிராசுகளின் வயற்காடுகளில் காலநேரம் பாராமல் உடலுழைப்பில் ஈடுபடும் தாழ்த்தப்பட்ட மக்கள் தங்கள் உழைப்பிற்கேற்ற ஊதியம் தரவேண்டும் என்று கேட்டதற்காக வெண்மணிக் கிராமத்தைச் சார்ந்த முத்துசாமி, கணபதி என்ற இரண்டு தாழ்த்தப்பட்ட தொழிலாளர்களை அதே கிராமத்தைச் சார்ந்த மிராசுதார் சவுரிராஜன் வீட்டில் கட்டிவைத்து அடித்துள்ளனர். இதனை அறிந்த மற்ற தாழ்த்தப்பட்டவர்கள் அடிபட்ட தொழிலாளர்களின் கட்டை அவிழ்த்து மீட்டுச் சென்றனர். நெல் உற்பத்தியாளர் சங்கத்தின் தலைவர் இரிஞ்சூர்

கோபால கிருஷ்ணநாயுடு தலைமையில் சில மிராசுதாரர்கள் வெண்மணி கிராமத்திற்குத் துப்பாக்கி ஏந்திய அடியாட்களுடன் சென்று சண்டையிட்டுள்ளனர். இரு தரப்புக் கைகலப்பில் கோபாலகிருஷ்ண நாயுடுவின் அடியாள் பக்கிரிசாமிப் பிள்ளை என்பவர் இறந்து போனார்.

இந்த மோதலில் தாழ்த்தப்பட்ட தொழிலாளர்களுக்குக் காயம் ஏற்பட்டது. துப்பாக்கித் தாக்குதலுக்குத் தாக்குப்பிடிக்க முடியாமல் ஆண்களெல்லாம் ஓடிவிட, சேரியில் தங்கியிருந்த பெண்கள், வயோதிகர்கள், குழந்தைகள் எல்லாம் எங்களைக் காப்பாற்றுங்கள் என்று மிராசுதாரர்களின் கால்களில் விழுந்து கெஞ்சிக் கதறியிருக்கின்றனர்.

இப்பெண்களைத் தெருக்கோடியிலுள்ள ஆறுக்கு ஆறு அடியளவுள்ள சிறு குடிசைக்குள் தள்ளி, குடிசையை மூடித்தாழ்ப்பாளிட்டு, அதற்குத் தீ மூட்டியுள்ளனர். வெளியில் கதறி ஓடிய மூன்று சிறுகுழந்தைகளை நெருப்பில் தூக்கிப் போட்டுள்ளனர். ஒரே நேரத்தில் தொடர்ச்சியாக இச்சம்பவங்கள் நடந்துள்ளன.

இக்கொடுரச் செயல் கீழ்வேளூர் காவல்நிலையத்திற்கு இரவு 8 மணிக்குத் தெரிந்திருந்தும் காவல்துறை இரவு 12 மணிக்குத்தான் சென்றுள்ளது. இரவு இரண்டு மணிக்குத் தீயணைப்புப்படை வந்துள்ளது. மறுநாள் பத்து மணிக்குத்தான் குடிசைக்குள் பிரேதங்கள் கிடப்பது தெரிந்துள்ளது. அப்போதுதான் நாற்பத்து நான்கு எரிந்த சடலங்களை எடுத்துள்ளனர். இந்த நாற்பத்து நான்கு பேர்களும் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

வெண்மணி நிகழ்வின் கொடூரத்தை அறிவழகன் ‘செந்நெல்’ நாவலில்,

> “அய்யோ! ஆண்டே! அய்யோ ஆண்டே! கதவத் தொறந்து விட்டுக் காப்பாத்துங்களேன். அய்யோ அய்யோ’ன்னு அவலக் குரல்கள் வெண்மணியையே அதிர வைத்தது.
>
> …அந்த வீட்டுக்குள்ள அடைஞ்சிக்கிடந்த சனங்க தீக்குண்டத்தில நின்னு கதர்றாங்க; அலர்றாங்க; அவங்க உடம்பு பத்தி எரியுது. அதுல ஒரு பொம்பள, தான் செத்தாலும் பரவாயில்ல, தன்னோட கைக்குழந்தை பிழைச்சாப் போதும்னு வெளியில தூக்கி எறியிறா. வெளியே வந்த விழுற கைக்குழந்தைய அப்படியே அந்தரத்துல தூக்கி திரும்ப எரியிற வீட்டுக்குள்ள போடும்போது இதோ கம்யூனிஸ்ட் கட்சின்னு சொல்லிக்க ஒரு உசுரு இருக்கக் கூடாது. நான் விட மாட்டேன்’னு உரக்கக் கத்தி சிரிக்கிறான்”[46]

என்று படம்பிடித்துக் காட்டுகிறார். சமூக வரலாற்றில் கரையாகப் படிந்த அந்த நாளின் கொடூர நிகழ்வை, “தெருவின் தெற்குக் கோடியில் உள்ளது இராமையனின் சின்னக்குடிசை வீடு. அந்த வீட்டுக்குள் தான் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என நாற்பத்து நான்குபேர் உயிர் தப்பிவிடலாம் என்று கருதி, ஓடி ஒளிந்து கொண்டனர். இதை அறிந்த மனித மிருகங்கள் அந்த வீட்டுக்குத் தீ வைத்தனர். வீடு முழுவதும் நன்கு எரிய வேண்டும்

என்பதற்காக எரிகின்ற வீட்டின்மேல் எரிபொருளை ஊற்றியுள்ளனர். தீயில் மாட்டிக் கொண்ட பெண்கள், குழந்தைகள் கதறினர். தான் போனாலும் தன் பிள்ளைகள் மட்டுமாவது பிழைக்கட்டும் என்று ஒரு தாய் எரியும் நெருப்பையும் தாண்டி தன் குழந்தையை வெளியில் தூக்கி எரிந்தாள். ஆனால், வெளியில் நின்று கொண்டிருந்த அந்த மிருகங்கள் அந்தக் குழந்தையைத் துண்டு துண்டாக வெட்டி மறுபடியும் தீயில் தூக்கி எரிந்தனர். இன்னொரு தாய் தான் போனாலும் தன் பிள்ளை பிழைக்காதா என்று கருதிப் பிள்ளையை மார்போடு அணைத்துக் கொண்டுள்ளாள். ஆயினும் தாயும் பிள்ளையும் கட்டிப் பிடித்த படியே வெந்து மாண்டார்கள். தாயின் பிடியில் தனயன் கட்டிப் பிடித்தபடியே வெந்துகிடந்த காட்சி பார்த்தவர்களின் இதயத்தைக் கல்லாக்கிவிட்டது”[47] என்று எடுத்துரைக்கின்றார் சே.த. சுமதி. இதனால், மக்களிடைய நிலவிய அதீதச் சாதிப் பற்று, மக்களை எவ்வாறு இரக்கமற்ற, அரக்கக் குணம் கொண்டவர்களாக மாற்றியுள்ளது என்பதனை அறியமுடிகிறது.

**தொழிலாளர்களின் தொழில் நிலையற்ற தன்மை**

கட்டடத் தொழிலாளர்கள் அன்றாடம் கூலித்தொழில் செய்து பிழைப்பவர்கள். நாள்தோறும் வேலைகள் நடந்தால்தான் அவர்களுக்கு நிரந்தரமான கூலி கிடைக்கும். வருடத்தின் எல்லா நாட்களிலும் வேலை கிடைக்கும் என்பதற்கு உத்திரவாதம் இல்லை. மழை, புயல், வறட்சி மற்றும் பருவ காலங்களிலும் கூலி கிடைப்பது அரிது. இத்தகைய நிலையினை,

> “...கட்டிட வேலைக்கு வர்றவங்க எல்லோருமே ஏழைப்பட்டவங்க. அன்னன்னிக்கு உழைச்சு அன்னிக்கு செலவுக்கு வழி பண்ணிட்டு மானமா பொழைச்சாப் போதுன்னு நெனக்கிறவங்க. அன்னாடம் சம்பாதிச்சு அன்னாடம் வயித்த ரொப்பிக்கிறவங்க.
>
> திடீர்னு ஏதுனா ஆயிட்டா என்னா பண்ணுவாங்க”[48]

என்று எடுத்துரைக்கிறார் திலகவதி. இவை கட்டடத் தொழிலாளர்களின் வறுமை நிலையையும் தொழிலின் நிலையற்ற தன்மையையும் காட்டுகின்றன.

பெருமளவிலான தொழிலாளர்கள் சட்டபூர்வமான பாதுகாப்பின்றியும், அடிப்படை வாழ்க்கைக்குக்கூட உத்தரவாதம் இல்லாத மிகக்குறைந்த ஊதியங்களைப் பெற்றும் அமைப்பு சாராத் தொழில்களில் பணியாற்றுகின்றனர். தேர்ச்சியும், திறனும் அற்ற தொழிலாளர்கள் மிகுந்த எண்ணிக்கையில் உள்ளதால், வேலைசெய்யும் நிலைமைகள் மோசமடையும் சூழல் ஏற்பட்டுள்ளது. தொழிலாளர்களுக்கு சமூகப் பாதுகாப்பு வழங்குதலே தொழிலாளர் நலக் கொள்கையின் சிறப்புக் கூறாகும்.

**தொழிலாளர்களை ஏளனப்படுத்துதல்**

ஒருவர் செய்யும் தொழிலை மையமாக வைத்து அதன் அடிப்படையில் ஏளனப்படுத்திக் காட்டுவது முறையற்ற செயலாகும். மக்கள் சுகாதாரமாக நோய்நொடியின்றி வாழ்வதற்காகத் தங்களை அசுத்தமாக்கிக் கொண்டு வாழ்பவர்கள் துப்புரவுத் தொழிலாளர்கள் ஆவர். அவர்கள் செய்யும் தொழிலை வைத்து, அவர்களை வசைபாடுவதும், எள்ளிநகையாடுவதும், நம்முடைய அதிகாரத்தையும் செல்வாக்கையும் அவர்களிடம் காட்டுவதும் முறையற்ற செயலாகும் என்பதனைக் 'கழிசடை', 'கோவேறு கழுதைகள்' ஆகிய புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

துப்புரவுத் தொழிலாளர்களை அவர்கள் செய்யும் தொழிலை முதன்மையாக வைத்து வசைபாடும் நிலைப்பாட்டினைக் 'கழிசடை' புதினத்தில்,

"ஒங்களுக்கெல்லாம் அவ்வளவு வாயி கொழுத்துப் போச்சா…

குப்பை வார்ற பசங்களுக்கு எம்மாந் திமிரு பாத்தியா?

காலங் கெட்டுப் போச்சு. அதாங்…

இப்பிடியெல்லாம் பேசுறானுவ.."[49]

என்று காட்டப்படுகிறது. குப்பைகளை அள்ளும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் சுப்பய்யா, குப்பைகளை அள்ளிக் குவித்து வைத்திருக்கும் இடத்தைக் காலால் தட்டிவிடும் ராசுக்கண்ணுவின் செயல்பாட்டைக் கண்டிக்க, அவனோ அதற்கு,

"ஏய்.. யாருகிட்ட பேசறன்னு தெரியுதா?

னொம்மாள.. வுட்டன்னா மொகர கிகர யெல்லாங் பேத்துக்குங்.

மரியாதயா ஒங்க வேலய பார்த்துகினு போங்க"[50]

என்று கையை ஓங்கிக் காட்டுவதோடு, மரியாதை இல்லாமல் நடத்துவதைக் காட்டுகின்றார் ஆசிரியர். இதில் தொழிலாளர்களை எள்ளி நகையாடுவது புலனாகிறது.

தொழிலாளர்களை உரியவாறு மதித்து நடக்கவே மார்க்சியம் கற்றுத் தருகிறது. மக்களில் எவ்வாறு பாகுபாடுகள் இருப்பதில்லையோ, அதேபோல் தொழிலாளர்களிலும் பேதங்கள் பார்ப்பதனைப் பொதுவுடைமை இயக்கம் ஏற்றுக் கொள்வதில்லை.

**தொழிற்களத்தில் பாதுகாப்பின்மை**

சில வகைத் தொழில்களில் ஈடுபடும் தொழிலாளர்கள் மிக அபாயகராமன தொழில்களைச் செய்யும் நிலையில் உள்ளனர். அவர்கள் பணியாற்றும் தொழிலுக்கேற்ற வகையிலான பாதுகாப்பு வசதிகள், பாதுகாப்புக் கருவிகள், மருத்துவ வசதிகள்

அவர்களுக்குச் செய்து தரப்படுவதில்லை. இதனால் பலவகைகளிலும் பாதிப்படைகிறார்கள். 'கல்மரம்' புதினத்தில் இடம் பெறும்,

> "ஆண்கள், இளம்பெண்கள், சிறுவர்கள், கிழவிகள், எத்தனை விதமான தொழிலாளர்கள், ஒடிசலான, சாம்பல் பாரித்த இடுங்கிய கண்களுடனான பார்வைக்கு வேதனையைத் தரும் மனிதர்கள். வாழ்விலும் தொழிலிலும் எந்தவிதமான பாதுகாப்பும் அற்ற மனிதர்கள்"[51]

என்னும் கூற்றில் தொழிலாளர்களின் பாதுகாப்பற்ற நிலை எடுத்துரைக்கப்படுகிறது.

தொழிலாளர்களின் பாதுகாப்பான நிலையால் உயிர் பறிபோகும் நிலை 'கல்மரம்' புதினத்தில்,

> "ஜல்லி போடறேன்று சாரத்து மேல ஏறி மூணாவது மாடியிலேருந்து ஒங்கப்பன் கீழே வுளுந்து உசுர விட்டுச்சே அப்போ உனக்கு நாலு வயசு"[52]

என்று காட்டப்படுகிறது. இச்செயல்பாட்டில் கட்டடத் தொழிலில் நிலவும் பாதுகாப்பற்ற தன்மை காட்டப்படுகிறது. இதேபோன்று கட்டட வேலை நடந்து கொண்டிருக்கும்போது மரகதம் என்ற பெண்ணைத் தேள் கடித்துவிடுகிறது. அவளுக்குச் சிகிச்சை செய்வதற்கு உரிய மருந்துகள் தொழிற்களத்தில் இல்லாததால் அவள் நிலை மோசமடைவது இப்புதினத்தில் காட்டப்படுகிறது.

இதே புதினத்தில் இடம்பெறும் கம்சலை என்னும் பெண்தொழிலாளியின் கால்மீது கொத்துக்கரண்டி விழுந்துவிட அதனால் அவளது கால்விரல்கள் இரண்டும் துண்டாகிவிடுகிறது. தொழிற்களத்தில் உடனடியாகச் சிகிச்சை செய்துகொள்வதற்குரிய முதலுதவிப் பொருள்கள் எதுவும் அங்கு இல்லை. அதோடு அவளை மருத்துவமனைக்குக் கொண்டு செல்வதற்கு யாரிடமும் கையில் பணமும் இல்லாத நிலையில் சக தொழிலாளிகள் அவதிப்படுகின்றனர்; அவளது நிலை மிகவும் பரிதாபமாகக் காட்டப்படுகிறது.

அழுக்குத் துணி மூட்டைக்கு அடியில் கருந்தேள் ஒன்று இருந்ததையும் அது ஆரோக்கியத்தைக் கொட்டி விடுவதனையும் 'கோவேறு கழுதைகள்' புதினத்தில்,

> "தொரப்பாட்டுக்குப் போக எண்ணித் துணி மூட்டைகளைத் தூக்கியபோது அதிலிருந்த தேள் கொட்டிவிட்டது. ஆரோக்கியம் துடியாய்த் துடித்தாள். பித்த உடம்பு. அதனால்தான் இவ்வளவு வலி இருக்கிறது என்று எண்ணினாள்"[53]

என்று காட்டுகிறார் இமையம். தொழிலாளர்கள் இவ்வாறான நிகழ்வுகளைப் பெரிதாக எடுத்துக்கொள்ள இயலாத நிலையில் இருப்பதனையும் இச்செயல்பாட்டின் வழியாகக் காட்டுவதனைக் காணலாம். இந்நிகழ்வுகள் யாவும் தொழில்களில் ஏற்படும் அபாயங்களைக் காட்டுவதாக அமைந்துள்ளன.

தோல் தொழிலகங்களில் பயன்படுத்தப்படும் இரசாயனங்களால் உடல் நலப் பாதிப்புக்கு உள்ளாகும் தொழிலாளர்களின் நிலை குறித்துத் 'தோல்' புதினம் மிக விரிவாக எடுத்துரைத்துள்ளது. நாள்தோறும் சுண்ணாம்புக்குழியில் இறங்கி வேலை செய்ததால் தன் உடல் வலிமையையும் பொலிவையும் இழந்த வெங்கடேசன் பற்றியும், இடுப்பு வரை சுண்ணாம்பு நீரில் நின்று தோல்களை அலசுவதால் ஈழல் நோய்க்கு ஆளான ஏசுவடியாள் பற்றியும், கையும் காலும் அழுகித் தொழுநோய்க்கு ஆட்பட்டு முடங்கிக் கிடக்கும் ஆண்டிச்சாம்பான் பற்றியும், ஈழல் நோய்க்கு ஆளான அவன் மனைவி அல்லி ஆகியோரின் பரிதாப நிலை குறித்தும் இப்புதினம் பதிவு செய்துள்ளது.

> "தோல் ஷாப்பின் சுண்ணாம்புக் குழி வேலை அவனது திடகாத்திரமான உடற்கட்டில் பாதியை மென்று விழுங்கி விட்டிருந்தது. நாள் முழுவதும் சுண்ணாம்புக்கலவை கலந்த நீரில் நாற்றம் பிடித்த நிணவாடை வீசும் மாட்டுத் தோலையும், ஆட்டுத்தோலையும் போட்டு அலசுவதாலும், மிதித்துச் சவட்டுவதாலும், பாதங்களும் கரங்களின் உட்பகுதியும் வெந்து ரணமாகிக் காய்த்துப் போய்விட்டன. பாதங்களில் விப்பும் விரிவும் ஏற்பட்டு நடப்பதற்கே சிரமம். அதிலும், புதிதாகச் சுண்ணாம்புக் கலவையைக் குழியில் கலக்கிக் கொண்டு தோல்களை அலசும்போது அவனை அறியாமலே மூச்சுத் திணறும். உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டி ஆயாசம் ஏற்படும். சுண்ணாம்பு ரசாயனத்தின் வேகத்தில் ரோம கால்கள் அத்தனையும் கருகிப் போய்ப் பார்ப்பதற்கு அவலட்சணமாகப்படும்."[54]

பணியிடங்களில் காயப்படும்போது பாதுகாப்பும், உரிய காப்பீடும் இல்லாத காரணத்தால் முறையான சிகிச்சை செய்ய அவர்களால் முடிவது இல்லை. வருகின்ற வருமானம் உணவுத்தேவைக்கே சரியாக இருக்கும்போது மருத்துவம் செய்துகொள்ளவோ, காயத்துக்கு மருந்து போட்டுக்கொள்ளவோ வசதி இல்லாத நிலையில் தொழிலாளர்கள் உள்ளனர். இந்நிலை தொடர்வதால் தொழிலாளர்கள் சில நேரங்களில் மரணத்துக்கோ அல்லது நிரந்த உடல் ஊனத்திற்கோ தள்ளப்படுகின்றனர்.

'கூகை' புதினத்தில் கல்குவாரிகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் அங்கு வைக்கப்படும் வெடிமருந்துகளில் சிக்கிப் பலியான நிகழ்வினை,

> "ஓரத்தில் குழிக்குள் மருந்து கிட்டித்துக் கொண்டிருந்தவன் குழியில் புகை வரவும் அலறிக் கொண்டே கம்பியைத் தூர வீசிவிட்டு ஓடினான். கூப்பாடும் கூச்சலும் கேட்க ஜனங்கள் முண்டியடித்துக் கொண்டு மேலேறும் போதே 'டமார்' என்ற பயங்கரச் சத்தத்துடன் பாறை வெடித்துச் சிதறியது. புகை மூட்டம் குறைந்து வெளிச்சம் வந்த போது இரண்டு பெண்களும் ஒரு ஆணும் பாறையோடு பாறையாய் வெடித்துச் சிதறிக் கிடந்தார்கள்"[55]

என்று காட்டுகிறார். கல் உடைக்கும் பணியில் ஈடுபடும் தொழிலாளர்களின் பணிப்பாதுகாப்பற்ற தன்மை இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

தொழிற்களங்களில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு உரிய பணிப் பாதுகாப்பு வழங்கப்பட வேண்டும் என்றும், உரிய முதலுதவி மருத்துவ வசதிகள் செய்து தரப்பட வேண்டும் என்றும், தொழிலாளியின் உடல் நிலையைக் கருத்தில் கொண்டு உரிய இழப்பீடு வழங்க வேண்டும் என்றும் பொதுவுடைமை இயக்கம் பல்லாண்டுகளாக வலியுறுத்தி வந்துள்ளது. இதன் தேவையை வலியுறுத்தும் விதமாகப் புதினங்களில் இந்நிகழ்வுகள் காட்டப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**தீராத நோய்க்கு ஆளாதல்**

பாதுகாப்பற்ற முறையில், முறையான உபகரணங்களின்றிப் பணியாற்றும் தொழிலாளர்கள் பணியிடத்திலேயும், பணிக்குப் பின்னரும் தீராத நோய்க்கு ஆட்பட்டு இறக்கும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். துப்புரவுத் தொழிலாளர்கள் சாக்கடைகளைச் சுத்தம் செய்யும்போது இறக்கும் நிலை தொடர்நிகழ்வாக இருந்து வருகிறது. துப்புரவுத் தொழிலாளர்கள் வேலை பார்க்கும் இடங்களில் ஏற்படும் தொற்று நோய்கள் ஏராளம். இதனால் அவர்கள் தாங்களாகவே நோய்க்குப் பலியாகும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் என்பதனைக் 'கழிசடை' புதினத்தில்,

> "பொதுக் கழிப்பிடத்தில் ஒண்ணுக்குப்போனா கூட பால் நோயி வர்றத்துக்கு வாய்ப்பிருக்குதுன்னு பக்கம் பக்கமா பத்திரிக்கையிலெல்லாம் எழுதுறாங்க... பால் நோயிதான்னு இல்ல... படை, காச நோய்... இன்னங் என்னென்னவோ… புதுசா எயிட்ஸாங்.. சுத்தங் இல்லாத இடத்துனால இம்மாங்; வருதுன்னா அதலயே ஒடம்ப முக்கி வேலை செய்யறவங்களுக்கு சாவு தாங் வரும்..."[56]

என்று அனுமந்தய்யா புலம்புவதாகக் காட்டுகிறார் அறிவழகன். இந்தியப் பொதுக் கழிப்பிடங்களின் நிலையையும், அதைச் சுத்தம் செய்கின்ற துப்புரவுப் பணியாளர்களின் நிலையையும் இதன்வழியாகப் பதிவு செய்கின்றார். இதற்கான காரணங்களை அறிந்து அவற்றிற்கேற்ற பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போதே உயிரிழப்புக்களைத் தவிர்க்க இயலும் என்பதே பொதுவுடைமை கற்றுத் தந்த தொழிலாளர் துயர்நீக்க நடவடிக்கையாகும்.

தோல் தொழிற்சாலைகள், சாயம் போடும் தொழிற்சாலைகளில் நச்சுத்தன்மை மிகுந்த இரசாயனங்கள் பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றன. இதனால் இவற்றைப் பயன்படுத்துவோர் சுவாசக் கோளாறுகளால் பாதிப்படையும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். இதனால் தொழிற்பாதுகாப்பற்ற தன்மையே நிலவுகிறது. தோல் பதப்படுத்தப் பயன்படும் சுண்ணாம்புக்

குழியில் இறங்கி வேலை பார்ப்பவர்களில் மச்சக்காளை என்கிற மம்முதன் என்ற கதாபாத்திரத்தின் மூலம் அத்தொழிலில் உள்ள இடர்ப்பாடுகளை,

> ‘நுகத்தடியில் பூட்டப்பட்ட காளையாக நாள் எல்லாம் கோவணத்தோடு செக்கு மாடாகப் பிணையல் வரவேண்டும். நீர்த்தப்படும் சுண்ணாம்பிலிருந்து கிளம்பும் புகை சுவாசிக்க முடியாமல் மூச்சு முட்டும். சுண்ணாம்பில் இருந்து கிளம்பும் வெக்கையால் உடம்பெல்லாம் வெந்தது போன்ற உணர்வோடு உடம்பே வியர்த்துக் கொட்டும். தப்பித்தவறி கால் இடறிக் குழியில் விழுந்தால் நீர்த்துப் போக வேண்டியதுதான். அவ்வளவு அபாயகரமான பணி நீத்துக் குழியில் வேலை செய்யும் தொழிலாளிக்கு சாதாரணமாக ஆயுசு கம்மி. வெக்கை நோயாலோ ஈழல் நோயாலோ மரணம் ஏற்படுவது சாதாரணம்”[57]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார் ஆசிரியர். தோல் தொழிற்சாலைகளில் பணியாற்றும் ஆண் தொழிலாளர்கள் படும் உடல் உபாதைகளைப் போன்றே பெண்களும் இக்கொடுமைகளை அனுபவித்து வருகிறார்கள் என்பதை,

> “முடி தள்ளும் வேலையில் தள்ளப்பட்டபோது வேலை அவ்வளவு கடினமானதாக இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. உப்புத் தேய்த்து பதப்படுத்தி வரும் மாட்டுத் தோலிலும், ஆட்டுத் தோலிலும் நாட்பட்ட புண்ணில் இருந்து வடியும் சீழ்வாடை கலந்த ஊனின் வாடை தாங்க மாட்டாமல் ஓங்கரிக்க வரும்”[58]

என்று ஏசுவடியாள் பாத்திரம் மூலம் புலப்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.

சாக்கடைகளை அடைப்பு எடுக்கும் வேலைகளையும், துப்புரவு செய்யும் வேலைகளையும் செய்யும் தொழிலாளர்கள் தீர்க்கஇயலாத தோல் நோய்க்கு உள்ளாகும் நிலையைக் ‘கழிசடை’ புதினத்தில்,

> “ஒருவாட்டி சாக்கடையில இறங்கி அடைப்பு எடுத்துட்டு வெளியே வந்ததுங் ஒடம்பெல்லாங் நமைச்சலா இருக்குன்னு ரொம்பவுங் துடியா துடிச்சுட்டான். சொரிய சொரிய உடம்பெல்லாம் தண்டிப்பு தண்டிப்பா வீங்கிப்போச்சு. பின்னால திட்டுத் திட்டா தேமலு மாதிரி வர ஆரம்பிச்சுட்டுது. நாளாவ நாளாவ சொரி புடுச்சு போயி.. சொரிஞ்சா செதில் செதிலா பேத்திக்கினு வுழுங். அரிப்பு தாங்காம அதிகமாகவே சொரிஞ்சுட்டா அந்த இடமெல்லாங் புண்ணாகிப் போயி தண்ணித் தண்ணியா வடியும். டாக்டர் மருந்துக்கெல்லாங் இது மசியல. கிட்டப் போனாலே டாக்டர் தொட்டெல்லாம் பாக்க மாட்டாரு. மேலோட்டமா ஒரு பார்வை. அவ்வளவுதாங். கைய்யி தானா மருந்த எழுத ஆரம்பிச்சுடும்….”[59]

என்று காட்டுகிறார் அறிவழகன். சாக்கடைக் கழிவுகள் இராசயன மாற்றம் பெற்று மனித உடலுக்கும் உயிருக்கும் துன்பம் செய்யும் நிகழ்வும், அதில் பணியாற்றும் தொழிலாளி படும் நோய்த்துயரும் இதன்வழி புலப்படுத்தப்படுவதனைக் காணவியலுகிறது.

இராசயனக் கலவைகளைக் கொண்டு பல தொழிற்சாலைகள் இயங்கி வருகின்றன. இவற்றில் முறையான பாதுகாப்போ. தடுப்பு முறைகளோ இருப்பதில்லை. குறைவான இடங்களில் பெருமளவிலான பணியாளர்கள் வேலை செய்யும் நிலை உள்ளது. இரசாயனங்களால் தங்களுக்கு எந்த விதமான நோய்த்தொற்று ஏற்படும் என்பது தொழிலாளர்களுக்குத் தெரிவது இல்லை. இதனை முதலாளிகள் வேலைக்குச் சேர்வதற்கு முன்னதாகச் சொல்வதும் இல்லை. நோய்வாய்ப்பட்ட தொழிலாளர்களுக்கு உரிய சிகிச்சை வசதிகள் செய்துதருவது இல்லை. இதனால் அப்பாவித் தொழிலாளர்கள் தங்கள் உடலில் ஏராளமான நோய்களை உருவாக்கிக் கொண்டு, அதற்கான காரணம் அறியாமலேயே இறக்கும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர்.

'தோல்' புதினத்தில் இடம்பெறும் அருக்காணியின் தந்தை ஆண்டிச்சாம்பன் தோல் தொழிற்சாலை நனைவுக் குழியிலே நின்றதால் கையும் காலும் அழுவிப் போவதனையும், அவன் மனைவி அல்லிராணி முடிக்கழிவுலே காலமெல்லாம் நின்றுகொண்டு வேலை பார்த்ததால் மூச்சுத் திணறி இப்போது ஈழல் நோயாளி ஆகிப் போனதால் குடும்பம் வறுமைக்குத் தள்ளப்பட்டதையும்,

> "இந்தப் பாழாப் போன தோல் ஷாப்புலே நனைவுக் குழியில நிண்டு நிண்டு, கையும் காலும் அழுவி குட்டம் கண்டதாட்டம் உடம்பு உப்பி ஊட்டுல மொடங்கிக் கெடக்குதே எங்கப்பன் ஆண்டிச்சாம்பான். முடிவுக்கழிவுலே காலமெல்லாம் நிண்டு மூச்சுத் தெணறி, இப்போ ஈழல் நோயாளி ஆயிப் போச்சுதே எங்க ஆயி அல்லி...."[60]

என்று படைத்துக் காட்டுகிறாா் டி. செல்வராஜ். தோல் பதனிடும் தொழில் ஏற்படுத்தும் நோய்களை இப்புதினம் யதார்த்தமாகக் காட்டுகிறது.

**குடிப்பழக்கத்திற்கு அடிமையாதல்**

தொழிலாளர்களிடம் குடிப்பழக்கம் பெருமளவில் காணப்படுவதற்குக் காரணம் அவர்களது தொழிலின் கடின நிலையே. நாளெல்லாம் கடினமாக உழைக்கும் தொழிலாளர்கள் தங்கள் உடல்அசதியைப் போக்கிக் கொள்வதற்கு மாற்றுவழிகள் ஏதும் அறியாநிலையில் மதுபானத்தையே நாடுகின்றனர். இதனால் தீராத நோய்களுக்கு ஆளாகித் தம் உடலையும் தம் குடும்பத்தையும் காக்கத் தவறிவிடுகின்றனர். இவ்வாறான செயல்பாடுகளைப் புதினங்கள் காட்சிப்படுத்துகின்றன.

'தோல்' புதினத்தில், இடம்பெறும் ஆசீர்வாதம் தொழிலின் கடுமையால் குடிப்பழக்கத்திற்குத் தன்னை அடிமையாக்கிக் கொள்வதையும், அதனால் அவனது மனநிலை மாற்றம் பெற்றுச் சீரழிவுக்குள்ளாவதையும்,

> "ஒழுக்க சீலனும் பொறுமை காப்பவனும் திடகாத்திரமான மனிதனாகவும் இருந்த ஆசீர்வாதம் நரகக் குழியாகிப் போன இந்த தோல் ஷாப்பு வேலைக்கு வந்த பிறகு கோபாவேசம் கொண்டவனாகவும், குடிகாரனாகவும் ஆகிப் போனான். கிடைக்கும் கூலியைக் கள்ளுக்கடைகளிலும், பட்டை சாராயத்துக்கோ செலவழித்துவிட்டு, தோல் ஷாப்பு ஏஜெண்டுகளையும் மேஸ்திரிகளையும் அடித்துப் போட்டுவிட்டு வருவான்"[61]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ்.

சாக்கடைக் கழிவுகளை அகற்றும் வேலைகளை மேற்கொள்ளும்போது அங்கு அடிக்கும் துர்நாற்றமும், அசுத்தமும், செத்து மிதக்கும் பிணங்களின் கடுமையான வாடையும், மனிதக்கழிவுகளின் நாற்றமும் காண்பதற்கும், சுவாசிப்பதற்கும் மிகவும் அருவருப்பாக இருக்கும். இதனைப் போக்கிக் கொள்வதற்காக அவர்கள் சாராயம் குடித்தபின்பே இந்த வேலைகளில் ஈடுபடுகின்றனர். அவ்வாறு குடித்துவிட்டு வந்தால் மட்டுமே இத்தொழிலில் ஈடுபட முடியும் என்ற நிலை இத்தொழிலில் நிலவுவதனை அனுமந்தய்யா பாத்திரத்தின் வாயிலாக,

> "இதமாதிரி வேலைக்கெல்லாங் புதுசா வர ஒங்களால ஆவாதுதாங். சின்ன குழைந்தயிலர்ருந்தே பாம்பாட்டிப் பசங்க பாம்பு கிட்டப் பழவறாப்பல… குழைந்தயிலர்ந்தே பழவணுங்…
>
> ஒனக்கு இது சரிப்பட்டு வரணுன்னா…
>
> சாராயங் குடிச்சிட்டு வேலை செய்யி…
>
> அருவருப்பு மாத்தரமில்ல… நாத்தமும் தெரியாது.
>
> …இந்த வேலயத்தாங் செய்தாவனுன்னு இந்த சாதிக்கே உள்ள சாபக்கேடு"[62]

என்று குறிப்பிடுகிறார் அறிவழகன். சாக்கடை அகற்றும் பணிகளில் ஈடுபடும் தொழிலாளர்களின் படித்த குழந்தைகளும் இத்தொழிலையே செய்யுமாறு அறிவுறுத்தப்படும் நிலையும் நாட்டில் நிலவுவதனை இப்புதினத்தின் வழியாகக் காட்டுகிறார் ஆசிரியர்.

துப்புரவுத் தொழிலாளர்கள் வாழ்நாள் முழுவதும் நரகலோடு வாழ்க்கை நடத்துவதற்குப் போதையின் துணை தேவைப்படுகிறது. துப்புரவுத் தொழிலாளி அனுமந்தய்யா எப்படி போதைக்கு அடிமையானார் என்பது 'கழிசடை' புதினத்தில்,

> "…எனக்கு மட்டுங் குடிக்கணுன்னா ஆச?

இந்த சனியன விட்டுப் புடலான்னுதாங்...

எம்மாங் வைராக்கியமா இருந்தா கூடங்...

அந்த நெனப்பு வந்துட்டா பைத்தியம் புடிச்சாப்பல ஆயிடுது"[63]

என்று புலம்புவதாகக் காட்டுகிறார் ஆசிரியர். தொடர்ச்சியாகக் குடிப்பழக்கத்தால் அவர்கள் வாழ்க்கை அவலத்தில் இருப்பதனைக் கதை நிகழ்வுகளின் மூலம் காட்டுகிறார் அறிவழகன்.

**மறுக்கப்படும் மருத்துவ வசதி**

வசதி வாய்ப்புகள் ஏதுமற்ற ஏழைத் தொழிலாளர்கள் நோய்கள் வருமுன்னர்க் காத்துக் கொள்ள வழி ஏதும் அறியாத நிலையில் உள்ளனர். தங்கள் உடம்பிற்கு ஏற்படும் நோய்களைப் போக்கிக் கொள்வதற்குரிய ஒரே இடம் அரசு மருத்துவமனைதான். ஏழைகளின் மருத்துவச் சிகிச்சைக்காகக் கட்டப்பட்டுள்ள மருத்துவமனைகளில் ஏழைகள், துப்புரவுத் தொழிலாளர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், ஏழைமக்களுக்குச் சரியான சிகிச்சை வசதிகள் செய்து தரப்படுவதில்லை. அங்கும் பாகுபாடு பார்க்கப்படுகிறது என்பது புதினங்களில் காட்டப்பட்டுள்ளது.

'கழிநடை' புதினத்தில் வரும் அனுமந்தையா, காசநோயால் பாதிப்புக்கு உள்ளாகி அரசு மருத்துவமனைக்குச் செல்கிறான். அங்கே, அவனது சாதி, தொழில், உடல்நிலையைக் கருதி உடல்நலத்தைக் காப்பதில் அக்கறை காட்டாமல் அலைக்கழிக்க விடுகின்றனர். இதனை,

"ஆஸ்பத்திரியில் அவசர சிகிச்சைப் பிரிவு டாக்டர் சாப்பிடப் போயிருப்பதாகக் கூறினார்கள்.

சீட்டு போட்டுக்கினு வா. ரேஷன் கார்டு கொண்டு வந்தியா? வருமானம் எவ்வளவு? என்றெல்லாம் கேட்டு ரொம்பவே அலையவிட்டார்கள்.

டாக்டர் வந்து பாக்கறவரைக்கும் வராந்தாவுல ஓரமா படுக்க வையுங்க.

வேறுவழியில்லாமல் வெற்றுத்தரையில் அனுமந்தய்யாவை படுக்க வைக்க வேண்டியதாகப் போயிற்று. இதே ஒரு பெரிய ஆளா இருந்தால் விழுந்தடித்துக் கொண்டு வந்து பார்ப்பார்கள்.

...மத்தவங்கள மனுசனாப் பார்த்தாதான?"[64]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இன்றைக்கும் அரசு மருத்துவமனைகளில் சாதிப் பாகுபாடு பார்ப்பதும், செய்யும் தொழிலின் அடிப்படையில் பேதங்கள் காட்டுவதும் நிலவி வருவது தொடர்கதையாக உள்ளது.

முதலாளிகளின் இரக்கமற்ற தன்மை

தொழிற்சாலை உற்பத்தி ஒன்றை மட்டுமே நோக்கமாகக் கொண்டு வாழ்பவர்கள் முதலாளிகள் ஆவர். அவர்கள் தங்களிடம் வேலை செய்யும் தொழிலாளர்கள் நலத்தில் சிறிதும் அக்கறை கொள்வதில்லை. பணியாற்றும் இடங்களில் அவர்கள் எந்தத் துன்பத்திற்கு உள்ளானாலும், அடிபட்டாலும், நோய்வாய்ப்பட்டாலும் அதைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. தொழில் உற்பத்தி நடக்கவில்லை என்பதனைப் பற்றிய சிந்தனையிலேயே இருப்பர். இவ்வாறான தொழிலாளர் நலன் மீது அக்கறை சிறிதும் கொள்ளாத முதலாளிகளின் நிலையினைப் புதினங்கள் காட்டுகின்றன.

தோல் தொழிலகத்தில் பணியாற்றும் அன்னக்கிளி என்ற பெண்ணை முதலாளியின் அடியாள் முஸ்தபா கொடூரமாகப் பாலியல் வன்புணர்வு செய்த நிலையில். அவளைக் காப்பாற்றுவதற்காகத் தொழிலாளர்கள் துடித்துக் கொண்டிருக்கும்வேளையில், அங்கு வரும் முதலாளியின் கையாள் அதனைப் பற்றிய எந்தக் கவலையும் கொள்ளாமல் வேலை பார்க்காத தொழிலாளர்களை வதைக்கும் இரக்கமற்ற தன்மையை,

> “சரி, சரி கூட்டம் போடாதீய, அவளை டோலி கட்டி ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டுப் போவ வேண்டியதுதான். பொம்பளக எல்லாம் ஒப்பாரி வைக்காம அவ அவளுக வேலையப் பாக்கப் போங்கடீ. ஏதோ நடக்காத வெசயம் அலுவுசமாக நடந்திட்ட மாதிரில்லா ஒப்பாரி வைக்காளுவ. மொதலாளி வந்தாருண்ணா அம்புட்டுப் பேரோடவும் சீட்டைக் கிழிச்சுப் போடுவாரு”[65]

என்னும் நிகழ்வின் மூலம் காட்டுகிறார் டி. செல்வராஜ்.

‘கல்மரம்’ புதினத்தில் இடம்பெறும் தொழிலாளர்கள் வேலை பார்த்த இடத்தில் கொத்துக்கரண்டி பட்டு அடிபட்ட பெண்ணை மருத்துவமனைக்குக் கொண்டு செல்வதற்காக துடித்துக் கொண்டிருக்கும் வேளையில், அந்த இடத்தின் முதலாளி அங்கு வந்துசேர, தொழிலாளர்கள் வேலை செய்யாமல் சிகிச்சை செய்துகொண்டு இருப்பதைக்கண்ட அவனுக்கு அளவுகடந்த கோபம் ஏற்படுவதோடு, தொழிலாளர்களை வசைபாடவும் செய்கிறான். இதனை,

> “அழுதுகொண்டிருந்த கம்சலையின் அம்மாவைப் பார்த்து, யாரும்மா, நீ? இப்ப என்னத்துக்கு இப்படி ஓயாம அழற, நிறுத்தும்மா....
>
> ........ நான் என்ன கள்ளநோட்டா அச்சடிக்கிறேன்?
>
> உழைச்சுச் சம்பாதித்த பணத்தை தானே அவுங்களுக்குக் கூலின்னும் சம்பளமின்னும் அழுது தொலைக்கிறேன்.
>
> இப்படிப் பண்றாங்களே? என்று சலித்துக்கொண்ட ஆர்.ஆர்.எம். காது கொடுத்துக்கேட்க முடியாத வசைமொழிகளைப் பொழியத் தொடங்கினான்”[66]

என்று எடுத்துரைக்கிறார் திலகவதி. தொழில் உற்பத்தி மட்டுமே முதலாளிகளின் நோக்கமாக இருப்பது இதன்வழி உணர்த்தப்படுகிறது.

### தொழிலாளர் மீதான அடக்குமுறைகள்

உற்பத்திப் பெருக்கம் ஒன்றினை மட்டுமே நோக்கமாகக் கொண்டு தம்மிடம் பணியாற்றும் தொழிலாளர்களின் நலன் குறித்துச் சிறிதும் கவலை கொள்ளாமல் வாழ்பவர்களாக முதலாளிகள் இருப்பது புதினங்களில் காட்டப்பட்டுள்ளது. தம்மை எதிர்க்கும் தொழிலாளர்களைப் பலவகைகளிலும் அடக்கவே பார்க்கின்றனர். அரசும், ஆட்சியும், அதிகாரமும், காவல்துறையும் ஆள்பலமும் முதலாளிகளுக்குத் துணைபோவது புதினங்களில் காட்டப்பட்டுள்ளது.

சமுதாய வரலாற்றில் புராதனச் சமுதாயம், அடிமைச் சமுதாயம், நிலவுடைமைச் சமுதாயம், முதலாளித்துவச் சமுதாயம் என்ற நால்வகையான பகுப்புகள் உள்ளன. இச்சமூக அமைப்புகளின் தோற்றத்திற்கு, பொருளுற்பத்தி முறையும், அதையொட்டி உருவாகும் வர்க்கங்களும் முக்கியக் காரணிகளாக அமைகின்றன. உற்பத்தியையும் மூலதனத்தையும் ஒரு சிலரது கையில் குவிக்கும் அமைப்பில் மேட்டிமையோர் உருவாகின்றனர் என்பது சமூக - வியலாளர்கள் கூற்று. மற்றவர்களுக்கு இல்லாத அறிவுக்கூர்மை, படைப்பாற்றல், வாணிப நுணுக்கம் போன்றவற்றை உருவாக்கிக் கொண்ட மேட்டிமையோர் அடித்தள மக்கள் மீது தங்கள் மேலாண்மையை நிலைநாட்டிக் கொள்வதற்குப் பலவிதமான வழிமுறைகளைப் பின்பற்றிக் கொள்வது வாடிக்கையாக உள்ளது. புதினங்களில் இடம்பெறும் தொழிலாளர் அடக்குமுறைகளை,

- அரசு அதிகாரிகள் துணைபோதல்
- அடியாட்களை வைத்து மிரட்டுதல்
- தண்டனைகள் தருதல்
- காவல்துறையை வைத்து அடக்குதல்
- சிறையில் அடைத்தல்
- சேரி மக்களைச் சூறையாடுதல்

என்னும் நிலைகளில் பாகுபடுத்திப் பார்க்கமுடிகிறது.

### அரசு அதிகாரிகள் துணைபோதல்

சாதி மேலாதிக்கம் செலுத்துபவர்களுக்கும், அரசியல், ஆட்சி அதிகாரத்தை வைத்து ஆதிக்கம் செலுத்துபவர்களுக்கும், பண்ணை முதலாளிகளுக்கும், தொழிலக முதலாளிகளுக்கும் அரசும், அதிகாரிகளும் கைகட்டிச் சேவகம் செய்வது புதினங்களில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தொழிலாளர்கள் தங்களின் துயரநிலை குறித்து அரசின் மேலதிகாரிகளுக்குத் தெரியப்படுத்தினாலும் அவர்கள் அதனை அலட்சியம் செய்கின்றனர்.

கிராமத்தின் பொது நிலங்கள் பாகுபடுத்தப்பட்டு, அவை குத்தகைக்காக ஏலமிட்டுப் பகிர்ந்தளிக்கப்பட்டாலும் மீண்டும் அந்நிலங்கள் ஜமீன்களின் கைகளுக்கே போய்ச் சேருவதனையும், அதற்கு அதிகாரிகள் துணை நிற்பதையும், 'கூகை' புதினத்தில்,

> "ஜமீன்கள் ஆட்சியின் போது எவ்வாறு ஜமீன் எல்லைக்குட்பட்ட கிராமங்களில் எல்லாமே அவர்களுக்கு உடைமையாய் இருந்ததோ, அதேபோல் இன்னும் எல்லாக் கிராமங்களின் குத்தகைகளும் அவர்களின் கைகளிலேதான் இருந்தன. பேருக்கு அரசாங்க அதிகாரி என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வருவான். ஏலம் விடுகிறேன் என்று பாவ்லா காட்டிவிட்டு அந்தந்த ஏரியா பழைய ஜமீன்களின் எச்சங்களுடைய பெயரில் குறைந்த ஏலத்தொகைக்கு உரிமம் வழங்கிவிட்டுப் போவான்"[67]

என்று காட்டப்படுகிறது. கிராமத்தில் இருக்கும் பொது நிலங்கள், குளங்களைக் குத்தகைக்கு விடுகையில் அது எளிய மக்களுக்குக் கிடைக்காதவாறு பார்த்துக் கொள்ளும் அரசு அதிகாரிகளின் செயல்பாட்டினை இதன்வழியாகக் காட்டுகிறார் சோ.தர்மன். இதனால் பண்ணை முதலாளிகள் அரசு அதிகாரிகளைத் தங்கள் கைகளில் போட்டுக்கொண்டு தனக்கான வேலைகளை நிறைவேற்றிக் கொள்வது காட்டப்படுகிறது.

**அடியாட்களை வைத்து மிரட்டுதல்**

அடிமைச் சாசனங்களை எழுதி வாங்கி வைத்துக்கொண்டு அவர்களைத் தங்கள் தொழிற்சாலை உற்பத்திக்கென நியமிக்கப்பட்ட இயந்திரங்களாக உருமாற்றி எந்நேரமும் வேலைசெய்ய வைக்கும் முதலாளிகளின் கொடுமைகளைத் தாங்கவொண்ணாமல் சிலர் தலைமறைவாக ஓடிவிடுவதும், முதலாளிகள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு தப்பியோடி விடுவதும் உண்டு. இவ்வாறு தொழிற்சாலைகளை விடுத்து, தப்பிச் செல்லும் தொழிலாளர்களைப் பிடித்து வந்து உதைத்து, மீண்டும் பணியில் அமர்த்துவதற்கென முதலாளிகள் அடியாட்களை நியமித்துக் கொள்வது வழக்கமாக இருப்பதனை,

> "வேலைப்பளுவும், கொடுமையும் தாங்காமல் தப்பியோடும் தோல் ஷாப்புத் தொழிலாளர்களைப் பிடிப்பதற்கும் பிடித்தவர்களைச் சம்மந்தப்பட்ட முதலாளிகளிடம் ஒப்படைப்பதற்காகவும் தோல் ஷாப்பு முதலாளிகள் ரெயில்வே ஸ்டேஷனிலும், பஸ் நிலையங்களிலும் நியமித்திருக்கும் அடியாட்கள் இவர்கள்"[68]

என்று 'தோல்' புதினத்தில் காட்டுகிறார் டி. செல்வராஜ். அஸன்ராவுத்தரின் தோல் ஷாப்பின் அடியாளாகக் கழுவத்தேவன், முஸ்தபா இருப்பதனைத் 'தோல்' புதினத்தில் காட்டியுள்ளார் டி. செல்வராஜ்.

**தண்டனைகள் தருதல்**

தொழிற்சாலைகளில் சிறுதவறுகள் செய்துவிட்டாலும், அடிமை முறியைத் திருப்பித்தருமாறு கேட்டாலும், முதலாளிக்கு எதிராக நடந்து கொண்டாலும் தொழிலாளர்களைச் சாட்டையால் அடித்து உதைத்துத் தண்டனை கொடுப்பது தொழிலகங்களின் இயல்பான நிகழ்வுகளில் ஒன்றாக இருப்பதனைத் 'தோல்' புதினம் பதிவு செய்துள்ளது. குற்றம் செய்த தொழிலாளியைத் தலைகீழாகத் தொங்கிவிட்டுக் கசையடி கொடுக்கும் நிகழ்வு,

> "குற்றம் செய்த தோல் ஷாப்புத் தொழிலாளியை இப்படிக்க கல் தூணில் தொங்கப் போட்டுச் சாட்டை வாரினால் அடித்துக் காயப்படுத்துவது என்பது அந்த ஊர் தோல் ஷாப்புகளில் ஏற்பட்டுள்ள சாதாரண நடைமுறை"[69]

என்று காட்சிப்படுத்தப்படுகிறது.

தொழிலாளர்களை வதைப்பதற்கென்றே கல்தூண் ஒன்று நாட்டப்பட்டுப் பராமரிக்கப்படுவதனையும், அதில், தோல் தொழிற்சாலையில் பணியாற்றிய அன்னக்கிளி என்ற இளம்பெண்ணைக் காப்பதற்காக முதலாளியின் அடியாளைத் தடுத்து நின்ற ஓசேப்பைக் கட்டிவைத்து அடிப்பதனையும் 'தோல்' புதினம்

> "தப்பி ஓடிய ஓசேப்பை கல்தூணில் கௌபீனத்தோடு, முழு நிர்வாணமாகக் கட்டி தொங்கவிடப்பட்டு, தொழிற்சாலை உடைமையாளர்களின் ஏவல் நாயான கழுவன், கையில் உடும்புத் தோலினால் பின்னப்பட்ட சாட்டை வாரினால் உடம்பில் தன் பலத்தை எல்லாம் கூட்டி அடித்த அடியினால் ஏற்பட்ட காயங்கள், தோல் பிய்ந்து உதிரம் கொட்டிக் கொண்டிருக்கிறது. சிலுவையில் அறையப்பட்ட குற்றவாளி மரணமடைவதைப் போல் தொழிலாளி உயிர் போவதும் உண்டு. ஒவ்வொரு தோல் ஷாப்பின் முகப்பிலும் அப்படிப்பட்ட கல்தூண் நாட்டப்பட்டு பராமரிக்கப்படும்"[70]

என்று சித்திரித்துக் காட்டுகிறது.

**காவல்துறையை வைத்து மிரட்டுதல்**

மக்களைக் கயவர்களிடமிருந்து காப்பாற்றுவதற்காக ஏற்படுத்தப்பட்ட காவல்துறை, உழைக்கும் வர்க்கத்திற்கு எதிரான செயல்களையே செய்து வந்துள்ளது. தொழிலாளர்களுக்கு எதிரிகளாகவும், உடைமையாளர்களுக்குத் துணைநிற்பவர்களாகவும் காவல்துறையின் செயல்பாடுகள் எல்லாக் காலங்களிலும் இருந்து வந்துள்ளதை வரலாறுகள் காட்டுகின்றன.

அதிகார வர்க்கத்தினர்க்குக் காவல்துறை, அவர்களின் ஏவல்துறையாகவும் இருந்து வருகிறது. நாட்டில் நிலவும் சமூகப் பொருளாதார அரசியல் அவலங்கள் தங்களுக்கு அதீத

நன்மைகள் பயப்பதால் அவற்றை மாற்றியமைக்க முனைகிறவர்களைக் காவல்துறை வெறுக்கிறது. காவல்துறை அரச வன்முறைவாதிகளை, வன்முறை தோய்ந்த கட்டமைப்பினைக் கவனமாகக் காவல் காக்கும் பணியைச் செய்கின்றது. மார்க்சியவாதிகளைக் காலம் காலமாகக் காவல் துறை கண்காணித்துக் கொண்டே வந்துள்ளது. காவல் துறையின் தொழிலாளர்கள் மீதான அத்துமீறிய செயல்பாடுகள் புதினங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

'மலரும் சருகும்' புதினத்தில் இடம்பெறும் காந்திமதிநாத பிள்ளையின் உத்தரவின் பேரில் ஊருக்குள் நுழைந்த காவல் துறையினர் சங்கத் தலைவர்களை அடித்து, இழுத்துப் போட்டு, உதடு வீங்கும் அளவிற்கு அவர்களை வதைப்படுத்துவதும், குழந்தை பிறந்து ஓய்வில் இருந்த கன்னிமரியாவையும் காவல் துறை ஈவு இரக்கமின்றிக் கைதுசெய்து கொண்டு போவதுமான நிகழ்வுகள் காட்டப்படுகின்றன. இதனால் காவல்துறையை வைத்துப் பண்ணை முதலாளிகள் தங்கள் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வது தெளிவாகிறது.

தொழிலாளர்களின் ஒற்றுமையால் தங்கள் வளர்ச்சிக்குத் தடையேற்படும் என்பதனை அறிந்துகொண்ட முதலாளிகள், தங்கள் பொருளாதார வளர்ச்சிக்கும், அடக்குமுறைகளுக்கும், அதிகாரத்திற்கும் தடையாக நிற்கும் தொழிலாளர்களை எந்தவாறெல்லம் ஒடுக்குவது என்று சிந்தித்துக் கொண்டிருந்ததைத் 'தோல்' புதினத்தில்,

> "தங்களது கொள்ளை லாபத்துக்குத் தடையாகவும், கௌரவத்துக்கு இழுக்கு ஏற்படுத்தி இடைஞ்சலாகவும் இருக்கும் தோல் பதனிடும் சங்கத் தலைவர்களையும் ஊழியர்களையும் எப்படியாவது பழிவாங்கிவிட வேண்டும்; நிர்மூலம் பண்ணியாக வேண்டும் என்று தோல் ஷாப்பு முதலாளிகள் துடியாய்த் துடித்தார்கள்"[71]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார் டி. செல்வராஜ்.

காவல்துறையின் ஒடுக்குதல்களும், தாக்குதல்களும், அடக்குமுறைகளும் 'தோல்' புதினத்தில் பல இடங்களில் காட்டப்பட்டுள்ளன. முதலாளிகளின் கைப்பாவையாக இருந்து, அவர்களுக்கு எதிராகச் செயலாற்றும் தொழிலாளர்களை அடக்குவதற்கும், ஒடுக்கிவைப்பதற்கும் காவல்துறை துணைநிற்கும் செயல்பாடுகள் இப்புதினத்தில்,

> "தொழிற்சங்கம் வைத்திருக்கும் புதுப்புதுக் கோரிக்கைகள் அவர்களைப் பெரிதும் கலக்கத்தில் ஆழ்த்தியிருந்தன. எனவே, காவல் துறையினரின் உதவியோடு தங்களது அடியாட்கள் மூலம், தோல் ஷாப்புத் தொழிலாளர் குடியிருப்புகளிலும், அம்மக்கள் குடியிருக்கும் சேரிகளிலும் பெரும் கலகங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். திடீர் திடீரென்று தொழிலாளர்களைத் தாக்குவது, குடிசைகளுக்குத் தீ வைப்பது போன்ற தீய செயல்களைச் செய்து அவர்களைப் பீதியடையச் செய்யும் வேலைகளைத்

தொடர்ச்சியாகச் செய்யலாயினர். முக்கிய ஊழியர்கள் கொலைவெறித் தாக்குதலுக்கு ஆளாயினர்”[72]

என்று காட்சிப்படுத்தப்படுகின்றது. தொழிலாளர்கள்மீது காவல்துறை நேரடியாகவும் மறைமுகமாகவும் துன்புறுத்தலைச் செய்யும் நிகழ்வுகள் இதில் சுட்டப்படுகின்றன.

‘கழிசடை’ புதினத்தில் இடம்பெறும் முத்து உடையார் ஆட்சியாளர்களையும், அதிகாரிகளையும், காவல்துறையையும் தன் அதிகார வரம்பிற்குள் வைத்துக் கொண்டு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிராகச் செயல்படுவதனை,

“கட்சிக்காரர்களுக்கெல்லாம் இவர் மிகமிக தேவையானவர். கட்சிக் கலவரங்களிலிருந்து ஜாதிக்கலவரம் வரைக்கும் இவருடைய ஆட்கள் அடையாளம் காட்டிக் கொள்ளாமல் அற்புதமாகக் காரியத்தை நிறைவேற்றுவதில் கில்லாடிகள். அதுவே உப்பு சப்பு இல்லாமல் அடங்கிப் போவதற்கும் இவர்களே காரணமாய் இருப்பார்கள். போலீஸ்காரர்களெல்லாம்கூட இவர் இஷ்டப்படிதான் எதையும் செய்வார்கள்”[73]

என்று காட்டுகின்றார். இதன் மூலம் காவல்துறையை ஆதிக்கச்சாதியினர் தம் கைக்குள் வைத்துக்கொண்டு தொழிலாளர்களுக்கு எதிராகப் பயன்படுத்திக் கொள்வது தெளிவாகிறது.

**தொழிலாளர்களை வதைத்தல்**

‘தோல்’ புதினத்தில் இடம்பெறும் குருசடி காலனியை, அடியாட்களாகிய வேலப்பனும், மாணிக்கமும் தீ வைத்துத் தெருவையே தீக்கிரையாக்கியபோது அவர்களைப் பிடித்துக் காவல்துறையிடம் ஒப்படைத்த போதும், ஆய்வாளர் தீச்சட்டிக் கோவிந்தன் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் சின்னப்பனையும், தோல் தொழிற்சாலைத் தொழிலாளர்களையும் அவதூறும் நிந்தனையும் செய்து அனுப்பி வைத்த நிகழ்வு காட்டப்படுகிறது.

சவரியார் பாளையம், அந்தோணியார் தெரு, தோமையார்புரம், தோல் தொழிற்சாலை குடியிருப்பு போன்ற சேரித்தெருக்களில் புகுந்த காவலர்களால் சட்டிப்பானைகள் உடைக்கப்பட்டு, பொருட்கள் வெளியே சிதறிக்கிடந்தன. இரவெல்லாம் காவல்துறையின் கெடுபிடி தாங்கமுடியவில்லை. சேரிக்குள் புகுந்த காவலர்கள், அவர்கள் குடியிருப்புகளுக்கும் உடைமைகளுக்கும் தீ வைத்து அக்கிரமம் செய்ததையும் ஆசிரியர் ‘தோல்’ புதினத்தில் பதிவு செய்துள்ளார். சான்றாக,

“தோல் ஷாப்பு முதலாளிகள் ஸ்ட்ரைக்கை உடைப்பதற்காகவும், தொழிலாளர்களின் ஒற்றுமையைக் குலைப்பதற்காகவும் தங்களது அடியாட்களின் வாயிலாக அடி, உதை, தீவைப்பு எனப் பலவிதமான கிரிமினல் நடவடிக்கை மூலம் தொழிலாளர்களை அச்சத்தில் ஆழத்தியிருந்தனர்”[74]

என்னும் பகுதியைச் சுட்டலாம்.

காவலர்கள் தொழிலாளர் தோழர்களை எந்தவொரு விசாரணையும் இன்றிக் கைது செய்வதால், ஆண்கள் தங்கள் வீடுகளை விட்டே வெளியேறி விடுகின்றனர். அதனால் காவலர்கள் வீடுகளில் உள்ள குழந்தைகளையும், பெண்களையும் வதைக்கின்றனர் என்பது,

> "ஊருக்குள்ளாற ஒத்த ஆம்பிளை கெடையாது சாமி. போலீசுக்குப் பயந்து அத்தனையும் காட்டுலெயும் மேட்டுலயும் ஒழிஞ்சுட்டுக் கெடக்குதுவ. ராவெல்லாம் போலீஸ் கெடுபிடி தாங்கலை சாமி. உள்ளது உரியது அத்தனையும் போலீஸ் புகுந்து நொறுக்கிப் போட்டது."[75]

என்று காட்டப்படுகிறது.

தொழிற்சங்கத் தலைவர்களைப் பிடிப்பதற்காக ஊருக்குள் புகும் காவலர்கள், அவர்கள் அகப்படவில்லை என்றால், வீடுகளுக்குள் புகுந்து சமையற்கட்டு வரையில் தேடுவதும், பெண்களை இழுத்துப் போட்டு அடிப்பதுமான செயல்களில் ஈடுபடுவது காட்டப்படுகிறது. காவல்துறையின் தாக்குதலால் பாதிப்படையும் பெண்களின் ஓலம் நடுராத்திரி வரைக்கும் கேட்கும் என்பதனை 'மலரும் சருகும்' புதினம் எடுத்துரைக்கிறது.

'கூகை' புதினத்தில் செந்தூர்ப்பாண்டியின் கொலை வழக்கிற்காகக் அப்புசுப்பனைத் தேடுவதற்காகக் கிராமத்திற்குள்ளே வரும் காவல்துறை அக்கிராமங்களின் ஒவ்வொரு வீட்டிற்குள்ளேயும் சென்று, வதைப்பதையும், பெண்களை மானபங்கப்படுத்துவதனையும் சுட்டிக்காட்டியுள்ளார் சோ. தர்மன்.

காவல்துறையின் அடிக்கும் நடவடிக்கைக்கும் பயந்துகொண்டு ஊர் மக்கள் தலைமறைவாகும் நிலை, 'கூகை' புதினத்தில்,

> " தலைமறைவாகிப் போன அப்புச்சுப்பனும் அய்யனாரையும் தேடுகிற சாக்கில் தினம் போலீஸ் வந்து தெருவை நாசமாக்கியது. ஜாமீன் ரத்து செய்யப்பட்டு மேலும் பல வழக்குகள் சேர்க்கப்பட்டன. கிழடு கெட்டைகள் தவிர்த்து இளவட்டங்கள் யாருமில்லை. போலீசுக்குப் பயந்து காடுகளிலும் வேறு ஊர்களிலும் ஒளிந்து திரிந்தார்கள்"[76]

என்று காட்டப்படுகிறது. குற்றவாளிகளைத் தேடிக் கண்டுபிடிப்பதை விடுத்து, அப்பாவி மக்களை அடித்துத் துன்புறுத்துதல் மனிதநேயமற்ற செயலாக உள்ளது. மனிதநேயமற்ற எந்தவொரு வன்செயலையும் பொதுவுடைமை இயக்கம் ஆதரிப்பதில்லை என்பதை இங்கு அறிதல் வேண்டும்.

### காவலர்கள் பெண்களை வதைத்தல்

காவலர்கள் கைதிகளிடமிருந்து உண்மையை வரவழைப்பதற்காகப் பலவிதங்களிலும் முயற்சிகள் செய்வர். என்றாலும், பல நேரங்களில் அப்பாவி மக்களே அதற்குப் பலியாவது தொடர்நிகழ்வாக உள்ளது.

'கூகை' புதினத்தில் இடம்பெறும் அப்புச்சுப்பனின் வீட்டுக்கு வந்து அவனைத் தேடும் காவலர்கள், அங்கு அவன் இல்லாததால் அவன் மனைவியை நிர்வாணமாக்கி அவமானப்படுத்துவதும், வார்த்தைகளால் அவளை வதைப்பதையும், அவளிடம் அவனது இருப்பிடத்தைக் கேட்டுத் தாக்குவதனையும்,

> "வீட்டுக்குள்ளே அப்புச்சுப்பனின் பெண்டாட்டி, அய்யனாரின் அம்மாள் அம்மணம் மறைக்கப் போராடும் திரௌபதியாய் நின்றாள். துகிலுரியும் துரியோதனர் ஏட்டையா, பக்கத்தில் மூன்று போலீஸ்காரர்கள்.
>
> …அவள் போராடினாள்; கும்பிட்டாள்; கதறினாள்; காலில் விழுந்தாள். பிறந்த மேனியாய் நின்று கதறிய கடைசிச் சத்தத்தில்…."[77]

என்னும் பகுதியின் மூலம் அறியமுடிகிறது. மேலும் இதே புதினத்தில் இடம்பெறும் கொலைக்குற்றவாளி காளித்தேவரைத் தேடும் காவல்துறை, அவன் கிடைக்காததால் அவனது மனைவி பேச்சியைக் வதைக்கும் நிகழ்வு,

> "வீடு மட்டுமா நொறுக்குனான்? என்னையும் நொறுக்கிட்டான். அடினா, அடி, எட்டு நாளைக்கு மொணங்கிக்கிட்டுக் கெடந்தன். புள்ளப் பெத்த பச்ச ஒடம்பு பாரு … வேதன ரண வேதன…"[78]

என்று காட்டப்படுகிறது. காவல்துறை குற்றவாளிகளைப் பிடிக்க இயலாமல், அவர்கள் வீட்டுப் பெண்களை வதைக்கும் நிகழ்வு இதன்வழியாகக் காட்டப்படுகிறது. பெண்களுக்கும் அப்பாவி மக்களுக்கும் காவல்துறை எதிர்வினையாற்றுவது இந்நிகழ்வுகளின் வழியாக உணர்த்தப்படுகிறது.

### காவல் துறையின் பழிவாங்கல்கள்

வறுமைவயப்பட்ட மக்கள் தங்கள் வயிற்றுப்பாட்டைத் தீர்த்துக் கொள்வதற்காகவும், வறுமையைப் போக்கிக் கொள்வதற்காகவும், சமூகத்தில் குற்றமாக்கப்பட்ட செயல்களில் ஈடுபடுகின்றனர். அவ்வாறு அவர்கள் ஈடுபடுவதற்குக் காரணம் அவர்களிடம் நிரந்தமாகிவிட்ட வறுமையே. வறுமையைப் போக்கிக் கொள்வதற்குக் கள்ளச்சாராயம் விற்பது, கஞ்சா விற்பது, சினிமா டிக்கெட் விற்பது போன்றவற்றைப் பிழை என்று அறியாநிலையில் செய்கின்றனர். இவ்வாறு கள்ளச்சந்தையில் விற்கும் பொருள்களால் இவர்களுக்குக் கிடைப்பது என்னவோ,

மிகக் குறைந்த தொகை தான். இவர்களை நோட்டம் பார்த்து, இவர்களிடமே கையேந்திப் பிழைக்கும் காவல்துறையினர்க்கு லஞ்சமாகக் கிடைப்பதோ ஏராளமான பணமாகும்.

'கழிசடை' புதினத்தில் இடம்பெறும் அனுமந்தையாவின் மகன் சீனய்யா திரையரங்கத்தின் பின்புறம் பிளாக்கில் டிக்கெட் விற்பதையும், அதைக் கண்காணிக்கும் காவலர்களுக்கு அவன் பணம் கொடுப்பதனையும்,

> "பிளாக் டிக்கட் விற்பது என்பது ஒரு குற்றமே இல்லை. படம் பாக்கணும்னு வெளியில் இருக்கறவங்... எவ்வளவு வேணுன்னாலுங் கொடுக்க தயாரா இருக்கான். ஒரு அஞ்சு டிக்கட்டைக் கைமாத்தனா போதும். அன்னைய கைசெலவுக்கு கிடைச்சுடும். புதுப்படம் ரிலீஸ் ஆகலன்னாதாங் கஷ்டம்"[79]

என்று காட்சிப்படுத்துகின்றார். இதனால் அவன் காவல்துறையினருக்குத் தெரிந்தவனாக உள்ளான். இதனை ஓர் வசதிவாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டு காவலர்கள் அவனை அவ்வப்போது சிறையில் தள்ளிவிடுகின்றனர் என்பதனை,

> "கேசுக்கு வழியில்லன்னா... அப்பாவியப் புடுச்சு உள்ள வச்சு, கரெக்டா அவுனுவ டூட்டிய செய்யறதா பெரிய ஆபீசருங்க கிட்ட பேரு வாங்கறதுதாங்... போலீஸ்காரனுங்களோட பழக்கம். அப்பிடியிருக்க சீனய்யா மாதிரி ஆளுங்க கெடைச்சா வெள்ளாதி வெள்ளம்.
>
> அவுனுவ காட்டுல மழைதான்"[80]

என்று காட்டுகின்றார் அறிவழகன். காவல் துறையின் பழிவாங்கல்கள், நடவடிக்கைகள் யாவும் ஏழை மக்களுக்கு எதிரானதாகவும், அப்பாவி மக்களுக்குத் துன்பம் விளைவிப்பதாகவுமே இருக்கிறது என்பதனை சோ. தர்மன்,

> "செத்த பாம்ப அடிக்கிறவங்க தான் போலீஸ்காரங்க"[81]

என்று 'கூகை' புதினத்தில் குறிப்பிடுகிறார். அரசியல்வாதிகளுக்கும் செல்வந்தர்களுக்கும் கைகட்டி நிற்கும் காவல்துறை சாதாரண ஏழை, எளிய மக்களின் மீது மட்டும் தனது பலத்தினைக் காட்டுகிறது. அதிகாரம் படைத்தவர்களின் பெரும் தவறுகளைக் கண்டு கொள்ளாத காவல்துறை, சாதாரண மக்கள் செய்யும் சிறுதவறுகளையும் உண்மையாக்கி அவர்களின் வாழ்க்கையினையே சீரழித்துவிடுகிறது

**சிறைச்சாலைக் கொடுமைகள்**

காவலர்கள், சமூகத்தில் உயர்பொறுப்பிலுள்ளவர்களையும், ஆதிக்கக் காரர்களையும், முதலாளிகளையும், ஏழை எளியவர்களையும் ஒரே மாதிரியாக நடத்துவதில்லை. அவர்களிடம் நடந்துகொள்ளும் முறையும் வெவ்வேறாக உள்ளது. திருடனையும் கொலை செய்தவனையும்

விட்டுவிட்டு அப்பாவிகளைச் சிறையிலடைத்துத் துன்புறுத்துகின்றனர். அதிகாரிகளின், ஆதிக்கம் நிறைந்தவர்களின் பேச்சைக் கேட்டு அப்பாவி மக்கள் பெண்களை வன்கொடுமைக்கு உள்ளாக்குவதனைக் 'கூகை' புதினத்தில்,

> "அவுங்களுக்கு அடியான அடி... அவரு மகன்க ரெண்டு பேரு முன்னாலயும் என்னைய நெற அம்மணமா நிறுத்தி, அவங்களையும் அம்மணாமா நிறுத்தி ஒங்க சின்னாத்தா கிட்டப் போங்கடாங்கான். எங்க மூணு பேத்தையும் ஒரே ரூமுக்குள்ள இருட்டுக்குள்ள விட்டுட்டுப் பூட்டிட்டான். நாக்கப் புடுங்கிட்டுச் செத்துருவமானு இருக்கு..."[82]

என்று காட்டுகிறார் சோ. தர்மன்.

'மனிதன் தனிமைப்படுத்தப்படும்போது மிகப்பெரும் வேதனையில் உழல்வான்' என்ற உளவியல் காரணியை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டதே சிறைச்சாலை ஆகும். ஆளப்படும் மக்களை அடக்கியொடுக்கி வைப்பதற்கு ஆளும் வர்க்கத்தினர் கண்டுபிடித்த முறைகளில் ஒன்று சிறைச்சாலை. அது பெரும்பான்மையும் உரிமைகளைக் கோரும் மக்களை அடிபணிய வைப்பதற்கே பயன்படுத்தப்பட்டுள்ளது. உழைக்கும் மக்கள் பலவிதங்களில் கொடுமைகளை அனுபவிக்கும் களமாகச் சிறைச்சாலைகள் உள்ளன. ஆதலால், போராட்டங்களில் ஈடுபடும் தொழிலாளர்களை நசுக்குவதற்கான களமாகச் சிறைச்சாலைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. சிறைச் சென்ற தொழிற்சாலைத் தொழிலாளர்களின் அனுபவப் பகிர்வுகள் 'தோல்' புதினத்தில் காட்டப்பட்டுள்ளன.

**பெண்கைதிகளை வதைத்தல்**

சிறையில் பெண் கைதிகளை எந்தநிலையில் நடத்துகின்றனர் என்பதனை அறிவதற்குத் 'தோல்' புதினம் துணைசெய்கிறது. தொழிற்சாலைப் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைக்குச் சென்ற பெண்தோழர்களை சிறையில் ஏற்கெனவே இருக்கும் பெண் கைதிகள் மோசமாக நடத்துவதனை அம்மாளு பாத்திரம் வழியாகக் காட்டுகிறார் டி. செல்வராஜ்.

சிறைச்சாலையில் நடக்கும் கொடுமைகளை எதிர்த்துப் பேசிய அக்னீஸ்மேரியைச் சிறைக்காவலர்கள் பழிவாங்கத் துடிப்பதனை,

> "பெண் வார்டர்கள் தங்களுக்குச் சவலாக உருவாகியிருக்கும் அக்னீஸ் மேரியைப் பழி வாங்குவதற்காக வேண்டிய நேரம் பார்த்துப் பதுங்கிப் பதி போட்ட வண்ணமிருந்தனர்"[83]

என்னும் பகுதி காட்டுகிறது.

சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்த பெண் கைதிகளில் ஒருத்தியான கேரளப் பெண்ணை விபச்சாரத் தொழிலுக்குப் பெண் காப்பாளர் அம்மாளு அம்மாள் அழைத்த போது அவள் அதற்கு இணங்காத காரணத்தால் சித்திரவதை செய்கின்றனர். காலையில்

சிகிச்சைக்கு என்று கூட்டிப் போகப்பட்டவள், பின்னர் பிணமாகக் கொண்டு வரப்பட்டாள் என்பதனை,

> "காலையில் சிகிச்சைக்கெனக் கூட்டிப் போகப்பட்ட அக்னீஸ்மெரி இப்படி பிணமாக வார்டுக்குக் கொண்டு வரப்படுவாள் என்று அந்த வார்டில் அடைக்கப்பட்டிருக்கும் பெண்கைதிகள் யாரும் கருதவில்லை."[84]

என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். சிறைக்கைதிகளுக்கு நேரும் அவலங்கள் இப்புதினத்தில் பல நிகழ்வுகளின் மூலம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

**சிறைச்சாலை தரும் மாற்றங்கள்**

'மலரும் சருகும்' புதினத்தில் இடம்பெறும் பட்டாளத்து ரெங்கன் தலைமறைவு கம்யூனிஸ்டு ஒருவனுக்கு அடைக்கலம் கொடுத்ததற்காகக் காவல்துறையின் சித்திரவதையையும், சிறைவாசத்தையும் அனுபவிக்கிறான். சிறைச்சாலை அவனுக்குக் கம்யூனிசச் சித்தாந்தத்தைப் பயிற்றுவிக்கிறது. பொதுவுடைமை இயக்கத்தின் தேவையை உணர்கிறான். அதுவரை உணர்வற்ற நிலையிலேயே பொதுவுடைமை இயக்கத்தோடு தொடர்பு கொண்டிருந்த ரெங்கன், சிறையில் இருந்து வெளியே வரும்பொது உணர்வுப் பூர்வமான கம்யூனிஸ்டாக வருகிறான்.

> "என்னோட ஜெயிலுக்கு வந்திருந்தவங்க எனக்குக் கத்துக் கொடுத்தது இருக்கே...
>
> ஆஹா, அறிவு இல்லாத மிருகங்களா இருக்கிற நாம தெரிஞ்சிக்க வேண்டியது எவ்வளவோ இருக்கு"[85]

என்ற அவன் கூற்று சிறைச்சாலை அனுபவம் தந்த பரிணாம வளர்ச்சியைக் காட்டுகிறது.

இதேபோன்று தோல் தொழிற்சாலைத் தொழிலாளர்களில் போராட்டத்தில் ஈடுபடும் பெண்களும் ஆண்களும் சிறைசெல்ல நேரிடும்போது பலர் சிறைச்சாலைக் கொடுமைகளைத் தாங்கிக் கொண்டு வெளிவரும் போது சமூக உருவாக்கத்திலும் போராட்டங்களிலும் தங்களைத் தியாகிகளாக மாற்றித் தைரியமாக முதலாளி வர்க்கத்தைக் கேள்வி கேட்கும் நிலைகளில் பரிணாம வளர்ச்சிப் பெறுவதைத் 'தோல்' புதினம் காட்டுகிறது. சிறைச்சாலை புது தைரியத்தையும், தொழிலாளர் ஒற்றுமையின் சிறப்பினையும் காட்டுவதாக இப்புதினம் எடுத்துரைக்கிறது.

வழக்கறிஞர் சங்கரனும், கிறித்துவ போதகர் இருதயசாமியும் தோல் தொழிற்சாலைத் தொழிலாளர்களுக்குத் துணைநின்ற காரணத்தைக் காட்டிச் சிறையிலடைத்து விடுகின்றனர். அதுவரை சட்டப்புத்தகங்களையே வாசித்துக் கொண்டிருந்த சங்கரன் கம்யூனிசச் சித்தாந்த நூல்களைப் படித்துத் தெளிவு பெறுவதும், கிறித்துவ மதம் சார்ந்த நூல்களையே போதித்துக்

கொண்டிருந்த இருதயசாமி கம்யூனியச் சித்தாந்த நூல்களைப் படித்தறிந்து தெளிவுபெற்றுப் புதுமனிதர்களாக உருமாறி வருவதனையும் 'தோல்' புதினம் காட்டுகிறது. இதனை,

> "சிறைக்கொடுமைகளை எதிர்த்துப் போராடும் அதேவேளையில் அவர்களால் சிறைக்கூடம் அறச்சாலையாகவும், கல்விக்கூடமாகவும் மாற்றம் பெற்றிருந்தது. தான் படிக்கவிட்டுப் போன தத்துவார்த்தப் புஸ்தகங்களைப் படிப்பதற்கான வாய்ப்பும் சங்கரனுக்கு ஏற்பட்டிருந்தது."[86]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ். தான் படிக்கவிட்டுப் போன தத்துவார்த்த புத்தகங்களைப் படிப்பதற்கான வாய்ப்பு சங்கரனுக்குக் கிடைத்ததாகவும், சங்கரனைப் போன்றவர்கள் சிறைச்சாலையில் பிறரோடு பழகினால் அவர்களும் அதைப் போல் ஆகிவிடுவார்களோ என்ற ஐயத்தினால் சங்கரனை மதுரை, சேலம், கடலூர் எனச் சிறைச்சாலைகளுக்கு மாற்றிக் கொண்டே இருந்தனர். இத்தனை அவலங்களும் இன்னல்களும் ஏற்பட்டிருந்த போதும் மாதர்சங்கப் பெண்களும், தொழிலாளர் தலைவர்களும், சங்க நிர்வாகிகளும் மனம் தளராமல் ஒன்றுபட்டு நின்றதை நூலாசிரியர் பல இடங்களிலும் காட்டுகிறார்.

**முன்னேற்றத் தடையாதல்**

கிராமத்திலிருந்து அவதிப்படும் மக்கள் தங்கள் வாழ்வை வளப்படுத்திக் கொள்வதற்குக் கல்விச்சாலைகளையும் கல்லூரிகளையும் நாடிச் செல்கின்றனர். நாகரிக வாழ்க்கையைக் கற்றுக் கொள்வதற்கும், வசதி வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொள்வதற்கும் கிராமிய மாந்தர்கள் நகரங்களில் வாழ ஆசைப்படுகின்றனர். காலம் காலமாகப் பண்ணைகளிடம் அடிமைகளாய் வாழ்ந்த உழைப்பாளர்கள் தங்கள் கிராமங்களைவிட்டு நகரங்களுக்குச் சென்றுவிட்டால், தங்கள் நிலங்களில் உழைப்பதற்கு ஆட்கள் கிடைக்க மாட்டார்கள் என்று கருதி, பண்ணை அடிமைகளை உள்ளூரிலேயே வரன் பார்த்துத் திருமணத்தை முடித்துக் கொள்ளும்படி அறிவுறுத்தும் நிலையினைக் 'கூகை' புதினத்தில்,

> "என்னல, சம்முவம் ரெண்டுபேரும் எங்க கெளம்பிட்டீங்க?
>
> கோயில்பட்டி வரைக்கும் போயிட்டு வரணுஞ்சாமி...
>
> கோயில்பட்டியில என்னல சோலி?
>
> நம்ம மக வெள்ளையம்மாளுக்கு ஒரு மாப்பிள்ளைப் பையன் இருக்காம்னு தாக்கல் வந்துச்சு, அதான் அப்பிடியே போயி ஒரு ஊசாட்டம் பாக்கலாம்னு போறம்.
>
> பட்டிக்காட்டுப் பய எவனுக்காவது குடுத்தா, ஒரு காடுகரையில வேலவெட்டிச் செஞ்சு பெழச்சிருக்கிருவாக, தூரம் தொலவட்ல அதுவும் பட்டணக்கரையில போயி குடுக்கணும்ங்கியே ஒனக்கென்ன பைத்தியமால புடிச்சிருக்கு?"[87]

என்று பாத்திர உரையாடலின்வழியாகக் காட்டுகிறார் சோ. தர்மன். உழைக்கும் மக்கள் தங்களை அண்டியே வாழவேண்டும் என்ற பண்ணையார்களின் ஏதேச்சதிராக நிலை இதன்வழி உணர்த்தப்படுகிறது.

**பொருளாதார ஒடுக்குதல்கள்**

பொதுநிலையில் சமூகம் எல்லாக் காலங்களில் ஒரே படித்தான நிலையினைக் கொண்டிருப்பதில்லை. அது எல்லாக் காலங்களிலும் மாற்றத்தை முன்னிறுத்தியே சென்று கொண்டுள்ளது. ஒன்றன் வெற்றி என்பது அதன் முந்தைய காலத் தோல்விகளின் உண்மையான காரணங்களை முற்றிலுமாக அலசி ஆராய்ந்து அதனை நிமிர்த்துச் செல்வதில்தான் அடங்கியுள்ளது. இத்தகு மாற்ற வளர்ச்சியையே பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தந்துள்ளது. உழைப்பாளர்களை வஞ்சித்தும் ஏமாற்றியும், அவர்களின் பொருளைச் சுரண்டுவது உலகெங்கிலும் நடைபெற்றுவரும் ஏகாதிபத்தியச் செயல்பாடாக இருந்துவருகிறது.

**பொருள் சுரண்டல்**

மிகு உற்பத்தி, தயாரிப்புக்கு மிகுதியாக ஒருவரிடம் தொழிலைப் பெறுவதும், ஊதியத்தைக் குறைவாகத் தருவதும் பொருளியல் சுரண்டலின் பாற்பட்டதாகும். உழைக்கும் வர்க்கத்தினராகிய ஒடுக்கப்பட்டோர், தொழிலாளர் உடலுழைப்பைச் சுரண்டுவதோடல்லாமல், அவர்களது பொருளையும் பறித்துக் கொள்வதே சுரண்டலின் உற்பத்திக் களமாகும்.

**வட்டிபெற்று வாழும் முதலாளிகள்**

தோல் தொழிலக முதலாளிகளின் அடியாளாகச் செயல்படும் கழுவனின் முக்கியமான தொழில் நகராட்சித் தொழிலாளர்களுக்கு வட்டிக்கு விடுவது. கழுவனிடம் வட்டிக்கு வாங்கினால் காலத்துக்கும் கடன் தொலையாது. கடன் வாங்கிய நகராட்சி ஊழியரின் மனைவி, பெண்டு பிள்ளைகள் மாதாந்திரம் தரவேண்டிய வட்டிக்குப் பதிலாகக் கழுவனுடன் படுத்துக் கொள்ள வேண்டும். யாராவது மறுத்தால் அடி உதைதான். இது பல தலைமுறைகளாக நகராட்சிக் காலனிகளில் எழுதப்படாத விதியாக இருப்பதைத் ‘தோல்’ புதினம் பதிவு செய்துள்ளது. இதனை,

> “கழுவத்தேவனுக்குத் தோல்ஷாப்பு முதலாளிகளின் அடியாளாகச் செயல்படுவதோடு முக்கியமான தொழில் முனிசிப்பல் தொழிலாளர்களுக்கு வட்டிக்கு விடுவது. நகரத்தின் முக்கியமான போக்கிரிகளைப் போலவே அவனது பிரதான தொழில் இந்த வட்டித் தொழில். கழுவனிடம் வட்டிக்கு வாங்கினால் ஜென்மா ஜென்மத்துக்குக் கடன் தொலையாது. கடன் வாங்கிய முனிசிப்பல் சிப்பந்தியின் மனைவி, பெண்டு பிள்ளைகள் மாதாந்திரம் தர வேண்டிய வட்டிக்குப் பதிலாகக் கழுவனுடன் படுத்துக் கொள்ள வேண்டும். யாராவது ரோஷப்பட்டால் அடி உதைதான்”[88]

என்று குறிப்பிடுகிறார் டி. செல்வராஜ். தொழிலாளர்களை ஏய்த்துப் பிழைப்ப தோடல்லாமல் அவர்களின் பெண்டுகளையும் பிள்ளைகளையும் அபகரிக்கத் துடிக்கும் மனிதநேயமற்ற செயல்பாடு இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

இதே புதினத்தில் இடம்பெறும் வீராயி என்ற பெண்ணை ஈடாகக் கொண்டதும் இல்லாமல், அவள் மகளையும் பெண்டாள நினைக்கும் வட்டிக்கழுவனின் காமக்கொடூர மனநிலையை,

> "வட்டிக்கோசுரம் என்னையத்தான் அடுமையா வச்சிருக்கையே சாமி. எம்புள்ளைய விட்டுப்போடு, பச்சைப்புள்ளை தாங்காது' என்று பரிதாபமாகச் சொன்ன வீராயி கழுவனின் காலில் விழுகிறாள்"[89]

என்னும் பகுதியால் எடுத்துரைக்கிறார். வட்டிக்குப் பணம் வாங்குவதோடு அல்லாமல் இரக்கமின்றி நடந்துகொள்ளும் குத்தகையாளர்களின் செயல்பாடு இதன்வழியாகக் காட்டப்படுகிறது.

**அநியாய வட்டி வாங்குதல்**

தொழிலாளர்கள் தங்கள் அத்தியாவசியத் தேவைகளுக்காகத் தங்களிடம் உள்ள நிலங்களையோ, அல்லது பொருளையோ அடமானமாக வைத்து, தங்களின் சொற்பத் தேவைகளை நிறைவுசெய்து கொள்ள வேண்டிய நிலையில் உள்ளனர் என்பதனைப் பதினங்கள் எடுத்துரைக்கின்றன.

ஏழைமக்கள் சேர்த்துவைத்துக் கொள்ளும் சிறிய அளவிலான தங்கமும், வெள்ளியும், பித்தளைப் பாத்திரங்களும் அடகுக்கடையிலேயே நிரந்தரமாகத் தங்கிவிடுகின்றன. வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களையும் அடகு வைத்துவிட்டுக் கடைசியில் எந்தப் பொருளைத்தான் அடகு வைப்பது என்று காத்திருக்கும் நிலையில் தொழிலாளர்களின் வாழ்க்கை உள்ளது என்பது,

> "பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்த காவேரியின் கால்கொலுசு ஈரம் பட்டு பளபளத்தது. வீட்டில் இருந்து மற்ற நகைகளைப் போல, அதுவும் எப்போதோ அடகுக்குப் போயிருக்க வேண்டிய பொருள்தான்"[90]

என்பதன்வழி காட்டப்படுகிறது. தொழிலாளர்களிடமிருந்து அடகுக்கடைக்குச் சென்ற பொருள் மீட்கவே முடியாமல் அவர்களிடமே தங்கிவிடுவது வாடிக்கையாக உள்ளது.

மேல்சாதிக்காரர்களை அண்டிப்பிழைத்து வாழும் தாழ்த்தப்பட்டவர்களின் வாழ்க்கை அவலம் நிறைந்ததாக உள்ளது. இதில் பெரும்பான்மையோர் நிலமில்லா ஏழை எளிய விவசாயிகள்; விவசாயக் கூலிகள். அவர்களில் சிலர் கொஞ்சம் அளவிலான நிலங்களை வைத்திருப்பவர்களும் உள்ளனர். இந்நிலைக்குரிய காரணத்தினை,

"இவர்கள் எல்லாம் விவசாயக் கூலிகளாகவும், நிலமில்லா விவசாயிகளாகவும் மாறுவதற்குக் காரணம், நிலப்பிரபுக்களின் கொள்ளையும், அடக்குமுறையும் கொடுமைகளுமே ஆகும்"[91]

என்னும் கூற்றின் வாயிலாக அறியமுடிகிறது.

ஏழைகளான தாழ்த்தப்பட்டவர்களிடம் அநியாயமாக வட்டிக்கு விடுவதும், கால ஓட்டத்தில் அவர்களின் உடைமைகளைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்வதுமான நிலை 'பிறகு' என்னும் புதினத்தில்,

"அதுலயும் அப்பையாகிட்ட பாக்கி வாங்குனவன் அதோட சரி, குழிக்குள்ள தள்ளிட்டுத்தான் மறுசோலி பாப்பாரு"[92]

என்று எடுத்துரைக்கப்படுகிறது. பண்ணை ஆண்டைகளிடம் நிலத்தை அடமானமாக வைத்துவிட்டால் அதனை மீண்டும் மீட்பதற்கு வழியே இருக்காது என்பதனை,

"அவனுக்குக் குடுக்க வேண்டிய வட்டியே நெலத்த மேஞ்சிரும் போலிருக்கு"[93]

என்னும் பகுதியின் மூலம் காட்டுகிறார் பூமணி.

'கழிசடை' நாவலில் வரும் கொண்டய்யா பர்மாவிலிருந்து அகதியாகத் தமிழகம் வந்தவன். ஆதரவற்ற அவனுக்கு அனுமந்தய்யா ஆதரவளித்து நகராட்சியில் துப்புரவு வேலை வாங்கித் தருகிறான். பர்மா கொண்டய்யா ஓரளவு சிக்கனமாக இருந்து வாழ்க்கையை நடத்துவதன் மூலம், பணத்தைச் சேமித்து, அதனைத் தன் சக தொழிலாளிகளுக்கு ரூபாய்க்குப் பத்து பைசா வட்டிக்குக் கடனாகக் கொடுத்துப் பொருள் சேர்க்கிறான். தொழிலாளர்களின் பணத்தை உறிஞ்சி நாளடைவில் பெரும்பணக்காரன் ஆகிறான். தொந்தியும் தொப்பையுமாய் உடல் பெருத்துப் போன அவனது தோற்றத்தை,

"முனிசிபாலிட்டி சட்டைக்கு அடங்காமல் பெருத்திருந்தான். அவ்வளவும் வட்டியில் பெருத்த உடம்பு"[94]

என்று காட்சிப்படுத்துகிறார் அறிவழகன்.

வீட்டின் அவசரத் தேவைகளுக்காகவும், நல்லது கெட்டதுக்காகவும் பிள்ளைகளின் படிப்புச் செலவுக்காகவும், தங்கள் நிலங்களை அடமானமாக வைத்து வாழும் வாழ்க்கையே தாழ்த்தப்பட்டவர்களுக்கு விதிக்கப்பட்ட நிலையாக உள்ளது. வங்கிகள் உடனடியாகப் பணம் தர மறுப்பதால் அவர்கள் ஊரிலுள்ள செல்வந்தர்களையே நாட வேண்டியுள்ளது. கால மாற்றம், பருவநிலை மாற்றம், அதிக அளவில் மழைபொழிதல் அல்லது மழை பொய்த்துப் போதல் போன்ற காரணங்களால் குறித்த காலத்தில் தங்கள் நிலத்தை மீட்க இயலாத நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். இதனைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும்

ஆண்டைகள், தாழ்த்தப்பட்ட மக்களின் நிலங்களைத் தங்களுக்கே உரிமையாக்கிக் கொள்கின்றனர். இவ்வாறான சமூகவியற் சிக்கலை 'பிறகு' நாவலில்

"வட்டியில வில்லிசேரியெல்லாம் தோத்துது.

எல்லாம் இப்பத்தானப்பா. அதுக்குமுந்தி வழிச்சு நக்குனவருதான.

பொண்டாட்டி வழிச் சம்பாத்தியம்.

அதெல்லாமில்ல. ஊருக்குள்ள ஏமாத்துனதுதான். கொஞ்சநாளைக்கு முந்திப் பஞ்சம் வந்ததோ இல்லையோ, எல்லாரும் காட்டப் பறிகொடுத்துட்டான்."[95]

என்றுரைக்கிறார். இன்றைக்குச் செல்வச்செழிப்பில் கொழித்துக் கொண்டிருக்கும் பல ஆண்டைகளின் நிலங்களெல்லாம் இவ்வாறு ஒரு காலத்தில் தலித்துகளிடமிருந்து அநியாயத்திற்குப் பிடுங்கப்பட்டதுதான் என்பது சமூக வரலாறு.

**ஊழலால் பாதிப்படைதல்**

'பிறகு' புதினத்தில் இடம்பெறும் அழகிரியின் மகள் முத்துமாரி, தன் கணவனின் துன்பத்தைப் பொறுக்கமாட்டாது தற்கொலை செய்து கொள்கிறாள். இந்தச் செய்தியை கிராமநிர்வாக அதிகாரி, வட்டாட்சியருக்கு அனுப்புவதில் காலதாமதம் செய்கிறார். இதற்குக் காரணம் அவர் எதிர்பார்க்கும் ஐந்து ரூபாய் கமிசன்தொகை கிடைக்காமல் போனதுதான். மகளையும், மனைவியையும் இழந்து நிற்கும் அழகிரிமீது இரக்கம் காட்டாமல் ஐந்து ரூபாயின்மீதே நோக்கமாக நிற்கும் கிராமநிர்வாக அதிகாரி உழைக்கும் தொழிலாளர்கள்மீது கருணை காட்ட மறுப்பது, இந்நிகழ்வின்வழி புலப்படுத்தப்படுகிறது.

'கழிசடை' புதினத்தில் இடம்பெறும் சந்துக்கிழவி அனாதையாக இறந்த போகிறாள். அந்தப் பிணத்தை அப்புறப்படுத்துவதற்குக் காவல்துறை ஊழியர், நகராட்சி துப்புரவுப் பணியாளர்களைக் கொண்டு கிழவியின் பிணத்தை ரிக்ஷாவில் ஏற்றி இடுகாட்டிற்குக் கொண்டு செல்கிறார். அதில் ரிக்ஷா தொழிலாளிக்கு வாடகை எதுவும் தர மறுக்கிறார். ஆனால், ரிக்ஷா தொழிலாளிக்குக் கூலி கொடுத்ததாகச் சொல்லி, அலுவலகத்தில் பணம் பெற்றுக் கொள்கிறார். இதன் மூலம் அரசு ஊழியர்கள் அன்றாடம் உழைத்துப் பிழைக்கும் அடித்தட்டு மக்களின் உழைப்பைச் சுரண்டி வாழ்வதனைக் காட்டுகின்றார் அறிவழகன். இதே காவலர் கிழவியைப் புதைத்த கணக்கில் 150/- ரூபாய் அலுவலகத்தில் வாங்கிக் கொள்கிறார். ஆனால் பிணத்தைப் புதைத்த வெட்டியானுக்கோ 70/- ரூபாய் மட்டுமே கொடுக்கின்றார். பிணத்தைப் புதைக்கும் கடமையைச் செய்யும் வெட்டியானிடத்திலும் பணத்தைப் பறிக்கும் ஆதிக்கச் செயற்பாடு இதன் மூலம் காட்டப்படுகிறது.

'கழிசடை' புதினத்தில் இடம்பெறும் மோகன் ஒரு முதுகலைப்பட்டதாரி. மேல்சாதியைச் சார்ந்தவன். மேலிடத்தின் சிபாரிசின் மூலம் கையூட்டுக் கொடுத்து துப்புரவுப்பணி வேலைக்கு

வருகிறான். ஆனால் தானாகத் துப்புரவுச் செய்யாமல், தாழ்த்தப்பட்ட மக்களிடம் மிகக் குறைந்த கூலியைக் கொடுத்துத் தன் வேலைகளைச் செய்ய வைக்கிறான். மாத ஊதியத்தை முழுமையாகத் தான் மட்டுமே பெற்றுக் கொண்டு, பிறரை மக்களை வேலைசெய்ய வைப்பது தொழிலாளர்களுக்கு உரிய வேலையைப் பறிக்கும் செயலாகக் காட்டப்படுகிறது.

நகராட்சியின் மேலதிகாரிகள் துப்புரவுத் தொழில் செய்யும் மக்களைத் தங்கள் வீட்டு வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொள்வதைக் ‘கழிசடை’ புதினத்தில்,

> “விருந்தாளிங்க சாப்பிட்டதும் இலை எடுத்துப் போட்றதுலருந்து கெணத்துல இருக்கிற தண்ணிய சேந்தி பத்து பாத்திரங்க தேய்ச்சி கழுவிக் கொடுக்கறது வரைக்குங்….
>
> அப்பப்ப மார்க்கெட்டுக்குப் போயி வேணுங்கற சாமான் வாங்கியாறனும். இன்னும் என்னனென்னமோ…”[96]

என்று எடுத்துரைக்கிறார் அறிவழகன். அலுவலகத்தில் தங்களுக்குக் கீழே பணியாற்றும் தொழிலாளர்களைத் தங்கள் வீட்டுப்பணிகளுக்குப் பயன்படுத்திக் கொள்வது சட்டப்படி குற்றமான செயலாகும் என்பதனை உணர வேண்டும் என்பதற்காகவே இந்நிகழ்வு இங்கே காட்டப்பட்டுள்ளது.

சாதாரணத் தொழிலாளர்கள் வாழ்வில் அரசியல்வாதிகளின் கையூட்டும் ஊழலும் பெரும் சுமையினை உருவாக்குகிறது. நாட்டில் தரமான கல்விக்கும், மேற்படிப்புக்கும், வேலைவாய்ப்புக்கும் இலட்சக்கணக்கில் கையூட்டுத் தரவேண்டிய நிலை உள்ளது. வேலைவாய்ப்புக்காக முயற்சி செய்யும்போது கையூட்டு இல்லாமல் எந்தத் துறையிலும் வேலை வாங்க இயலாத நிலை உள்ளது. மிகக் குறைந்த விலையில் பொருட்களை வழங்கவேண்டிய நியாய விலைக்கடைகளிலும் மக்களுக்கு வினியோகிக்க வேண்டிய உணவுப் பொருட்கள் பதுக்கப்பட்டுக் கள்ளச்சந்தைக்குக் கொண்டுபோகப்படுகிறது. அரசு மருத்துவமனைகளில் சிகிச்சைகளுக்குக் கையூட்டுப் பெறப்படுகிறது. காவல் நிலையங்களில் ஏழைகளுக்குக் கிடைக்க வேண்டிய நியாயம் பணக்காரர்களால் பணம்கொடுத்துப் பறிக்கப்படுகிறது. சிறுதொழிலுக்கான கடன்வசதி, சிறுதொழில் பயிற்சி, தன்னிறைவுத் திட்டங்களுக்காக ஒதுக்கீடு ஆகிய அனைத்துமே அரசு அதிகாரிகள், அரசியல் ஆதரவுடையவர்கள், அரசியல் பதவி வகிப்பவர்கள், ஒப்பந்தக்காரர்கள் வசமே சென்றுவிடுகிறது. இவ்வாறான சூழ்நிலைகளில் வறுமையின் கோரப்பிடியில் சிக்கித் தவிக்கும் தொழிலாளர்கள் நல்வாழ்வு வாழ வழி இல்லாமல் போய்விடுகிறது.

மக்கள் முறைகேடுகளில் ஈடுபடும் அதிகாரிகள்மீது தரப்படும் தகவல்களை உயர்பதவிகளில் உள்ளோர் பெரிதாக எடுத்துக்கொள்வதில்லை என்பதனையும், தனக்குக்கீழே வேலை பார்க்கும் அதிகாரிகளைத் தான் சொல்லும் வேலைகளைச் செய்து தரும்படியாகப் பணிப்பதனையும் ‘தோல்’ புதினத்தில்,

“கள்ள மார்க்கெட் சம்பந்தமாகவும், பதுக்கல் சம்பந்தமாகவும், அரசு போடும் அவசரச்சட்டங்களும், ஆணைகளும், சுற்றறிக்கைகளும், நாராயண மூர்த்தியாப் பிள்ளையைப் பொறுத்த மட்டில் அவை வெறும் உபயோகமற்ற குப்பைகள், அவற்றை அவர் பொருட்படுத்துவதே கிடையாது. அரசு அதிகாரிகள் அத்தனை பேரையும் தனது விரல் நுனியில் ஆட்டிப்படைப்பவர். தப்பித்தவறி ஏதாவது அதிகாரி, ஆட்டம் சுழித்தால் போதும், ஏதாவது போலிச்சாக்குச் சொல்லப்பட்டு அந்த அதிகாரிக்கு மெமோ கொடுக்கப்பட்டு விளக்கம் கேட்கப்படும் அல்லது மாறுதல் உத்தரவு இருபத்து நான்கு மணிநேரத்தில் வந்து சேரும்”[97]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ்.

**விலைவாசி ஏற்றமும் பதுக்குதலும்**

குறைந்த ஊதியத்திற்குப் பணிபுரியும் ஏழைத் தொழிலாளர்கள் அன்றன்றைக்குத் தேவையான பொருட்களை அன்றன்றைக்கே வாங்கும் நிலையில் உள்ளனர். அப்படி அத்தியாவசியப் பொருட்களை வாங்க சந்தைக்குச் சென்றால் நாளுக்குநாள் பொருட்களின் நிலை உயர்ந்துகொண்டே சென்று கொண்டிருக்கிறது. இதனால் அவர்களின் சம்பாத்தியம் அவர்களின் வயிற்றுப்பாட்டிற்கே செலவாகிவிடுகிறது. இதற்கான காரணங்களை ஆராயும் போது உற்பத்தியாகும் பதுக்குதலும், கள்ளச்சந்தையுமே காரணமாக இருப்பது தெளிவாகும். பொருட்களுக்குச் சந்தையில் அதிக விலை இல்லை என்றால், முதலாளிகள் அந்தப் பொருள்களைப் பதுக்கி, அதற்குச் செயற்கையான தட்டுப்பாட்டை உருவாக்கி, அதன்மூலம் பொருட்களுக்கான விலை ஏற்றத்தை உருவாக்கி வைக்கின்றனர். இதை விலையேற்றத்திற்கான ஒரு காரணமாகக் கொள்ளலாம். சில பொருட்களுக்கு அதிகமான தரகுத்தொகை கிடைக்கும் என்பதால் அவற்றை அளவுக்கு அதிகமாக ஏற்றுமதி செய்கின்றனர். அதனால் அந்தப் பொருள்களக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டு, செயற்கையாக விலையேற்றம் செய்யப்படுகிறது. மேலும் வெளிநாட்டுக் கடனை அதிக அளவில் வாங்கி இருப்பதாலும், வெளிநாட்டு இயந்திரங்களை இறக்குமதி செய்திருப்பதாலும், வெளிநாட்டு ஏகபோக கம்பெனிகள் இந்தியாவில் முதலீடு செய்திருப்பதாலும், வெளிநாட்டுப் பொருட்கள் நிபந்தனையின்படி அதிகவிலைக்கு இறக்குமதி செய்யப்படுகின்றன. மத்திய, மாநில அரசுகள் போடுகின்ற நிதித்திட்ட பற்றாக்குறையைச் சரிக்கட்ட வரியை உயர்த்துகிறார்கள். இதைச் சாதகமாக வைத்துக் கொண்டு பொருட்களின் விலையை இரட்டிப்பாக்குகிறார்கள். பொருட்களின் விலையேற்றத்தால் முதலாளிகளும் இடைத்தரகர்களும் வியாபாரிகளும் அதிக இலாபம் பெறுகின்றனர். ஆனால், குறைந்த கூலியைப் பெற்றுக் கொண்டு சந்தைக்கு வருகின்ற தொழிலாளர்கள் பொருட்களை வாங்க முடியாமல் திண்டாடுகிறார்கள். இத்தகு முதலாளிகளின் இலாப வெறியினைத் ‘தோல்’ புதினத்தில்,

> “நாட்டில் உருவாக்கப்பட்ட செயற்கை உணவுப் பஞ்சத்தையும், மக்களிடம் ஏற்பட்டிருக்கும் ஏழ்மை நிலையையும் பயன்படுத்திக் கொண்டு ஆந்திரப் பிரதேசம், நெல் விளையும் பிரதேசமான நெல்லூரில் இருந்தும், குண்டூரிலிருந்தும் கள்ளப்பெர்மிட்டுகள் மூலம் ரெயிலில் நெல் மூட்டைகளைக் கடத்தி வந்து, தனது இரகசிய கோடவுன்களிலும், ரைஸ்மில்களிலும் பதுக்கி வைத்திருப்பவர் நாராயணமூர்த்தி பிள்ளை. பகல் வேளையில் குருவி கொறிப்பதற்குக் கூட நெல்மணியோ, தானியமோ தட்டுப்படாது. மில் வெறிச்சோடிக் கிடக்கும். மாலை மயங்கி இருள் கவிந்துவிட்டால் நெல் மண்டியிலிருந்தும். ரைஸ் மில்லிலிருந்தும் லாரி லாரியாக உணவுத்தானியம் வேற்று ஊர்களுக்கும், ஜில்லாக்களுக்கும் போய்க் கொண்டிருக்கும். உள்ளூர் வியாபாரிகளுக்கும் போதாமையையும், பஞ்சத்தையும் சாக்குச் சொல்லி ஆனை விலை குதிரை விலையில் தானியம் விலையாகும்”[98]

என்று எடுத்துரைக்கிறார் டி. செல்வராஜ்.

சமுதாயக் கேடுகளை உள்ளபடி சித்திரித்துக் காட்டுவது யதார்த்த வாதம் எனப்படுகிறது.

> “யதார்த்தவாதம் உழைப்பாளிகள் சார்பாக வெளிப்படும்பொழுது சோசலிச யதார்த்த வாதத்தின் நோக்கம் முழுமையான மனித ஆளுமையைச் சித்தரிப்பது ஆகும். பழைமையை விமர்சனம் செய்து நிகழ்கால இயக்கங்களைச் சுவீகரித்துக் கொண்டு விடுதலை பெற்ற மனிதனைப் படைத்துக் காட்டுகிறது சோசலிச யதார்த்தவாதம்.”[99]

இந்நிலை ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள அனைத்துப் புதினங்களிலும் காணப்படுகிறது. இதனை,

> “சோசலிச யதார்த்த வாதத்தின்பாற்படுகிறது. இதனைச் சோசலிச யதார்த்தவாத இலக்கியம் பாட்டாளி வர்க்கச் சார்புடையது. உழைப்பையும் உழைப்பாளரையும் இலக்கியத்தில் மையப்படுத்தும் போக்குடையது. உழைக்கும் வர்க்கத்தின் மேன்மையைச் சித்திரித்துக் காட்டுவது சுரண்டலில் இருந்து உழைப்பாளரை விடுவித்து சமத்துவ சமுதாய அமைப்பை நிறுவ புதிய சமூக அரசியல் மாற்றத்தை உருவாக்க முனைப்புடன் வழிவகுப்பது”[100]

என்னும் கருத்து மேலும் வலுப்படுத்துகிறது. இதன் மூலம் சமுதாயக் குறைகளைக் களைய சோசலிச சமுதாயம் அமைய வேண்டும் என்பதே ஆய்வுக்கு உட்படும் புதின ஆசிரியர்களின் தீர்வாகச் சுட்டப்படுகிறது. மக்கள் அனைவரும் எவ்விதப் பாகுபாடுமின்றிச் சமூகம் மற்றும் பொருளாதாரச் சமத்துவம் பெற்றுச் சமமமான மதிப்புடன் வாழ்வதற்கான சோசலிச சமுதாயத்தை அமைப்பதற்கு உரிய திசையைக் காட்டுவதே ஆய்வுப் புதினங்களின் நோக்கம்.

## தொகுப்புரை

சமூகத்தில் நிலவும் வர்க்கப் பிரிவினைகளுக்கு உரிய தீர்வு காணப்பட வேண்டும் என்ற நோக்கில் பொதுவுடைமை இயக்கம் செயல்பட்டு வருகிறது.

ஒவ்வொரு காலகட்டத்திலும் வர்க்கச் செயல்பாடுகள் நிலவி வந்ததைச் சமூக வரலாறுகள் எடுத்துரைக்கின்றன. சங்க காலத்தில் அரசச் சமூகமும், நிலப்பிரபுத்துவச் சமூகமும் நிலைபெற்றிருந்தது. மருதநிலம் வளம்பெற்ற நிலமாகத் திகழ்ந்தது. மருத நிலத்தின் வளமே வர்க்கப் பிரிவினைக்குக் காரணமாக அமைந்தது. நிலத்தின் உரிமையாளன் வளமார்ந்த வாழ்க்கைக்கு உரியவனாக்கப்பட்டான். அவனுக்காகப் பாடுபட்டு உற்பத்தியைச் செய்து கொடுத்தவன் அடிமையாளனாக்கப்பட்டான்.

உலகில் தொழில்முறைச் சமூகம் என்றைக்கு நிலைபெற்றதோ, அன்றைக்கே அவரவர்களுக்குரிய தொழில்களும் நிரந்தமாக்கப்பட்டன. விவசாயக் கூலிவேலைகள் செய்தல், நெசவுசெய்தல், துணிகள் வெளுத்தல், பிணங்களைப் புதைத்தல், தோல் சார்ந்த தொழில்கள், மருத்துவம் என மக்கள் சார்ந்த தொழில்கள், அவரவர்கள் உடைமைப் பொருளாக ஆக்கப்பட்டன. இயந்திரங்கள் பெருகிய காலகட்டத்தில் இயந்திரங்களின் சொந்தக்காரன் ‘முதலாளி’ என்றும் அவனிடம் பணியாற்றுபவன் ‘தொழிலாளி’ என்பதுமான நிலை ஏற்பட்டது. ஆதலால் பண்ணையில் வேலைசெய்து கூலி பெறும் தொழிலாளியும், இயந்திரங்களை இயக்கிக் கூலிபெறும் தொழிலாளியும் அடிமைகளே என்பதை மார்க்சியம் தெளிவுறுத்துகிறது. இந்த அடிமைகளின் பாடுகளையே புதின இலக்கியங்கள் கதைப்போக்கில் பொருளாக்கியுள்ளன.

உழைக்கும் வர்க்கம் நாட்டின் முதுகெலும்பாகச் செயல்படுகிறது. உழைப்பாளர்கள்தான் உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க வீடும் உலகுக்கு அளித்துக் காக்கின்றனர். ஆனால், அந்தப் பாடுபடும் பாட்டாளித் தோழர்களின் வாழ்க்கை வளம் பெறவில்லை. உழைத்து உழைத்து ஓடாகிப் போகிறார்கள். ‘உழைக்கும் தொழிலாளர் வர்க்கமே சமுதாயத்தை இயக்கும் சக்தியாகத் திகழவேண்டும்’ என்பது மார்க்சியக் கொள்கை. ஆனால், இந்தியத் தொழிலாளர்களின் நிலை மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ளது. உழைப்பை மட்டுமே நம்பி வாழும் அனைத்து மக்களும் அடிமைகள் போன்று உரிமைகள் இழந்து அவலங்கொண்டு விளங்குவதை யதார்த்தப் போக்குடன் இன்றையப் படைப்பாளர்கள் படைத்து வருகின்றனர்.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இமையத்தின் ‘கோவேறு கழுதைகள்’, சோலை. சுந்தரபெருமாளின் ‘செந்நெல்’, அறிவழகனின் ‘கழிசடை’, சோ. தர்மனின் ‘கூகை’, டி. செல்வராஜின் ‘மலரும் சருகும்’, தோல்’, திலகவதியின் ‘கல்மரம்’, பூமணியின் ‘பிறகு’ ஆகிய புதினங்கள் வெளிப்படுத்தும் தொழிலாளர் நிலையும், வர்க்கப் போராட்டச் சிந்தனையும் ஆய்வுக்கு உட்படுத்தியதில் தொழிலாளர் நிலையும் முதலாளிகளின் நிலையும் தெளிவாகிறது.

இப்புதினங்களில் இடம்பெறும் தொழிலாளர்கள் பல்வகைத் தொழிற்பிரிவினர் ஆவர். விவசாயக் கூலித்தொழில், துணிவெளுத்துத் தருதல், மனிதக் கழிவுகள் அகற்றுதல், கட்டடத்தொழில் செய்தல் என்ற பல்வகைத் தொழிற்பிரிவினராக விளங்குகின்றனர். இவர்கள் தம்மிடம் நிறைந்துள்ள உழைப்பை மட்டுமே மூலதனமாகக் கொண்டவர்கள். பிறரை அண்டிப் பிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள் என்பது கதைப்போக்கில் காட்டப்பட்டுள்ளது.

பண்ணை முதலாளிகள் தங்கள் நிலங்களில் நிரந்தரப் பணியாளர்களாக அடிமைகளை வைத்துக் கொண்டிருப்பது விளக்கப்பட்டுள்ளது. பிணச்சடங்கு செய்வதற்கும், துணிகளை வெளுத்துத் தருவதற்கும், கமலைகளைத் தைத்துக் கொடுப்பதற்கும் அடிமைகளைத் தொழிலாளர்களை வைத்துக் கொண்டுள்ளனர். இதனைக் 'கூகை', 'கோவேறு கழுதைகள்', 'பிறகு', 'மலரும் சருகும்' ஆகிய புதினங்கள் காட்டுகின்றன. கூலி விவசாயத் தொழிலாளர்களைப் பற்றிச் 'செந்நெல்' புதினம் எடுத்துரைக்கிறது. சாக்கடைகளைச் சுத்தம் செய்யும் தூய்மைப் பணியாளர் வாழ்வியல் சிக்கல்களைக் 'கழிசடை' புதினம் எடுத்துரைக்கிறது.

விவசாயக் கூலித் தொழிலாளர்கள் குறைந்த அளவிலான நிலங்களைப் பெற்றிருந்தாலும் அது அவர்களின் பொருளாதாரத் தேவைகளுக்காக ஆண்டைகளிடம் ஒத்திக்கு வைக்கப்பட்டு, பின்னர் மீட்கவே முடியாத நிலைக்குச் சென்று விடுவதனை 'மலரும் சருகும்'இ 'பிறகு'இ 'கூகை' ஆகிய புதினங்களின் கதை நிகழ்வுகள் காட்டுகின்றன. இழந்த நிலங்களை மீட்பதற்காக அவர்கள் படும் இன்னல்கள், போராட்டங்கள், எழுச்சிகள் ஆகியன புதினங்களில் நிகழ்வுகளாக்கப்பட்டுள்ளன.

பண்ணைகளில் அடிமைத் தொழிலாளர்களாகச் சேவகம் பார்த்தவர்கள். பண்ணைகளின் தொழிற்சாலைகளில் தொழிலாளர்களாக மாறினர். தீப்பெட்டித் தொழில், தோல் பதனிடுதல், பருத்தி ஆலை என விவசாயக்கூலிகளின் நகர்ப்புற வருகையும் அதனால் எழுந்த தொழிலியல் மாற்றங்களும் புதினங்களில் காட்டப்பட்டுள்ளன. பண்ணைகளில் இருந்த அடிமைவாழ்வே, தொழிற்கூடங்களிலும் நிலவியதைப் புதினங்கள் காட்டுகின்றன.

முறி எழுதி அடிமையாவதையும், ஒருமுறை முறி எழுதிக் கொடுத்த தொழிலாளி பின்னர் அதிலிருந்து மீளவே முடியாத நிலைக்குத் தள்ளப்படுவதையும் 'தோல்' புதினம் எடுத்துரைக்கிறது.

தொழிற்களங்களில் பணியாற்றும் தொழிலாளர்களுக்குப் பணிப்பாதுகாப்பு இல்லாத நிலை, மருத்துவப் பாதுகாப்பின்மை, பெண்களுக்குப் பாதுகாப்பின்மை நிலவுவது காட்டப்படுகிறது. இதனால் தொழிலாளர்கள் பல விதங்களிலும் பாதிப்புக்கு உள்ளாவது நிகழ்வுகளின் போக்கில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தொழிலாளர்கள் தங்கள் வாழ்வியலில் முன்னேறுவதற்குத் தடைக்கற்களாகத் தொழிலியல் துயரங்கள், தொழிலின் நிலையற்ற தன்மை, பொருளாதாரச் சுமை, தீரா நோய்க்கு ஆளாதல், செய்யாத தவற்றுக்குத் தண்டனை பெறுதல், முதலாளிகளின் அடக்குமுறைகள், குடிப்பழக்கத்திற்கு ஆளாதல், மருத்துவ வசதியின்மை, வட்டிக்கு வாங்குதல் ஆகியன இருப்பது தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

முதலாளிகள் தொழிலாளர்களை அடக்குவதற்குப் பல்வேறு உத்திகளைக் கையாள்வது காட்டப்பட்டுள்ளது. இவ்வாறான தொழிலாளர் அடக்குமுறைகளை, அரசு அதிகாரிகள் துணைபோதல், அடியாட்களை வைத்து மிரட்டுதல், தண்டனைகள் தருதல், காவல்துறையை வைத்து அடக்குதல், சிறையில் அடைத்தல், சேரி மக்களைச் சூறையாடுதல், பதுக்குதல், ஊழல் கொடுமைகள் என்னும் நிலைகளில் பாகுபடுத்திப் பார்க்கமுடிகிறது.

அடக்குமுறைகளுக்குரிய தீர்வுகளைப் பொதுவுடைமை இயக்கச் சிந்தனையே பெற்றுத்தரும் என்பது உணர்த்தப்படுகிறது. அடித்தள மக்களின் வாழ்நிலைகளை நடப்பியலாகக் கூறும் இப்புதினங்களில் படைப்பாசிரியர்களின் பொது நோக்கமாகச் சோசலிச சமுதாயத்தை முன்னிறுத்துவதைக் காணமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்**


1. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், முதல்தொகுதி, ப. 141.
2. ஏங்கெல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 56.
3. வெ. பெருமாள்சாமி, சங்க காலத் தமிழகத்தின் சமூகநிலை, ப. 18.
4. தொல்.பொருள். அகத்திணையியல், நூ. 25.
5. மேலது, மரபியல், நூ. 84.
6. அ. மாரியப்பன், (க.ஆ.) தமிழக வரலாறு ஒரு சமுதாயக் கண்ணோட்டம், ப. 28.
7. மா. நன்னன், பெரியார் கணினி, ப. 64.
8. பி. யோகீஸ்வரன், தமிழ்க்கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், ப. 190.
9. பொன்னீலன், புதிய தரிசங்கள், ப.513.
10. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள், ப.323.
11. க.கைலாசபதி, இலக்கியச் சிந்தனைகள், ப.26.
12. அருணன், அருணன் கட்டுரைகள், ப.26.
13. மா. செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர், ப.118.
14. V.I.Lenin, Materialism, Vol. 38, p. 233.
15. பூமணி, பிறகு, ப.8.
16. டி.செல்வராஜ், தோல், பக்.67-68.
17. சோ. தர்மன், கூகை, ப.35.
18. இமையம், கோவேறு கழுதைகள், ப.38.
19. மேலது, ப.38.
20. பூமணி, பிறகு, ப.26.
21. சோ. தர்மன், கூகை, ப.91.
22. மேலது, ப.26.
23. இமையம், கோவேறு கழுதைகள், ப.7.
24. மேலது, ப.39.
25. அ. மாரியப்பன், (க.ஆ.) தமிழக வரலாறு ஒரு சமுதாயக் கண்ணோட்டம், ப. 29.
26. சோ. தர்மன், கூகை, ப.259.
27. மேலது, ப.255.
28. ஆ.சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமை முறை, ப. 56.
29. தொழிலாளர் நலனும் வேலை வாய்ப்புப் பணிகளும், ப. 808 தொழிலாளர் நலவாரியக் கையேடு, 2010. தமிழ்நாடு அரசு.
30. ஆ.சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமை முறை, ப. 38.
31. மேலது, பக். 38-39.
32. டி.செல்வராஜ், தோல், ப.38.

33. மேலது, ப.3.
34. மேலது, ப.19.
35. மேலது, ப.35.
36. மேலது, ப.44.
37. மேலது, ப.44.
38. அறிவழகன், கழிசடை, ப.207.
39. திலகவதி, கல்மரம், முன்னுரை, ப. எனை.
40. மேலது, ப.143.
41. பூமணி, பிறகு, ப.46.
42. மேலது, ப.33.
43. இமையம், கோவேறு கழுதைகள், ப.29.
44. பூமணி, பிறகு, ப.152.
45. இமையம், கோவேறு கழுதைகள், ப.39.
46. சோலை சுந்தரபெருமாள், செந்நேல், ப.129.
47. சே.த. சுமதி. வெண்மணி படுகொலைகள் வரலாறும் கலை இலக்கியப் பதிவுகளும், ப.67.
48. திலகவதி, கல்மரம், ப.146.
49. அறிவழகன், கழிசடை, ப.44.
50. மேலது, ப.43.
51. திலகவதி, கல்மரம், ப.41.
52. மேலது, ப.6.
53. இமையம், கோவேறு கழுதைகள், ப.153.
54. டி.செல்வராஜ், தோல், பக்.9-10.
55. சோ. தர்மன் கூகை, ப.261.
56. அறிவழகன், கழிசடை, ப.29.
57. டி.செல்வராஜ், தோல், ப.56.
58. மேலது, ப.56.
59. அறிவழகன், கழிசடை, ப.29.
60. டி.செல்வராஜ், தோல், ப.23.
61. மேலது, ப.31.
62. அறிவழகன், கழிசடை, ப.92.
63. மேலது, ப.29.
64. மேலது, ப.179.
65. டி.செல்வராஜ், தோல், ப.6.
66. திலகவதி, கல்மரம், ப.38.
67. சோ. தர்மன் கூகை, ப.224.

68. டி.செல்வராஜ், தோல், ப.59.
69. மேலது, ப.76.
70. மேலது,
71. மேலது, ப.196.
72. மேலது, ப.280.
73. அறிவழகன், கழிசடை, ப.29.
74. டி.செல்வராஜ், தோல், ப.139.
75. மேலது, ப.240.
76. சோ. தர்மன் கூகை, ப.100.
77. மேலது, ப.102.
78. மேலது, ப.170.
79. அறிவழகன், கழிசடை, ப.188.
80. மேலது, ப.29.
81. சோ. தர்மன் கூகை, ப.171.
82. மேலது, ப.171.
83. டி.செல்வராஜ், தோல், ப.416.
84. மேலது, ப.417.
85. டி.செல்வராஜ், மலரும் சருகும், ப.117.
86. டி.செல்வராஜ், தோல், ப.409.
87. சோ. தர்மன் கூகை, ப.55.
88. டி.செல்வராஜ், தோல், ப.187.
89. மேலது, ப.188.
90. திலகவதி, கல்மரம், ப.9.
91. ஏ.எஸ்.கே., டாக்டர் அம்பேத்கர் வாழ்க்கை வரலாறும் தாழ்த்தப்பட்ட மக்கள் பிரச்சினையும், ப. 69.
92. பூமணி, பிறகு, ப.36.
93. மேலது, ப.40.
94. அறிவழகன், கழிசடை, ப.46.
95. பூமணி, பிறகு, ப.36.
96. அறிவழகன், கழிசடை, ப.49.
97. டி.செல்வராஜ், தோல், ப.516.
98. மேலது, பக்.515-516.
99. எஸ்.தோத்தாத்ரி, 'மர்க்சிய இலக்கியக் கொள்கை' இலக்கிய இசங்கள், ப.117.
100. பா. வீரமணி, பட்டுக்கோட்டையாரின் பாட்டுத் திறம் ஒரு சமூகப் பார்வை, ப.186.

## இயல் - 3

## புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் ஒடுக்கப்பட்டோர் வாழ்வியலும்

### முன்னுரை

மனித வாழ்வின் சிக்கல்களையும், எதிர்ப்புகளையும், ஏமாற்றங்களையும், ஏற்றங்களையும் எடுத்துரைப்பதற்கேற்ற வடிவமாக இலக்கியமே திகழ்கிறது. அதிலும் குறிப்பாகப் புனைகதை இலக்கியங்கள் சமூகவரலாற்றுப் புரிதலுக்குத் துணைபுரிகின்றன. தமிழ் இலக்கியத்தில் வழிவழி வந்த மரபுகளை உடைத்தெறிந்துப் புதுமைச்சமூகமும் பொதுமைச்சமூகமும் காணவிழைந்ததன் விளைவாகப் பொதுவுடைமைச் சித்தாந்தத்தைப் புகட்டும் புதினங்கள் தோன்றின. சமூகத்தின் விளிம்புநிலையினரான ஒடுக்கப்பட்ட மக்கள் வளர்ச்சியில் புதினங்களின் பங்கு அளப்பரியது. அவ்வகையில் புதினங்கள் எடுத்துரைக்கும் ஒடுக்கப்பட்ட அடித்தட்டு மக்களின் வாழ்வியல் நிலையும், பொதுவுடைமை காணவேண்டியதன் அவசியமும் இவ்வியலில் புதினங்களின் வழியாக ஆராயப்படுகிறது.

### இலக்கியம் மானுட வாழ்வின் பதிவு

இலக்கியத்தின் சிறப்பினையும் அதன் வரலாற்றியல் தன்மையையும், சமூக இருப்பியலையும் குறித்து தி.சு. நடராசன்,

> "மனிதனது படைப்புகளில் இலக்கியம் மிகவும் அழகானது; மிகவும் சக்தி வாய்ந்தது. மனித குலத்தில் தானும் ஒருவனாய் வாழும் மனிதன், வாழ்க்கை நடைமுறைகளின் காரணமாக அமையும் உணர்வு நிலையின் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தைத் தோற்றுவிக்கின்றான். அவனைப் போன்ற பிறர் அதனை எதிர்கொள்கிறார்கள். எனவே, இலக்கியமானது அதன் தோற்றம், அதன் பொருள், அதன் பயன்பாடு ஆகிய மூன்று நிலைகளிலும் மனிதகுலத் தொடர்புடையதாக விளங்குகின்றது. இது இலக்கியத்தின் அடிப்படைப் பண்பு"[1]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார்.

இதனால் இலக்கியம் மானுடவாழ்க்கைப் பதிவாக விளங்குவது தெளிவாகிறது. குறிப்பாகப் புதின இலக்கியங்கள் சமூகச் சிக்கல்களை மையமிட்டுத் தோன்றுகின்றன.

### சமூகம் என்பதன் விளக்கம்

தொடக்கக் காலத்தில் மனிதன் காட்டு விலங்குகளோடு இணைந்து வாழந்து கொண்டிருந்தான் காலம் செல்லச் செல்ல ஒருவருடன் இணைந்து வாழத் தொடங்கினர். இதுவே சமூகம் ஆகிறது.

“ஆதிமனிதர்கள் காட்டு மேட்டுகளில், தனியாக ஆதரவற்ற விலங்குகளுடன் தாமும் ஒரு விலங்கயா் இருந்த நிலை மாறி அவா்கள் கூட்டம் கூட்டமாய் ஒன்றி, ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்ட போதே சமூகம் உருவாயிற்று எனலாம்”[2]

என்னும் கருத்துச் சமூகத்தின் தோற்றுவாயைப் புலப்படுத்துகிறது. இக்கருத்திற்கேற்ப, தனிமனிதா்களால் ஒருவரோடொருவா் இணைந்து வாழ்ந்த,

“தொழிற்புரட்சி என்னும் இயந்திரப்புரட்சி தோன்றியபின் ஏற்பட்ட சமுதாய மாற்றங்களை அறிவதற்கும், மாற்றமடைந்த சமுதாயத்தின் வாழ்க்கையைப் பற்றிய மக்களின் பாா்வை, சிந்தனை போன்றவற்றை அறிவதற்கும் புனைகதைகள் சிறப்பாக புதினங்கள் சமகாலச் சான்றாகக் கருதப்படுகின்றன”[3]

என்கிறது சமூக அறிவியற் கலைக்களஞ்சியம். இக்கருத்து, சிக்கலை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் புதின இலக்கியம். அதனை விரிவாகப் படைத்துக் காட்டும் கலை வடிவமாகவும் அமைவதைத் தெளிவுபடுத்துகிறது.

**சமுதாயச் சிக்கல்**

மனிதன் முதலில் குடும்பமாகவும் பின்னா் சமூகமாகவும் இணைந்து வாழ்ந்தான். பல சமூகக் குழுக்கள் ஒன்று சோ்ந்து சமுதாயம் உருக்கொண்ட போது கூடவே சிக்கலும் தோன்றியது.

“மனிதன் கூடி வாழத்தொடங்கி என்று சமுதாயத்தைத் தோற்றுவித்தானோ அன்றே சமுதாயச் சிக்கல்களும் தோன்றிவிட்டன எனலாம்.”[4]

மனித சமுதாயம் தோன்றியது முதல் ஒவ்வொரு காலக் கட்டத்திலும் பல்வேறு சிக்கல்கள் தோன்றி வண்ணம் உள்ளன. இவற்றிற்குத் தீா்வுகாண அவ்வக்காலத்தைச் சாா்ந்த முயற்சித்திருப்பதையும் இலக்கிய வரலாற்றில் காணமுடிகிறது.

சமூகச் சிக்கல் என்பதற்குச் சமூகவியல் அறிஞா்கள் தரும் விளக்கம் இங்குக் குறிக்கத்தக்கது.

“சமூகத்தின் சக்திகள் அனைத்தையும் திரட்டிப் போராடினால் ஒழிய வேறு வழியில்லை என்று குறிப்பிட்டளவு எண்ணிக்கையிலான மக்களைச் சிந்திக்கத் தூண்டுகின்ற விரும்பத்தகாதச் சமூக நிலைமையும் ஒரு சமூகச் சிக்கல் தான்”[5] என விளக்குவா் சமூகவியல் அறிஞா்கள்.

இக்கூற்று, சமுதயச் சீா்கேடுகளுக்கான காரணம் என்னவென்பதை அறிந்துகொண்டு அதற்கேற்றவாறு தீா்வுகாண முயல வேண்டுமென்பதைக் கோடிட்டுக் காட்டுகிறது.

மேலை நாட்டார் வரவாலும் தகவல் தொடர்பு சாதனம் அச்சுக்கலை ஆகியவற்றின் பயனாலும் தமிழில் தோன்றிய புதின இலக்கியம் தொடக்கத்தில் அரசன்-அரசி ஆகியோரை மையமிட்டு அமைகிறது. அவற்றின் ஊடேயும் சமுதாயச் சிந்தனை இழையோடுவதைக் காணமுடிகிறது. நாட்டின் விடுதலைக்குப் பின் தோன்றிய புதினங்கள் பெரும்பாலும் சமுதாயத்தை வெளிப்படுத்தும் தன்மையிலேயே அமைந்தன. ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்கள் சமுதாயத்தில் காணப்படும் பல சிக்கல்கள் குறித்து விரிவான சிந்தனைகள் வெளிப்பட்டுள்ளமை இங்குக் குறிக்கத்தக்கது.

**இலக்கியமும் சமுதாயமும்**

சமூகமாகக் கூடிவாழும் மக்களிடையே வாழ்க்கையில் பிரச்சனைகள் எல்லாக் காலத்திலும் இருந்துவந்துள்ளன. பலதரப்பட்ட காரணங்களினால் உண்டாகும் இச்சமுதாயப் பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து அவற்றின் வீரியத்தைச் செயலிழக்கச் செய்யும் பணியினைப் புதினங்கள் மேற்கொண்டு வருகின்றன.

நாகரிகத் தொடர்புடைய ஒத்த குழுவுக்கு மாற்றொன்றுடன் ஏற்படும் பாதிப்புகளே சமுதாயப் பிரச்சினைகளாக உருவெடுக்கின்றன. வரலாற்றுப் பின்னணியில் பார்த்தால் சமுதாயப் பிரச்சினைகளின் கால மாற்றத்திற்குத் தக்கபடி சட்டம் மாறும்போது கூடுதலாகிறது. அரசியல் செல்வாக்கினால் ஒரு குழு மற்றொன்றின்மீது ஆதிக்கம் செலுத்த முயலும்போது பிரச்சினை தோன்றுகின்றது என்று சமூகவியல் அகராதி கூறுகிறது.”[6] மனிதன் இச்சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய கடமையிலிருந்து தவறும்போதும், சமுதாயம் மனிதனுக்குச் செய்ய வேண்டிய நியாயத்திலிருந்து விலகும்போதும் பிரச்சனைகள் தோன்றுவதற்கு ஏதுவாகிறது.

க.ப. அறவாணன், “சமுதாயத்தில் நிலவும் ஏற்றத்தாழ்வுகளே சமுதாயப் பிரச்சினைகளுக்கு மூலகாரணம்”[7] என்று கூறுகிறார். இவ்வாறான சமூக நிலை அமைந்தமைக்கான காரணத்தை,

> “சமூகத்தில் உற்பத்தி செய்பவர்கள், உற்பத்தியை அமைப்பவர்கள் என்று அமைந்துவிட்ட பிரிவே சிக்கல் அனைத்திற்கும் மூலக்காரணம். உணவையும் பலவற்றையும் உற்பத்தி செய்பவர் உழைக்கும் பிரிவினர் ஆயினர். தாம் உழைக்காமல் உழைப்பைத் திட்டமிட்டு அமைத்து உழைப்பால் கிடைக்கும் பெரும் பயனை நுகர்பவர்கள் உற்பத்தியை அமைப்பவர்கள் ஆயினர். உழைப்பை அமைப்பவர்கள் உழைப்பின் கடுமையிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டனர். இவர்களே மேலைச் சிந்தனையாளர்களாக, மத குருக்களாக, மந்திர தந்திரங்களை நடத்துபவர்களாக, பொருள் உற்பத்தி உழைப்பிலிருந்து விலகிச் செல்லப்பட்டனர்”[8]

என்னும் கூற்றின் மூலம் அறியவியலுகிறது. இதனால் சமூகத்தில் ஏற்றத்தாழ்வே சமுதாயப் பிரச்சினைகளுக்கு மூல காரணமாக அமைவது தெளிவாகிறது.

> “சமூகப் பிரச்சினைகள் என்பது இடத்துக்கு இடம், காலத்துக்குக் காலம் மாறும் தன்மையுடையன. சூழலுக்கு ஏற்பவும் புதியபுதிய சமூகப் பிரச்சினைகள் தோன்றுதலும் உண்டு. விடுதலைக்குமுன் சமூகப் பிரச்சினையாகக் கருதாத மக்கட்தொகைப் பெருக்கம் இன்றைய காலகட்டத்தில் முக்கியமான பிரச்சினையாக நிலவி வருகின்றது. மக்கள் அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் வரை சமூக நிகழ்வுகள் அவர்களுக்குப் பிரச்சினையாகத் தென்படுவதில்லை. ஆனால் ஓரளவு கல்வி அறிவு பெற்று விழிப்புணர்வு பெற்றவர்களாய் மாறும்போது, சமுதாயத்தில் தங்களின் நிலையினை உணரத் தொடங்குகின்றனர். எனவே, இச்சமூக அமைப்புகளான குடும்பம், சமயம், சாதி, அரசியல் ஆகியவற்றின்மீது இம்மக்களின் கவனம் செல்லத் தொடங்குகின்றது. இவ்வமைப்புகளில் ஏற்படும் பிரச்சினைகளே சமூகப் பிரச்சினைகளாக மாற்றம் பெறுகின்றன”[9]

என்னும் கூற்றும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**பொதுவுடைமையின் சிறப்பு**

“பொதுவுடைமை என்னும் சோசலிசம் என்பது ‘சக்திக்கேற்ற உழைப்பு; உழைப்புக்கேற்ற ஊதியம்’ என்பதை அடிப்படையாகக் கொண்டது. அதாவது புரட்சி ஏற்பட்டு சோசலிச சமூகம் அமைந்தால் அச்சமூகத்தில் உள்ள அனைவரும் அவரவர் உழைப்புக்கேற்ப ஊதியம் பெறுவர் என்பது இதன் பொருளாகும்.”[10]

“பொதுவுடைமை என்பது உற்பத்திச் சாதனங்கள் மக்களின் உடைமையாக அரசின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும். திறமைக்கு ஏற்ற உழைப்பு, தேவைக்கு ஏற்ற பங்கீடு கிடைக்கச் செய்ய வேண்டும். வர்க்க பேதம் இல்லாத சமுதாயம் அமைய வேண்டும் என்பனவற்றை வலியுறுத்தும் அரசியல் கோட்பாடாகும்.”[11] இத்தகு பொதுவுடைமையின் சிறப்பினைப் பாரதிதாசன்,

> “பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
> புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
> போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்
> புனிதமோ டதை எங்கள் உயிரென்று காப்போம்”[12]

என்று பாடிச் சென்றுள்ளார்.

**சமூக வகுப்புகள்**

முதலாளித்துவத்தில் இரு சமூக வகுப்புகள் உள்ளன. ஒன்று 'பாட்டாளி வா்க்கம்'. இது வாழ்வதற்காக உழைத்தே ஆக வேண்டிய கட்டாயத்தில் உள்ளவர்களைக் குறிப்பதாகும். இவர்கள் சமூகத்தில் பெரும்பான்மை எண்ணிக்கையைக் கொண்டிருப்பவா்களாக உள்ளனர். இரண்டாவது 'முதலாளி வா்க்கம்'. இது பாட்டாளி வா்க்கத்தின் உழைப்பை, உற்பத்தியை தனிப்பட்ட ரீதியில் உரிமை கோரி அதன் மூலம் இலாபமீட்டும் சமூகத்தின் சிறுபான்மை மக்களைக் குறிப்பதாகும். பொதுவுடைமையின் குறிக்கோள் உற்பத்தியைப் பொதுவுடைமை ஆக்குவதாகும்.

இந்தியச் சமூகத்தில் சாதியும் மதமும் மக்களிடையே பிரிவுகளை ஏற்படுத்தும் ஒன்றாகவே ஒவ்வொரு காலகட்டத்திலும் இருந்துவந்துள்ளன. இந்தச் சிக்கலில் சிக்கித் தவித்து, துயரத்திற்கு உள்ளாகிறவர்கள் பெரும்பான்மை ஒடுக்கப்பட்ட மக்களே. தான் பிறந்த சாதியின் பெயராலும், செய்யும் தொழிலின் பெயராலும், இருக்கும் வாழ்வியல் நிலைப்பாட்டின் பெயராலும், பொருளாதாரப் பின்னடைவினாலும், இவர்கள் அன்றாடம் பெரும் சிக்கல்களைச் சந்தித்து வருகின்றனர். இவ்வாறான சிக்கல்களையே மார்க்சியச் சிந்தனை பெற்ற புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்கள் வெளிப்படுத்தும் ஒடுக்கப்பட்டோர் வாழ்வியல் நிலை,

- வாழ்விடச் சிக்கல்கள்
- சாதியச் சிக்கல்கள்
- அரசியல் சிக்கல்கள்

என்று வகைப்படுத்தி ஆராயப்படுகிறது.

**வாழ்விடச் சிக்கல்கள்**

வாழ்விடச் சிக்கலில் முதலில் இடம்பெறுவது விவசாயக் கூலிகளின் இருப்பிடங்கள் தான். கிராமங்கள் ஒவ்வொரு சாதியினர்க்கும் எனத் தனித்தனியாகப் பிரிந்து கிடக்கின்றன. சாதி இறுக்கம் கிராமங்களை ஆட்டிப் படைக்கிறது.

இந்தியாவின் முதுகெலும்பாகத் திகழ்வது கிராமங்களே. பெரும்பான்மை மக்கள் வசிக்கும் பகுதிகள் யாவும் கிராமங்களாகவே உள்ளன. கிராமங்களில் சாதி, ஆட்சி அதிகாரம் இறுக்கம் பெற்றுத் திகழ்கிறது. கிராமங்களின் வாழும் விவசாயக் கூலிகளின் வாழ்க்கை முறை சிறப்பான நிலையில் இல்லை. காலம்காலமாக உழைக்கும் விவசாயக் கூலிகள் ஆண்டைகளின் அடிமைகளாகவே இருந்து வருகின்றனர். இந்தியக் கிராமங்கள் சாதிப் பிடிமானத்திற்குள் இறுக்கமான பண்பினைக் கொண்டவையாகும்.

பெருநிலக்கிழார்களாகப் பகட்டான வாழ்க்கை வாழும் ஆண்டைகள் ஒருபுறமும், நிலமில்லாத அன்றாடக் கூலி வேலை செய்யும் விவசாயச் சிறுகுடிகள் மறுபுறமும் என வரையறுத்துக் கொண்ட வாழ்க்கை முறையினை இந்தியக் கிராமங்கள் கொண்டுள்ளன. பொதுநிலையில் நகரங்களில் வாழும் தாழ்த்தப்பட்ட மக்களைவிட, கிராமங்களில் வாழும் தாழ்த்தப்பட்ட மக்கள் சந்திக்கும் பிரச்சினைகள் ஏராளமானவையாக உள்ளன.

இந்தியக் கிராமங்கள் சாதியக் கட்டுக்குள்ளும், ஆதிக்கநிலையிலும் இருந்துகொண்டு எந்தவொரு மாற்றமும் பெறாமல் பழமையில் ஊறிக் கிடப்பதனை, மெட்காப் என்பார், “கிராமச் சமூகங்கள் வரையறுக்கப்பட்ட சிறிய குடியரசுகளாகும். ஏறத்தாழ அவை தங்கள் தேவைகள் அனைத்தையும் தங்களிடமே பெற்றிருக்கின்றன. வெளித் தொடர்பின்றிச் சுதந்திரமாய் இயங்குகின்றன. எல்லாமே நிலையில்லாமல் மாறிக் கொண்டிருக்கும் பொழுது இந்தியக் கிராமங்கள் மட்டும் மாற்றம் நிகழாமல் இருக்கின்றன”[13] என்று குறிப்பிடுவதன் வழியாக உணர்ந்துகொள்ளலாம்.

ஆட்சிமாற்றங்கள், புரட்சிகள், படையெடுப்புகளுக்குப் பின்னும் இன்னும் கிராமங்கள் மாறாமல்தான் உள்ளன. கிராமங்கள் எண்ணற்ற சாதிகளைக் கொண்டு உள்ளன. கிராமமும் மக்களும் தாழ்த்தப்படாதவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் என்ற இருபிரிவாகப் பிரிக்கப்படுகின்றனர். தாழ்த்தப்படாதவர்கள் பெரும்பான்மையினராகவும், தாழ்த்தப்பட்டவர்கள் சிறுபான்மையினராகவும் இருக்கின்றனர். தாழ்த்தப்படாதவர்கள் கிராமங்களுக்குள்ளும், தாழ்த்தப்பட்டவர்கள் கிராமங்களுக்கு வெளியேயும் வாழ்ந்து வருகின்றனர். சமூக அளவில் தாழ்த்தப்படாதவர்கள் ஆளும் வர்க்கமாகவும், தாழ்த்தப்பட்டவர்கள் அடிமைகளாகவும் இருக்கும் நிலை உள்ளது.

தாழ்த்தப்பட்டவர்கள் இந்துக்கள் இருக்கும் குடியிருப்புகளிலிருந்து விலகி, தனித்த சேரிகளில் வாழ்ந்தனர். இவர்கள் வாழும் சேரிகள் தெற்குத் திசையை நோக்கித்தான் இருக்க வேண்டும். இதற்குக் காரணம் தெற்குத் திசைதான் அமங்களமான திசையாகும், இவர்கள் வாழுமிடம் சேரி என்றழைக்கப்பட்டது.

**தாழ்த்தப்பட்டவர்கள் குடியிருப்புகள்**

கிராமங்களில் அந்தந்த சாதிக்கென்று தனித்தனிக் குடியிருப்புகள் அமைத்துக் கொள்வது காலம்காலமாக இருந்து வந்துள்ளதனை இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் போன்ற ஆவணங்கள் காட்டுகின்றன. மக்கள் வாழ்ந்த இடங்கள் பார்ப்பனச்சேரி, பறைச்சேரி, பள்ளச்சேரி, உழவர்சேரி என்று அழைக்கப்பட்டன. ஊருக்குள்ளேயே குடியிருக்க அனுமதிக்கப்பட்ட சூத்திர சாதியினர்க்குத் தனித்தெருக்கள் இருந்தன. ஊருக்குள் பார்ப்பனர்கள், வேளாளர், வன்னியர், செட்டியார், இடையர், சாணார் முதலியோர் வாழ்கின்றனர். இவர்களைச் சார்ந்து தச்சர், வண்ணார், குயவர், நாவிதர் முதலிய தொழிலாளர்கள் ஊருக்கு ஒதுக்குப் புறத்தில் வாழ்கின்றனர். ஊரிலிருந்து சற்று இடைவெளிவிட்டு

தாழ்த்தப்பட்டவர்களான பள்ளர்கள், பறையர்கள் வாழ்கின்றனர். சாதியின் பெயரால் ஒடுக்கப்பட்ட மக்கள் வாழும் இடங்களும் ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் தள்ளி வைப்பதிலிருந்தே அவர்களின் வாழ்வியல் நிலை நன்கு தெளிவாகும்.

கிராமங்களில் ஒடுக்கப்பட்ட மக்கள் வாழும் வசிப்பிடங்கள் தகவல் தொழில்நுட்ப வளர்ச்சி முன்னேற்றம் பெற்றுள்ள இந்த காலகட்டத்திலும் ஊருக்கு ஒதுக்குப் புறத்தில் மக்கள் வாழ்வதற்குச் சற்றும் தகுதியற்ற இடங்களாகவே உள்ளன. ஆதிக்கச் சாதி மக்கள் வசிக்கும் பகுதிகள் மேட்டுப் பகுதிகளிலும், தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதிகள் பள்ளமான இடங்களிலும் இருக்கும்படியான நிலையே இந்தியாவில் பெரும்பான்மை கிராமங்களின் அமைப்பு முறையாக உள்ளது. தமிழகத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் இருப்பிடங்கள் சாதியின் பெயரால் எந்த அளவுக்குக் கட்டமைக்கப்பட்டுள்ளது என்பதனையும் கிராமங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதிகள் ஊருக்கு ஒதுக்குப் புறங்களிலும், சிறு குடிசைகளாகவும் மிகவும் கீழான நிலையில் இருக்கும் நிலைப்பாட்டினையும் 'செந்நெல்' புதினத்தில்,

> "தேவூருக்கு தெக்கால கீழ்வெம்மணி. நஞ்சையும் புஞ்சையுமா முப்பது வேலி. மாவட… மரவடையோட மவுத்துப் போயிருக்கிற ஊரு. பொட்டி போல அடக்கமா இருக்கு. அதில் உள்ள கீழத்தெரு மட்டும் கொஞ்சம் துருத்திக்கிட்டு அனாந்தரமா கெடக்கு. இந்த கீழத்தெருவில் உள்ள பறையனுக்கும் பள்ளனுக்கும் அடிமனை பட்டா உரிமை கிடையாது. மேலவூட்டு நாடார் பண்ணை தன்னோட பண்ணை அடிமைகளுக்கான ஒத்த ஒத்த குடிசையா கட்டிக்க உரிமை கொடுத்து எத்தனையோ மாமாங்கமா ஆயிட்டு. ஆனா குடிசைகள் மட்டும் அப்படியேத்தான் இருந்துக்கிட்டு இருக்கு"[14]

என்று காட்சிப்படுத்துகின்றார் பூமணி. தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதிகள் மனிதர்கள் வாழ்வதற்கு அருகதையற்றவையாக உள்ளன. சுத்தம் சுகாதாரம் ஏதுமின்றி, எந்தவொரு அடிப்படை வசதிவாய்ப்பும் இல்லாதவையாக, கழிவுநீர் கசிந்து ஓடும் ஓடைப்பகுதிகளாக, கொசுக்கள், பன்றிகள் உலவும் இடமாக, மனித இனம் வாழ்வதற்கே தகுதியில்லாதவையாகத் திகழும் நிலையை 'மலரும் சருகும்' புதினத்தில்,

> "சேரியைச் சுற்றிலும் தேங்கி நிற்கும் நீர்த்தேக்கங்களிலும், ஊருணியிலும் கொசுக்கள் முட்டையிட்டு வம்சவிருத்தி செய்து கொண்டதால் அவை அம்மக்களை இரவெல்லாம் உபத்திரவம் செய்தன. சிலருக்குக் கொசுக்கடியால் நோய்கூட ஏற்பட்டது. இரவில் அவர்களைத் தூங்கவிடாமல் தவளைகளும், நண்டுகளும் சதா ஓலமிட்டுக் கொண்டு இருந்தன. இந்தத் துன்பங்களையெல்லாம் அவர்கள் மன நிறைவுடன் ஏற்றுக் கொண்டார்கள்"[15]

என்று படைத்துக்காட்டுகிறார் டி. செல்வராஜ். ஊருக்கே துணிகளை வெளுத்துத் தரும் வண்ணார்களின் வசிப்பிடங்கள் எத்தகு சுகாதாரமற்ற நிலையில் உள்ளது என்பதனை,

"ஊருக்கும் வண்ணான், சக்கிலியக் குடிக்கும் இடையே கருவேலங்காட்டைப் பிளந்து ஒரு பாதை இருக்கிறது. அது கொடிபோல் வளைந்து, நெளிந்து இருக்கும். ஒரு ஆள் மட்டுமே நடக்க வசதியான பாதை. இது மழைக்காலத்தில் முழங்கால் வரை சேறு வாங்கும். சதக் புதக்கென்றுதான் நடக்க வேண்டும். வெயில் காலமோ, மழைக்காலமோ எப்போதும் இந்தப் புதருக்குள் பன்றிகளின் உறுமல் நாய்களின் குரைப்புக் கேட்கும். சில இரவுகளில் நரிகளின் ஊளைச்சத்தமும் கேட்கும். இந்தச் சத்தமெல்லாம் ஆரோக்கியம், பெரியான் குடும்பத்து நபர்களை ஒன்றும் செய்யாது"[16]

என்று சுட்டிக்காட்டுகிறார் இமையம். மனிதன் வாழ்வதற்கு அருகதையற்ற பகுதிகளே தாழ்த்தப்பட்ட மக்கள் வாழ்வதற்கான இடமாக இருப்பது இதன் வழியாகக் காட்டப்படுகிறது.

ஒடுக்கப்பட்ட விளிம்புநிலையினர் வசிக்கும் வீடுகள் மிகமிக எளிமை யானவையாய், உள்ளும் புறமும் அழுக்கும் சேறும் சகதியுமாய் இருப்பதனையும், வீடுகளை ஒட்டிய இடங்களில் மாடுகளும், பன்றிகளும் மேய்ந்து கொண்டிருப்பதனையும் 'பிறகு' நாவலில்,

"கிழக்காமல் பார்த்தால் அடித்துப் போட்ட பாம்பாய் சக்கிலியக்குடி கோணிக்கிடக்கிறது. பெரும்பாலும் ஒற்றை முகடு போட்ட கூரை வீடுகள். கட்டை கட்டையாக, ஒரு இருபது தேறும். வீட்டுக் கொட்டாரங்களில் குளம்புத் தடம்பட்டு உளம்பலாடிய எருமைச்சாணி நசநசப்பு"[17]

என்று எடுத்துக்காட்டுகிறார் பூமணி. சேரி மக்கள் வாழ்விடங்கள் ஒதுக்குப் புறமாக அமைந்திருந்தாலும் அங்கு அரசின் எந்தவொரு ஊர்ப்புற வசதிகளும் கிடைப்பதில்லை. தெருவில் நடுவே சகதியும் சேரும் கலந்தே காணப்படும் என்பதனைத் 'தோல்' புதினத்தில் இடம்பெறும்,

'மழைக்காலம் வந்துவிட்டால், மலமும் சிறுநீரும் கலந்து சகதியாகவும், குட்டையாகவும் தேங்கி சகிக்க முடியாத துர்நாத்தம் வீசும் சவரியார்பாளையம் சேரியின் குறுகல் மறுகலான தெருக்களையும் குடிசைகளையும் கடந்து சங்க ஆபீசுக்குப் போவது என்பதே..."[18]

என்னும் பகுதியின் வாயிலாக அறியலாம்.

### குடியிருக்க வீடில்லாத நிலை

இறைவன் படைத்த உலகம் அனைவர்க்கும் பொது எனச் சொல்லப் -பட்டாலும், உலகத்தை ஆள்பவர்கள் செல்வாக்கு மிக்கவர்களே. ஆட்சியும் அதிகாரமும் எங்கெல்லாம் நிறைந்துள்ளதோ, அங்கேயே செல்வமும் குவிந்துகிடக்கிறது. ஏராளமான ஒடுக்கப்பட்ட மக்கள்

குடியிருப்பதற்குச் சிறிய அளவிலான நிலம் கூட இன்றித் தவித்து வருகின்றனர். எண்ணற்றோர் சாலை ஓரங்களிலும், வீதிகளிலும், ஊரின் ஒதுக்குப்புறங்களிலும் வானமே கூரையாகக் கொண்டு வாழ்ந்து வருவதனை இன்றைக்கும் காணலாம்.

மக்களின் அனைத்து அடிப்படையான பிரச்சினைகளுக்கும் ஆணிவேராக இருப்பது குடியிருப்பதற்குச் சொந்தமான நிலம் இல்லாமையே ஆகும். ஒருபுறம் நிலக்குவியல், மறுபுறம் இறந்தால் புதைப்பதற்குக்கூட நிலமில்லாமல், சந்து பொந்துகளிலும், தெருவோரங்களிலும் குடித்தனம் நடத்தும் குடும்பங்கள். இப்படிப்பட்ட நிலையில் ஒடுக்கப்பட்ட மக்கள் தமிழ்நாட்டின் கிராமப் பகுதிகளில் வாழ்கின்றனர். அவர்களில் பெரும்பான்மையானவர்களுக்குக் குடியிருப்பதற்கு நிலமில்லை. ஆளும் அரசுகளும் இல்லாதவர்களைப் பார்த்து இடமளிக்கச் செய்வதில்லை. இந்தமாதிரியான அவல நிலையினைக் 'கோவேறு கழுதைகள்' புதினத்தில்,

> "இந்த ஆண்டுத் தொடக்கத்தில் அரசாங்கம் கட்டிக்கொடுத்த இலவசமான கெட்டிமனையும் இவ்விரண்டு குடும்பங்களுக்கும் இல்லை என்றாகிவிட்டது. சொந்தமாகக் காணி இருக்க வேண்டுமாம். புறம்போக்கில் குடியிருப்பவர்களுக்கு இல்லை என்று கூறிவிட்டார்கள். ஆரோக்கியம் யார் காலில் விழுந்தும் பலனில்லை. காணி வேண்டும்; பட்டா வேண்டும்; பூர்வீகம் வேண்டும் என்றார்கள்"[19]

என்று எடுத்துரைக்கிறார் இமையம்.

நாட்டில் ஒடுக்கப்பட்ட மக்களோடு, அன்றாடம் கிடைக்கும் ஏதாவது ஒரு தொழிலைச் செய்து பிழைக்கும் மக்களுக்கும் குடியிருப்பதற்கு நிலமில்லாது இருப்பதான நிலை உள்ளது. 'கோவேறு கழுதைகள்' புதினத்தில்,

> "நம்புள மாரி நாட்டுல எம்புட்டோ இருக்குதுங்க. கொறவன் எந்த நிலத்த வச்சிருக்கான்? ஊடு, வாசல், நிலம், பலம், ஏனம், பானம் உண்டா? ஈயம் பூசுறவங்க, பூம்பூம் மாட்டுக்காரன்; ஜோசியம் சொல்லுற மலையாளத்தான், குடுகுடுப்பக்காரன், பாம்பு புடிக்கிறவங்க, புட்டி மொறம் விக்கிற கொறத்தி, கூத்தாடி, தொம்பன், கிணறு வெட்டுற கல்லு உடைக்கிற ஒட்டன் இவுங்க எல்லாம் எந்த சொத்தபத்தக் கண்டாங்க?"[20]

என்பதில் குடியிருப்பதற்கு வீடில்லாத அவலநிலை சுட்டப்பட்டுள்ளது. இயற்கை அள்ளித்தந்த காடுகளும், மலைகளும், கழனிகளும் இன்றைக்கு ஏகாதிபத்தியத்திற்குள் சிக்கிக் கொண்டிருப்பதனையும் காட்டில் வாழ்ந்த மக்களும், மலைகளில் வாழ்ந்த மக்களும் குடியிருப்பதற்கு இடம் இல்லாது தவிப்பதனையும் இதன்வழியாகக் காட்டுகிறார் ஆசிரியர்.

'எல்லார்க்கும் எல்லாமும்' என்பதே பொதுவுடைமைக் கொள்கை. உலகத்தின் இயற்கைப் பொருள்களான ஐம்பூதங்களும் அனைவருக்கும் பொதுவுடைமை என்றாலும், இயற்கைப் பொருள்களைத் தங்கள் தேவைக்கு அதிகமாகவே ஆதிக்கத்தின் பெயரால்

ஆளுகைக்கு உட்படுத்திக் கொண்டுள்ளனர். இந்நிலை மாறி எல்லார்க்கும் எல்லாமும் கிடைக்கப் பெற வகைசெய்ய வேண்டும் என்பது குறித்தே ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்களின் படைப்பாசிரியர்கள் இக்காட்சிகளைப் படம்பிடித்துக் காட்டுகின்றனர் என்பது தெளிவாகிறது.

இன்றைய இலக்கிய வரலாற்றில் புதின இலக்கியம் தனக்கென ஓர் இடத்தையும், பெரும் இலக்கியப் பரப்பையும் பெற்றுள்ளது. புதின இலக்கியம், தோற்றும் முதல் இன்று வரை பல்வேறு கருப்பொருள்களைக் கொண்டு படைக்கப்பட்டு வருகிறது. படைப்பாசிரியனைச் சுற்றியுள்ள வாழ்க்கையிலிருந்து கிடைக்கும் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியைக் கருவாகக் கொண்டு படைக்கப்படும் இப்புதினங்கள், சமுதாய நோக்கங் கொண்டதாகவே அமைகின்றன. இத்தகைய புதினங்களில், சமுதாய சமூககக் கொடுமைகள், சமூகத் துன்பங்கள் ஆகியவை வெளிப்படுகின்றன. ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட புதினங்களில் சாதிப்பாகுபாடு என்னும் சமுதாயச் சிக்கல் பெரிதும் அலசப்பட்டுள்ளது.

### சாதிப் பாகுபாடு

இந்தியச் சமுதாயத்தைப் பெரிதும் பீடித்திருக்கும் நோய்களுள் ஒன்று சாதிப்பாகுபாடு.

> "இந்தியாவில் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட சாதிகள் காணப்படுகின்றன. இச்சாதிகள் ஒவ்வொன்றும் மற்ற சாதிகளில் இருந்து தாங்கள் மேம்பாடுடையவையென நிலைநாட்ட விழைகின்றன."[21]

இக்கூற்றின் மூலம், இந்தியாவிலுள்ள சாதிப்பிரிவுகளையும், சாதியின் இயல்பையும் அறிந்துகொள்ள முடிகிறது.

> "இந்திய சமூகக் கட்டமைப்பில் சாதி அடிப்படை மேலாதிக்கம் செலுத்துகிறது. ஏறுமுக வரிசையில் உள்ள மேற்சாதியினா், கீழுள்ள சாதியினரை ஒடுக்கி ஆதிக்கம் செலுத்துவது காலங்காலமாக உள்ளது"[22]

என்னும் கருத்து ஒரு சாதியினா் மற்றொரு சாதியினா் மீது ஆதிக்கம் செலுத்தி வருவதைக் கோடிட்டுக் காட்டுகிறது.

> "சாதி என்றால் (Caste) இனம், மரபுக்குழு, வகை என்பனவற்றைக் குறிக்கின்ற ஊயளவய என்ற போர்த்துக்கீசியச் சொல்லிலிருந்து வந்ததாகும். முதன் முதலில் 1563 இல் கார்சீயா-டி-ஒரேட்டா என்பவா் இந்தச் சொல்லை ஒரு வரையறைக்கு உட்பட்ட பொருளில் 'சாதி' என்று கையாண்ட பிறகே உலக வழக்கிற்கு வந்தது என்று சொல்லின் தோற்றம் பற்றிக் குறிப்பிட்டுள்ளாா் ஹட்டன் என்ற சமூகவியல் அறிஞா்."[23]

இக்கருத்து, சாதி என்ற சொல்லின் தோற்றத்திற்கான விளக்கத்தைத் தருகிறது.

தொடக்ககாலச் சமுதாயத்தில், பிறப்பால் வேற்றுமை பாராட்டும் சாதிமுறை இல்லை. பிற்காலத்தில் ஏற்பட்ட சமயப் பிரிவுகளே இச்சாதி முறையைப் புகுத்தியுள்ளன. இதனை, "ஆரியர் வருகைக்கு முன்பு தமிழ்நாட்டில் சாதிமுறை என்பதே இல்லை"[24] என்னும் கூற்றும், "மதமே வாழக்கையாகக் கொண்டிருந்த ஆரியர் வந்தபிறகு தான் தமிழ்நாட்டில் சாதி தோன்றியது"[25] என்னும் கூற்றும் உறுதி செய்கின்றன. "ஆரியர் வருகையால் வருணம், ஏற்றத் தாழ்வுகள் முதலியன வந்து புகுந்து தமிழச் சமுதாயத்தைச் சிதறடித்தன."[26] மேலும் "சமயப் பிரிவுகள் தான் சாதிகளின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையாய் அமைந்தன. சாதி என்பது சமயத்தின் சமுதாய வெளிப்பாடு என அறிஞர் கோசாம்பி அவர்கள் கூறுகின்றார்"[27] என்னும் கூற்றையும், "சொத்துடைமை அமைப்பு தான் ஜாதிகளைப் படைச்சுது. சுரண்டறவங்க மக்களை வேற்றுமைப்படுத்தி வச்சிகிட்டு சுரண்டறதுக்கு இடையூற இல்லாமே இருக்க ஜாதி தேவைப்படுகிறது"[28] என்று கு.சின்னப்பபாரதி, 'தாகம்' என்ற புதினத்தில் வெளியிட்டுள்ள கருத்தையும் சாதியின் தோற்றம் குறித்த கருத்தாய்வுகளாகக் கொள்ளமுடிகிறது.

சாதியின் தோற்றங்குறித்து ஆய்ந்த சமூகவியலார், அதற்கென வரைவிலக்கணம் ஒன்றையும் வகுத்துள்ளனர். "சாதி என்பது இரண்டு தனிப்பண்புகளைக் கொண்ட ஒரு சமூகக் குழு. ஒன்று சாதியின் உறுப்பினராகும் தகுதி, அந்தச் சாதியில் பிறந்தவருக்கும் பிறக்க இருக்கின்றவருக்கும் மட்டுமே வரையறுக்கப்பட்டுள்ளது. இரண்டாவது, ஒரு சாதியின் உறுப்பினர்கள் அந்தச் சாதிக்கு வெளியே திருமணம் செய்ய முடியாதவாறு சமூக்க கட்டுப்பாடுகளால் பிணைக்கப்பட்டுள்ளனர் என்று சாதிக்கு வரைவிலக்கணம் வகுத்துள்ளார் கேட்கர் என்ற சமூகவியல் அறிஞர்."[29] இக்கூற்றிற்கேற்ப, ஒரு சாதியைச் சார்ந்தோர் மற்றொரு சாதியில் திருமணம் செய்ய இயலாதபடி சமூகக் கட்டுப்பாடு நிலவி வருவதையே காணமுடிகின்றது. சாதிப்பாகுபாடு நீடிப்பதற்கு வேலைப் பிரிவினையும் ஒரு காரணமாக அமைகிறது. "மிகச் சொற்பமான சுயதேவைகளைப் பூர்த்தி செய்வதற்கேற்ப அமைந்திருந்ததே கிராமிய சமுதாய அமைப்பு முறை. இச்சமுதாயம், தன் உற்பத்தியைக் கொண்டு சென்று வெளிநாடுகளில் வணிகம் செய்து தனக்குத் தேவையான தங்கம் முதலான பொருள்களை இறக்குமதி செய்தது. வெளிநாட்டிலிருந்து உணவு, உடை ஆகியவற்றை இறக்குமதி செய்யும் அவசியமேற்படவில்லை. எனவே இச்சமுதாய அமைப்பு ஆரம்பகாலத் தொழில்களில் ஈடுபட்டவர்களைச் சாதிகளாக மாற்றி வேற்றுமையை உருவாக்கியது"[30] என்னும் கூற்று இதனை நிறுவுவதாக அமைகிறது

பேராசான் மார்க்ஸ், 'இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்' என்கிற புகழ்பெற்ற கட்டுரையில் 'பாரம்பரிய வேலைப் பிரிவினையின் பேரிலேயே (Hereditary divisions of Labour) இந்தியச் சாதிகள் தங்கியுள்ளன என மொழிவார்'[31] என்னும் கருத்தும் இங்குச் சிந்திக்கத்தக்கதாகிறது. காலங்காலமாக ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கும் சாதி ஒரு கூறாகத் 'தீண்டாமை' எனும் சமூகக் கொடுமையையும் ஏற்படுத்தியிருக்கிறது. இக்கருத்தினை அரண் செய்யும் வகையில், "சமுதாயத்தில் சாதி எனப்படுவது

வரையறைகளை உருவாக்கும் முக்கியக் கூறாகக் காணப்படுகிறது. இச்சாதிப் பாகுபாடு, எல்லா நிலையிலும் தனது ஆதிக்கத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறது என்பது கசப்பான உண்மையாகிறது. இவ்வகையில் ஒரு சாராரைத் தீண்டத்தகாதவர்கள் என்று 4றி ஒதுக்கிடும் சமுதாயக் கொடுமை இன்னும் மாறியபாடில்லை"[32] என்னும் கருத்தும் அமைகிறது. இந்திய அரசியல் சட்ட மேதை பி.ஆர் அம்பேத்கர்.

"அரசியல் கொடுமையை விடச் சமூகக் கொடுமையே மிகப்பயங்கரமானது"[33]

என்று கூறியிருப்பதும் இங்கு எண்ணத்தக்கதாகிறது.

பல்லாண்டுகளாக நிலவிவரும் சாதிப்பாகுபாடு இன்று வரை, சொல்லொணாத் துன்பத்தை ஏற்படுத்தி வருகிறது. இதனைச் சரியான கோணத்தில் அணுகித் தீர்வுகாண முயலாவிட்டால், விளைவு இன்னும் மோசமாகயிருக்கும் என்பதே மானிடவியலறிஞர்களின் கருத்தாகிறது. 'சமுதாயம் ஆதாயம் தேடி வேதகாலத்தில் பிராமணர்கள் ஏற்படுத்திய சாதி முறை, இன்றைய சூழலில் ஏற்படுத்தும் விளைவுகளை உரிய முறையில் அணுகாவிட்டால், 'சாதி என்னும் மாயக்கருத்தே இந்தியாவின் மிகக் கொடிய நம்பிக்கையாகிக் (India's Most dangerous myth; The Fallacy of caste) கடும் விளைவுகள் ஏற்படும் என்றார் மானிடவியலறிஞர் ஆஸ்லி மாண்டகு.'[34] எனவே, முறையான தீர்வு காணாவிட்டால், ஒட்டுமொத்த சமுதாயத்தையும் இச்சிக்கல் அரித்து அழித்துவிடும் என்பதே இன்றைய இந்தியச் சமுதாயத்தின் நிலை.

> "நம்நாட்டில் மலர்ந்த சீர்திருத்த இயக்க நடவடிக்கைகளில் குறிப்பிடத்தக்கது சாதி, மத எதிர்ப்பு ஆகிறது. அதற்குக் காரணமானவர் பெரியாரும் அவர் இயக்கத்தினருமே எனல் மிகையாகாது"[35]

என்னும் கருத்து, நம்நாட்டின் சாதி ஒழிப்பு நடவடிக்கைகளைப் பறைசாற்றுவதாக அமைகிறது. தீண்டாமையை அறவே நீக்க, சட்டமும் இயற்ப்பட்டுள்ளது. தற்போது இலக்கியங்களில் பலரும், சாதிப்பிரிவினைக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளனர். இக்கருத்தினை அரண்செய்யும் வகையில்,

> "சமுதாயத்தில் சாதிகள் தோன்றி வளர்ந்து மனிதர்களிடையெ பிரிவினைகளை வளர்த்தன. சமுதாய முன்னேற்றத்திற்கு அச்சாதிப் பிரிவுகளே தடையாக இருத்தலைக் கண்ணுற்ற சான்றோர் பலர் அதற்கு எதிர்ப்பினைத் தங்கள் இலக்கியங்களில் வெளிப்படுத்தி வந்துள்ளனர்"[36]

என்னும் கூற்று அமைகிறது. இதற்குச் சான்றாக, மறைமலையடிகள், 'கோகிலாம்பாள் கடிதங்கள்' என்னும் புதினத்தில் வரும் கோகிலாம்பாள் கடிதம் வாயிலாகக் காட்டும் எதிர்ப்புணர்வைக் குறிப்பிட முடிகிறது. "மற்றச் சாதியார் வெயிலிற் களைத்துச் சிறிது நேரம்

ஒதுங்குவதற்குத் தம் வீட்டு ஓட்டுத் திண்ணையண்டை வந்தால் நம்மவர்கள் தமது வீடு தீட்டுப் பட்டுப்போம் என்று அவர்களைத் துரத்துகிறார்கள்! அல்லது தெரியாமல் உட்கார்ந்திருந்து எழுந்து போனார்களானால் அவர்களிருந்தவிடத்திற்குச் சாணிகரைத்துத் தெளிக்கின்றனர். மாட்டுச் சாணியிலும் ஆறறிவுடைய மனிதன் தாழ்ந்தா போயினான்!."[37] இத்தகைய சாதிய எதிர்ப்புணர்வும், சாதிப்பாகுபாடு பற்றிய குறிப்பும், சாதியின் பெயரால் ஒடுக்கப்படும் நிலையும் ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள அனைத்துப் புதினங்களிலும் காணப்படுகிறது.

### சாதியின் பெயரால் ஒடுக்கப்படுதல்

சாதி என்பது சமுதாய அமைப்பில் இயங்கும் ஒரு தனிப்பட்ட குழுவைக் குறிக்கும். இக்குழுவில் இடம்பெறும் தகுதி பிறப்பால் அமைகிறது. அதனால் ஒரு சாதியில் பிறந்தவர் வேறு சாதிக்கு மாற இயலாது, ஒன்றுக்கு மேற்பட்ட சாதியைச் சேர்ந்தவர் என்று கூறிக்கொள்ளவும் இயலாது. அவ்வாறே ஒரு சாதியினர் வேற்றுச் சாதியினரை மணந்து கொள்ளுதலும் இயலாது. எனவே சாதி என்பது அகமண முறையைக் கொண்ட ஓர் அமைப்பாகும். பெரும்பாலும் ஒவ்வொரு சாதிக்குமென்று செய்யும் தொழில்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன. சமுதாயத்தில் ஒவ்வொரு சாதிக்குமெனத் தனித் தகுதிநிலை நிருணயிக்கப்பட்டுள்ளன. இத்தகைய நிலையில் மேலுள்ள சாதி உயர்ந்ததென்றும் அதற்கடுத்துள்ள சாதி பிற்படுத்தப்பட்டது என்றும், அதற்கடுத்தது மேலும் தாழ்ந்ததென்றும் படிநிலை அமைக்கப்பட்டது.

### கிராமத்திற்குள் நுழையத் தடைசெய்தல்

ஆதிக்கச்சாதி மக்கள் வசிக்கும் பகுதிகளிலும், தெருக்களிலும், ஊருக்குள்ளும் தாழ்த்தப்பட்ட சாதி மக்கள் நடந்து செல்ல அனுமதிக்க மறுத்த சீர்கெட்ட நிலை வழக்கில் இருந்து வந்துள்ளது. இதனை 'செந்நெல்' புதினத்தில் ஒரு நிகழ்வின் மூலம் காட்டுகின்றார் சோலை சுந்தரபெருமாள்.

வெண்மணி கிராமத்தில் நாயுடு இன மக்கள் வசிக்கும் தெருக்களில் தாழ்ந்த சாதி மக்கள் செருப்புடன் செல்ல அனுமதிப்பது இல்லை. அதேபோல் மாட்டு வண்டிகளில் உட்கார்ந்தவாறு செல்வதற்கும் அனுமதிக்கப்படாத நிலை உள்ளது. இவ்வாறான ஆதிக்க நிலையினை,

> "தெருவுக்குள்ள அன்னிய ஆசாமிங்க யாரும் அச்சம் இல்லாம நுழைஞ்சிட முடியாது. பண்ணை விசுவாசிங்க மட்டும்தான் அப்படியே போவலாம்… வரலாம். அதுவும் கால்ல செருப்பு போட்டுக்கிட்டோ, வண்டி வாகனத்திலோ உக்காந்தும் போவப்படாது. போனா திருக்கமீன் வாலுதான் பேசும். தெருக்குணுப்புல உள்ள பெரிய சிவன்கோயிலுக்கு

முன்னால உள்ள கொட்டடியில விட்டுட்டு தான் போவணும். அப்புடி ஒரு கட்டுப்பாடு பல தலைமுறையா இருக்கு"[38]

என்னும் பகுதியால் அறியலாம். சாதி ஆதிக்கம் காலம் காலமாக வதைக்கப்பட்டு வரும் செயல்பாட்டினை இந்நிகழ்வின் மூலம் காட்டியுள்ளது தெளிவாகிறது.

ஆதிக்கச் சாதியினர் வசிக்கும் தெருக்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் செருப்பினை அணிந்து செல்வதற்கும், இடுப்பில் உடை அணிந்து செல்வதற்கும் அனுமதிப்பதில்லை. சாதி ஆதிக்க உணர்வின் வெளிப்பாடுகளில் இதுவும் ஒன்றாகும். இதனை ஓர் நிகழ்வின்வழியாக,

"எம்புட்டுத்தான் பவிசைத் தமுக்கடிச்சாலும் இந்தப் பய, நாகூர் கனி ராவுத்தன்கிட்டே ஆடு மேய்க்கிறதுக்கு வந்த பயங்கறதை இந்த ஊர் மறந்திறப் போவுதாக்கும். ஹூம்... செருக்கி மவன் நடந்து போற தினுசைப் பாருமேன். காலை வெட்டிக் கையிலே குடுக்கிறதுக்கு ஆள் இல்லே. இல்லேண்ணா மறக்குடி வழியே பள்ளப்பய செருப்பைக் கழட்டாம போவனா?"[39]

என்று படைத்துக்காட்டுகிறார் டி. செல்வராஜ். ஆதிக்கச்சாதியினர் தம்மை ஆண்டைகள் (ஆள்வோர்) என்றும், தம்மிடம் கூலி பெறுபவர்கள் அடிமைகள் என்றும் என்னும் மனப்போக்கின் விளைவால் எழுந்ததே இதுவாகும்.

துட்டி சொல்வதற்காகச் செல்லும் ஒடுக்கப்பட்ட மக்கள் ஒவ்வொரு கிராமத்திற்கும் நடந்தே செல்லவேண்டிய நிலை உள்ளது. அதனால் அவர்கள் விரைவாகவும், குறுக்கு வழிகளைக் கண்டறிந்தும் சென்றுசேர வேண்டியதாக உள்ளது. அதற்காக அவர்கள் தார்ச்சாலை வழியே செல்லாமல் வயல்களின் வரப்புகளுக்கு உள்ளாகச் செல்ல வேண்டிய நிலையில் உள்ளனர். அவ்வாறு சொல்லச் செல்கையில் ஆண்டைகளின் வயல் வரப்புகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் நடந்து செல்வதற்கும் அனுமதிக்காத நிலை இருப்பதனைக் 'கூகை' புதினத்தில்,

"ஒங்களுக்குப் பாத எங்க கெடக்கு? இங்க என்ன புதுசாப் பாத?

நம்மாள்த்தான்ய்யா, மேலப்பட்டிக்கு துட்டிக்குப் போய்ட்டு வாரோம்.

துட்டிக்குப் போனா ரோட்டு வழி போகாம தோட்டத்துக்குள்ள என்ன சோலி?

குறுக்க கூடி கோயில்பட்டி போயிரலாம்னு இப்பிடி வந்தோம்." [40]

என்று சுட்டிச் செல்கிறார் சோ. தர்மன்.

கிராமங்களில் சாதி எந்த அளவுக்கு மக்களைக் கட்டுக்குள் வைத்திருக்கிறது என்பதனை வெளிப்படுத்தும் விதத்தில் சோ. தர்மனின் 'கூகை' புதினம் அமைந்துள்ளது.

கிராமங்களில் ஆண்டைகளின் வீடுகளில் நடைபெறும் இறப்புச் செய்திகளைச் சொலவதும், இறப்புச் சடங்கைச் செய்வதும் முற்றிலும் ஒடுக்கப்பட்ட நிலையினரான சக்கிலிய மக்களுக்கே ஒதுக்கப்பட்டுள்ளது. அவர்கள்தான் இறந்து போன உறவினரின் வீடுகளுக்கு நடந்துசென்று இறப்புச் செய்தியைச் சொல்லவேண்டும். அப்படி அக்கம்பக்கத்து ஊர்களுக்குச் சென்று துக்கச் செய்தியைச் சொல்லிவரச்செல்லும்போது அவர்களுக்குத் தரும் இன்னல்கள் பலவிதங்களில் அமைந்திருக்கும் என்பதனைக் ‘கூகை’ புதினத்தில் பாத்திர உரையாடலின் மூலம் பதிவுசெய்துள்ளார் சோ. தர்மன். இதனை,

> “இப்பிடித்தான் துட்டினு நம்ம ஆட்க போயிருக்காக. அங்க பாரு நடுத்தெருவுல குறுக்கா ஒரு கம்பு கெடந்திருக்கு. இந்தப் பய அதத் தாண்டிட்டான். தாண்டுன மாயந் தெரியல. ஒளிஞ்சு கெடந்த நாலஞ்சுபேரு ஓடியாந்து புடிச்சிக்கிட்டாங்க. கம்பத் தாண்டுனதுக்குப் பதில் சொல்லிட்டுப் போ, இல்லன்னா கைய வெட்டுவன் கால வெட்டுவன்னு சண்டி வெவகாரம் பண்றாங்க. சுத்தி நின்னுக்கிட்டு விடமாட்டம்னு நிக்காங்க.
>
> ஏன்?
>
> கம்பு தாண்டுறது அவுங்களத் தாண்டுற மாதிரியாம்...
>
> பெறகு....
>
> பெறகென்ன .... பையில முப்பது ரூவா வச்சிந்திருக்கான். அதப்புடுங்கிட்டு வெறுங்கையோட வெரட்டி விட்டுட்டாங்க, அப்புராணிப்பய பாத்தி கட்டுன சம்பளம். வம்பாப் பறி குடுத்திட்டு விக்கிப் போயி வந்தான்”[41]

என்னும் பகுதியின் வாயிலாக அறியலாம்.

‘பாதையின் குறுக்கே இருந்த கம்பைத் தாண்டுவது தங்கள் சாதியைத் தாண்டியது மாதிரி’ என்று குற்றம் என்று சுமத்தி, அதற்குத் தண்டனையாகப் பணம் பெற்று வாழும் சாதி ஆணவச் செயல்பாட்டை இப்பகுதியால் காட்டுகிறார் சோ. தர்மன்.

**சாதி வன்கொடுமை**

ஒடுக்கப்பட்ட மக்களுக்குப் பிற சாதியைச் சார்ந்த மக்களால் இழைக்கப்படும் கொடுமைகளும், வன்சொற்களும் மனம் வருந்தத்தக்க செயல்களும் வன்கொடுமையின் பாற்பட்டதாகும். இக்கொடுமைகள் மனிதனே மனிதனுக்குச் செய்துகொள்ளும் தீங்காக அமைகிறது. தன்னைப் போலவே பிறரைப் பார்க்க வேண்டிய மனிதன், ஒடுக்கப்பட்ட மக்களை விலங்கினுக்கும் கீழாக வைத்து இழிவுபடுத்திப் பார்க்கும் செயல்கள் வன்கொடுமையைச் சேர்ந்தவை.

வன்கொடுமை தடுப்புச் சட்டம் (சட்டம் 33, 1989 அத்தியாயம் 2) -இன் பிரிவு, "தாழ்த்தப்பட்ட அல்லது பழங்குடியின நபருக்கு உடல்ஊறு அவமதிப்பு அல்லது தொல்லை விளைவிக்கும் கருத்துடன், அவரது இருப்பிடத்தில் அல்லது அதன் அருகாமையில் மலம், கழிவுப்பொருள், விலங்கின பிணச் சிதைவுகள், அருவருப்பான பிறபொருள் எதனையும் கொட்டுவதும், தாழ்த்தப்பட்ட அல்லது பழங்குடியின நபரின் உடம்பிலிருந்து உடைகளை அகற்றியோ, அல்லது அவரை வெற்றுடம்புடனோ, சாயத்தால் அலங்கோலப் படுத்தப்பட்ட முகம் அல்லது உடம்புடனோ பிறர் காண இழுத்துச் செல்வது அல்லது இவை போல மனித மாண்பினை இழிவுபடுத்தும் செயல் எதனையும் செய்வதும், தாழ்த்தப்பட்ட அல்லது பழங்குடியின நபருக்குச் சொந்தமான அல்லது அவருக்கு ஒதுக்கப்பட்ட அல்லது தகுதி திறமுடைய அதிகார அமைப்பால் அறிவிக்கப்பட்ட நிலத்தைச் சட்டமுரணாகக் கையுடைமை ஆக்கினால், அல்லது அதில் பயிரிட்டால், அல்லது அவ்வாறு அவருக்கு ஒதுக்கப்பட்ட நிலத்தை மாற்றம் செய்வதும் வன்கொடுமைகளின் பாற்படும்"[42] என்று குறிப்பிடுகிறது.

**சாதி ஆணவ நிலை**

உலகில் தவறுகளுக்கே தண்டனை வழங்கப்படும் என்பது நியதி. ஆனால் சாதியின் பெயராலும் மதத்தின் பெயராலும் தரப்படும் தண்டனைகள் எந்தவகையிலும் அடங்காதவை. யாராலும் தீர்க்கப்பட முடியாதவை. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் பெரும்பான்மையானவை சாதிய முரண்களைக் காட்டும் விதத்தில் அமைந்துள்ளன. ஒடுக்கப்பட்ட சாதிகள் ஒவ்வொன்றும் ஆதிக்கச் சாதியினரால் எந்த அளவுக்கு வன்கொடுமைகளுக்கு உள்ளாக்கப்படுகின்றார்கள் என்பதனை நிகழ்வுகளின் போக்கில் எடுத்துரைக்கின்றன.

தன் வயலில் மாடு மேய்ந்துவிட்டதைப் பார்த்தவுடன், மாட்டினை மேய்த்துக் கொண்டிருக்கும் மாட்டுக்கருப்பனைப் பார்த்து, சாதியை மையமாக வைத்து அவனைத் திட்டுவதைப் 'பிறகு' புதினத்தில்,

> "ஏலேய்! சக்கிலித் தாயிளி மாடு பாருடா…
>
> படப்புல மேயிறத. கண்ணவிஞ்சா போச்சு.
>
> வாய்க்கு வந்தாதாந் தெரியுமா?"
>
> …………………..
>
> முதல்ல ஒன் குண்டித் திமிர எறக்கணும்"[43]

என்னும் காட்டுகிறார் பூமணி.

கிராமங்களில் வசிக்கும் சிறுகுழந்தைகளிடமும் சாதி ஆணவம் இறுக்கமாகப் பற்றியுள்ளதனைக் கதை நிகழ்வுகள் காட்சிப்படுத்துகின்றன. தம்மிடம் வேலை செய்யும்

தாழ்த்தப்பட்ட மக்களில் பெரியவர்களைப் பெயர் சொல்லி அழைப்பதும், ஒருமையில் வசைபாடுவதும் இன்றைக்கும் நடந்து வருகிறது. ‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில் இடம்பெறும் ஆரோக்கியத்தின் மகன் தன்னையொத்த சிறுவர்களுடன் விளையாடுகையில் அவனைச் சாதியின் பெயர்சொல்லி இழிவு படுத்துவதனை,

> “ஏம்மா, நாம்ப ராச்சோறு எடுக்காம இருக்கக் கூடாதா?
>
> நெதமும் நம்பூட்டுல சோறாக்கினா என்ன?
>
> ஏண்டா.....?
>
> பசங்க எல்லாரும் என்னெ ராச்சோறு ராச்சோறுன்னு எளக்காரம் பண்றாங்க.
>
> அதனாலென்னடா சின்னம்? சொன்னாப் போறாங்க
>
> வண்ணாரப்பெய, வண்ணாரப்பெயன்னு நெட்டித் தள்ளுறானுவோ?”[44]

என்று எடுத்துரைக்கிறார் இமையம்.

சாதிக்கொடுமையின் உச்சநிலை சாதி அதிகாரத்திற்குப் பலியாவது ஆகும். சாதித்திமிருக்கு எதிராகச் செயலாற்றும் ஒடுக்கப்பட்டவர்களை அடக்கி ஒடுக்கிவைப்பதோடு நில்லாது, அவர்களைக் காலில் விழவைப்பதும், கொன்று புதைப்பதும் சாதி ஆணவ நிகழ்வுகளாக இருப்பதனைக் ‘கூகை’ புதினத்தில் ஒரு நிகழ்வின் மூலம் காட்டுகிறார் சோ. தர்மன்.

> “போனவரும் இதே மாதிரிதான் சாராய வியாபாரி செந்தூர்பாண்டி குருவம்மாளுடன் படுத்துக்கிடக்கும்போது, அவள் தம்பி சுடலை வந்துவிட்டான். இளவட்டப்பயலின் மனசுக் கொதிக்க, வாயை அடக்க முடியவில்லை. ஒரே ஒரு வார்த்தை,
>
> ஏஞ்சாமி ஒங்களுக்குப் பொண்டாட்டி புள்ளைக இல்லையா, நீங்க அக்கா தங்கச்சிகூடப் பொறக்கலயா?
>
> நடுத்தெருவில் நாலா சனமும் கூடி நிற்க அடித்தே கொன்றார்கள் பாவிகள். அப்படியே தெருவில் நாதியத்தப் பிணமாய்க் கிடந்தான் சுடலை. அவனை எடுத்துக்கொண்டு போய்ப் புதைப்பதற்கே தெருவோடுபோய் அவர்கள் காலில் விழுந்து கெஞ்சிக் கூத்தாடிய பிறகுதான் பிணத்தைப் புதைப்பதற்கே உத்தரவு கொடுத்தார்கள். அதற்குப் பிறகு குருவம்மாளும் வைரவனும் வீட்டைக் காலிப்பண்ணிவிட்டு வேறு ஊருக்குப் போனபோது, மூன்று மாசங்கழித்து துப்பு வெட்டி இருக்கிற இடம் கண்டுபிடித்து அந்த ஊருக்குப் போய், பித்தளைப் பானையைத் திருடிவிட்டு இங்கே வந்திருக்கிறார்கள் என்று சொல்லி இழுத்துவந்து மரத்தில் கட்டிவைத்து அடித்துத் துவைத்தார்கள்.”[45]

இதன்வழியாகச் சாதியின் கோரத்தாண்டவம் உணர்த்தப்படுகிறது. சாதியின் பெயரால் நிகழ்த்தப்படும் படுகொலைகள் தடுத்து நிறுத்தப்பட வேண்டும் என்பதே ஆசிரியரின் கருத்தாக உள்ளமை தெளிவாகிறது.

இதேபோன்று 'கூகை' புதினத்தில் இடம்பெறும் சுப்பிரமணியின் சாதியின் பெயரைக் கேட்டறிந்து கொண்டதும் அவன்மீது வன்முறை நிகழ்த்துவதை,

> "துட்டி சொல்லி வாரப் பள்ளத்தாயோளிக்கு ஒய்யாரம் கேக்கோல?
>
> வண்டியிருந்து சுப்பிரமணியனைக் கீழே இழுத்துப் போட்டு அடி விளாசினான். ஓடிவந்தவர்களும் விஷயம் கேட்டு அவர்கள் பங்குக்கும் அடித்தார்கள். மீசை பெரிதாக வைத்திருந்த ஒருவன் வேகமாய் ஓடோடி வந்தான். சுற்றி நின்றவர்கள் அடித்தவர்கள் எல்லாரும் அவனுக்கு வழிவிட்டு விலகிக் கொண்டார்கள். கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான். முச்சந்தி வேப்ப மரத்தில் சேர்த்துக் கட்டினான். ஆளாளுக்கு அடித்தார்கள். சுப்பிரமணியனின் உடம்பெல்லாம் வலியால் துடித்தது.... கும்பிட்டான்; கதறினான். மரத்தோடு தலைகவிழ்ந்து நின்றான். உதடுகள் கிழிந்து இரத்தம் கொட்டியது.
>
> தண்ணி... தண்ணி... தண்ணி...
>
> தலைதூக்கி மீண்டும் கையெடுத்துக் கும்பிட்டான். கூட்டத்திலிருந்து வேகமாய் ஓடிவந்த ஒருவன் முகத்துக்கு நேராக மூத்திரத்தைப் பீச்சியடித்தான். உப்புக்கரித்தாலும் உதட்டால் நக்கித் தாகம் தீர்த்தான். கூட்டம் கெக்கெலி போட்டுச் சிரித்தது."[46]

என்று காட்டப்படுகிறது.

'கூகை' புதினத்தில் இடம்பெறும் அம்மாசி, ஜமீன்தாரின் ஆடுகளை மேய்ப்பதில், சிறுகவனமின்றி நடந்துகொள்வதில், அவை விஷம் கலந்த நீர்க்கரைசலைக் குடித்ததால் இறந்துபோக, ஆடுகள் இறந்தமைக்கு ஆடு மேய்த்தவனே காரணம் என்று சொல்லி அவனை மரத்தில் கட்டிவைத்து அடிப்பதை,

> "அம்மாசியை மரத்தில் கட்டிவைத்து அடிஅடியென்று அடித்துத் துவைக்கிறார்கள்.
>
> சாமி அடிக்காதிங்க சாமி.
>
> சாமி ஒங்க உப்பத் தின்ன ஒடம்பு சாமி
>
> ஒம் மகன எங்கடா ராஸ்கல்?
>
> நான் பாக்கல சாமி

சொல்லல, இப்பக் கொளுத்திட்டு ஆட்டுக்கூட ஒன்னயும் பொதச்சிருவம்.

சாமி அவன ஒன்னும் செஞ்சிராதிங்க சாமி

எங்கடா இருக்கான் அதச் சொல்லு?

சாமி என்னய வேணும்னாக் கொன்றுங்க சாமி

ஒன்னயக் கொல்லத்தாண்டா போறம், அவன் எங்க?

சாட்டையின் விளாசலில் கன்னிப்போய் இரத்தக்கோடுகளாய் விரித்த உடம்புடன் அம்மாசி தண்ணீர் தண்ணீர் என்று கதறினான்."[47]

என்ற நிகழ்வின் வழியாகக் காட்டுகிறார் சோ. தர்மன். இவை யாவும் சாதி ஆணவத்தின் அதிகாரத்தைக் காட்டுவனவாக, உழைப்பாளர்களைத் தங்கள் அடிமைகளாக, கைப்பாவைகளாகக் கருதும் நிலைப்பாட்டினைக் காட்டுகின்றன.

'பிறகு' புதினத்தில் இடம்பெறும் அழகிரி மீது வீண்பழி சுமத்துகிறார் ஊரின் நாட்டாமையான அப்பையா நாயக்கர். தனது கிணற்றின் கமலையை எடுத்து ஒளித்துவைத்துவிட்டு, அது களவு போய்விட்டது என்று ஊர்ப் பஞ்சாயத்திடம் முறைசொல்ல, அதனை அழகிரிதான் திருடியிருப்பான் என்று அப்பையா அவன்மீது குற்றம் சுமத்தி, ஊரார் காலில் விழவைக்கிறார். இதனை,

"சரி, நடந்தபடி நடக்கட்டுமென்று வண்டாரியையும் கந்தையாவையும் ஒருமுறை நோக்கிவிட்டுத் துண்டை இடுப்பில் வரிந்துகட்டி, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து ஊரை வணங்கினான்.

களவாங்கிறதவாவது ஒண்ணாவது. எந்த மகராசனுக்கோ எம்மேல கடுப்பு. தீத்துக்கிறதுக்கு வேற வழியில்ல. களவு வந்திருச்சு"[48]

என்று காட்டுகிறார் பூமணி. சாதிப்பழியைத் தீர்த்துக் கொள்வதற்குக் களவுப் பட்டத்தைச் சுமத்தி, தண்டனை தருவதனை இச்செயல்பாட்டால் காணலாம்.

மன்னராட்சிக் காலத்தில் சட்டம், நீதி, தண்டனைகள் யாவும் மன்னர்களிடமே இருந்ததைப் போன்று, மக்களாட்சிக் காலத்திலும் ஆதிக்கச்சாதி மக்களிடமே சட்டமும் நீதியும் தண்டனையும் இருப்பதாகக் கருதிக் கொண்டு வாழ்ந்துள்ளனர். தான் சொல்வதே தீர்ப்பு என்றும், தான் எழுதியதே சட்டம் என்பதுமான ஆதிக்க மனப்பாங்கின் விளைவால் எழுந்தது இம்மாதிரியான செயல்பாடுகள் ஆகும்.

சாப்பாட்டுக் கடையில் பெஞ்சில் உட்கார்ந்து சாப்பிட்டதற்குத் தண்டனை தரும் ஆதிக்கச் சாதியினரின் நிலை, 'கூகை' புதினத்தில்,

“சடாரென விழுந்த செருப்புக்கால் எத்தில் மூக்கன் கண்முழித்தான். காவக்கார முத்தையாப் பாண்டியன் கையில் கம்புடன் நின்றார். அவக்தவக்கென்று எழுந்து கொண்டவன் கைகட்டிக் குனிந்து பவ்யமாக நின்றான்”[49]

என்று காட்டப்படுகிறது. இதோடு நில்லாமல், இந்நிகழ்வு பாத்திர உரையாடலின் வழியாக,

“சொல்றயா தாயளி கரண்டக் கால ஒடிக்கவா?

களப்புக்கடையில சாப்டப் போனம்.

தொரைக வேட்டி, சட்டையெல்லாம் தொவைச்சு, வெள்ளையும் சொள்ளையுமாப் போயி மத்தவுகளுக்குச் சமமா பெஞ்சுமேல ஒக்காந்து களப்புக்கடச் சோறு தின்னீகளாக்கும்.

கேக்கமில்ல வாயத்தொறந்து சொல்றயால சின்னச்சிரிக்கி விள்ள.

மூக்கனின் வயிற்றில் எத்தி மல்லாக்க மிதித்துத் தள்ளினார். முத்துக்கருப்பனைக் கம்பால் தோளில் அறைந்து வயிற்றில் குத்தித் தள்ளினார். இருவரும் தரையில் மல்லாந்து கிடந்தபடி அவர் அடித்த அடிகளைத் தடுத்தார்கள். பலமாகக் கூப்பாடு போட்டார்கள். ஆலமரத்தின் மேலக் கடேசியில் கூடை பின்னிக்கொண்டிருந்த சீனிக்கிழவன் பாய்ந்தோடி வந்தான். முத்தையாப் பாண்டியனின் பாதங்களில் விழுந்து முகம் புதைத்து, கைகள் இரண்டையும் சேர்த்து அவருடைய இரு கால்களையும் சுற்றிப்பிடித்தபடி தரையில் குப்புறக் கிடந்தான். அவர்கள் இருவரும் எழுந்து வந்து சீனியோடு சேர்ந்து அவருடைய காலைச் சுற்றிப் பிடித்தபடி கிடந்தார்கள்”[50]

என்று காட்டப்படுகிறது. பெஞ்சில் உட்கார்ந்து சாப்பிட்டமைக்குத் தண்டனை பெறுவதும், தண்டனைப் பெற்றவர்களுக்காகச் சீனிக்கிழவன் காலில் விழுந்து மன்றாடுவதும் இங்குக் காட்டப்பட்டுள்ளது. சாதி ஆணவத்தின் கொடுமைகளில் இதுவும் ஒன்றாகும்.

**சமமாக உட்கார அனுமதிக்காத நிலை**

கூலி வேலை செய்து வயிற்றை நிரப்பிக்கும் கொள்ளும் மக்களுக்குக் கிடைப்பதோ, கால்வயிறும் அரைவயிற்றுக் கஞ்சியும்தான். அதுவும் கம்பங்கஞ்சியும், சோளக்கஞ்சியும் தான். ஆதலால் அவர்கள் அரிசிச் சோறு திண்பதற்கு ஆளாப் பறப்பது உண்டு. உலகில் பெரும்பணக்காரர்களுக்கு வயிராற உண்ணமுடியாத நிலை. பராரியான ஏழைகளுக்கோ வயிராற உண்ண முடியாத நிலை. இருவரும் இருந்தும் இல்லாதவர்கள். அத்தகு நிலையே நாட்டிற்கு வந்த வரப்பிரசாதமாக உள்ளது. நாள்தோறும் உழைத்துக் களைத்த மக்கள் மாதத்தில் ஒருநாளைக்கேனும் வயிறு நிறையும்படியாகச் சாப்பிட வேண்டும் என்று நினைப்பதில் தவறு எதுவும் இருக்கமுடியாது.

சாப்பாட்டுக் கடைக்குச் சென்று, சாதிவித்தியாசம் பாராமல் எல்லோருடன் சரிக்குச் சமமாக உட்கார்ந்து சாப்பிடும் நிலையினை ஆதிக்கச் சாதியினர் ஒருபோதும் ஏற்றுக்கொள்வதில்லை. அதுவும் அவர்கள் உட்கார்ந்து சாப்பிட்டார்கள் என்பதனைக் கேட்டமாத்திரத்தில் அவர்களைச் சொற்களால் வதைக்கும் நிலைப்பாட்டினை 'கூகை' புதினத்தில்,

> "நாறப்பயகளே, ஒங்களுக்குக் கேக்குதோ களப்புக்கடச் சோறு. அதுவும் பெஞ்சுமேல ஒக்காந்து தொரைகளுக்கு ஒய்யாரத்துல சோறு."[51]

என்று காட்டுகிறார் சோ. தர்மன்.

**உடை உடுத்த அனுமதிக்காத நிலை**

சாதியும் ஆடையும் இணைந்த ஒன்றாக உள்ளது. ஒடுக்கப்பட்ட மக்கள் தூய்மையான ஆடைகளை அணிந்துகொள்வதனை ஆதிக்கச்சாதியினர் ஏற்றுக் கொள்வதில்லை. தம்மைப்போல் உடை உடுத்திக் கொள்வதனையும், நடையுடை பாவனைகளை மாற்றிக் கொள்வதனையும் ஏற்பதில்லை. தம்மினும் கீழானர்களாகவே தங்களைக் காட்டிக்கொள்ள வேண்டும் என்பதில் குறியாக இருப்பர். வெண்மையான உடையணிந்த மக்களைச் சாதியின் பெயரால் வன்முறைக்கு உள்ளாக்குவதனைத் 'தோல்' புதினத்தில்,

> "வெள்ளையும் சொள்ளையுமாப் போய்ட்டாப்ல நீங்க மேகலத்தாரா ஆகிருவீங்களோ, அதுதான் ஒங்க மூஞ்சியிலயே எழுதி ஒட்டியிருக்கே. ஜாதிகெட்ட பயகன்னு"[52]

என்று காட்டுகின்றார் சோ. தர்மன்.

**ஒதுக்கி வைத்தல்**

தொழுநோயால் பாதிப்புக்குள்ளான நாட்டாமைக்காரரை, அவரது பிள்ளைகள் ஒதுக்கி வைக்கின்றனர். அவருக்குத் தேவையான உதவிகளைத் தாழ்த்தப்பட்டவனான ராசய்யாதான் செய்கிறான். இதனைப் பார்க்கும் ஊர் மக்கள் அவனையும், அவனது சாதியையும் இழிவுபடுத்திப் பேசுகின்றனர். இதனை,

> "போயும் போயும் ஊர் மாடு மேய்க்கிற பறப்பய… எம்மாங் தைரியங் இருந்தா அந்த ஆளுக்கு சாராயங் வாங்கிக் கொடுக்கறதோட மட்டுமில்லாம… சரிக்குச் சரியா பழகுவாங்.."[53]

என்று குறிப்பிடுகின்றார் அறிவழகன்.

தொழுநோயால் பீடிக்கப்பட்ட நாட்டாமைக்கு, யாருமே உதவ முன்வராத நிலையில் அவரிடம் பலஆண்டுகளாக வேலைபார்த்த முனியன் என்ற தாழ்த்தப்பட்டவன் அவருக்குப்

பணிவிடைகள் செய்து தருகின்றான். இதனை அந்த ஊர்மக்கள் எதிர்க்கின்றனர். இறக்கும் நிலையில் இருந்தாலும் அவருக்கு எந்த உதவிகளும் செய்யக்கூடாது என்றும், அவ்வாறு செய்தால் அவனைக் கொன்றுவிடுவதாகவும் மிரட்டுகின்றனர். தன்னை வளர்த்து ஆளாக்கிய தன் எசமானன் நோயால் பீடித்திருப்பதனைக் கண்டு உள்ளம் மருகி, அவருக்குப் பணிவிடைகள் செய்ய அதுவே அவனது வாழ்க்கைக்கு இறுதியாக முடியும் நிலையினை,

> "தொட்டாலே தீட்டுன்னு ஒதுங்கற ஒசந்த சாதிக்கார மனுசங்... காலத்தொட்டுக் கேட்டதும் முனியனுக்கு மனசு இறங்கிப் போச்சு. அந்த மனுசனுக்கு ஒதவாத அந்த ஒடம்ப வச்சிக்கினு இன்னாத்துக்கு இந்த மனுசங் இப்பிடி கஷ்டப்படனுன்னு நெனச்சானோ இன்னாவோ? சரின்னு கருக்கா சுருக்கப் போட்டு ஆளயுங் தூக்கி தொங்கவுட்டுட்டு... வேதன தாங்காம அங்கயே ஒக்காந்து அழுது பொலம்பி இருக்கான்.
>
> விசயம் எப்பிடியோ ஊருக்குத் தெரிஞ்சு... தீவட்டியுங் கையுமா ஊரே தெரண்டு வந்து அந்த கொட்டாயிக்கு அப்படியே தீய வச்சுக் கொளுத்திப் புட்டாங்க. நாட்டாம செத்துப்போயி எரிஞ்சாரு. முனியன் உசுரோட எரிஞ்சு போனான்"[54]

என்று காட்டுகின்றார் அறிவழகன். இதில் சாதியைத் தாண்டிய மனிதநேயம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். மார்க்சியம் மனிதநேயத்தையே வலியுறுத்திப் பேசுகிறது. மனிதநேயத்தை ஒதுக்கிவிட்டுப் பொதுவுடைமையைத் தனியே பிரித்துப் பார்த்தல் இயலாது என்பதனை அறிதல் வேண்டும்.

**பொதுக்கிணற்றில் குளிப்பதில் தீண்டாமை**

ஊரில் உள்ள கிணறுகள், குளங்கள், கால்வாய்கள், மதகுகள், அணைகள் கட்டியவர்கள் எல்லாம் தாழ்த்தப்பட்ட இன மக்கள்தான். ஆனால் அவற்றைக் கட்டிமுடிக்கும் வரைதான் அங்கே அவர்களுக்கு அனுமதி. கட்டி முடித்தபின்னர் கிணற்று நீரைக் குடிப்பதற்கும், குளிப்பதற்கும், குளத்தில் இறங்கி கை, கால் கழுவுதற்கும் அவர்களுக்கு அனுமதிப்பது இல்லை. இவ்வாறு கிணற்றில் இறங்கிக் குளிக்க இயலாத நிலை வழக்கில் இருந்ததை, 'பிறகு' புதினத்தில்,

> "அந்தக் காலத்துல இப்பிடி கெணத்துலகூட குளிக்க முடியாது. கண்டுக்கிட்டா வெரட்டியடிப்பாக. ஊருக்குள்ள அவராதங் கூடப் போட்டுருக்காக. அதுலயும் குருசாமி நாயக்கர் அய்யா இருந்தாரே, உச்சிக்குடுமிப் போத்தி நாயக்கருன்னு பெரிய ஆளு. அவரு கண்ணுல காங்க வுடமாட்டாரு"[55]

என்று காட்டுகின்றார் பூமணி.

ஊர் மக்களின் தாகத்தைப் போக்குவதற்காகக் கிணற்றை வெட்டி, தண்ணீர் நிறைத்துத் தந்த தாழ்த்தப்பட்ட மக்கள் அக்கிணற்று நீரைக் குடிப்பதற்கு அனுமதி இல்லை. மீறி கிணற்றுக்குள் இறங்கித் தண்ணீர் குடித்தால் தண்டனைதான் கிடைக்கும். இதனை 'பிறகு' புதினத்தில்,

> "களத்துச் சோலிக்கு மொதலாளி போகச் சொல்லிருந்தாக. போயிருந்தனா மதியம் ஆச்சு. தண்ணித் தாகம்னா தொண்டய வெறட்டுது. நம்மளால கெணத்துக்குள்ள எறங்கணும்னா மேகலக்குடிச் சனங்க எல்லாம் அதுலதான் புழங்குது. நம்ம எறங்குனா அம்புட்டுத்தான்; சண்டைக்கு வந்துருவாங்க.."[56]

என்று காட்டுகின்றார் பூமணி.

ஊர்க்கிணற்றில் தண்ணீர் இறைக்கும் உரிமை ஆதிக்கச்சாதி மக்களுக்கு மட்டுமே உள்ளது என்பதனையும், தாழ்த்தப்பட்ட மக்கள் குடிநீரைப் பொதுக் கிணற்றிலிருந்து இறைத்துக் கொள்வதற்கு உரிமை இல்லாத நிலையும் இருப்பதைக் 'கூகை' புதினம் குறிப்பிடுகிறது.

**பொதுவழியில் பிணம் எடுத்துச் செல்ல மறுத்தல்**

ஊர்ப்பொதுவழியாகத் தாழ்த்தப்பட்ட மக்களின் பிணங்களை எடுத்துச் செல்வதற்கு அனுமதிக்க இயலாத நிலை இன்றைக்கும் வழக்கில் உள்ளது. ஒவ்வொரு சாதிக்குமெனப் பிணங்களைப் புதைப்பதிலும் பேதங்கள் பார்க்கப்படுகின்றன. தாழ்த்தப்பட்ட மக்கள் பிணங்களைக் கொண்டு செல்வதற்குப் போராடும் நிலையே உள்ளது என்பதனைத் 'தோல்' புதினம் மிகத் தெளிவாகப் பதிவுசெய்துள்ளது.

> "ஊரணியில தண்ணி நெம்பிக் கெடக்குது. இடுகாட்டுக்குப் பொணத்தை எடுத்துட்டுப் போக வழி தெரியலை. மேல்சாதிக்காரவுக, பொணத்தை மேலக்குடி தெருவழியா கொண்டு போவப்படாதுண்டு மரிக்காவ ஒண்ணும் தோணாம சேரி சனமே கையப் பெசஞ்சிக்கிட்டு நிக்குவு மாஞ்சி போவுது..."[57]

என்பதில் ஆணவச்சாதிக்காரர்கள் பிணத்தைக் கொண்டு செல்வதற்கு அனுமதிக்காத நிலை காட்டப்பட்டுள்ளது. பிணத்தைக் கொண்டு செல்வதற்கு வழி ஏதும் இல்லாததால் மக்கள் போராட்டம் செய்த பின்னரே, மாவட்ட ஆட்சியர் தலையிட்டுத் தீர்த்து வைப்பது இப்புதினத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களுக்குரிய நியாயம் கிட்டவில்லை என்றால் தாமதிக்காது அரசின் சட்ட உதவியை நாடுவதே முறையான செயலாக இருக்கும் என்பது இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

**தீண்டாமைக்கெதிரான வன்முறை**

தீண்டாமைக்கு எதிரான வன்முறைகள் தனியாகவும், கூட்டாகவும் ஆதிக்கச் சாதியினரால் நிகழ்த்தப்பட்டு வருவது தொடர்ச்சியான நிகழ்வாக உள்ளது. சாதியின் பெயரைக் காரணமாக வைத்து அடித்து உதைப்பதும், சாதியின் பெயரால் திருட்டுப்பட்டம் கட்டுவதும், தீண்டாமையின் காரணமாக மனிதர்களை எரிப்பதும் சர்வசாதாரணமாக இன்றைக்கும் ஆதிக்கச்சாதிகளால் அரங்கேற்றப்பட்டு வருகின்றது.

"சாதியத்தின் கொடிய வடிவம் தான் தீண்டாமை. உலகில் சாதியம் இருக்கும் வரை தீண்டாமை இருக்கும்"[58] என்று சாதியத்தின் விளைவால் நேரும் தீண்டாமை குறித்து அண்ணல் அம்பேத்கர் குறிப்பிடுகின்றார்.

தீண்டாமைக் கொடுமைகளைப் பார்த்து அறிந்துகொள்ள முடியாது; படித்தால் உணர்ந்துகொள்ள முடியாது; அனுபவத்தால் மட்டுமே அதன் வலிகளை உற்றுணர முடியும் என்ற விதத்தில் புதினங்களில் தீண்டாமைக் குறித்த நிகழ்வுகள் இடம்பெற்றுள்ளன.

'கழிசடை' புதினத்தில் துப்புரவுத் தொழில் செய்யும் அனுமந்தய்யா, சாக்கடையைச் சுத்தம் செய்வதற்காக மண்வெட்டியைத் தருமாறு வீட்டுக்காரரிடம் கேட்கிறான். வீட்டிலிருந்த மண்வெட்டியைக் கொண்டுவந்து தரும் பெண், அதனைக் கையில் தராமல், அவன் இருக்கும் இடம்நோக்கி வீசுகின்றாள். இதனை,

> "ரெட்டியாரம்மாள் மண்வெட்டியைத் தூரத்திலிருந்தபடியே தூக்கிப் போட்டாள். அனுமந்தய்யா சற்று உஷாராய் இல்லாது போயிருந்தால் அது விழுந்த வேகத்தில் எம்பிக் கால்மீது விழுந்திருக்கும். அவள் மண்வெட்டியைப் போட்ட தோரணை. உள்ளுக்குள் அவளுக்கிருந்த கோபம் மட்டுமல்ல; தீட்டு ஒட்டிக் கொள்ளக் கூடாதே என்பதுதான்"[59]

என்று காட்டுகிறார் அறிவழகன். மண்வெட்டி என்பது கூர்மையான ஆயுதம் போன்றது என்பதும், அது கையின்மீதோ, காலின்மீதே பட்டால் காயம் ஏற்படும் என்பதனை அறிந்திருந்தும் அவள் தீண்டாமை காரணமாகக் கொண்டு அவன்மீது வீசும் செயல் தாழ்த்தப்பட்டவர்கள் மீது உயர்சாதிப் பெண்களுக்குக் கூட கரிசனை இல்லாத நிலை உள்ளதைக் காட்டுகின்றது.

இதே புதினத்தில் சாக்கடையைச் சுத்தம் செய்யும் அனுமந்தய்யா, ரெட்டியாரம்மாவிடம் குடிப்பதற்கு ஏதாவது நீச்சத்தண்ணி கிடைக்குமா? என்று கேட்கிறான். அவன் கேட்பதைக் கொடுப்பதற்கு மனமில்லாத நிலையில், அவனிடம் வேலை வாங்க வேண்டுமே என்ற காரணத்திற்காக அவனுக்கு நீச்சத்தண்ணி கொடுக்கச் சம்மதிக்கிறாள். நீச்சத்தண்ணியைக் கைகளில் பட்டு விடாமல் இருக்க மேலே இருந்து கீழ்நோக்கி ஊற்றுவதையும அதனைக் சாக்கடையைச் சுத்தம் செய்த கையிலேயே வாங்கிக் குடிப்பதனையும்,

"அனுமந்தய்யா சுற்றும் முற்றும் பார்த்தான். ஓட்டைச் சட்டிகூடத் தென்படவில்லை. உட்கார்ந்து கையிரண்டையும் சேர்த்து வாயோடு ஒட்டி வைத்துக் கொண்டான். ரெட்டியாரம்மாள் எட்டி நின்றபடியே தூக்கிப்பிடித்து மேலே பட்டுவிடாதபடி பழைய சோற்று நீரை ஊற்றினாள்"[60]

என்று காட்டுகின்றார் அறிவழகன். கிராமங்களிலும் நகரங்களிலும் துப்புரவுத் தொழிலாளர்களை மிகமிக அருவருக்கத் தக்கவர்களாகவும், தொட்டால் தீட்டு என்னும் நிலையிலும் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள அவல நிலையை இந்நிகழ்வுகள் வெளிச்சமிட்டுக் காட்டுகின்றன.

'கூகை' புதினத்தில் இடம்பெறும் தாத்தைய்ய நாயக்கரின் மனைவி, தன் பண்ணையில் கூலி வேலைபார்க்கும் மக்களுக்குச் சிரட்டையில் காபி ஊற்றித் தருவதனை,

"நாயக்கரம்மா சட்டி நிறைய காபி போட்டுக் கொண்டு வந்தாள். பிணையலை நிறுத்திவிட்டு இருளியும் குப்பாண்டியும் புளிமூட்டையும் ஆளுக்கொரு சிரட்டையைத் தூக்கிப் பிடித்தனர். சிரட்டையில் படாமல் உயரத் தூக்கி காபி ஊற்றியது நாயக்கரம்மா"[61]

என்று காட்சிப்படுத்துகின்றார் சோ. தர்மன். தண்ணீர், தேநீர் குடிக்கும் இடங்களில் மட்டும் அல்ல; சாராயக்கடைகளிலும் தனிக்குவளை முறை வழக்கிலிருப்பதனை,

"பள்ளக்குடி, சக்கிலியக்குடி, பறக்குடிக்காரர்கள் குடிக்கும் கண்ணாடிக் கிளாஸ் பக்கத்தில் ஆவாரஞ்செடி மூட்டுக்குள் தனியே கிடந்தது. வாங்கிக் கொண்ட சாராய பாட்டிலைக் கையில் பிடித்தபடி தள்ளாடி நடந்தான்"[62]

என்று வெளிப்படுத்துகின்றார் சோ. தர்மன்.

**சாதிப் பெயரால் வசைபாடுதல்**

பொது இடங்களிலும், அரசு அலுவலகங்களிலும் ஒடுக்கப்பட்ட மக்களை மரியாதை இல்லாமல் அழைப்பதும், ஒருமையில் அழைப்பதும், மரியாதைக் குறைவாக நடத்துவதும், சாதிப் பெயரைச் சொல்லித் திட்டுவதும் அன்றாடம் நடைபெறும் தொடர்நிகழ்வுகளாகவே இருந்து வருகின்றன.

"ஒரு மக்கள் கூட்டத்தைக் குறிக்கும் பள்ளி, பறையன், சக்கிலியன் போன்ற சொற்கள் கெட்ட வார்த்தைகள் போல் வசைச்சொல்லாகச் சாதி இந்துக்களிடம் விளங்கும் கொடுமையை இன்றும்கூடக் காணலாம். அதனாலேயே அதற்கென ஒரு சட்டமும் இன்று இயற்றப் பட்டுள்ளது என்றால் தீண்டாதாருக்கு ஏற்பட்ட சமூக அவலத்தை என்னென்பது?"[63] என்பதன் மூலம் தாழ்ந்த இன மக்களை இழிவுபடுத்துவதை அறிய முடிகின்றது.

தன் வயற்காட்டில் மாடு மேய்ந்து விட்டமைக்காக, மாட்டின்மீது கோபப்படாமல், மாட்டை மேயவிட்டதாகக் கூறி தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்நத அழகிரியைச் சாதியின் பெயரால் வசைபாடும் நிலை, ‘பிறகு’ புதினத்தில்,

“ஏலேய் சக்கிலித் தாயிளி மாடு பாருடா படப்புல மேயிறத. கண்ணவிஞ்சா போச்சு. வாய்க்கு வந்தாத்தெரியுமா?

சாமியோவ் வையாதங்க. அது வேற ஆரு மாடுமில்ல; நம்ம கெடாரி தான்.

ஆமாலே ஊருக்காரன் மாடு மேஞ்சாலும் நம்மதுதான்.

அதெப்பிடி சாமி அவுக மாடு அவுக படப்புல மேயும்

மேயும் மேயும் மொதல்ல ஒன் குண்டித்திமிற எறக்கணும்

ஏற்கெனவே குண்டி தேஞ்சு கெடக்கேன். நீங்க வேற எறக்காதீங்க. ஓங்களுக்குப் புண்ணியமாப் போகுது.

ஏன் பேசமாட்ட ஊருச்சோறு உறுத்தாதா பின்ன”[64]

என்று குறிக்கப்பட்டுள்ளது.

**பெயரைச் சொல்லி அவமதித்தல்**

ஒருவர் வைத்திருக்கும் பெயர்கூட அவரது சாதி மேட்டிமையைக் காட்டுவதாக அமைந்திருப்பதனை இந்தியச் சமூக அமைப்பில் காணமுடியும். மேற்கத்திய நாடுகளில் குறிப்பாக ஆப்பிரிக்காவில் பண்ணை அடிமைகள் சிலவகைப் பெயர்களை வைத்துக் கொள்வதற்கு அனுமதி இல்லாத நிலை இருந்து வந்துள்ளதனைச் சமூகவரலாறுகள் எடுத்துரைக்கின்றன. இந்தியாவில் உயர்சாதி மக்கள் மட்டுமே பெயர் வைத்துக் கொள்ளலாம் என்பதனையும், தாழ்த்தப்பட்டவர்கள் பெயர்களை வைத்துக் கொள்ளக்கூடாது என்பதனையும் சாதியக் கட்டுமானத்தின் இறுக்கநிலையாகக் கொள்ளலாம்.

தீண்டத்தகாதவர் தம்முடைய தாழ்ந்த அந்தஸ்துக்கு ஏற்றபடி நடந்து கொண்டு, பொதுமக்கள் அவரை அறிந்து அடையாளம் கண்டுகொள்ளும் வகையில் புறச்சின்னங்களைக் கொண்டிருக்க வேண்டும் என்பது சாதி ஆதிக்க நிலைப்பாட்டின் வகையினதாகும்.

அ) சாதியில் இழிந்தவர்கள் இழிவான பெயர்களையே கொண்டிருக்க வேண்டும்.

ஆ) சுத்தமான உடை அணியக்கூடாது.

இ) வீட்டுக்கு ஓட்டுக்கூரை இல்லாதிருக்க வேண்டும்.

ஈ) வெள்ளி, தங்க நகைகள் அணியாமலிருக்க வேண்டும்.

இந்த விதிகளில் எதனையும் மீறுவது குற்றமாகும்"[65] என்று தீண்டத்தகாதவர் களாகக் கருதப்படும் ஒடுக்கப்பட்டோர்மீது மேலாண் சாதியினர் தீண்டாமையை மேற்கொள்ளும் வன்முறைகளைக் குறித்துப் பட்டியலிடுகின்றார் அண்ணல் அம்பேத்கர்.

துப்புரவுத் தொழிலாளி உயர்ந்தவரைக் குறிப்பிடும் 'அய்யா' என்ற பின் இணைப்புடன் பெயரை வைத்துக் கொள்ளக் கூடாது என்று கருதும் நிலைப்பாட்டினையும், அவ்வாறு பெயர் வைத்திருந்தால் அய்யா என்பதனை விடுத்துக் கூறுவேன் என்று சொல்லும் சாதி ஆதிக்கச் செயற்பாட்டையும் 'கழிசடை' நாவலில்,

"பேரசொல்லு?

பாலைய்யா சாமி…..

பெரிய தொர பாரு…

உன்னெனலாங் நானு அய்யான்னு கூப்டனுங்… இல்ல?

சாமி சாமி நீங்க போயி எங்கள அய்யான்னு கூப்பட்றதா?

வேணாங் சாமி.

ஏண்டா…. நாங்க உங்கள அய்யான்னு கூப்பட்றதுக்கு எங்களுக்கு எதுக்குடா இந்த உத்தியோகம்? அய்யான்னு நாங்க உங்கள கூப்புட்டா நீங்கயில்லடா எங்கள வேல வாங்கணும்.. பாக்கறவங்கதாங் அப்பறங் எங்களப் பத்தி இன்னா நெனப்பாங்க"[66]

என்று எடுத்துரைப்பதனைக் காணலாம். இதோடு ஒருவரை அழைக்கும் பெயர் அவரது சாதி ஆதிக்கத்தையும், அடிமை நிலையையும் வெளிப்படுத்துவதாக இருக்க வேண்டும் என்று கருதும் ஆதிக்கவெறியினை,

"ஒனக்கு பேரு வச்சவங் பெரியவண்ணா கூலி கொடுக்கற நாங்க அதைவிட பெரியவங்கடா! நாங் சொல்றேங். இனிமே ஒங்பேரு பாலய்யா இல்ல. பாலிகாடு சரிதான…"[67]

என்னும் பகுதி எடுத்துரைக்கிறது. உயர்சாதிக்காரர்கள், தாழ்ந்த சாதி மக்களை வசைச்சொற்களால் திட்டுவதும், கேவலமாக நடத்துவதும் இன்றளவும் இருந்து வருகின்றது. இது ஆதிக்கக்காரர்களின் காட்டுமிராண்டி நிலையைக் காட்டுகிறது.

**ஒடுக்கப்பட்டோர் உயர்வால் எழும் பொறாமை**

ஒடுக்கப்பட்ட மக்கள் உடல் உழைத்துக் கறுத்த தேகம் கொண்டு விளங்குவதால் அவர்கள் எந்தவிதமான கடினமான பணிக்கும் எளிதாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

இதனாலேயே அவர்கள் இந்திய இராணுவத்திலும், காவல் துறைகளிலும் கணிசமான அளவில் இடம் பெற்றுள்ளனர். அவ்வாறு அவர்கள் இராணுவத்திலும், காவல் துறையிலும் இருந்தாலும் இதுவரை அவர்களை ஆதிக்கம் செய்து, அடக்கியாண்டு வந்த ஊர்சாதி மக்கள் அவர்களைக் கண்டு பொறாமைப் படவே செய்கின்றனர். அவ்வாறு 'மலரும் சருகும்' புதினத்தில் இந்திய இராணுவத்தில் சேர்ந்து, பணியாற்றிவிட்டுத் தன் சொந்த ஊருக்குத் திரும்பி வரும் பட்டாளத்து ரெங்கனைக் கண்டு பொறாமைப்படும் ஆதிக்கச் சாதியினரின் செயல்பாட்டினை,

> "லே, பற பயலுக்குத் தக்கபடி நடந்துக்கோ, கொடலை உருவி மாலையாப் போட்டிரப் போறேன் என்று தன் பாளை அரிவாளை நீட்டி
>
> எச்சரித்த வண்ணம் உறுமினார் தேவர்"[68]

என்று காட்டுகின்றார் டி. செல்வராஜ். ஒடுக்கப்பட்ட மக்களின் உயர்வைப் பார்த்த பொறாமையின் விளைவே இவ்வாறு சொல்ல வைக்கிறது.

**காதலில் சாதி ஆதிக்கம்**

ஒடுக்கப்பட்ட மக்களிடையிலேயே சாதி பேதங்கள் பார்க்கப்படுகின்றன. இதனால் ஒடுக்கப்பட்டவர்களை ஒன்றிணைப்பதும் விடுதலையை வென்றெடுப்பதும் சிரமமானதாக உள்ளது. ஒடுக்கப்பட்ட சாதியைச் சார்ந்த இளைஞன் மாட்டிறைச்சியை உண்பதனைக் காரணமாகக் காட்டிக் காதலை மறுக்கும் நிலைப்பாட்டினை 'செந்நெல்' நாவலில்,

> "ஒன் மவ செல்வி மாட்டுக்கறி திங்கிற பறைப்பயல சுத்திக்கிட்டு நிக்கிறான்னு கேள்விப்பட்டுறேன்.
>
> அவமானம்… மரியாதையா இருக்கட்டும்"[69]

என்று காட்டுகின்றார் ஆசிரியர். மாட்டுக்கறி திண்பதனால் தங்களுக்கு அவமானக் குறைவு ஏற்படுவதாகப் பள்ளர் இனமக்கள் கருதும் நிலைப்பாட்டினை இதன் வழி காட்டுகின்றார் ஆசிரியர்.

மாட்டுக்கறியைத் தின்னும் தலித் இளைஞனைத் திருமணம் செய்துவைத்து விட்டால் அடுத்த பெண்ணுக்கு ஏற்ற மணமகன் கிட்டமாட்டான் என்ற சமூகச் சிக்கலினைப் பாத்திரத்தின் கூற்றாக,

> "பொண்ணா பொறந்தவ மாடு உறிக்கிற பறப்பயலக் கட்டிக்கிட்டா எவனும் உன்னோட சின்னப்பொண்ணக் கட்டிக்க வரமாட்டான்"[70]

என்னும் பகுதியில் 'செந்நெல்' புதினத்தில் காட்டுகின்றார் சோலை சுந்தர பெருமாள்.

காதலை ஏற்றுக்கொள்வதற்கும் பிரிப்பதற்கும் மதம் ஒரு காரணமாக அமைகின்றது. இதனை 'மலரும் சருகும்' புதினம் காட்டுகின்றது

**மதப்பாகுபாடு**

சமுதாயத்தில் சாதியத்தைப் போலவே, மதமும் ஒரு முக்கியக் கூறாகச் செயல்படுகிறது. "இறைவன் என்ற நம்பிக்கையை மையமாய்க் கொண்டு இறைவனுக்கும் மனிதனுக்குமுள்ள உறவு தொடர்பான கருத்துகள் நம்பிக்கைகள், உணர்வுகள், வழிபாட்டு முறைகள், சடங்குகள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றுடன் இயங்குவதே சமயம் என்னும் அமைப்பு என்பர் எஸ்.கே. பாஸகல் கிஸ்பர்ட் என்னும் சமூகவியலார்."[71] இக்கூற்று மதத்தின் இயல்பினைச் சுட்டிக்காட்டுகிறது. மதத்தை மக்களுக்கு அபின் என்றும், ஒடுக்கப்பட்டவர்களின் ஏக்கப் பெருமூச்சு என்றும் கூறினார் காரல் மார்க்ஸ். இக்கருத்தை அரண் செய்யும் வகையில்,

> "மதமும் சாத்திரங்களும் மனிதன் அறிவையும் சுதந்திரத்தையும் ஒழிப்பதற்கென்றே மக்களை மடையர்களாகவும் அடிமைகளாகவும் ஆக்குவதற்கென்றே ஏற்பட்ட, ஏற்படுத்தப்பட்ட சாதனங்களாகும்"[72]

என்னும் கருத்து அமைகிறது. " இந்துக்களால் கடைபிடிக்கப்பெறும் இன்றைய இந்து சமயம், அரசியல் நலன்களைப் போற்றி வளர்க்கத்தக்க வகையில் அமைக்கப்பெறவில்லை. சாதி வேறுபாடுகளும், அச்சாதி வேறுபாட்டுள் எண்ணற்ற பிரிவுகளைப் புகுத்தியுள்ளமையும் இந்து மக்களை அடியோடு அரசியலுணர்வு அற்றவர்களாகச் செய்துவிட்டன. எண்ணிறந்த சமயச் சடங்குகளும், விழாக்களும், புனிதப்படுத்தும் கழுவாய்க்குரிய விதிமுறைகளும் இந்தியரைக் கடினமான எந்தத் துணிச்சல் மிக்க செயல்களைச் செய்வதற்கும் தகுதியற்றவர்களாகச் செய்துவிட்டன"[73]. இக்கருத்தின் மூலம், மதம் மக்களைப் பலவீனப்படுத்தி இருப்பதையும் அறியவியலுகிறது. மக்களைப் பண்படுத்துவதற்காக ஏற்பட்ட மதம், இன்று பல்வேறு சிக்கல்களை உருவாக்கும் காரணியாக மாறிவிட்டதையும், மதத்திலும் சாதிப்பாகுபாடு பார்க்கும் நிலையையும் பதிவு செய்துள்ளன.

**மதத்தில் சாதிப் பாகுபாடு**

ஒடுக்கப்பட்ட மக்கள் எங்கு சென்றாலும் அவர்களைச் சாதியின் பெயரால் பிரித்தாளும் நிலையே உள்ளது. மதம் விட்டு வேற்று மதத்திற்குச் சென்றாலும் அங்கும் சாதியின் பெயரால் பிரித்தாளப்படுகின்றனர். இந்து மதத்தில் தான் பிரிவினைகள் மிகுதியாக உள்ளது என்று, கிறித்துவ மதத்திற்குச் சென்றாலும் அங்கும் வழிபாட்டிடங்களில் சாதி பேதம் பார்க்கப்படும் நிலை உள்ளதனைத் 'தோல்' புதினத்தில்,

> "நகரத்திலும் சுற்றுவட்டாரத்திலும் உள்ள அத்தனை கத்தோலிக்கத் தேவாலயங்களிலும், தாழ்த்தப்பட்ட கிறிஸ்தவர்கள், தீண்டப்படாதவர்கள் என்ற

வகையில் பிரார்த்தனையின்போது அழிபாய்ச்சிப் பிரிக்கப்படுத் தனியிடம் ஒதுக்கப்பட்டிருப்பதையும் சாமியார்கள் மேல் சாதிக்கிறிஸ்தவர்களுடன் சேர்ந்து நன்மை தர மறுப்பதையும் எதிர்த்து, இருதயசாமியும் மற்றும் தன் மானம் கொண்ட தாழ்த்தப்பட்ட கிறிஸ்தவர்களும் நடத்திய போராட்டம் காரணமாக வன்னியக் கிறிஸ்தவர்களது எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் பங்கு பெரிய சாமியார் பெப்பின் டிஸோஸா, தாழ்த்தப்பட்ட கிறிஸ்தவர்களைச் சமாதானப்படுத்துவதற்காக இப்படி ஒரு தேவாலயத்தைச் சமைத்துத் தனக்கு மிகவும் விருப்பமான இருதயசாமியின் பொறுப்பில் விட்டிருக்கிறார்"[74]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ்.

**தேர்தல் வாக்குரிமை**

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உரிய வாக்குரிமை கிடைத்தும் தங்களால் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க இயலாத நிலையில் உள்ளனர். தமது ஆண்டைகளும் முதலாளிகளும் தலைவர்களாக உருவாவதற்குத் தாழ்த்தப்பட்டவர்களின் வாக்கு வங்கி தேவைப்படுகிறது.

கிராமங்களில் ஆண்டைகள் சொல்வதே சட்டமாக உள்ளது. கிராமத் தலைவர்களுக்கான தேர்தலில் தாழ்த்தப்பட்ட மக்களைத் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி அவர்களின் வாக்குகளைப் பெற்றுக் கொள்கின்றனர். பண்ணையார்களை அண்டி வாழும் ஏழைத்தொழிலாளர்கள் அவர்களை எதிர்க்க இயலாது, தங்களுக்குள்ளேயே புழுங்கிக் கொண்டு, செய்வதறியாது அவர்கள் சொல் கேட்டு அடங்கி நடக்கவேண்டிய நிலையில் உள்ளனர். இந்நிலை 'கூகை' புதினத்தில்,

"நான் சொல்றது தெருஞ்சுதாடா. ஓட்டுக்கு நிக்கிறது ஆரு தெரியுமில்ல. நம்ம அண்ணாச்சிதான். பெரியமாமாவுக்கு ரொம்பச் சொந்தம்.

.....................

அதனால் சக்கிலியக் குடி ஓட்டு பூராவும் நமக்குத்தான் போடணும்.

'உத்தரவாயிடுச்சுனா அதுக்கு மறுபேச்சென்ன சாமி.

சனமெல்லாம் போடச் சொல்லீருவோம்"[75]

என்று எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆதிக்கச் சாதியினர் கைநீட்டி யாருக்கு வாக்களிக்கச் சொல்கிறார்களோ, அவர்களுக்கே தங்கள் வாக்குகளை அளிக்கும் சுயமற்றவர்களாக அடிமைகள் இருக்கின்றனர் என்பது,

"சாமி மாரு சொன்னதக் கேக்காம எங்கப் போகப் போறம்"[76]

என்று குறிக்கப்படுகிறது. சுதந்திரத்தின் பொருளே தெரியாமல், அதனைத் தாங்களே வாங்கிக் கொடுத்தது போல் சொல்லி, கீழ்த்தட்டு மக்களை ஏமாற்றும் ஆண்டைகளின் செயல்பாடு,

> "பெறவு அவன் வந்தான். கீச்சாதிக்காரன் அது இதுன்னு இருக்கப்புடாது. ஏன்னு கேட்டீன்னா பெரியாளுக சொதந்தரம் வாங்கித் தந்ததே நமக்காகத் தாம்ப்பா. நிக்கிறது ஆரு தெரியுமா? நம்ப அண்ணாச்சியாக்கும். பேசாமப் போக வேண்டியது. பொட்டியப் பாத்து ஓட்டப் போட வேண்டியது தெரிஞ்சுதா"[77]

என்று எடுத்துரைக்கப்படுகிறது. மார்க்சியம், தொழிலாளர்களின் அரசியல் பங்களிப்பைக் கட்டாயமாக்குகிறது. தொழிலாளர்களிலிருந்தே தலைவர் ஒருவர் உருவாக்கம் பெற்று, அரசியல் பங்களிப்புச் செய்தால்தான் தொழிலாளர்கள் நலத்திட்டங்கள் செயலாக்கம் பெற வழியேற்படும் என்று கருத்துரைக்கிறது. இதன் பொருட்டே ஆட்சி அதிகாரத்தில் அடித்தட்டு மக்கள் நிலை தேவை என்பது காட்டப்படுகிறது.

**தொகுப்புரை**

மனித உள்ளத்தில் ஆழ்ந்த எழுச்சியையும், உணர்வுகளையும் எழுப்ப வல்லவை இலக்கியங்களே ஆகும். அது உலகெங்கிலும் சக்தி வாய்ந்த ஒரு கருவியாக இயங்கி வருகிறது. தமிழில் உழைப்பாளர்கள் படும் துயரங்களை, அவர்தம் வாழ்வியல் சிக்கல்களையும் முன்னேற்றத்திற்கான உரிய தீர்வுகளையும் எடுத்துரைப்பதற்கு ஏற்றதும் பொருத்தமானதுமான கருவி இலக்கியமே என்பதனை உணர்ந்தே பொதுவுடைமைச் சிந்தனைப் போக்கினைக் கொண்ட படைப்பாளர்கள் இலக்கியங்களைப் படைத்தளிக்கின்றனர். அவற்றில் சமூக விவரிப்புக்களை அழுத்தமாகவும், ஆழமாகவும் பதிவு செய்வதற்கு ஏற்ற கருவி புதினமே என்பது ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களால் தெளிவாகிறது.

சமுதாயத்தில் வர்க்கமும், வர்க்கப் பிரிவினையும் இணைகோடுகளாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. உழைத்தே ஆகவேண்டிய நிலையில் இருப்பவர்களைப் 'பாட்டாளி வர்க்கம்' என்றும், உழைப்பாளர்களின் உழைப்பை, ஆண்டு அனுபவிக்கும் நிலையினரை 'முதலாளி வர்க்கம்' என்றும் பாகுபடுத்திப் பார்க்கின்றனர் பொதுவுடைமை இயக்கச் சிந்தனையாளர்கள்.

இவ்விரு வர்க்கங்களுக்கிடையேயான உறவு, உறவல் முறையையே புதினங்கள் கதைப்பொருளாக்கியுள்ளன. இந்தியச் சமூகத்தில் சாதியும் மதமும் மக்களிடையே பிரிவுகளை ஏற்படுத்தும் ஒன்றாகவே ஒவ்வொரு காலகட்டத்திலும் இருந்துவந்துள்ளன. இந்தச் சிக்கலில் சிக்கித் தவித்து, துயரத்திற்கு உள்ளாகிறவர்கள் பெரும்பான்மை ஒடுக்கப்பட்ட மக்களே. தான் பிறந்த சாதியின் பெயராலும், செய்யும் தொழிலின் பெயராலும், இருக்கும் வாழ்வியல் நிலைப்பாட்டின் பெயராலும், பொருளாதாரப் பின்னடைவினாலும், இவர்கள் அன்றாடம் பெரும்

சிக்கல்களைச் சந்தித்து வருகின்றனர். இவ்வாறான சிக்கல்களையே மார்க்சியச் சிந்தனை பெற்ற புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் எடுத்துரைக்கும் ஒடுக்கப்பட்டோர் வாழ்வியல் நிலை வாழ்விடச் சிக்கல்கள், சாதியச் சிக்கல்கள், தனிமனிதச் சிக்கல்கள் என வகைப்படுத்தி ஆராயப்பெற்றது.

இந்தியக் கிராமங்கள் சாதியக் கட்டுக்குள்ளும், சாதிய ஆதிக்கத்திலும் இருந்து கொண்டு அதிலிருந்து மீள முடியாமல் எந்தவொரு மாற்றமும் பெறாமல் பழமையில் ஊறிக் கிடப்பதனைப் புதினங்கள் காட்சிப்படுத்துகின்றன.

தாழ்த்தப்பட்ட தொழிலாளர்கள் வசிக்கும் இடங்களின் நிலை குறித்தும், அவர்களது வீடுகளின் தன்மை குறித்தும் காட்டப்பட்டுள்ளது. பல தொழிலாளர் -களுக்கு இருப்பிடமே இல்லாத நிலை இருப்பதும் காட்டப்பட்டுள்ளது.

ஆதிக்கச்சாதி மக்கள் வசிக்கும் பகுதிகளிலும், தெருக்களிலும், ஊருக்குள்ளும் தாழ்த்தப்பட்ட சாதி மக்கள் நடந்து செல்ல அனுமதிக்க மறுத்த சீர்கெட்ட நிலை வழக்கில் இருந்து வந்துள்ளதை, ‘கூகை’, ‘மலரும் சருகும்’, ‘செந்நெல்’ ஆகிய புதினங்கள் காட்டுகின்றன.

தாழ்த்தப்பட்டவர்கள் தமது ஆண்டைகளின் வீடுகளில் நடைபெறும் மரணச் சடங்குகளைச் செய்யப் பணிக்கப்பட்டுள்ளமை தெளிவாகிறது. மரணச் செய்தியை அவர்களின் உறவினர்களுக்குத் தெரியப்படுத்துதல், மரணச் சடங்குகள் செய்தல் எனப் பல நிலைகளிலும் தாழ்த்தப்பட்டவர்கள் ஒடுக்குதலுக்கு உள்ளாவது காட்டப்பட்டுள்ளது. எல்லாச் செயல்களைச் செய்தாலும் உரிய கூலியைக் கூடத் தராமல் வேலை மட்டும் வாங்கிக் கொள்ளும் ஆண்டைகளின் இரக்கமற்ற செயல்பாடுகள் காட்டப்பட்டுள்ளன.

தாழ்த்தப்பட்ட உழைக்கும் தொழிலாளர்களிடம் சாதி வேற்றுமையும், தீண்டாமையும் பார்க்கப்படுவது தெளிவுறுத்தப்பட்டுள்ளது. தன்னைப் போலவே பிறரைப் பார்க்க வேண்டிய மனிதன், ஒடுக்கப்பட்ட மக்களை விலங்கினுக்கும் கீழாக வைத்து இழிவுபடுத்திப் பார்க்கும் வன்கொடுமைச் செயல்களைப் புதினங்கள் காட்சிப்படுத்துகின்றன.

புதினங்களில் சாதிக் கொடுமைகள் பல நிலைகளில் காட்டப்பட்டுள்ளன. சாதியின் பொருட்டுக் கொலை செய்வதும் காட்டப்படுகிறது. சாதி ஆணவச் செயல்பாடுகள் அளவுக்குமீறி நடப்பதனையும் அதனை எதிர்க்கவோ, தடுக்கவோ இயலாத நிலையில் தொழிலாளர்கள் இருப்பதனையும் புதினங்கள் காட்டுகின்றன.

ஒடுக்கப்பட்ட மக்களின் வளர்ச்சியை ஆதிக்கச் சாதியினர் ஏளனமாகப் பார்ப்பதும், பேசுவதும், அவர்களின் வளர்ச்சியைக் கண்டு பொறாமை கொள்வதும் புதினங்களில் காட்டப்பட்டுள்ளது.

உழைக்கும் தொழிலாளர்களைச் சாதியும், தீண்டாமையும் பெருமளவில் பாதிப்புக்கு உள்ளாக்கும் திறம் புதினங்களில் இடம்பெற்றுள்ளதனை இதன்வழி அறியமுடிகிறது. தொழிலாளர்கள் தங்களுக்குள் வேற்றுமைகளைக் களைந்து ஒன்றுபட்டு எதிர்ப்பதன் வழியாகவே பொதுவுடைமைச் சமூகம் உருவாகும் நிலை ஏற்படும் என்பது கதைப் போக்கில் உணர்த்தப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**


1. தி.சு. நடராசன், திறனாய்வுக் கொள்கைகள், ப. 74.
2. செ.ரா.பரமேஷ், சமூக உளவியல், ப.4.
3. ந. பிச்சமுத்து, மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.37.
4. ச. பரிமளா, வாஸந்தி நாவல்கள் ஓர் ஆய்வு, ப.58.
5. செயராணி ராசதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், ப.17.
6. வர்த்தமானன் தமிழ்-தமிழ் அகராதி, ப.400.
7. க.ப. அறவாணன், படைப்பாளி - சமுதாயம் - இலக்கியம், ப. 147.
8. மேலது, ப. 147.
9. வை. சச்சிதானந்தம், ஒப்பிலக்கியம் - ஓர் அறிமுகம், ப. 255.
10. பி.ஆர்., பரமேஸ்வரன், சோசலிசமும் முதலாளித்துவமும், ப. 14.
11. நா. வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்கை, ப. 87.
12. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 156.
13. கல்பனா, மதமும் மனித வாழ்வும், மனுசங்க, சிற்றிதழ், மார்ச் - ஏப்ரல், 1990, ப.9.
14. சோலை சுந்தர பெருமாள், செந்நெல், ப.41.
15. டி.செல்வராஜ், மலரும் சருகும், ப.171.
16. இமையம், கோவேறு கழுதைகள், ப.83.
17. பூமணி, பிறகு, ப.33.
18. டி.செல்வராஜ், தோல், ப.168.
19. இமையம், கோவேறு கழுதைகள், ப.83.
20. மேலது, ப.116.
21. மேற்கோள்: பி.யோகீசுவரன், தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், ப.128.
22. சு.வேங்கடராமன் (கட்.ஆ), அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூகம், ஆய்வு நோக்கில் அண்ணா, பக்.27-28.
23. செயராணி ராதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், பக்.186-187.
24. "Before the arrival of Aryans there was no caste systems in the Tamil Country" M.Srinivasa Iyengar, Tamil studies, p.61.
25. சி.என். அண்ணாதுரை, ஆரியமாயை, ப.65.
26. சுப. கதிரேசன், கண்ணதாசன் கவிதைகளில் சமுதாயக் கூறுகள், வெளியிடப்படாத பிஎச்.டி ஆய்வேடு, ப.53.
27. செ.சு.நா. சந்திரசேகரன் 'அத்வைதம் காட்டும் சமய நல்லிணக்கம்', இரா.பாலசுப்பிரமணியன் மற்றும் பலர், சமயம் இணக்கமும் மேம்பாடும், ப.2.
28. தி.பாக்யமுத்து, நூறாண்டுத் தமிழ் நாவல் தரும் செய்தி, ப.187.
29. செயராணி ராசதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், ப.187.
30. கே. முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்துவப் போராட்டஙகள், ப.89.

31. ----------------- சாதியும் வர்க்கமும், முன்னுரை, ப.13.
32. சூ. இன்னாசி, சமயமும் சமுதாயமும், ப.86.
33. பி.ஆர். அம்பேத்கார், சாதியை ஒழிக்க வழி, ப.7.
34. பக்தவசலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.325.
35. ந.பிச்சமுத்து, மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.184
36. பி.யோகீவரன், தமிழ்க் கவிதைகளில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.184.
37. மறைத்திரு சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள், கோகிலாம்பாள் கடிதங்கள், ப.16.
38. சோலை சுந்தர பெருமாள், செந்நெல், ப.41.
39. டி.செல்வராஜ், மலரும் சருகும், ப.61.
40. சோ.தர்மன், கூகை, ப.19.
41. மேலது, ப.18.
42. அம்பேத்கர், அண்ணல் அம்பேத்கர் சிந்தனைகள், ப.54.
43. பூமணி, பிறகு, ப.5.
44. இமையம், கோவேறு கழுதைகள், ப.8.
45. சோ.தர்மன், கூகை, ப.29.
46. மேலது, பக்.36-37.
47. மேலது, பக்.181-182.
48. பூமணி, பிறகு, ப.94.
49. சோ.தர்மன், கூகை, ப.23.
50. மேலது, பக்.23-24.
51. மேலது, ப.24.
52. மேலது, ப.24.
53. அறிவழகன், கழிசடை, ப.143.
54. மேலது, ப.145.
55. பூமணி, பிறகு, ப.134.
56. மேலது, ப.137.
57. டி.செல்வராஜ், தோல், ப.97.
58. அம்பேத்கர், அண்ணல் அம்பேத்கர் சிந்தனைகள், ப. 54.
59. அறிவழகன், கழிசடை, ப.41.
60. மேலது, ப.113.
61. சோ.தர்மன், கூகை, ப.28.
62. மேலது, ப.28.

63. ………., தமிழ்த் தேசப்புரட்சியில் தீண்டாமை ஒழிப்பு, ப. 3.
64. பூமணி, பிறகு, ப.5.
65. அம்பேத்கர், அண்ணல் அம்பேத்கர் சிந்தனைகள், ப. 66.
66. அறிவழகன், கழிசடை, ப.66
67. மேலுது, ப.66.
68. டி.செல்வராஜ், மலரும் சருகும், ப.61.
69. சோலை சுந்தர பெருமாள், செந்நெல், ப.17.
70. மேலது, ப.17.
71. தோப்பில் முஹமது மீரான், அஞ்சு வண்ணம் தெரு, ப.25.
72. ஈ.வெ. ராமசாமி, கடவுள் ஒரு கற்பனையே, ப.63.
73. க.த. திருநாவுக்கரசு (மொ.பெ.ஆ), ராஜாரம் மோகன்ராய், பக்.43-44.
74. டி.செல்வராஜ், தோல், ப.75.
75. பூமணி, பிறகு, ப.42.
76. மேலது, ப.42.
77. மேலது, ப.43.

## இயல் - 4

## புதினங்களில் பொதுவுடைமைச் சிந்தனையும் பெண் வர்க்கமும்

### முன்னுரை

பொதுவுடைமை இயக்கம் பாலினச் சமத்துவத்தை வலியுறுத்துகிறது. இதனால் பெண்களுக்கான உரிமைகளை, விடுதலையை முன்னிறுத்திய கொள்கைளைக் கட்டமைத்தது. பொதுவுடைமை இயக்கச் சிந்தனையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட பெண்கள் இதுவரை தாம் இழந்து வந்த தங்கள் உரிமைகளை, சுயத்தை மீட்டெடுக்கும் போராட்டங்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர். பெண்களின் உழைப்பைச் சுரண்டி காலம் காலமாக அவர்களை வீட்டுச்சிறையில் அடைத்ததோடு மட்டுமல்லாமல் அவர்கள் எந்த நிலையிலும் மேலெழுந்து வராதவாறு பார்த்துக் கொண்ட சமூக அவலம் மாற்றம் பெற்று, பெண்கள் எல்லா உரிமைகளையும் பெற்று, அரசியல் ஆட்சி அதிகாரங்களில் துணிவுடன் செயலாற்றுவதற்குப் பொதுவுடைமை இயக்கம் வழிவகுத்தது; வேண்டும் என்று கற்றுத் தந்தது. பெண்கள் சந்திக்கும் பிரச்சினைகள், அடக்குமுறைகள், வன்முறைகள், ஆதிக்கக்கூறுகள், அடக்குமுறைக்கு எதிரான விடுதலை ஆகியவற்றின் தோற்றக்காலப் பின்புலத்தையும், இதிலிருந்து விடுபடுவதற்கான வழிமுறைகளையும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் எடுத்துரைக்கும் திறம் இவ்வியலில் ஆராயப்படுகின்றது.

### பெண்ணடிமை

'பெண்கள் நாட்டின் கண்கள்' என்று சிறப்பித்துக் கூறிய நிலை மாறி, கண்களுக்குத் தரவேண்டிய சிறப்புக்கள் எதுவுமின்றி, பெண்கள் எவ்விதச் சுதந்திரமும் இல்லாமல் ஆண் அதிகாரத்திற்கு உட்பட்டு வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதைப் பொதுவுடைமை இயக்கம் கண்டிக்கிறது. ஆணும் பெண்ணும் சமம் என்பதை உணராதவர்கள் பெண்களுக்கு எந்த உரிமையும் வழங்காமல் அடிமைப்படுத்துகின்றனர். எல்லா நிலைகளிலும் பெண்களை இயந்திரமாகப் பயன்படுத்துகின்றனர்.

பொருளாதார நிலையில் பெண்கள் பின்தங்கிய நிலையில் இருக்கின்றனர். விவசாயக் கூலி வேலை மற்றும் தொழிலக வேலைகளுக்குச் செல்லும் பெண்கள்நிலை மிகவும் கீழ்நிலையில் உள்ளது. முதலாளிகள் ஆண்களுக்கு நிகரான கூலியைப் பெண்களுக்குத் தருவதில்லை. அதோடு மட்டுமல்லாது, ஆண்களைவிடப் பெண்கள் கூடுதலான நேரம் வேலைசெய்ய வற்புறுத்தப்படுகின்றனர். இதனால் பெண்கள் தங்கள் வீடுகளில் ஆண்களுக்கு அடிமைகளாகவும், பணிபுரியும் இடத்தில் முதலாளிகளுக்கு அடிமைகளாகவும் வாழவேண்டிய நிலை ஏற்படுகிறது.

இதன்மூலம் பெண்ணிடம் உயர்வு தாழ்வு கற்பிக்கப்படுகிறது. பெண்கள் வீட்டைப் பெருக்கவும், துணிகளைத் துவைக்கவும், பாத்திரங்கள் கழுவவும், சமையல் செய்யவும்,

மற்றவர்களுக்கு உதவி செய்யவும் என்ற பொறுப்புகளே கொடுக்கப்படுகிறது. இவை யாவும் பெண்ணிடம் கூலிதராமல் பெறப்படும் உழைப்பாகும். மேலும் அவர்களுக்குத் தனக்காக வாழ்வதை விடப் பிறருக்காக வாழ வேண்டும் என்று கற்பிக்கப்படுகிறது. இதனால் பெண்கள் எந்தவொரு சுகத்தையும் அனுபவிக்க இயலவில்லை.

ஆண் - பெண் பாலின பேதத்தின் அடிப்படையிலேயே பெண்கள் தாழ்த்தப்படுகின்றனர். ஆணுக்கு ஒரு நீதி; பெண்ணுக்கு ஒரு நீதி என்பதும் இதனாலேயே உருவாக்கப்படுகிறது. ஒரு ஆண் தான் விரும்பினால் எத்தனைப் பெண்களை வேண்டுமானாலும் மணந்துகொள்ள உரிமை உண்டு. பெண்ணுக்கு அத்தகைய உரிமை சமூகத்தால் தரப்படவில்லை.

மனிதன் தன் உடல் சலுகையால் பெண்களை எல்லா நியாய நிலைகளிலும் தாழ்வுப்படுத்தி, தனக்கு எந்நேரமும் அடிமை வேலை செய்ய வைத்துக் கொண்டான். பெண் தன் உடலியல் வேறுபாட்டால் அனைவருக்கும் பணிந்து நடக்க வேண்டியவளாக இருக்கிறாள். இவ்வேறுபாட்டால் பெண்களை உலகம் முழுவதும் அடிமைப்படுத்தும் நிலையும் தாழ்த்தப்படும் நிலையும் உருவாகி யுள்ளது.

**பெண்ணிய எழுச்சி**

ஒடுக்கப்பட்ட மக்கள் உணர்வு பெற்று எழுவதற்குத் தலித்தியம் எவ்வாறு துணைசெய்கிறதோ, அவ்வாறே, பெண் விடுதலைக்குப் பெண்ணியம் துணை நிற்கிறது. அது, பெண் எல்லாநிலைகளிலும் ஆணுக்குச் சமமானவள் என்னும் உயர்நெறியை நிலைநாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டது. மேலும், அது பெண் சுதந்திரத்தைப் பேசுகிறது.

பெண்ணியம், ஆண் உரிமைகளுக்கு எதிரானது அல்ல. அது ஒட்டு மொத்தமான சமூக விடுதலையை முன்வைத்துச் செயலாற்றுகின்றது. பெண்ணுக்கு இயற்கை தந்திருக்கும் கூடுதலான பொறுப்பு அல்லது சுமைகளுக்குக் காரணமாக அமைந்துள்ளது. ஆண்மைக் குணங்கள், பெண்மைக் குணங்கள் என்பனவெல்லாம் மனிதனால் கட்டமைக்கப்பட்டவையே.

‘எல்லாம் எல்லாருக்காகவும்’ என்கிற கோட்பாட்டின் அடிப்படையில் ஆணுக்கு நிகராகப் பெண்ணுக்குச் சமநீதி, சமவாய்ப்பு, சமஉரிமை வழங்கத் தகுதியான ஒரு சமுதாயத்தை உருவாக்குவதற்கு எழுந்த உரிமைக்குரல் பெண்ணிலைவாதம் ஆகும்.

பெண்ணியவாதிகள் பெண்களின் சமத்துவத்தை மட்டுமல்லாது, பெண்கள்- ஆண்கள் என இருபாலர்க்குமான நியாயமான, பொதுமைப்படுத்தப் - பட்ட, பாரபட்சமற்ற ஒரு சமூகத்தைக் கட்டமைக்கப் போராடுகின்றனர்.

கல்வித்துறையில் ஆண் - பெண் சமநிலை ஏற்பட வேண்டும். அரசியல் உரிமைகளைப் பொறுத்தமட்டில் ஆண் - பெண் ஏற்றத்தாழ்வு பார்த்தல் கூடாது. தொழில்நுட்பத் துறையில் ஆண் - பெண் இணைவுபெற வேண்டும். சமுதாயப் படிநிலைகளில் ஆண்பெண் ஏற்றத்தாழ்வு கூடாது. இவை போன்றே குடும்பம், ஆன்மீகம் போன்ற அனைத்துத்

துறைகளிலும் சமநிலை நிலவ வேண்டும் என்பதே தமிழ்ச்சூழலில் பெண்ணியம் குறித்த அவதானிப்புகளாக அமைந்துள்ளன.

குடும்பம், அரசியல், கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் ஆண்கள் தங்களது வலிமையையும், மேலாதிக்கத்தையும் வன்முறைகள், அடக்கு முறைகள், வழிவழி மரபுகள் எனப் பல நிலைகளின் மூலமாக நிலைநிறுத்தி வருகின்றனர். சமூக மறுஉற்பத்தி, தாய்மை, மென்மை, பெண்மை போன்றவை பெண்ணை அடிமை இருட்டறையில் இட்டு வைத்திருப்பனவாகும். குடும்பம் என்னும் நிறுவனத்தில் ஆண் முதலாளி போலவும், பெண் அவனது அடிமைத் தொழிலாளி போலவும், ஊதியமற்ற, மதிப்பற்ற உழைப்பாளியாகவும் பார்க்கப்படுகின்றாள். அத்தகைய நிலையிலிருந்து பெண் மீட்சிபெறல் வேண்டும் எனில், சுயவருவாய் உடையவளாகத் தற்சார்புடையவளாகப் பெண்கள் மாற்றம் பெற்றிடல் வேண்டும்.

காலந்தோறும் சமூகம் மாற்றம் பெற்று வளர்ந்து வருகின்றது. சமூகத் தத்துவங்களும் கோட்பாடுகளும் அதற்கேற்றவாறு உருப்பெற்று வருகின்றன. ஆதிக்கச் சக்திகள் அடங்கிய வர்க்கம் என்ற காலனித்துவத் தொடர்ச்சி எல்லாச் சமூகங்களிலும் தொடர்கின்றது. ஆதிக்கத்திற்கு எதிரான கலகக் குரலும் ஓங்கி ஒலிக்கத் தொடங்கிவிட்டது. ஆணாதிக்கம், மதம், சாதி, அரசியல் போன்றவற்றைக் கலகக்குரல் கலைத்துப் போடுகின்றது.

சமூக, பொருளாதார, கலாச்சார அடிப்படையில் அதிக அளவில் பாதிக்கப்படுவதும், அழிக்கப்படுவதும், அலைக்கழிக்கப்படுவதும் பெண்களே. இத்தகைய பெண்களின் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து முடிவுகளைப் பட்டியலிட்டுத் தீர்வு காண்பதே இன்றைய சமூகத்தில் பெண் விடுதலைக்கு வழிகாட்டுவதாக அமைந்திருக்கும் என்பதே பொதுவுடைமை இயக்கக் கொள்கையாக விளங்குகிறது.

**வர்க்கப் போராட்டத்தில் பெண்**

வர்க்கப் போராட்டத்தின் ஒரு கூறாகப் பெண்ணியப் புரட்சி திகழ்கிறது. 'பாலின சமத்துவம் இல்லையேல் பொதுவுடைமை பேசிப் பயன் எதுவும் இல்லை' என்பதே பொதுவுடைமையின் குறிக்கோள் நெறியாக விளங்குகிறது. ஆகையால் பொதுவுடைமைச் சிந்தனை குறித்த பதிவுகளில் பெண்கள் பற்றியதான பதிவுகள் ஆய்வுக்குரியதாக அமைந்திருக்கின்றன.

இலக்கியத்தின் மூலம் கட்டமைக்கப்படும் விடுதலை உணர்வின் சிந்தனை வெளிப்பாடு மொழிவழிச் செயலாக வெளிப்படுத்தப்படும்போது அது சமூகப் பயன்பாடுடையதாக அமைகின்றது. நவீன இலக்கியங்கள் ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்வியலை முன்நிறுத்துகின்றன; விடுதலை குறித்துப் பேசுகின்றன. ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்வியல் சிக்கல்கள் களையப்பட்டு, புதுமைச் சிந்தனை வயப்பட்ட, பொதுமைச்சமூகம் மலரவேண்டும் என்பதே நவீன இலக்கியவாதிகளின் குறிக்கோளாக விளங்குகிறது.

## கம்யூனிச இயக்கத்தில் பெண்கள் பங்களிப்பு

இந்தியாவில் கம்யூனிச இயக்கத்தின் துவக்க கால வரலாற்றைப் பார்த்தோமென்றால், ஆணாதிக்க எதிர்ப்புப் போராட்டங்களுக்கும் அடித்தளம் ஏற்படுத்துவதில் ஒன்றுபட்ட இந்திய கம்யூனிஸ்ட் கட்சி பெரும் பங்காற்றியிருக்கிறது. சர்வதேச சோசலிச மகளிர் மாநாடு ஒரு புறமும், சர்வதேச கம்யூனிச இயக்கத்தின் முக்கிய பெண் தலைவர்களின் குரல்கள் இன்னொரு புறமும் ஏற்படுத்திய தாக்கம் ஒருங்கிணைந்து இவ்வாறான பணிகளை மேற்கொள்ள உந்துதலாக அமைந்தன. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்தே கம்யூனிச இயக்கத்தின் பெண் தோழர்களும் தலைவர்களும், பெண் ஊழியர்கள் மீதான முதலாளித்துவத்தின் தாக்கத்தை ஆய்வு செய்கையில் வர்க்க உணர்வின் வளர்ச்சியைக் கணக்கில் கொள்ள வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி வந்தனர். முதலாம் சர்வதேச சோசலிச மகளிர் மாநாட்டில் அலெக்ஸாந்த்ரா கொலந்தாய் (1907) கூறியதை மொத்த முதலாளித்துவ உலகமும் கேட்டுக் கொண்டிருந்தது. …அதன் பெரும்பகுதி பெண் தொழிலாளர்களின் துணிவான குரல்களைக் கேட்டு ஆத்திரமடைந்தது. ஆண்களின் பேச்சுக்கள் எத்தனை புரட்சிகரமாக இருந்தாலும், எத்தனை 'முட்டாள்தனமான' தீர்மானங்களை அவர்கள் நிறைவேற்றினாலும், முதலாளித்துவ உலகம் தங்கள் கையிலிருக்கும் நிரூபிக்கப்பட்ட ஒரு வழிமுறையை எண்ணி அமைதி காத்தார்கள்; கீழ்ப்படிந்த பெண் உழைப்பாளர்களை மாற்றீடு செய்து உழைக்க வைப்பதன் மூலம் 'ஆத்திரக்காரர்களின்' எதிர்ப்புணர்வை உடைத்து நொறுக்குவது தான் அந்த வழிமுறை. ஆனால் இப்போது அவர்கள் புதிய அதிர்ச்சி கொண்டுள்ளனர்: உலகெங்கிலும் இருந்து உழைக்கும் வர்க்கத்தின் பெண் பிரதிநிதிகள் திரண்டுள்ளார்கள்; தம்முடைய கூட்டு முயற்சியால், உழைக்கும் வர்க்கத்திற்கு விரோதமான உலகத்திற்கு எதிராகப் போராட ஒரு புதியதோர் ஆயுதத்தை உருவாக்க துணிந்துவிட்டனர். பெண்களின் துணிவு அனைத்து கற்பனை களையும் விஞ்சிவிட்டது: நேற்று வாழாவிருந்த அடிமைகள் இன்று உழைக்கும் வர்க்க விடுதலைக்கான போர்க்குணமிக்க போராளிகளாகியுள்ளனர்"[1] என்கிறார் அபிநவ் சூர்யா.

## மார்க்சியமும் பெண்ணியமும்

பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தந்த போராட்ட உணர்வும், புரட்சிச் சிந்தனையுமே பெண்ணிய விடுதலைக்கு வழியேற்படுத்திக் கொடுத்தது என்பதில் ஐயமில்லை.

பொதுவுடைமைக் கருத்துக்களின் அடிப்படையில் அமைந்தது மார்க்சியப் பெண்ணியமாகும். காரல்மார்க்ஸும், ஏங்கெல்ஸும் கம்யூனிசக் கருத்துக்கள் பரவக் காரணமானவர்களாவர். ஏங்கெல்ஸின் 'குடும்பம், தனிச்சொத்துரிமை, அரசு ஆகியவற்றின் தோற்றம்' என்னும் நூலில் மார்க்சியப் பெண்ணியக் கருத்துக்களை முன்வைக்கின்றார். இக்கருத்துக்கள் மார்க்சியப் பெண்ணியத்திற்கு அடிப்படையாக அமைந்தன. குடும்பம்,

தனிச்சொத்து, வாரிசுருவாக்கல் ஆகியவற்றால் பெண்களை ஒடுக்கும் தந்தை மேலாதிக்கச் சமூகத்தை எதிர்த்து எழுந்தது இந்தப் பெண்ணியம் ஆகும்.

மார்க்சியம் வறியுறுத்தும் பெண்விடுதலை என்பது "மானுட விடுதலை என்ற பேரியக்கத்தின் ஒரு கூறுதான் பெண்விடுதலை என்ற இயக்கம். ஆணின் ஆதிக்கத்திலிருந்து பெண்ணுக்கு விடுதலை தேவை என்பது வரலாற்றின் ஒரு கட்டத்திலான புரிதல். ஆணைப் போலவே பெண்ணுக்கும் கல்வி வேண்டும். சம உரிமை வேண்டும். அதிகாரத்தில் இடம் வேண்டும்"[2] என்பதாகும்.

"அசலான மார்க்சியம் என்று எதை நாம் வற்புறுத்துகிறோமோ அதுவும் அசலான பெண்ணியம் என்பது வேறு வேறானதாக இல்லை. ஒரு வகையில் மார்க்சியமும் பெண்ணியமும் ஒரு மையத்தில் இணைகின்றன."[3]

பெண்ணியம் பெண்களுக்கான விடுதலையை முன் வைக்கிறது. ஆதிக்கச் சாதிகளாலும், தன் இனத்து மக்களாலும் அடக்குமுறைக்கு உள்ளாக்கப்படும் நிலைப்பாட்டிலிருந்து விடுதலையை வேண்டி நிற்கிறது. இதனை, "அடக்குமுறை எங்கெல்லாம் நிலவுகின்றதோ அங்கெல்லாம் விடுதலை பற்றிய உணர்வு தலையெடுக்கின்றது. உலக அரங்கில் முதலாளி தொழிலாளிகளுக்கு இடையே நிலவும் உயர்வு தாழ்வை உடைத்த மார்க்சிய சித்தாந்தத்தின் அடிப்படையில் பெண் மீதான அடக்குமுறை சார்ந்த விவாதமும் கண்ணோட்டமும், பெண்ணியத்தின் கூறுகளைப் புரிந்துகொள்ள உதவுகின்றது. பெண் விடுதலையைக் குறிக்கின்ற பெண்ணியத்தின் கருத்தாக்கங்கள் திறனாய்வுக்குட்படும் போது ஆண் சமூகச் சட்டங்களால் உருவாக்கப்பட்ட கருத்தியல்களும் செயல்களும் ஆண் சார்பானவை என உணரமுடிகின்றன"[4] என்றுரைக்கிறார் அரங்க மல்லிகா.

பெண்ணுக்கு வர்க்க அடிப்படையிலான பிரச்சினை ஏற்படுகிறது என்றால், அலுவலகத்தில், விவசாயத்தில், கட்டுமானத்தில், கூலிவேலை செய்யும் இடங்களில் தொழிலாளிகளாக ஈடுபடும்போது அந்தந்தத் துறைகளில் ஏற்படும் நெருக்கடி, குறைந்த சம்பளம், உடல் உபாதைகள் போன்ற பிரச்சினைகளைச் சந்திக்க நேரிடுகிறது. குடும்பப் பிரச்சினைகளும், பாலியல் தொந்தரவுகளும் மட்டுமன்றி, இவையும் பெண்ணுக்குக் கடுமையான பிரச்சினையாகவே உள்ளது. பாலியல் பிரச்சினைகளும், வர்க்கப் பிரச்சினைகளும், பணித்தளங்களில் ஆறாத வடுக்களைப் பெண்கள் மீது ஏற்படுத்தி வருகின்றன. அதுபோல் சாதியப் பிரச்சினையும் பெண்ணின் பிரச்சினையாகவே பார்க்கப்படுகிறது. தலித் பெண்கள் மீது தொடுக்கப்படும் தீண்டாமைக் கொடுமையும், அடுக்கிய மூட்டையில் அடி மூட்டையாக இருக்கும் தலித் மக்கள் நான்காம் தரமாக நடத்தப்படுவதும், அச்சமூகப் பெண்களையும் தாக்குகிறது. எனவே தீண்டாமைக் கொடுமையும், சாதிய ஒடுக்குமுறையும் பெண்ணின் பிரச்சினைகளே.

## புதினங்களில் பெண்களின் வாழ்வியல் சிக்கல்கள்

ஏனைய சமூகங்களில் வாழும் பெண்மக்கள் சந்திக்கும் பிரச்சினை -களை விட, தாழ்த்தப்பட்ட குடும்பங்களில் வாழும் பெண்கள் சந்திக்கும் பிரச்சினைகள் ஏராளமானதாக உள்ளன. குடும்பம், தொழில், உடலுழைப்பு, வேலைவாய்ப்பு, பொருளாதாரச் சிக்கல், அரசியல் பங்களிப்பு, ஆட்சி, அதிகாரநிலை என ஒடுக்கப்பட்ட பெண்கள் பல நிலைகளிலும் வீடுகளிலும், பொதுஇடங்களிலும் நாள்தோறும் பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டிய நிலை உள்ளதை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் எடுத்துரைக்கின்றன. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புலப்படுத்தும் பெண்களின் சிக்கல்களை,

1. தொழிற்களத்தில் பெண்கள்
2. பெண்கல்வி மறுப்பு
3. பெண் மீதான வன்முறை
4. பாலியல் சிக்கல்

என்னும் நிலைகளில் பகுத்தாராயப்படுகிறது.

## தொழிற்களத்தில் பெண்கள்

ஆண் - பெண் வேறுபாடு என்பது அவரவர்தம் பாலின உடலியல் சார்ந்த நிலைப்பாடே தவிர, ஆண் வலிமையானவன், பெண் வலிமையற்றவள் என்பதெல்லாம் ஆணியச் சமூகத்தால் கட்டமைக்கப்பட்டவையாகும். காலம் காலமாக இவ்வாறே சொல்லிவந்தமையால் ஆண் உடல் வலிமை மிக்கவன் என்றும், பெண் உடல் வலிமை குறைந்தவள் என்றும் உறுதிப்படுத்தப்பட்டு விட்டது. இதனால் எழுந்த விளைவால் பொருளுற்பத்தியில் பாகுபாடு காட்டப்பட்டது. கூலிக்கு வேலை செய்யும் இடங்களில் ஆணுக்குத் தனியான மிகைக்கூலிமுறையும், பெண்ணுக்குக் குறைவான கூலிமுறையும் என வகைப்படுத்தப்பட்டது. இதனால் ஒரே வேலையை, ஓரே காலகட்டத்திற்கு ஆணும் பெண்ணும் செய்தாலும், ஆண் அதிகமாகவும், பெண் குறைவாகவும் கூலி பெறும் நிலை ஏற்பட்டுவிட்டது. இன்றைக்கும் இந்தமுறை வழக்கிலிருந்து வருகிறது.

விவசாயக் கூலி வேலைகள், ஆயத்த ஆடைத் தொழிலகங்கள், கட்டட வேலைகள் எனப் பலவற்றிலும் பெண்கள் பணியாற்றுகின்றனர். குறிப்பாகச் சிறுதொழில்கள் பலவும் பெண்களைப் பணியாட்களாகக் கொண்டு செயல்படுகின்றன. இந்த இடங்களில் பெண்களே வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். இதற்குக் காரணம் பெண்களிடம் மட்டுமே குறைவான கூலியைக் கொடுத்து நிறைவான வேலையைப் பெற்றுக் கொள்ளமுடியும் என்பது தான்.

பெண்கள் பணியாற்றும் இடங்களில் அவர்களுக்கு உரிய பாதுகாப்பு செய்து தரப்பட வேண்டும் என்பதும், எட்டுமணி நேர வேலை மட்டுமே தரப்பட வேண்டும் என்பது சட்டவிதியாக இருந்தாலும், முதலாளிமார்கள் அதனைக் கண்டுகொள்வது இல்லை என்பது,

> “கன்னியம்மாளுடன் முப்பத்தியைந்து பேர் வேலை பார்த்தார்கள். அதில் பாதிப்பேர் பெண்கள். அவர்களில் ஐந்துபேர் கல்யாணமானவர்கள். இரண்டு பெண்கள் பிள்ளைகளுடனே அங்கே வந்துவிடுவார்கள். லாரிதான் அங்கே எல்லோரையும் அள்ளிக் கொண்டு வந்து கொட்டும். எட்டுமணிக்குத் தொடங்குகிற வேலை முடிய சாயங்காலம் ஆகிவிடும்”[5]

என்பதன் வழியாகப் புலப்படுத்தப்படுகிறது. கட்டட வேலை போன்ற கடினமான வேலைகளைப் பெண்களை வைத்துச் செய்து கொள்ளும் நிலை இதன் வழியாகத் தெளிவுறுத்தப்படுகிறது.

**உழைப்பு மூலதனமாதல்**

பெண்கள் உடலுழைப்பில் ஈடுபடுவதற்குத் தயங்குவதில்லை. சராசரியாக ஒரு பெண் அதிகாலை முதல் நள்ளிரவு வரை வேலைகளைச் செய்துகொண்டே வாழ வேண்டிய நிலை உள்ளது. வீட்டு வேலைகளோடு விவசாயக் கூலி வேலைகளையும், வீட்டு வேலைகளோடு தொழிற்சாலை வேலைகளையும் ஒரே நேரத்தில் செய்துவிடுவதால் அவர்கள் உழைப்பே அங்கு மூலதனமாகப் பார்க்கப்படுகிறது.

விவசாயக் கூலிகள், கூலித்தொழில் செய்பவர்கள் ஓடியாடி வேலை செய்யக்கூடிய பெண்ணைப் பார்த்தே திருமணம் முடித்துக் கொள்கின்றனர். இது ஒரு வகையிலான உழைப்புச் சுரண்டலின் பாற்பட்டதாகும்.

‘பிறகு’ புதினத்தில் இடம்பெறும் அழகிரி வில்லிசேரி முதலாளியின் மருமகனுடன் கமலை மாடு வாங்குவதற்குத் துணையாகச் செல்கிறான். அங்கு ஒவ்வொரு மாட்டுத்துறைக்கும் சென்று பிய்ந்துபோன கடகத்தை இடுப்புக்கு ஏற்றியும், தரைக்கு இறக்கியும், சாணி அள்ளி, சாணிக்கூடையை வயிறு தள்ளிய பிள்ளையைப்போல நிதானமாகத் தூக்கிச் செல்லும் ஆவடையின் உழைப்பினைக் கண்டு வியந்து, அவளைத் தன் மனைவியாக்கிக் கொள்கிறான். இதனை,

> “சட்டைபோடாத மேனிக்கும், மாராப்பு இறுக்கத்திற்கும் உடல்கட்டு எடுப்பாக அழகாகத் தெரிந்தது”[6]

என்று எடுத்துரைக்கின்றார் ஆசிரியர். பெண்ணின் உடலுழைப்பே இங்கு மூலதனமாகப் பார்க்கப்படும் நிலை காட்டப்படுகிறது.

‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில் இடம்பெறும் ஆரோக்கியமும், மேரியும் தங்கள் கடினமான உழைப்பால் வீட்டையே நிர்வகிக்கும் திறமை பெற்றிருக்கின்றனர். ஆரோக்கியத்தின் உடலுழைப்பின் சிறப்பு,

> “ஆரோக்கியத்திற்குத் தலையே தெறித்துவிடும் போல் இருந்தது. ஒண்ணுக்கு, ரெண்டுக்குப் போகக்கூட அவளுக்கு நேரம் கிடைப்பது அரிதாகத் தான் இருந்தது.

சதா நேரமும் வேலை. ஒரே வேலை. ஒவ்வொரு வீட்டு தானியத்தைம் தூற்றியாக வேண்டும். ஆரோக்கியத்திற்கு இதுதான் வருமானத்திற்கான காலம். இதை வைத்துக் கொண்டுதான் அடுத்த அறுவடைக்காலம் வரை அவள் குடும்பம் நடத்த வேண்டும்”[7]

என்று பேசப்படுகிறது.

**தொழிற்களத்தில் பாதுகாப்பின்மை**

பெண்கள் விவசாய நிலங்களில் வேலை செய்தாலும், கட்டட வேலைகளில் ஈடுபட்டிருந்தாலும், தொழிற்சாலைகளில் பணிபுரிந்தாலும் பாதுகாப்பற்ற நிலைகளிலேயே பணியாற்றும் நிலையில் உள்ளனர். சிறிய அளவிலான தொழிற்களங்களில் பாதுகாப்புக் கருவிகள் எதுவும் பெண்களுக்கெனத் தனியாகக் கொடுக்கப்படுவதில்லை. கட்டடவேலைகள் செய்யும்போது கைகளிலும் கால்களிலும் தலையிலும் அடிபடுவது இயல்பான நிகழ்வுகளாக உள்ளன. இவ்வாறு பெண்கள் தொழிற்களத்தில் பாதுகாப்பற்ற நிலையில் பணியாற்றுவது புதினங்களில் காட்டப்பட்டுள்ளது. கட்டட வேலை செய்யும் சித்தாள் விபத்துக்குள்ளாகித் தவிக்கும் நிலை ‘கல்மரம்’ புதினத்தில்,

“கீழே இருந்து சிமெண்டும் சரளைக் கற்களும் நிறைந்த தலைச்சுமையுடன் சாரத்தின் மேல் ஏறிவந்து கொண்டிருந்த கம்சலை கால்மீது கொத்துக்கரண்டி விழுந்த வேகத்தில் ரத்தம் பீறிட்டது. அய்யோ.... என்று கம்சலை துடித்துப் போனாள்.

என்ன, என்னாச்சு?...

அய்யோ வெரலு போச்சே.

கம்சலையின் இரண்டு விரல்கள் தனியாகத் தொங்கின. வேகமாகக் கீழே விழுந்த கொத்துக்கரண்டி சொல்லி வைத்தாற்போல அந்த விரல்களைத் துண்டாடியிருந்தது”[8]

என்பதில் பாதுகாப்பற்ற நிலை காட்டப்படுகிறது. அவசரமான முதலுதவியும் முறையான சிகிச்சையும், தொடர்ச்சியான மருத்துவச் சிகிச்சையும் தரப்படாததால் அவள் விபத்தில் சிக்கிய சிறிது நாட்களில் எந்தவொரு வேலை செய்வதற்கும் தகுதியற்றவளாகி, கால் ஊனமாகிப் போவதனைக் காட்டுகிறார் ஆசிரியர்.

இதே புதினத்தில் கட்டட வேலை பார்க்கும் இடத்தில் வலிப்புநோய் கண்டு பெண் பணியாள் துன்பத்திற்குள்ளாகும் நிகழ்வு காட்டப்படுகிறது. வலியால் துடித்துக் கொண்டிருக்கும் பாஞ்சாலியை மருத்துவமனைக்குக் கொண்டு செல்கையில்,

“பாஞ்சாலின்னு ஒரு சின்னப்பொண்ணு. வலிப்பு வந்திருச்சு. ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கினு போயிருக்காங்க.

என்னய்யா இது எழவு. எப்பப் பார்த்தாலும் இதே கருமமா? இது வேல நடக்கிற எடமா? தர்ம சத்திரமா? எப்பவாவது நான் வர்ற நேரத்தில அவங்கவங்க வேலயப் பாத்துக்கிட்டு இருந்தீருக்கிறீங்களாய்யா?"[9]

என்பதில் முதலாளிகளின் இரக்கமற்ற தன்மை காட்டப்படுகிறது. கட்டட வேலை செய்யும் இடங்களில் பெண்களுக்கெனத் தனியான ஓய்வறை, கழிவறை வசதிகள் கூட இல்லாத நிலை இன்றைக்கும் உள்ளது. இவை களையப்பட வேண்டும் என்பதன் பொருட்டே இந்நிகழ்வு இங்கு எடுத்துரைக்கப்படுவது தெளிவாகிறது.

வறுமையின் காரணமாகவே பெண்கள் வீட்டை விட்டு வெளியே வந்து சிறுசிறு தொழிற்கூடங்களில் பணியாற்றுகின்றனர். இவர்கள் பணியாற்றும் இடங்களில் எவ்விதமான பாதுகாப்பும் இருப்பதில்லை. முதலாளிகளின் ஏச்சுக்கும் பேச்சுக்கும் அடிபணிந்து நடக்கவேண்டிய நிலையே உள்ளது. முதலாளிகளின் அடியாள்களின் ஆசைக்கு அடிபணிந்து நடக்க வேண்டியதாக உள்ளது. மீறினால் வீண்பழி சுமத்தி வெளியேற்றுவதும் நடக்கிறது. அப்படித் தோல் பதனிடும் தொழிலகத்தில் பணியாற்ற வந்த பெண்களைப் பாலியல் வன்முறைக்கு உள்ளாக்குவதையும் அதனைத் தடுக்க இயலாத நிலையில் பெண்களும் பெண்களைப் பெற்றவர்களும் இருக்கும் நிலையும் 'தோல்' புதினத்தில்,

> "பெண் லோலனான முஸ்தாபா மகமதியாபுரத்தில் ஏழைக்குடும்பத்தைச் சேர்ந்த இரண்டு கன்னிப்பெண்களை ஆசை வார்த்தைச் சொல்லிக் கெடுத்துப் போட்டான். பாதிக்கப்பட்ட குடும்பங்கள் ஜமாத்தில் புகார் கொடுத்தும் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. போலீசாரும் பெரிய வீட்டுக்காரரின் மைத்துனனாக இருப்பதால், நடவடிக்கை ஏதும் கைக்கொள்ளவில்லை"[10]

என்று குறிப்பிடுகிறார் டி. செல்வராஜ்.

**பெண் கல்வி மறுக்கப்படுதல்**

சமூகத்தில் ஏற்றத்தையும், மறுமலர்ச்சியையும் கொண்டுவருவதற்கு எல்லாருக்குமான கல்வி இன்றியமையாதது. நகரங்களில் வாழும் மக்களைவிட கிராமங்களில் வாழும் ஒடுக்கப்பட்ட மக்களின் கல்விநிலை மிகவும் பின்னுக்குத் தள்ளப்பட்டுள்ளது. இன்றைக்கும் பல கிராமங்களில் தரமான பள்ளிகள் இல்லை.

மார்க்சியம் பெண்களுக்குக் கல்வி கட்டாயமாக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்துகிறது. இதோடு நில்லாமல் பெண்கள் முன்னேற்றப் பாதையில் செல்வதற்குரிய அறிவுத்திறனை வளர்த்தெடுக்கும் கல்வியை, மூடநம்பிக்கைகளை ஒழிக்கும் கல்வியைக் கட்டாயமாகத் தரப்பட வேண்டும் என்று அறிவுறுத்துகிறது.

பெண்களுக்குக் கல்விப் பயிற்சி அளிக்கப்படாமல் இருக்கும் நிலை மாற்றம் பெறவேண்டும். அவர்களைப் பள்ளிக்கு அனுப்பி, கல்வி பயிலச் செய்ய வேண்டும். அதுவே சமூக விடுதலையின் முதற்படியாகும் என்பதனை,

"பெண்கட்குக் கல்வி வேண்டும்
குடித்தனம் பேணுதற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும்
மக்களைப் பேணுதற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும்
உலகினைப் பேணுதற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும்
கல்வியைப் பேணுதற்கே"[11]

என்றுரைப்பர். இதன் வாயிலாகப் பெண் கல்வி கற்கும் உரிமை நிலை நாட்டப்பட்டது. பெண் விடுதலையின் அடிமை வேர்களைக் கல்வியின் மூலமாகவே தகர்த்தெறிய முடியும் என்னும் கருத்தாக்கத்தினை இக்கவிதை வரிகள் எடுத்துரைக்கின்றன.

ஆண் பெண் சமத்துவம் இல்லாத காரணத்தால் தான் பெண் உயர்வு பெறாமல் இருக்கிறாள். பெண்களுக்குக் கல்வி வழங்கப்பட வேண்டும். பெண்கள் அனைத்துத் துறைகளிலும் செயலாற்றத் துணைசெய்ய வேண்டும். நாட்டின் முன்னேற்றம் என்பது பெண்களின் முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதை அனைவரும் உணரவேண்டும்.

பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டதே பெண் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தியது எனலாம். தங்கள் தாய்மொழியைக் கூட, எழுதப் படிக்கத் தெரியாத நிலையில் பெண்கள் உள்ளனர். எனவே, ஒவ்வொரு பெண்ணையும் கல்வி கற்கச் செய்ய வேண்டும். குடும்ப வாழ்க்கையிலும் பொருளாதாரத்திலும் ஆண்,-பெண் உயர்வுதாழ்வு பார்த்தல் கூடாது. ஆணைப்போலப் பெண்ணுக்கும் அனைத்து உரிமைகளையும் வழங்கவேண்டும். அப்போதுதான் பொதுவுடைமை மலர வாய்ப்பு ஏற்படும்.

ஒவ்வொரு கிராமங்களிலும் பள்ளிகள் இருந்தாலும், தாழ்த்தப்பட்ட குழந்தைகள் பள்ளிக்குச் சென்று படிப்பதை ஆதிக்கச் சாதியினர் ஏற்றுக் கொள்வதில்லை. பள்ளிக்குச் சென்று படித்துக் கல்வியறிவு பெற்றுவிட்டால் அவர்கள் வளர்ச்சியடைந்து விடுவார்கள் என்ற பிற்போக்குச் சிந்தனையால் இளமைக் காலத்திலேயே பள்ளிக்குச ் சென்று கற்கும் உரிமையைத் தடுத்து விடுகிறார்கள். இதனை ஓர் நிகழ்வின் மூலம் காட்டுகிறார் பூமணி.

‘பிறகு’ புதினத்தில் இடம்பெறும் அழகிரி தன் வீட்டுக்கு எதிரிலேயே பள்ளி இருந்தும் தன் மகளைப் பள்ளிக்கு அனுப்பாமல் மாடு மேய்க்கப் பழக்குகிறான். இதற்குக் காரணமாக அவனது ஆண்டையின் செயல்பாடே அமைகிறது. இதனை,

“முத்துமாரிய ரெண்டுநாள் அனுப்பிப் பார்த்தான் அழகிரி. அவ்வளவுதான். வில்லிசேரி மொதலாளி வீட்லருந்து வாரத்துக்கு ஒரு எருமக் கண்ணப் பத்தீட்டு வந்துட்டான்..

மூணு நாலு வருசம் எருமைக்குப் பின்னால திரிஞ்சது புள்ள”[12]

என்று காட்டுகிறார் ஆசிரியர். தம் ஆண்டைகளின் வீடுகளைப் பெருக்கவும், கழுவிச் சுத்தம் செய்யவும், மாடு கன்றுகளைப் பார்த்துக் கொள்ளவும் பெண்குழந்தைகளைப் பயன்படுத்திக் கொள்ளும் பாங்கினை இதன்வழி காட்டுகின்றார் ஆசிரியர். கூலித்தொழிலாளர்களின் சிறுவர்கள் படித்துப் பட்டம் பெற்றுவிட்டால் தங்கள் வீட்டு வேலைகளைச் செய்வதற்கு வரமாட்டார்கள் என்ற நிலைப்பாடே இதற்குக் காரணமாக அமைந்திருப்பதனை அறியலாம். அறியாமையில் சிக்கித் தவிக்கும் விவசாயக் கூலிகள், தமது ஆண்டைகளிடம் எதிர்ப்பேச்சுப் பேசமுடியாத நிலையில் அவர்களின் கேள்விக்குச் செவிமடுத்து விடும் நிலையே இதற்குக் காரணம் ஆகும்.

வறுமை வயப்பட்ட, பொருளாதாரத்தில் பின்தங்கிய மக்களுக்கு அடிப்படைக் கல்வியும், உயர்நிலைக் கல்வியும் இலவசமாக மத்திய, மாநில அரசுகள் வழங்கினாலும், அதனைச் சரிவரப் பயன்படுத்திக் கொள்ள இயலாத நிலையில் அவர்களது வாழ்வியல் சிக்கல் நிறைந்ததாக இருப்பதனையே இவை காட்டுகின்றன.

வறுமை வயப்பட்ட வாழ்க்கையில் உழலும் உழைப்பாளர்கள் தங்கள் பிள்ளைகளைச் சிறுவயதிலேயே வேலைக்கு அனுப்பி வைக்கின்றனர். பல இடங்களில் கூட்டுத்தொழில் பார்க்க வேண்டிய நிலையும் உள்ளது. குடும்பத்தின் மொத்த உறுப்பினர்களும் ஒன்று சேர்ந்து விவசாயக் கூலிகளாக வேலை பார்ப்பதும் உள்ளது. சில குடும்பங்களில் பெற்றோர்கள் வேலைக்குச் சென்றுவிட, வீட்டில் உள்ள குழந்தைகளைக் கவனித்துக் கொள்வது, சமைப்பது, போன்ற வேலைகள் வீட்டில் உள்ள பெண்குழந்தைகளின் மீது சுமத்தப்படுகிறது. இதனால் பெண் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப மறுக்கின்றனர். பள்ளிக்குச் செல்ல வேண்டிய வயதில் உள்ள பெண் குழந்தைகளைத் தொழிலில் ஈடுபடுத்துவதும், குடும்பத்தினர் அனைவரும் சேர்ந்து உழைப்பதுமாகிய நிலை புதினங்களில் புலப்படுத்தப்பட்டுள்ளது. அடித்தட்டு மக்களின் பொருளாதாரத்தேவை நிறைவு பெறாத போது குடும்பத்தோடு ஒன்றுசேர்ந்து உழைக்கும் சமூக அவலமே ஒடுக்கப்பட்ட மக்களின் நிலையாக உள்ளது.

பெண்களைப் படிக்க வைப்பதற்குத் ஒடுக்கப்பட்ட மக்கள் தயாராக இருக்கின்றார்கள். ஆனால், பொருளாதாரப் பிரச்சினைதான் அதற்குத் தடைக்கல்லாக இருக்கின்றது. அரசு இலவசமாகக் கல்வியைத் தந்தாலும், அதைப் படிக்க முடியா நிலையில் பெண்கள்

உள்ளனர். காரணம், வாழ்வில் இருவேளை உணவுக்காக அவர்கள் போராடுவதே பெரும்பாடாய் இருக்கிறது. அது மட்டுமன்றிப் பெண்கள் அதிகமாகப் படிக்க வரதட்சணைக் கேட்பதும் அதிகமாக இருக்கிறது. எனவே, பெண்களை அதிகமாகப் படிக்க வைப்பதற்கு இச்சமூகம் முன்வருவதில்லை.

ஒரு சமூகத்தில் ஒருவன் கல்வி கற்று, அதன்வழி உயர்நிலையை அடைவதன் வாயிலாக அவனது சமூகமே மாற்றம் பெற்று மேன்மை பெறும். இச்செய்தியைத் திருவள்ளுவர்,

“ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமைக்கும் ஏமாப்பு உடைத்து”[13]

என்று குறிப்பிட்டுள்ளார். என்றாலும் தாழ்த்தப்பட்ட மக்கள கல்வி உரிமை மறுக்கப்பட்டவர்களாகப் பல்லாண்டுகள் வாழ்ந்து வந்துள்ளனர். எனினும் இதுவரை அவர்களிடம் அறியாமை அகலவில்லை. ஆண்டைகள், தாழ்த்தப்பட்ட பெண்மக்களின் கல்வி நிலை குறித்து ஏளனமாகப் பேசுவது,

“சக்கிலியக் குடியிலருந்து எந்தப் புள்ள படிச்சுக் கிழிச்சது”

என்று காட்டப்படுகிறது.

**பெண் மீதான வன்முறை**

“போட்டி, பொறாமை, வம்பு, வழக்கு முதலியவை அதிகாரத்தின் பல்வேறு வடிவங்கள்”[14] என்கிறார் ஞானி. இத்தகு அதிகாரத்தின் குரல்கள் எதேச்சதிகாரப் போக்கினைக் காட்டுவது புதினங்களில் காட்டப்பட்டுள்ளது.

சாதியின் பெயரால் தீண்டாமை பார்க்கப்பட்ட நிகழ்வு பெண்களிடம் நிறைந்திருந்ததைக் ‘கூகை’ புதினம் எடுத்துரைக்கிறது.

ஊரில் உள்ள பொதுக்கிணற்றில் நீர் இறைத்து எடுத்துக் கொள்ளும் உரிமை ஆதிக்கச்சாதி மக்களுக்கு மட்டுமே உள்ளதனையும், தாழ்த்தப்பட்ட மக்கள் குடிநீரைப் பொதுக் கிணற்றிலிருந்து இறைத்துக் கொள்வதற்கு உரிமை தராத நிலையில், அவர்களுக்கு நீரை மற்றவர்கள்தான் எடுத்து ஊற்ற வேண்டும் என்பதையும், அதனைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு நீரைத் தாமதமாக ஊற்றுவதும், கண்டுகொள்ளாமல் இருப்பதும் அவர்களிடம் அதிகாரம் செலுத்துவதும் இயல்பான நிகழ்வுகளாக உள்ளன. இதனை ஓர் நிகழ்வின் மூலம் காட்டுகின்றார் சோ. தர்மன். இதனை,

“ஊர்க்கிணற்றில் நிறைய பெண்கள் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தார்கள். கிணற்றுக்கு வெளியே ஏழெட்டுப் பெண்கள் மண்குடத்துடன் தண்ணீருக்காகக் காத்துக்

கிடந்தார்கள். தண்ணீர் இறைக்கிற பெண்கள் யாரும் இவர்களைக் கண்டு கொள்ளவில்லை.

சாமியோவ்… இங்க ஒரு வாளி ஊத்துங்க சாமி, எம்புட்டு நேரம் நிக்கிறது. கால்கடுக்கு தாயி.

அடியே… மாடத்தி மகள, ஒனக்குக் கொழுப்பு ரொம்ப வச்சுப் போச்சடி. எம்புட்டு நேரமா நிக்கிறதுனு கேக்கியே, நிய்யி என்ன பெரிய தொர மகளா ஒனக்கு வந்த ஒடனே எறச்சு ஊத்திரணுமோ?”[15]

என்னும் பகுதி மூலம் விளக்கிச் செல்கிறார்.. ஊர்ப் பொதுக்கிணற்றை வெட்டி நீர் கிடைக்கும்படியாகச் செய்வது தாழ்த்தப்பட்ட மக்கள்தான். எனினும் அதிலிருந்து கிடைக்கும் நீரைக் குடிப்பதற்கும், பயன்படுத்துவதற்கும் அவர்களுக்கு உரிமை இல்லாத நிலை சமூகத்தில் நிலவுவது இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. மனிதநேயமற்ற ஆதிக்கச் சாதி பெண்களின் செயல்பாடு இங்கு எடுத்துரைக்கப்படுகிறது.

**சாதியின் பெயரால் ஒருமையில் பேசுதல்**

சாதிப் பிரிவினை பார்ப்பதில் ஆதிக்கச்சாதி மக்களிடையே ஆண் - பெண் பேதம் இருப்பதில்லை. ஆண்டைகளில் ஆணின் குணவியல்பும், பெண்ணின் குணஇயல்பும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றது. தம்மிடம் கூலிகளாக வேலை பார்க்கும் தாழ்த்தப்பட்ட மக்களை அவச்சொல்லால் வைவதும், அவர்களைச் சாதியின் பெயரால் ஏளனமாகப் பேசுவதும், சாதியின் பெயரால் அவர்களை ஒருமையில் வயது வித்தியாசம் பாராமல் பழித்துப் பேசுவதுமாகிய செயல்கள் உள்ளதனைப் புதினங்கள் எடுத்துரைக்கின்றன.

சாதியின் பெயரைச் சொல்லி, மக்களை அழைப்பது ஒடுக்குமுறையின் வெளிப்பாடே. ஆதிக்கச் சமூகத்தின் இழிநிலைச் செயல்பாடுகளில் ஒன்றாக இருப்பதனைக் ‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில்,

“ஏ, வண்ணாத்தி மவள, என் சட்டய மறந்துட்டியா?

வெள்ளைவெளேர்னு வெளுத்துக் கொண்டா...

உய மண்ணு நல்லாப் போடு…

தண்ணியில காட்டி சும்மா எடுத்தாந்துடாத...

எந்துணிதான் மொதல்ல வரணும்..

ஏ வண்ணாத்தி…

ஆரோக்கியம்…

வண்ணாத்தி மவள

வண்ணாத்தி…”[16]

என்னும் பாத்திர உரையாடலின்வழியாகக் காட்டுகிறார்.

**பெண்களிடம் பாலியல் சீண்டல்கள்**

ஊர் மக்களின் துணிகளை வெளுத்துத்தரும் ஆரோக்கியம் மற்ற சாதி மக்களால் வதைக்கப்படும் நிலைக்குத் தள்ளப்பட்டதனையும், ஆண்டைகளின் ஏச்சுக்கும் பேச்சுக்கும் அடங்கிப் போவதையும் ‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில்,

> “ஆரோக்கியத்திற்குப் பகீரென்றது. எக்குத்தப்பாகப் பேசி ஏதாவது நடந்து விட்டதா? கொத்துக்காரச் சடையனாயிற்றே? கீழ்ப்பட்ட சாதிப் பெண்களைச் சீண்டுகிற அளவுக்குக் காலம் மாறிவிட்டது என்று நினைத்தாள். கோபம் வந்தது. பின் அது அழுகையாக மாறிற்று. சத்தமில்லாமல் அழுதாள்”[17]

என்று காட்டுகிறார் இமையம். தாழ்த்தப்பட்ட சாதி மக்களைச் சீண்டுவதும், அவர்களைக் கேலி பேசுவதும், அவர்களிடம் தம் பாலியல் சீண்டல்களைச் செய்வதுமாகிய நிலை வழக்கில் இருப்பதனை இப்பகுதியால் உணர்த்துகிறார் ஆசிரியர். இத்தகைய பாதிப்புகளுக்கு உள்ளாகும் பெண்கள் தம் துயர நிலையை வெளியில் சொல்லாமல் மனதிற்குள்ளேயே வைத்து மருகும் நிலைக்குத் தள்ளப்படுவதனை இப்பகுதியால் உணர்த்துகிறார் ஆசிரியர்.

“பெண்களைப் பொறுத்த வரையில் சாதிய அடையாளம் என்பது முரண்பட்ட வகையில் செயல்பட்டு வந்துள்ளது. தூய்மை, கற்பு என்பன உயர்சாதிப் பெண்களுக்குரிய அடையாளங்களாக உருமாற்றம் பெற்றன. தலித் பெண்களைப் பொறுத்தவரையில் அவர்கள் எல்லாவிதங்களிலும் ஒடுக்கப்படுகிறார்கள். ஆதிக்கச் சாதியினரின் சாதிவெறிக்கு அவர்கள் கட்டுப்பட்டு வாழ வேண்டியுள்ளது. உழைக்கும் பெண்கள் என்ற வகையில் நிலவுடைமையாளர்களின் முதலாளிகள், நிறுவனங்களின் சுரண்டலுக்கும் அடக்குமுறைகளுக்கும் ஆளாகிறார்கள். முடிவாக எல்லா ஆண்களின் அதிகாரமும், ஏன் அவர்களின் குடும்பங்களில் உள்ள ஆண்களின் அதிகாரமும்கூட இவர்களின் மீது செலுத்தப்படுகிறது.”[18]

தீண்டாமை பார்ப்பதில் ஆதிக்கச் சாதி மக்களிடம் ஆண் - பெண் பேதம் இருப்பதில்லை. தாழ்த்தப்பட்ட மக்களில் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் அவர்கள் பார்வையில் ஒன்றுதான். அதிலும் குறிப்பாகத் தங்கள் வீட்டுவெலைகளைச் செய்யும் தலித் இனப் பெண்களைக் கேவலமாகப் பார்ப்பதும், சிறிய தவறுகளுக்குக்கூட மிகப்பெரிய அளவில் தண்டனைகள் தருவதும் நடைமுறையில் உள்ளது. தாழ்த்தப்பட்ட பெண்களிடம்

வேலையை மட்டும் பெற்றுக் கொண்டு, அவர்களிடம் தீண்டாமையின் பெயராலும், தொட்டால் தீட்டு என்று ஒதுங்கி நிற்பதுமான நிலையினைப் புதினங்களில் இடம்பெறும் நிகழ்வுகள் வெளிப்படுத்துகின்றன.

> "சோறு வாங்கப்போனா சட்டியத் தொடாமப் போட்டுட்டுப் போறதுதான் உண்டு. இந்தம்மா என்னன்னா கையத் தூக்கிட்டு சொத்துன்னு போடுது. ஒருநா சட்டி கீழ வுழுந்து நொறுங்கிப் போச்சு. சுள்ளக்காரச் செட்டியாருட்ட புதுச்சட்டி கேட்டு வாங்கிறதுக்குள்ள வாயெல்லாம் வலிச்சுப் போச்சு"[19]

என்பதில் ஆண்டைகளின் வீட்டுப்பெண்கள் சாதி ஆணவத்துடன் நடந்து கொள்ளும் செயல்பாடு காட்டப்படுகிறது.

**சாதி ஒழிப்பில் பெண்**

'மலரும் சருகும்' புதினத்தில் இடம்பெறும் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த ரத்தினம் படித்து போலீஸ் இன்ஸ்பெக்டர் ஆகிறான். வேலை கிடைத்த பின்னர், தான் பிறந்த சாதியை அவமானமாகவும் கீழ்த்தரமாகவும் எண்ணுகிறான். அவன் தாய்மாமன் தன் நிலத்தை அடமானம் வைத்து அவன் படிப்பிற்கு உதவுகின்றான். என்றாலும் அவன் மாமன் மகளை மணந்துகொள்ள மறுக்கிறான். இதோடு நில்லாது பதவியில் இருப்பதால் பெண்களைத் தங்கள் அடிமைகளாகவும், தனக்கு அடங்கியவர்களாகவும் இருக்க வேண்டும் என்று கருதுகிறான். இந்நிலையில் அவன் தங்கை அவனை எதிர்த்து நின்று தன் கருத்தினைப் பதிவு செய்கிறாள்.

> "'சேரிக்குப் போகாதே போகாதேண்ணு சொல்றது உன் காதிலே விழலையா? அவன் குரல் கரகரத்தது.
>
> 'கேட்காமல் இருக்க நான் என்ன செவிடா?'
>
> "பின்னே ஏன் அங்கே போறே. அந்த அழுக்குப் பிடிச்ச கறைகளை எல்லாம் இங்கே கூட்டிட்டு வர்றே?"
>
> "நான் அவுங்க மத்தியிலே பிறந்ததினாலே அங்க போறேன். அவுங்க உடம்பிலே ஓடுற ரத்தத்துக்கும் என் ரத்தத்துக்கும் வித்தியாசம் இல்லேங்கிறதினாலே போறேன்"
>
> ……
>
> அவுங்க எல்லாம் நாகரீகமில்லாத மிருகங்கள் அவன் குரலில் உஷ்ணம்.
>
> ……
>
> "அந்த நாகரீகமில்லாதவங்க இனத்திலே பிறந்தவனுக்காகத்தான் உனக்கு இந்த உத்தியோகம் கிடைச்சது"
>
> உண்மை அவன் நெஞ்சைச் சுட்டது"[20]

என்பதில் பெண்ணின் எதிர்ப்புணர்வும், சாதி எதிர்ப்பிற்கான உரையாடலும் காட்டப்படுகிறது. தன் சாதியில் பிறந்த சகோதாரன் குணம்மாறி கேடு கெட்டுப் போவதைச் சகிக்க இயலாது பொங்கி எழும் பெண்ணின் அறச் சீற்றம் இதில் வெளிப்படுத்தப்படுகிறது. எந்த உயர்நிலைக்குச் சென்றாலும் தனது கடந்த கால வாழ்வியல் நிலையை மறத்தல் கூடாது என்பது இதன்வழி உணர்த்தப்படுகிறது.

**பாலியல் சீண்டலுக்கு உள்ளாக்குதல்**

உலகமெங்கும் ஆதிக்கச்சாதி மக்களின் கோபதாபங்கள் அடக்கப்பட்ட மக்களின் மீதானதாகவே இருந்து வந்துள்ளதனை வரலாறுகள் எடுத்துரைக்கின்றன. மிருகங்களை வதைப்பதைப் போல ஒடுக்கப்பட்ட மக்களை அடக்கியாளப் பழகும் பண்பு விலங்கின வாழ்க்கையால் ஏற்பட்டதாகும். வலிமையுள்ள விலங்கினங்கள் தம்மை எதிர்க்க இயலாத நிலையில் உள்ள சிறிய விலங்கினங்கள் மீதும், மென்மையான விலங்குகள் மீதும் தன் ஆதிக்கத்தைச் செலுத்துவதனைக் காணலாம். இத்தகு நிலையிலேயே ஒடுக்கப்பட்ட மக்கள்மீது ஆதிக்கச் சாதியினர் வன்முறையைக் கையாள்கின்றனர். ஆண்கள் பெரும்பாலும் தங்களது வேலைகளை ஊருக்கு வெளியேயும், ஊரைவிட்டுத் தள்ளியும் இருக்குமாறு அமைத்துக் கொள்கின்றனர். பெண்களோ, ஊருக்குள்ளேயும், வீடுகளுக்குள்ளும், ஆண்டைகளின் தோட்டம் துறவுகளிலும் வேலைபார்க்கும் சூழல் உள்ளது. இதனால் அவர்கள் தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த பெண்களைத் தங்கள் பாலியல் வேட்கைக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் இடம்பெறும் ஆரோக்கியத்தின் மகளைப் பாலியல் சீண்டலுக்கு உட்படுத்தப்படும் நிலையினை,

> "மேரி தன் தாய் ஆரோக்கியத்திடம்,
>
> இந்த உடம்பு ஏன்தான் இப்படி இருக்கோ?
>
> இப்ப அதுக்கென்ன?
>
> உருட்டுக் கட்டையாட்டம் இருக்கிற இந்த உடம்பாலதான் ஊருல எல்லார் கிட்டயும் எனக்குச் சண்டை வருது. கீழ்ச்சாதின்னு கூடப் பாக்காமக் கடிக்க வரானுங்க"[21]

என்று காட்டுகிறார் இமையம். தாழ்த்தப்பட்ட பெண்களை எள்ளல் நகையாடலுடன் சீண்டிப்பார்க்கும் நிலை இருப்பதை இச்செயல்பாட்டின் வழியாகக் காட்டுகிறார் ஆசிரியர்.

ஆண்டான் அடிமைச் சமூகத்தின் விளிம்பில் நிலவுடைமையாளர்கள், மக்கள் உருவாக்கிய, பண்படுத்திய நிலங்களைத் தன் பண்ணைகள் என்றாக்கிக் கொண்டு மக்களைக் கட்டுப்படுத்தி அதிகாரம் செலுத்தித் தங்களுடையவைகளாக்கிக் கொண்டனர். கட்டுப்பாட்டின் கீழுள்ள நிலமற்றவர்கள் பண்ணையாளர்களின் எடுபிடி அடிமைகளாக்கப்பட்டனர். கூலிகள்

பண்ணை அடிமைகள் ஆகினர். அடிப்படைத் தேவைகளுக்கே பண்ணையிடம் மண்டியிடும் சூழல் உருவானது. இங்கு பெண்கள் பாலியல் வக்கிரங்களுக்கு அடிமைப்படுத்தப்பட்டனர்.

இவ்வாறான சமூக இழிநிலையை "குத்தகை விவசாயிகள் மற்றும் கடனாளி அடிமைகளின் மனைவிகளை பண்ணையார்கள் தங்களின் தனிச்சொத்தாக கருதினர். அவர்கள் விரும்பும்போதெல்லாம் இந்த பெண்களை அனுபவிக்க அவர்களுக்கு பிறப்புரிமை இருப்பதாக உறுதியாக நம்பினர். அவர்களிடம் பணிபுரியும் பெண்களிடம் ஆபாசமாகப் பேசுவது, அவர்களைத் தொடுவது, கிள்ளுவது, தள்ளுவது, தனியே இழுத்துச்சென்று களங்கப்படுத்துவது, அனைத்தும் அவர்களுக்கு சாதாரண வழக்கமாக இருந்தன... பண்ணையார்களும், வன ஒப்பந்ததார்களும் அவர்களின் இச்சைக்காகப் பெண்களைத் துன்புறுத்தினார்கள். பண்ணையார்கள் பழங்குடிப் பெண்களை தகாத உறவினுள் தள்ளுவது எவ்வளவு சாதாரணமாக இருந்ததென்றால், இந்த தகாத உறவினால் பிறந்த குழந்தைகளுக்கு சிறப்பு சொல்லாடலே உருவாக்கப்பட்டது. 'வட்லா' என்ற தனி சாதிப்பெயருடன் அவர்கள் அழைக்கப்பட்டனர்"[22] என்றுரைப்பர்.

பண்ணையில் தமக்குக் கீழே வேலைபார்க்கும் தாழ்த்தப்பட்ட பெண்களைத் தங்களுக்கே உரிய உரிமைப்பொருளாகக் கருதிக் கொள்வதும், அதற்காக அவர்களிடம் தங்கள் சாதி அதிகாரத்தையும், ஆணவத்தையும் காட்டுவதுமான செயல்பாடுகள் புதினங்களில் காட்டப்பட்டுள்ளன.

தன்னிடம் வேலை பார்த்த அழகனுக்குத் தானே பெண் பார்த்துத் திருமணம் செய்து வைப்பதும், அவன் மனைவியைத் தன் உரிமைப்பொருளாக வைத்துக் கொள்வதும் பண்ணைகளிடம் இருந்து வரும் நிலைமையைக் காட்டுவதாகக் 'கோவேறு கழுதைகள்' புதினத்தில்,

> "கவுண்டர்தான் அழகனுக்கு வயது ஏறுகிறதென்று கல்யாணம் செய்து வைத்தார். மற்றவர்கள் தங்கள் அடிமைப் பறையர்களுக்குச் செய்வதைக் காட்டிலும் கவுண்டர் அதிகம் செலவு செய்தார். நிறமணியில் கவுண்டரின் மகள் வீடு, அங்கு கருப்பாயி அடிமைப் பறைச்சியாக வேலை செய்து கொண்டிருந்தாள். இங்கு வந்து அழகனுடன் கவுண்டர் வீட்டு வேலைகளுக்குப் போகும்போது, கருப்பாயிக்கும் கவுண்டருக்கும் அந்த தொடர்பாகிவிட்டது"[23]

என்பதன் வழியாகக் காட்டப்படுகிறது.

ஒடுக்கப்பட்ட பெண்கள் ஆதிக்கச் சாதியினரின் பாலியல் வேட்கைக்குப் பலியாவது, 'கூகை' புதினத்தில்,

"என்னம்மா செய்ய, பள்ளக்குடி, பறக்குடி, சக்கிலியக்குடில அந்தச் சண்டாளங்களோடு அர்ணாக்கயிறுபடாத பொம்பளையே இருக்கமாட்டா. காலம் அவுக காலமாப் போச்சு, அழிச்சாட்டம் பண்றாங்க"[24]

என்று காட்டப்படுகின்றது. ஆதிக்கச் சாதியினர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த பெண்களை அடக்கியும், மிரட்டியும், வன்முறைகளைக் கட்டவிழ்த்தும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதனை இப்பகுதியால் காட்டுகின்றார் ஆசிரியர்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் பெண்ணுக்கு ஏற்படும் அடக்குமுறைகளும், ஒடுக்குமுறைகளும் பல்வேறு வடிவங்களில் வெளிப்படுத்தப்படுகின்றன. பெண் என்ற நிலையும், வர்க்க அடிப்படையிலான பிரச்சினையும், சாதிய மேலாதிக்கமும், முதலாளித்துவ சமுதாயத்தில் இன்றும் பெண்களை ஒடுக்குவதாக அமைந்துள்ளன.

**துணிவின்மை**

மரபு முறையிலான சமூகக் கட்டமைப்புகள் பெண் என்பவள் எல்லா நிலைகளிலும் பொறுமையுடன் இருக்கவேண்டியவளாகவும், ஆணுக்கு எதிர்வினை ஆற்ற அருகதையற்றவளாகவும், பலகீனமானவளாகவும் இருப்பதற்குப் பழக்கிக்கொள்ளுமாறு அறிவுறுத்தி வந்துள்ளன. இதன் தொடர்நியைாகப் பெண் என்பவள் எல்லா நிலைகளிலும் அஞ்சி ஒடுங்குபவளாகவே இருக்கிறாள். எதிர்த்துப் பேசவும், எதிர்வினையாற்றவும் துணிவுடன் செயலாற்றவியலாதவளுமாகவே படைக்கப்பட்டிருக்கிறாள் என்பதனைப் புதினங்களில் இடம்பெறும் நிகழ்வுகள் காட்டுகின்றன.

'மலரும் சருகும்' புதினத்தில் இடம்பெறும் புன்னைவனம் தன் பண்ணையாரின் கழனியில் வேலைக்கு வரும் பெண்களைப் பாலியல் துன்புறுத்தலுக்கு உள்ளாக்குகிறான். அவனது செயலை எதிர்க்கவியலாத நிலையில் பெண்கள் இருப்பது நிகழ்வுகளின் வழியாகக் காட்டப்படுகிறது. கன்னிமரியாவை வல்லுறவு கொள்ளவந்த புன்னைவனத்திடம்,

"முதலாளி, இது நல்லா இல்ல. உங்களைக் கும்பிடுறேன். என்னை விட்டுருங்க... தயவு செஞ்சு என்னைக் கெடுத்துப் போடாதீங்க"[25]

என்னும் கூற்றிலிருந்து பெண்ணின் மீதான ஆதிக்க மனப்பாங்கு வெளிப்படுகிறது. புன்னைவனத்தின் பாலியல் கொடுமையினைக் காமத்தின் வெளிப்பாடு என்று கருதுவதைவிட, ஆக்கிரமிப்பின் வெளிப்பாடு என்பதே இவ்விடத்தில் பொருந்தும்.

இதேபோன்று 'தோல்' புதினத்தில் இடம்பெறும் மேற்பார்வையாளர் முஸ்தபாவின் செயல்பாடுகளும் காட்டப்படுகின்றன. தோல் தொழிற்சாலையில் பணிபுரியும் எந்தப் பெண்ணும் கண்ணுக்குப் பசுமையாகவும், புதுமையாகவும் இருந்துவிடக் கூடாது. அவனது காமாந்தரக்கண் எந்தப் பெண் மீது படுகிறதோ? அந்தப் பெண் அவனது இச்சையைப் பூர்த்தி செய்தாக

வேண்டும். மறுத்தாலோ, அவன் மிருகமாகவே நடந்துகொள்வான். பெண் வெறியனான முஸ்தபா மகமதியாபுரத்தில் ஏழைக்குடும்பத்தைச் சேர்ந்த இரண்டு கன்னிப்பெண்களை ஆசை வார்த்தைச் சொல்லி கெடுத்துவிடுவதும், அதில் ஒரு பெண் மானம் தாங்காமல் தூக்குப் போட்டுக் கொண்டு இறப்பதும் காட்டப்படுகிறது. பாதிக்கப்பட்ட குடும்பங்கள் ஜமாத்தில் புகார் செய்தும், இவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. காவல்துறையினரும் நடவடிக்கை ஏதும் மேற்கொள்ளவில்லை.

தோல் தொழிற்சாலையில் அனைவரின் அன்புக்கும் உரிய, சின்னக்கிளியை தோல் தொழிலக மேற்பார்வையாளன் முஸ்தபா மிருகத்தனமாகவும், மூர்க்கமாகவும், பகிரங்கமாகவும் சீரழித்துச் சிதைத்துக் குதறியெடுக்கிறான். சின்னக்கிளிக்காக அனைவரும் வருந்தினாலும், தடுக்க முன்வர யாருக்கும் தைரியமில்லை. சின்னக்கிளியின் இறப்புக்கு முஸ்தபாவின் காமவெறியே காரணம் என்பதைத் 'தோல்' புதினத்தில் பதிவு செய்துள்ளார்.

**பாலியல் வன்முறை**

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் இடம்பெறும் மேரி, திருமணத்திற்குத் தயராக இருந்த நிலையில், ஆதிக்கச் சாதியைச் சார்ந்தவனால் பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்படுகிறாள். இதனை,

> "வீட்டின் மூலையில் உயிர் போவது போல் மேரி அழுதாள். உடலின் ஒவ்வொரு பகுதியையும் பார்த்துப் பார்த்து அழுதாள். தலையிலும் மார்பிலும் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டாள். மார்பு, இடுப்புச் சேலை நழுவிவிட்டதையும் கவனிக்கவில்லை. பூமியை இரு கைகளாலும் ஓங்கி ஓங்கி அறைந்தாள். மேலும் மேலும் அழுது கொண்டே இருந்தாள். அவள் அழுகை எல்லையற்று நீண்டு கொண்டிருந்தது"[26]

என்று காட்டுகிறார் இமையம். இதேபோன்று பெண்கள் கூலிக்கு வேலைசெய்யும் ஆண்டைகளின் பாலியல் வேட்கைக்குப் பலியாகும் நிலையில் உள்ளதனை 'செந்நெல்' புதினத்தில்,

> "கண்ணுக்கு லட்சணமா பொண்டு புள்ளத் தெரிஞ்சிட்டாப் போதும். எந்த நேரத்திலேயும் பண்ணை மாட்டுக் கொட்டிலுக்குத் தண்ணி ஊத்தனும்ன்னும் சாணி அள்ளிக் கூட்டனும்னும் கூப்பாடு வரும். அப்பெல்லாம் அந்தப் புள்ளங்க பண்ணைக்குப் போய் சத பிண்டங்கக்கிட்ட நஞ்சிப்போயி வர்றதப் பாக்கும் போதெல்லாம் அடுத்த சென்மத்திலாச்சும் இந்த சனங்க பண்ணை வீட்டு நாயாவாவது வந்து பொறக்கணுன்னு வேண்டிக்குவான்"[27]

என்று காட்டுகிறார் ஆசிரியர். இதேபுதினத்தில் வரும் ரெங்கபாஷ்யம் தன் வீட்டில் வேலைசெய்யும் செல்வியின் கையைப் பிடித்து வன்புணர்ச்சிக்கு முயற்சிக்கும் நிலையினை,

“என்னாடி பெரிசா பத்தினிக் கொட்டு கொட்டுற? சட்டமா சாணி அள்ளி போடன்னு வரச்சொல்லி நாங்க ருசி பாத்து அனுப்பி வச்ச காலம் மாறிப்போச்சாடி? -ன்னு குதிச்சிக்கிட்டு வந்த ரெங்கபாஷ்யம் செல்வி கையைப் புடுச்சி இழுத்தாரு”[28]

என்று காட்டுகின்றார் பூமணி. வயற்காடுகளில் புல்அறுக்க, விறகு சேகரிக்கப் போகும் பெண்களை வயலுக்குச் சொந்தக்காரர்கள் தங்கள் பாலியல் ஆசைக்கு இணங்குமாறு அடிபணிய வைப்பதும், மீறி நடந்தால் அவர்கள் மீது திருட்டுப்பட்டம் சுமத்தி, ஊர்ப்பொதுவில் அவமானப்படுத்துவதுமான நிகழ்வு இப்புதினத்தில் காட்டப்படுகிறது.

பெண்கள் மீதான பாகுபாடு, சித்திரவதை, அடக்குமுறை, பாலியல் வன்கொடுமை எனப் பல நிலைகளில் பெண்களுக்கான கொடுமைகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதையும், சட்டங்கள் எவ்வாறிருந்தாலும் பெண்கள் மீதான வன்கொடுமைகள் கட்டுக்கடங்காமல் இருப்பதனையும் அரங்க மல்லிகா,

“விளைநிலங்களிலும் காடுகளில் பணியிடங்களில் பெருகி வரும் பாலியல் வன்முறையைத் தடுக்க உச்சநீதி மன்றம் AIR 1997 SECP 3011 ஒரு தீர்ப்பை அளித்தது. 1989 - இல் வன்கொடுமை தடுப்புச் சட்டமும் நடைமுறைப்படுத்தப்பட்டது. ஆயினும் பெண்கள் மீதான வன்கொடுமைகள் குறையவில்லை”[29]

என்று குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கதாகும்.

**வன்முறைக்குப் பலியாதல்**

ஊரில் சாதிப்பிரச்சினைகள் வரும்போதெல்லாம் ஆண்கள் வீட்டைவிட்டு வெளியேறித் தப்பித்துக் கொள்வதும், வீடுகளில் உள்ள பெண்கள் பலியாவதும் தொடர்கதையாக உள்ளது. தாழ்த்தப்பட்ட ஆண்கள் ஆதிக்கச் சாதியினரால் வன்முறைக்கு உட்படுத்தப்படும்போது அவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள சேரியை விட்டு வெளியேறி விடுகின்றனர். நிலமற்ற ஆண்கள், அன்றாடக் கூலிகளாக இருப்பதால் கலவரம் வெடிக்கும்போது சேரியிலிருந்து வெளியேறுவது இயல்பாக இருக்கிறது. ஆனால் குழந்தைகள், வயதானவர்களைக் காக்கும் பொறுப்பு பெண்கள் மீதே சுமத்தப்படுவதால் பெண்கள் தங்கள் வீடுகளில் தங்கியிருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இதனால் ஆதிக்க சாதி ஆண்களும், காவல்ர்களும், அடியாட்களும், அவர்களை அடித்து உதைத்துத் துன்புறுத்துவதும், பாலியல் வன்புணர்ச்சிக்கு உட்படுத்துவதுமான செயல்களைச் செய்கின்றனர். சாதிப் படுகொலைகள், காவல்துறையின் சோதனைகள், சாதிய மோதல்கள் ஆகியவற்றின்போது பெண்களே பலியாகின்றனர் என்பது அறியத்தக்க செய்தியாகும்.

பெண்கள் மீது காவல்துறையின் அத்துமீறல் நிகழும் போக்கு ‘மலரும் சருகும்’ புதினத்தில்,

> “ஊரை இருள் ஆட்கொண்டபோது தெருக்களில் போலீஸ் கெடுபிடி அதிகமாயிற்று. வீடுகளுக்குள் புகுந்து அடுக்களை வரையில் தேடினார்கள். அவர்கள் தேடுகின்ற நபர் கிடைக்கவில்லையெனில் பெண்களை இழுத்துப் போட்டு நையப் புடைத்தார்கள”[30]

என்று எடுத்துரைக்கப்படுகின்றது.

**குடும்ப வன்முறை**

‘பிறகு’ புதினத்தில் இடம்பெறும் அழகிரியின் மகள் முத்துமாரியைத் திருமணம் செய்துகொள்ள, இருபத்தியொரு ரூபாய் பரிசம் கொடுத்து, செவல்பட்டி முத்துமுருங்கனின் மகன் வயிரவன் மணந்து கொள்கிறான். ஆனால் காலப்போக்கில் இராணுவத்திற்குச் சென்று மாத ஊதியம் பெறுகின்ற நிலையில் வைரவனின் மனம் மாறுகின்றது. தன் மனைவி சுத்தம் இல்லாதவள், நாகரிகமாக நடந்துகொள்ளத் தெரியாதவள் என்று கூறி, அவளைத் துன்புறுத்தச் செய்கின்றான். முத்துமாரியின் சேலைத்துணியும், தலைமுடியும் நாற்றமடிப்பதாகக் கூறி, தன் மகனைப் பிடிங்கிக் கொண்டு மனைவியைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிடுகின்றான்.

> “வெறகுக்கட்டையிட்டு அடிஅடின்னு...
>
> நான் அசிங்கமா இருக்கனாம். மொகற லச்சணமில்லையாம்”[31]

என்பதில் திருமணமான ஆணின் செயல்பாடு காட்டப்படுகிறது. அவனது செயலால் மனம் வருந்தும் அழகிரி, மாடசாமி, வேலு, வண்டாரி ஆகியோர் பஞ்சாயத்தில் முறையிடுகின்றனர். அதில்,

> “அவள எனக்குப் புடிக்கல. அவ்வளவுதான் பெறகெதுக்கு அனாவசியமாப் பேசிட்டு, பேசாம உண்டானத வாங்கிட்டு முந்தி நூலக் குடுத்துட்டுப் போக வேண்டியதுதான. இல்ல செய் மொறயிருந்தாலும் சொல்லட்டும் காசவுட்டெறிஞ்சிடுறேன்”[32]

என்று கூறித் தான் தன் மனைவியை வெறுத்து ஒதுக்கும் நிலைப்பாட்டினைக் கூறுகிறான் வயிரவன். வசதி வாய்ப்புகள் ஏற்படும்போது மக்கள் மனங்களில் நேரும் மாற்றங்களை இப்பகுதி விளக்கி நிற்றலைக் காணலாம். இவ்வாறு மணமுறிவுபெற்ற முத்துமாரியை ஐயன்குளத்து முனியாண்டி திருமணம் செய்து கொள்கிறான். அவனுடனான வாழ்க்கையில் அவள் ஒரு பெண்குழந்தையைப் பெற்றெடுக்கிறாள். செவல்பட்டியில் நிகழ்ந்த இழவு வீட்டுக்கு அவள் தன் கைக்குழந்தையை வீட்டில் விட்டுவிட்டுச் சென்று விடுகிறாள். தாய் இல்லாத காரணத்தால் குழந்தை அழுதது குறித்தும், குழந்தைத் தனியே இருக்கவிட்டுத் துக்க வீட்டுக்குச் சென்று வந்ததையும் அறிந்த முனியாண்டி, தன் மனைவியை அடித்து நொறுக்குகிறான். முனியாண்டியின் தாய் எவ்வளவோ தடுத்தும் அவன் அமைதிபெறவில்லை. இச்செயலால் மனம் தவிப்புக்குள்ளான முத்துமாரி, தன் மகனை அழகிரியிடம் போகச் சொல்லிவிட்டுக் கைக்குழந்தையுடன் பாழும் கிணற்றில் விழுந்து தற்கொலை

செய்துகொள்கிறாள். முனியாண்டி தன் மனைவியையும், குழந்தையையும் ஒருசேர இழக்கிறான்.

இவ்வாறு மறுமண வாழ்க்கையிலும் பெண்ணின் துயரவாழ்க்கை தொடர்ச்சியான ஒரு நிகழ்வாகச் சமூகத்தில் இடம்பெறுவதனை இப்புதினம் காட்சிப்படுத்துகிறது. வறுமைவயப்பட்ட நிலையில் இருந்த காலகட்டத்தில் தன் மனத்திற்குப் பிடித்தமான மனைவி, வசதி வாய்ப்புக்களும், மாத வருமானமும் வந்தவுடன் கசந்துவிடுவதனை யதார்த்தப் போக்கில் இப்பகுதியில் உணர்த்துகின்றார் ஆசிரியர்.

'கல்மரம்' புதினத்தில் இடம்பெறும் கர்ப்பினியான கன்னியம்மாவை, காரணம் ஏதும் கூறாமல் கணவனும் அவளது மாமியாரும் வீட்டைவிட்டு அனுப்பிவிடுகின்றனர். ஒரே வீட்டில் இருபெண்கள் கருவுற்றிருத்தல் கூடாது என்றும் இருபெண்களும் ஒரே நேரத்தில் எதிரெதிரில் சந்திக்கக் கூடாது என்றும் கூறி, கன்னியம்மாவை வீட்டின் வெளிப்புறத்தில் ஒரு குடிசைபோட்டு அதில் தங்கவைத்து விடுகின்றார் அவளது மாமியார். இதனை எதிர்க்க இயலாத நிலையில் கன்னியம்மா இருப்பதனையும், எதிர்வினையாற்றினால்தான் உரிமைகளைப் பெற முடியும் என்பதனையும்

> "அக்கா அப்பிடி ஊமயா இருக்கறதத் தொட்டுதான் அவ புருஷனும் மாமியாக்காரியும் அவள அந்தகெதியில வச்சிக்கிறாங்க. எதுக்கோசரம் நானும் அவள மாதிரியே இருக்கணும்?"[33]

என்னும் பகுதியால் எடுத்துரைக்கிறார் திலகவதி.

குடித்துவிட்டு வந்து மனைவியை வதைக்கும் ஆணின் செயல்பாட்டினை 'மலரும் சருகும்' புதினத்தில்

> "ஒருநாள் இரவில் மாடசாமி மூக்குமுட்டக் கள்ளைக் குடித்துவிட்டு வந்திருந்தான். அவள் பிள்ளைத்தாச்சி என்பதையும் பாராமல் கையைப் பிடித்து இழுத்தான். அவளோ அவனது இச்சைக்கு இணங்க மறுத்துவிடவே, பேயைப் போல அவனுக்கு கோபம் வந்தது. நாயை அடிப்பதைப் போல நையப் புடைத்தான். அடி பொறுக்கமாட்டாமல் மயங்கி சுருண்டு விழுந்தாள்"[34]

என்று காட்டுகிறார் டி.செல்வராஜ்.

**வதைபடும் பெண் வாழ்க்கை**

மனைவியைச் சந்தேகிப்பதும், அவர்களை அடித்து உதைப்பதும், விரும்பிய நேரத்தில் மனைவியுடன் சேர நினைப்பதும், குடித்துவிட்டு வந்து மனைவியக் காரணமில்லாமல் உதைப்பதும் ஆணாதிக்க வாழ்க்கையில் இயல்பான நிகழ்வுகளாக உள்ளன. கணவனின்

போக்கினைத் தட்டிக் கேட்க இயலாத நிலையில் பெண்கள் இருக்கும் நிலைப்பாட்டினையும் புதினங்கள் காட்டுகின்றன.

‘கல்மரத்தில் இடம்பெறும் கன்னியம்மாளின் கணவன் குடிகாரனாகவும், வேலையெதுவுமின்றியும் திரிந்து கொண்டிருக்கிறான். அவளது மாமியார், அவனைக் கண்டிக்காமல் புகுந்த வீட்டிற்கு வந்த கன்னியாம்மாவைக் கொடுமைப்படுத்துகிறாள். இந்நிகழ்வு.

> “இந்த மனுஷனுக்கும் எனக்கும் வேறஒரு விஷயத்துல தகராறு.... அத்தோட இன்னாத்துக்கு இப்படி ராவா பகலா சுத்தறேன்னு ஒரு வார்த்தை அந்த ஆளை நான் கேட்கக் கூடாதாம்....நீதான் அவனை வழிக்குக் கொண்டாரனும்..”[35]

என்று எடுத்துரைக்கப்படுகிறது. குடும்பப்பெண்களுக்கு ஏற்படுத்தப்படும் வன்முறைகளுக்குச் சரியான எதிர்வினையாற்றினால்தான் ஆண்கள் வழிக்கு வருவார்கள் என்பது ‘கல்மரம்’ புதினத்தில்,

> “நீ என்னம்மா எதுக்கெடுத்தாலும் தல எயித்து தல எயித்துன்னுக்கினு’
>
> ஊரான் ஊட்டுப் பொண்ணக் கட்டிக்கினு போனியே ஒழுங்கா குடித்தனம் பண்றதுக்கு என்னான்னு ரெண்டு நெருக்கு நெருக்கனா வழிக்கு வர்றாங்க. அதவுட்டுட்டு”[36]

என்று எடுத்துரைக்கப்படுகிறது.

‘கழிசடை’ புதினத்தில் வரும் சுடலை கொண்டயம்மாவைக் கட்டிக் கொள்ள ஆவலாய் இருந்து, அது நிறைவேறாதபோது பைத்தியம் பிடித்தவனாகின்றான். காலவோட்டத்தில் சுடலை வேறுஒருத்தியை மணந்து, பைத்தியம் தெளிகிறான். சுடுகாட்டில் வெட்டியான் வேலை செய்யும் சுடலை, பிணம் எரிக்கும் வேலை பார்ப்பதால் மது குடிப்பதற்கு அடிமையாகிறான். இதனால் குடும்பச்செலவுக்குப் பணம் தராமல் போவதும், அதனால் அவன் மனைவி மனநோயாளியாகிவிடுவதும் இக்கதையில் கூறப்படுகின்றது. குடும்பச் செலவைச் சமாளிக்க கொண்டமையம்மா, மாணிக்கத்துடன் தவறானவழியில் உறவினை ஏற்படுத்திக் கொள்கிறாள்.

**குடும்ப வாழ்வில் வறுமை**

வறுமை, அன்புகொண்ட இன்ப வாழ்வினைக்கூட பிரிக்கும் தன்மை வாய்ந்ததாய் அமைந்து விடுகிறது. ‘கல்மரம்’ புதினத்தில் இடம்பெறும் காசிக்குத் திருமணம் நடந்தபின்னர், அவனிடம் பலவகையிலும் வசதி வாய்ப்புக்களை எதிர்ப்பார்க்கிறாள் ராகினி. வறுமை காசியின் வாழ்க்கையில் ஏமாற்றத்தையே தருகிறது. இதனைப் பாத்திர உரையாடலின்வழியாகக் காட்டுகிறார் திலகவதி.

> “....அப்ப சமையல் என்ன பண்ண?

தண்ணி சோறுதான்.

தண்ணி சோறா?

ஆமா.

கையிலிருந்த பேப்பரை சுவரில் விசிறியடித்தான் காசி. கோபத்தில் முகம் இறுகியது.

எப்பப்பாரு தண்ணிச் சோறு. இல்லன்னா பழைய சாம்பாரு. சீ... நாக்கே செத்துப்போச்சு.

வகைவகையா பண்ணிச் சாப்பிட யாருக்கு ஆசயில்ல? துட்டு வேணுமே?..."[37]

என்னும் வரிகள் வறுமையின் நிலையைப் பறைசாற்றுகின்றன.

இதே புதினத்தில், இடம்பெறும் ஆர்.ஆர்.எம்., கட்டடத் தொழிலாளர்கள் முன்னிலையில் காசியைக் கை நீட்டி அடித்துவிடுகிறான். அவமானத்தால் வெட்கிப்போன காசி, தன் மனைவி ராகிணியிடம் இந்த வேலையை விட்டுப் போய்விடலாம் வா! என்று அழைக்கின்றான். அவ்வாறு இருவருமே முடிவெடுக்கையில், வறுமை என்னும் கோரப்பிடி அவர்களை வேறு எங்கும் போகவிடாமல் தடுத்து நிறுத்துகிறது.

"அதுவரையில் அப்படி நினைக்காத ராகினிக்கும் காசிக்கும் சட்டென்னு வேலையில்லாமல் வறுமையோடு போராடும் வாழ்வின் அலைச்சல் நினைவுக்கு வர மனசு அலைக்கழிப்புக்குள்ளானது. மனம் முழுக்க நிறைந்திருந்த கசப்பும் கோபமும் இந்தத் திகிலில் கரையத் தொடங்கியது"[38]

என்னும் வரிகள் வறுமை, தொழிலாளர்களை மானத்துடன் வாழ்வதற்குக்கூட கதியற்றவர்களாக்கி விடுவதனைக் காட்டுகிறது.

கட்டடத் தொழிலாளர்கள் அனைவருமே, பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கிய நிலையிலிருப்பவர்கள். அதனால் அவர்கள் தம்மிடம் உள்ள சிறிய பொருள்களையும் அடமானம் வைத்துப் பிழைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். ரேஷன் மண்ணெண்ணெய் வாங்குவதற்காகக் காவேரியின் கால்கொலுசை அடகுவைக்கச் சொல்வதும், அதைத்தருவதற்கு அவள் மறுக்க, ஆதிலட்சுமி தன் மூக்குத்தியை அடகுவைத்து ரேஷன் பொருள் வாங்கி வருவதுமாகிய செய்திகள் குடும்பத்தின் வறுமை நிலையைப் படம்பிடித்துக்காட்டுகின்றன. காசிக்கு எப்படியாவது ஒரு சைக்கிள் வாங்கவேண்டுமென்று ஆசை. ஆனால், அந்த ஆசையும் நிராசையாகிப் போகிறது.

'கோவேறு கழுதைகள்' புதினத்தில் வரும் ஆரோக்கியம், பொறுமையுடனும் திறமையுடனும் வாழ்க்கையை நடத்துகின்றாள். எனினும் காலமாற்றம் அவளுக்குப் பல சுமைகளைத் தருவதால், வறுமையின் பிடியில் சிக்கித் தவிப்புக்கு உள்ளாகின்றாள். மகன்

சோசப்பின் வீட்டுக்கு மட்டும் அடிக்கடி சென்று வருவாள். திரும்பி வரும்போதெல்லாம் புத்தாடைகள் அணிந்து வருகிறாள்.

1822 -இல் கிளாரா ஜெட்கின் எழுதினார், "கம்யூனிஸ்ட்கள் பெண்கள் மத்தியில் இரட்டை இலக்கிற்காகப் பணியாற்ற வேண்டும்: முதலில் 'சித்தாந்த மற்றும் அமைப்பு ரீதியாக' கம்யூனிச சர்வதேசத்தில் பெண்களை இணைக்க வேண்டும், இரண்டாவது, உழைக்கும் வர்க்கத்திற்கான அனைத்துப் போராட்டங்களிலும் சாமானியப் பெண்களை ஈர்க்க வேண்டும்"[39] என்பதே மார்க்சியம் வலியுறுத்தும் பெண்விடுதலைக்கான குரலாக அமைந்திருக்கிறது.

**பெண்ணியம்**

ஆணும் பெண்ணும் எல்லாத்துறையிலும் சமஉரிமை படைத்தவர்கள் என்ற சிந்தனையின் விளைவாகவே பெண்ணுரிமைக் கோட்பாடு தோன்றியது. பெண்ணுரிமை என்பது ஓர் இயக்கமாகவும், கோட்பாடகவும் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் தோற்றம் பெற்றது"[40] மேலை நாட்டில் பதினெட்டாம் நூற்றாண்டில் இறுதியில் இச்சிந்தனையின் முன்னோடியாக மேரி உல்ஸ்டன் கிரா∴பட் என்னும் ஆங்கிலப் பெண்மணியைக் குறிப்பிடுகின்றனர். 'இவர் பெண்ணுரிமையை அழுத்தமாகப் பறை சாற்றும் வகையிலமைந்த, 'A Vindication of the Rights of Women' என்னும் தம் நூலினை 1972 ஆம் ஆண்டு வெளியிட்டார்'[41] இதனைத் தொடர்ந்து பல பெண்ணுரிமை அமைப்புகள் தோன்றின.

பெண்ணியம் என்ற சொல் மிக அண்மைக் காலத்தில் தோன்றி வளர்ந்து வருகிறது. அது பெண்களின் உரிமைக்காகப் போராடும் ஒரு புதிய இயக்கமாகும். அத்தோடு பெண்ணின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையிலும் அவள் ஆணுக்குச் சமமானவள் எனும் உயர்நெறியை நிலைநாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்குகிறது"[42] எனப் பிரித்தானியக் கலைக் களஞ்சியம் பெண்ணியத்திற்கு விளக்கம் கூறுகிறது.

> "பெண்களின் முன்னேற்றம், பெண்ணுரிமை, பெண்ணுக்குச் சமவாய்ப்பு, பெண்ணின் திறமையைச் சமுதாயத்திற்குப் பயன்படச் செய்வது ஆகியவற்றின் சாரம் தான் பெண்ணியம்."[43]

இக்கருத்து, சமுதாய சமத்துவத்தை ஏற்படுத்துவதே பெண்ணியத்தின் நோக்கம் என்பதைத் தெளிவுபடுத்தகிறது.

பெண்கண் முழு விடுதலையை வென்று பெறாத வகையில் பாட்டாளி வர்க்கம் முழுவிடுதலையை அடைய முடியாது என்ற உறுதியோடு உருசாவில் தம் ஆட்சியின் மூலம் பெண்ணுரிமையை நடைமுறைப்படுத்திய லெனின், உலக நாடுகளில் பெண் விடுதலைக்காகப் பணியாற்றுவோருக்குப் பாதையமைத்துக் கொடுத்தோர் என்று கூறமுடிகிறது. இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமுதாயத் தேவை கருதிப் பெண்ணுரிமைக்காகப் பாடுபட்ட

ஈசுவர சந்திர வித்யாசாகர், காந்தியடிகள், இரானடே முதலான பலருள் இராசாராம் மோகன்ராய் முதன்மையிடம் பெறுபவர். அவரைத் தொடர்ந்து அன்னிபெசன்ட் அம்மையார், சகோதரி சுப்புலெட்சுமி, டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி, வேதநாயகம்பிள்ளை, மாதவையா, தந்தை பெரியார், திரு.வி.க., சுப்பிரமணிய பாரதியார், பாரதிதாசன், அறிஞர் அண்ணா முதலானோர் பெண்ணுரிமைக்காக ஆற்றிய பணிகளும் குறிப்பிடத்தக்கன.

> "இந்திய மறுமலர்ச்சி இயக்கத்தின் தோற்றத்திற்குக் காரணம் சமயச் சீர்திருத்தமே எனினும் அதன் நடவடிக்கைகளில் முன்னுரிமை பெற்றது பெண்ணுரிமை எனல் மிகையாகாது. அந்த அடிப்படையில் இராமலிங் அடிகள் முதல் பெரியார், அண்ணாதுரை வரை பலரும் அந்தக் கோணத்தில் அரும்பணியாற்றிய பின்னரும் பெண்களின் நிலை அவர்களுக்குச் சமமாக வளர்ந்து விட்டதாகத் தெரியவில்லை"[44]

என்னும் கூற்று இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது.

திரு.வி.க. "பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை" என்னும் நூலின் மூலம் பெண் விடுதலைக்குக் குரல் கொடுத்ததும் சிந்திக்கத்தக்கது. பெண் விடுதலை குறித்து ஜவஹர்லால் நேருவுக்கும் தீர்க்கமான சிந்தனையிருந்தது. பொருளாதாரச் சுதந்திரமும் பொருளீட்டும் வாய்ப்பும் பெண்களுக்குக் கிடைக்கும் போதுதான் பெண் விடுதலை என்பது சாத்தியமாகிறது. இல்லையெனில் கணவரையோ அல்லது வேறு ஒருவரையோ பெண்கள் சார்ந்திருக்கும் வரையிலும் விடுதலைக்கே இடமில்லை என்பது நேரு அவர்களின் பெண்ணுரிமைச் சிந்தனையாகிறது. மாதரை விடுதலை பெறச் செய்வது அவர்களுடன் ஒன்று கூடி உழைக்கும் போதே சோசலிச நிர்மாணம் தொடங்கப் பெறுகிறது என்றார் திரு.வி.க. இச்சீர்திருத்தச் சிந்தனையாளர்களின் கருத்துகளை உள்வாங்கிக் கொண்டு, தொடக்கம் முதல் இன்று வரையிலும் பல்வேறு புதின ஆசிரியர்கள் பெண்ணுரிமை குறித்துச் சிந்தித்துள்ளனர். வேதநாயகம் பிள்ளை தம் புதினங்களின் மூலம், பெண் விடுதலை, பெண்கள் முன்னேற்றம் ஆகிய பெண்ணுரிமைச் சிந்தனைகளுக்கு முன்னோடியாவார். அவருக்குப் பின் வந்த மாதவையா, புரட்சிகரமான சிந்தனைகளைத் தம் புதினங்களின் வாயிலாகச் சமுதாயத்தில் விதைத்தவர் என்பது கண்கூடு.

> "பெண்களின் மணவயதை உயர்த்தல், வயது வந்தபின் மணஞ்செய்தல், வரதட்சணை ஒழிப்பு, பெண்ணுக்குச் சொத்தில் பங்கு என்பன அவர் முன்வைத்த பெண்ணுரிமையை முதன்மைப் படுத்திய சீர்திருத்த எண்ணங்கள்."[45]

இக்கூற்று, அன்றைய சமுதாயத்தில் காணப்பட்ட சீர்கேடுகளைச் சீர்திருத்தும் சமுதாய நோக்கு மாதவையாவிடம் குடிகொண்டிருந்ததைப் பறைசாற்றுகிறது.

பெண்ணுக்கு உரிமை கொடுத்துப் போற்றும் சமுதாயம் முன்னேறுமென்பதால், ஆணுக்கு நிகராகப் பெண்ணுக்கும் எல்லா உரிமையும் வழங்க வேண்டும் என்ற கோரிக்கை

முன் வைக்கப்பட்டது. "தான் சத்திரபதியானது தன் தாயினாலே என்று மன்னன் சிவாஜி சொல்லியிருக்கிறான், பெண்களைப் பெருமைப்படுத்தி வாழும் நாடுகள் யாவும் எல்லாத் துறைகளிலும் செழித்து வாழுகின்றன. பெண்களை இடித்து இகழும், காதலைப் பழித்துக் கூறும் நம் நாட்டார் தான் நரக வேதனைப்பட்டுக் கொண்டு உழன்று வருகிறார்கள்"[46] என்னும் கருத்து, பெண்களுக்கு உரிமை கொடுப்பதால் விளையும் பயன்களை எடுத்துரைக்கிறது.

பெண்கள் உரிமையற்றுத் துன்புறும் நிலையை அறிஞர் அண்ணா ரங்கோன் ராதாவில் விளக்குகிறார். "இந்திரன், ரிஷிபத்தினி அகலிகையைக் கெடுத்தானாமே, அவள் புருஷன் அவளைக் கல்லாகும்படிச் சபித்துவிட்டானாம், ஆனால் இந்திரனுடைய தவறான நடத்தைக்காக, இந்திராணியால் ஏதாவது கண்டிக்க முடிந்ததோ - சாபம் கொடுக்கக் கூடத் தேவையில்லை கண்டித்தாள். பேசமாட்டேன் - என்றாள். என்றாவது கதை இருக்கிறதா?"[47] என்று படித்த இளம்பெண் ராதா கேட்கும் விதமாக அமைந்திருக்கும் பகுதி பெண்ணுரிமை குறித்த ஆழமான கேள்வியாகிறது.

இன்றைய சமுதாயத்தில் திருமணத்தின் போதும் பெண்ணிடம் சம்மதம் கேட்கப்படுவதில்லை. காதல் மணத்தைப் போற்றிய சமுதாயம் இன்று இவ்வாறு உருமாறியிருப்பது பெருங்குறையே. இதற்குச் சான்றாக, "சாதாரணமாக அவனுக்குத் தெரியும் பெண் கேட்கிறார்கள். பெண் என்ன சொல்லுகிறாள் என்று கேட்கப் போவதில்லை என்று பெண் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? வழக்கம் அப்படித்தான்?"[48] எனவரும் பகுதியைச் சுட்டலாம். தோப்பில் முகமது மீரானின் 'ஒரு கடலோர கிராமத்தின் கதையில்' முதலாளியின் தங்கை நூஹுபாத்திமாவும் முதலாளி மகள் ஆயிஷாவும் பெண்கள் நிலை குறித்து உரையாடுகின்றனர்.

"எனக்கெல்லாம் புரியுது. நாம் வீட்டு மிருகம். ஊமைப்பிராணி, நமக்கென்ன சுதந்திரமிருக்கு? ஒரு குஷ்டரோகியின் கையிலிருக்கும் தாலிக்குக் கழுத்தை நீட்டிக் கொடுக்கச் சொன்னா நீட்டிக் கொடுக்கவும். அவர் படுக்கை அறையில் அவரோடு படுத்துத்தான் ஜென்மங்களைப் பாழ்படுத்த விதிக்கப்பட்ட அனுசரணையுள்ள மிருகம்"[49] என்னும் பகுதி மூலம், பெண்களுக்குத் திருமணம் செய்கிற காலத்தில் கூட இச்சமுதாயம் அவர்களுடைய கருத்தைக் கேட்க மறுத்துள்ள நிலை நன்கு புலனாகிறது. தந்தை, கணவன், பிள்ளை என மூவரையும் சார்ந்து வாழும் முப்பரிமாண நிலையில்தான் பெண்கள் இருக்க வேண்டும் என்ற அடிமை நிலை மாறி எல்லா நிலையிலும் பெண்ணின் கருத்து மதிக்கப்பட் வேண்டும். தனக்கு விருப்பமானவரைக் கணவராகத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெண்ணுக்குத் தரப்பட வேண்டும். எனவேதான், ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமென்று கூறிய பாரதி, தம் கட்டுரையில்,

"ஸ்தீரிகள் தமக்கிஷ்டமான பேரை விவாகம் செய்து கொள்ளலாம் விவாகம் செய்து கொண்ட புருஷனுக்கு ஸ்தீரி அடிமையில்லை. உயிர்த்துணை. வாழ்க்கைக்கு ஊன்றுகோல்: ஜீவனிலே ஒரு பகுதி"[50]

என்று குறிப்பிட்டுள்ளார். ஆணும் பெண்ணும் உயிராலும் மனத்தாலும் இனைந்து வாழ்வதே வாழக்கை என்பதே பாரதி வலியுறுத்தும் செய்தியாகிறது.

பெண்ணுக்கு விடுதலை கிடைத்தால் தான் உலகம் உயர்வடையும் என்ற கருத்தும் ஓங்கி ஒலிக்கிறது. டி.கே. சீனிவாசனின் 'ஆடும் மாடும்' என்னும் புதினம் பெண் விடுதலை குறித்துப் பேசுகிறது. நூலின் முன்னுரையில் ஆசிரியர்,

"கடுமையே உருவான ஆண்கள் கையில் சிக்கியிருக்கும் ஆதிக்கத்தை என்று மென்மையே உருவான பெண்குலம் தட்டிப்பறித்துக் கொள்ளுகிறதோ அன்று தான் உலகம் மெருகேறும் உயர்ந்ததாக உருவாகும்"[51]

என்று குறிப்பிட்டிருப்பதைப் பெண் விடுதலைச் சிந்தனைக்குச் சான்றாகக் குறிப்பிடமுடிகிறது. தொ.மு.சி. ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' என்னும் புதினத்தில் இடம்பெறும் சங்கரின் தங்கை கமலா, கல்லூரியில் நடந்த விவாதமொன்றில் பங்கேற்கிறாள். அது குறித்துத் தன் அண்ணனிடம், "பொருள் உற்பத்தியில் பெண்களும் நேரடியாகப் பங்கேற்காத வரை, தனிச் சொத்துரிமை என்ற இன்றைய சமுதாய அமைப்பு மாறாத வரை, பெண்களுக்கு உண்மையான விடுதலை கிட்டப் போவதில்லை என்ற கருத்தைத் தெளிவாக எடுத்துக் கூறிவிட்டேன் அண்ணா"[52] என்று கூறுவதன் மூலம் பெண் விடுதலை பொருளாதாரச் சமத்துவத்தால் மட்டுமே சாத்தியம் என்பதும் தெளிவாகிறது. சொத்தில் உரிமை பெற்றுப் பொருளாதாரச் சமத்துவம் பெறுவது பெண்ணுக்குச் சாத்தியமானதே என்பதைத் தோப்பில் முகமது மீரானின் சாய்வு நாற்காலி என்னும் புதினத்தில் காணமுடிகிறது. இப்புதினத்தில் இடம் பெறும் பெண்கள், கல்வியறிவு பெறாத நிலையில் உள்ளனர். சொத்தில் உரிமையும் இல்லாத நிலையில் ஆண்களைச் சார்ந்து வாழ வேண்டியிருந்தது. கதைத் தலைவன் முஸ்தபாக் கண்ணுவின் மனைவி மரியம் பீவி, அவருடைய சகோதரி ஆசியர், பாட்டி மம்மாத்தும்மா ஆகியோர் சார்ந்து வாழும் நிலையில் புதினத்தில் படைக்கப்பட்டுள்ளனர். முஸ்தபாக் கண்ணுவின் சகோதரி ஆசியா, "நான் பெண்ணா பெறந்தவொதானெங்கி இந்தம தரவாட்ட ஒடப்பேன். என் பங்கை கணக்கு தீத்து வாண்டுவேன்"[53] என்று சபதம் செய்து, இறுதியில் நீதிமன்றம் சென்று தன்பங்கைப் பெறுகிறாள். இதன் மூலம் பழைய காலத்தில் பெண்கள் அடிமை நிலையிலும் கால ஓட்டத்தில் உரிமை நிலையாலும் இப்புதினத்தில் படைக்கப்பட்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

பெண்ணுக்குத் தன்னைப் புரிந்து கொள்வதற்கும், எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்வதற்கும் சுதந்திரம் வேண்டும் என்பதை வலியுறுத்தும் பெண்ணியச் சிந்தனை சில

புதின ஆசிரியா்களிடம் காணப்படுகிறது. ‘சித்திரப்பாவை’ என்ற புதினத்தில் ஆனந்தி தன் கணவன் மாணிக்கத்திடமிருந்து விடுதலை பெற்று, காதலன் அண்ணாமலையுடன் சேருகிறாள். ஆனந்தியே அந்த முடிவை எடுப்பதாகக் காட்டுவது காலமாற்றத்திற்கேற்ப சமூகத் தடைகளை உடைத்துக் கொண்டு பெண் வெளியே வருவதையும், தானே முடிவெடுப்பதையும் எடுத்துக்காட்டும், அகிலனின் பெண்ணியச் சிந்தனைகளாகின்றன.”[54]

**வன்முறைக்கு எதிரான பெண்ணியச் செயல்கள்**

காலம் காலமாகப் பெண்கள் தங்கள் அடிப்படை உரிமைகளையும் உணர்வுகளையும் இழந்து வருகின்றனர். பெண்களுக்கெனக் கட்டமைக்கப்பட்ட சமூகக் கட்டுப்பாடு காரணமாகவும், அன்பு, இரக்கம், அமைதி, பொறுமை என்பனப் பெண்ணின் குணங்களாக வகுக்கப்பட்ட நியதிகளின் காரணமாகவும் இயல்பாகவே பெண் தன்னை விலங்கினுக்கும் கீழானவளாகக் கருதிக் கொண்டாள். இதன் விளைவால் பெண் என்பவள் அச்சவுணர்வு குறைந்தவள், எதிர்க்கும் திறம் அற்றவள் என்பது நிலைநிறுத்தப்பட்டது. மார்க்சியப் பெண்ணியம் பெண்களுக்கான அதிகாரத்தை வீரியமாக்கித் தருகிறது. எந்தச் சூழலிலும் தன்னைப் பாலின அடிப்படையில் கீழானவளாக, குறைந்தவளாக மதிப்பிடுவதனைத் தடுக்கிறது.

காலம் காலமாக ஆண்டைகளின் அத்துமீறல்களுக்கு அடிபணிந்து வந்த பெண் வர்க்கம் தன்னைத் திருப்பிக்கொண்டுள்ளது. சொல்லால் தடுத்தல், எதிர்வினையாற்றுதல், திருப்பித் தாக்குதல், போராடுதல், உயிர் போகும் நிலை வந்தால் அவன் உயிரையும் எடுத்தல் என்ற நிலைகளில் பெண்களின் எதிர்வினைகள் இடம்பெற்றுள்ளதனைப் புதினங்கள் காட்டுகின்றன.

ஆண்டைகளில் பெண்ஆதிக்க நிலைக்கு எதிரான குரல், ‘பிறகு’ புதினத்தில்,

> “அஞ்சாறு குறுக்கம் நெலம் வச்சிருக்கம்னு இந்த மொதலாளிமாரும் அனியாயம் பண்ணக் கூடாது. நெலத்து வெள்ளாமையில பங்கு சேந்து தண்ணி வெலகுனா ஊரான் பெண்டாட்டியிலயும் பங்கு கேக்கணுமாக்கும்.
>
> பணத்துமுரு வந்துருச்சுனா அப்பிடித்தான் செய்யச் சொல்லும். நம்ம மாதிரி காடுகரையில அலையிறானா. ஏன் திரியமாட்டான்? ராங்கித்தனமாக இவங்கள அடக்க வேற வழியில்ல செம்மையாக் குடுக்கிறதுதான்”[55]

என்பதில் பதிவு செய்யப்படுகிறது. ஆண்டைகளின் கொட்டத்தை அடக்குவதற்கு அவர்களிடம் தம்மால் முடிந்த அளவுக்கு எதிர்நின்று போராடுவதே சிறந்த வழியாகும் என்பது இதன்வழியாகக் காட்டப்படுகிறது.

காலம் காலமாகப் பண்ணைகளுக்கும் முதலாளிகளுக்கும் அடங்கி நடந்த பெண்கள், தற்போது விழிப்புணர்வு பெற்று, வீறுகொண்டு எதிர்க்கத் துணிந்து விட்டனர் என்பதனை ஒரு பெண்ணின் செயல்பாட்டின் மூலம் விளக்குகிறார் பூமணி.

சக்கிலியப் பெண்ணைக் களவாட வந்த அப்பய்ய நாயக்கரை நோக்கி அழகிரி.

> "சத்தம் போட்டீரு. கொன்னு குழியத் தோண்டி வச்சிருவேன். யோவ் நீரு பணக்காரருனா அத ஒம்ம வீட்டுக்குள்ளதான் வச்சிக்கிறணும். இங்க வந்து மப்பக் காட்டுனா எலும்ப எண்ணிப்புருவேன். செருப்புத் தைக்கிய பெயகன்னா எல்லாத்துக்கும் குனிஞ்சு குடுக்கணுமாக்கும். ஒன்னயெல்லாம் பல்லக் கழட்டி வுடணும்யா. நீயெல்லாம் ஒரு பெரிய மனுசன் போல. ஒம்பொண்டாட்டி புள்ளையிட்ட சக்கிலியப் பெய வந்து நோண்டிட்டா மயிராண்டிக்கு ரோசம் பொத்துக்கிட்டு வரும்"[56]

என்பதன் வழியாகக் காட்டுகிறார் பூமணி.

'கூகை' புதினத்தில் இடம்பெறும் பேச்சியை அடைவதற்குப் பலரும் முயற்சி செய்கின்றனர். ஏனென்றால் அவள் கணவனை இழந்தவள். அந்த தைரியம் மட்டுமே எல்லா ஆண்களையும் அவள்மீது பாலியல் சீண்டல் செய்வதற்கான துணிவை ஏற்படுத்திக் கொடுக்கிறது. என்றாலும், எந்த இடத்திலும் அவள் தன் தன்னம்பிக்கையை இழக்காமல் ஒவ்வொருவரையும் அருவாள் கொண்டு விரட்டும் நிகழ்வு காட்டப்படுகிறது. தன்னிடம் பாலியல் சீண்டல் செய்த குதிரை வண்டிக்காரனிடம்,

> "பேச்சி இடுப்பில் சொருகியிருந்த பன்னரிவாளைக் கையில் எடுத்தாள்; ஓங்கிக் காட்டினாள்.
>
> புல்லறுக்க மட்டும்தான் பன்னருவானு நெனைக்காத, கண்ணத் தோண்டிப்புடுவன் தோண்டி...
>
> குதிரை வண்டிக்காரன் விலகி வழிவிட்டான். கதவைத் திறந்துகொண்டு முற்றத்திற்கு வந்தாள்.
>
> குதிரை வண்டிக்காரன் வெடவெடத்துப் போய் நின்றான். உலர்ந்துபோன கீழுதட்டை நாவல் துழாவித் துழாவி ஈரமாக்கியபடி தலைகவிழ்ந்து நின்றுகொண்டிருந்தான்.
>
> பேச்சி காறித் துப்பிவிட்டு நடந்தாள்."[57]

என்று சொல்லி, தன் வீரத்தைக் காட்டுகிறாள். இதேபுதினத்தில் பேச்சியின் பக்கத்துவீட்டு நாயக்கர் அவளைப் பாலியல் ரீதியிலாக அடைய நினைப்பதனையும் அவருக்கு அவள் சரியான தண்டனை தருவதனையும்,

"கையில் வீச்சரிவாள்; நாயக்கரின் தலைமுடியை எட்டிப் பிடித்தாள்; அரிவாளைக் கழுத்தில் வைத்தாள். நாயக்கர் வெலவெலத்துப் போனார். மரியாதையாப் போகப் போறியா இல்ல சாகப்போறியா?

தாயி என்னய ஒண்ணும் செஞ்சிராத, இனிமே இந்தத் தெசப் பக்கமே தல வச்சுப் படுக்கமாட்டேன்"[58]

என்று காட்சிப்படுத்துகிறார் சோ. தர்மன். இச்செயல்கள் யாவும் பெண்ணிடம் வீர உணர்வின் தேவையைக் காட்டுகின்றன.

'தோல்' புதினத்தில் இடம்பெறும் சக்கிலியப் பெண்ணான மாடத்தியை அடைய நினைக்கும் முஸ்தபாவின் கொடுமைகளைத் தீர்ப்பதற்கு மாடத்தியே துணிந்து செயல்படுகிறாள். அவனது செயல்களைத் தடுத்து, அவனுக்குச் சரியான பாடம் கற்பித்து, பெண்தொழிலாளர்களுக்கே பெருமை சேர்க்கும் பெண்ணின் செயல்பாட்டினையும், மாடத்தி, முஸ்தபாவின் செயலுக்கு எதிர்ப்பினைத் தெரிவித்ததோடு நில்லாது, அவனை அடித்து ஒடுக்குவதையும்,

"அவன் ஸ்பரிசம் பட்டதுதான் தாமதம். 'வேச மவனே! என்று குரல் எழுப்பியமட்டில் அவனது டர்க்கிக் குஞ்சம் போட்ட குல்லாவைத் தட்டி விட்டாள். அவனது மொட்டைத் தலையை இரு கரங்களாலும் பிடித்துக் கழுத்தை வளைத்துத் தனது திடமிக்க தொடைகளுக்கு மத்தியில் வைத்து அழுத்தினாள். அவன் திணறினான்.

…………

அவனது முகத்திலும் தலையிலும் மாறிமாறி கோழி மிதிப்பது போல் மிதித்தாள்."[59]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ். தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களை தங்கள் விளையாட்டுப் பொம்மைகளாக, பாலுறவுப் பதுமைகளாக நினைத்து, அடக்கியாளும் ஆண்களின் செயல்பாட்டின் எதிர்ப்புக்குரலினை மாடத்தியின் மூலமாகத் 'தோல்' புதினத்தில்,

"ஏண்டா, பொட்டச்சிண்டா அம்புட்டு எளக்காரமோ? பறச்சி, சக்கிலிச்சிண்டா நீங்க கையப் புடிச்சா படுத்துக்கணமோ?

பல பட்டறப் பையா…"[60]

என்று சுட்டிச்செல்கிறார் டி. செல்வராஜ்.

**சோசலிசப் பெண்ணியம்**

சோசலிசப் பெண்ணியம், மார்க்சிய நோக்குடன் தீவிரப் பெண்ணியத்தையும் சேர்த்து நோக்குகின்றது. இது வர்க்கப் பாகுபாட்டுடன் பாலினப் பாகுபாட்டையும் அழிக்கவேண்டுமெனக் கருதுகின்றது. இது முதலாளித்துவத்தையும், ஆண் நாயகத்தையும் ஒழித்து, சமூகத்தின்

எல்லாவிதமான சுரண்டுதல்களையும் நீக்கி ஆண், பெண் என்ற பாகுபாட்டை நீக்கிச் சமூகத்தை நிறுவப் பாடுபடுகின்றது.

இதர பெண்ணியவாதிகளுக்கு மாறாக, முதலாளித்துவத்தை அகற்றிய சமத்துவ சமூகத்திற்கான போராட்டத்தை முன்னெடுக்கும் தலைவர்களாகவும், போராளிகளாகவும் கம்யூனிசப் பெண்கள் தங்களைப் பாவித்துக்கொள்ள வேண்டும் என்கிறார் கிளாரா ஜெட்கின். அதே சமயம் அனைத்து மட்டங்களிலும் உள்ள கம்யூனிஸ்ட் தோழர்களும் தலைவர்களும் ஆணாதிக்கத்திற்கு எதிரான சித்தாந்தத்தை இறுக்கமாக பிடித்துக்கொண்டு, இதன் மூலம் உழைக்கும் வர்க்கத்தின் மத்தியிலான பரந்துபட்ட ஒற்றுமையை பிணைக்க முயற்சிக்க வேண்டும். எனவே, அனைத்து பிரிவு பெண்களிடமும் சென்றடைந்து, அனைத்து தடைகளையும் உடைத்தெறிய வேண்டும் என்பதே மார்க்சியத்தின் பெண்ணியக் கொள்கையாக விளங்குவது தெளிவாகிறது.

**தலைமையேற்கும் பெண்கள்**

குடும்பத்தின் தலைவனாகிய ஆண் இல்லாதபோது, குடும்பத்தைத் தலைமையேற்று நடத்தவேண்டிய பொறுப்பு முழுவதும் பெண்களையே வந்து சேர்கிறது. இவ்வாறான நிலையில் ஒரு பெண் எதிர்கொள்ளும் சிக்கல்கள் ஏராளம். பிள்ளைகளின் கல்வி, வேலைவாய்ப்பு, திருமணம் என எல்லாப் பொறுப்புக்களையும் சுமந்து நடத்தப்பட வேண்டிய நிலைக்குத் தள்ளப்படு-கிறாள்.

‘கல்மரம்’ மற்றும் ‘கோவேறு கழுதைகள்’ ஆகிய புதினங்கள் பெண்ணின் தலைமைத் தன்மையைக் காட்டுகின்றன.

‘கல்மரத்’தில் இடம்பெறும் ஆதிலட்சுமி, தன் கணவன் இறப்புக்குப் பின்னர் குடும்பத்தின் முழுப்பொறுப்பினையும் ஏற்கவேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறாள். குடும்பத்தில் நிலையாகிவிட்ட வறுமையை விரட்டுவதே அவளுக்குப் பெருஞ்சுமையாக அமைந்துவிடுவதனை,

> “போன தையில் திருமணம் முடித்து வாழப்போன தன் மூத்த மகள் கன்னியம்மாளை நினைத்துக் கொண்டாள் ஆதிலட்சுமி. மகளின் நினைவிலோ, மகளின் திருமணத்துக்காகப் பட்டிருந்த கடனின் நினைவிலோ அவள் கண்கள் கலங்கின”[61]

என்பதன் வழியாகக் காட்டுகிறார் திலகவதி. இதேபோன்று ‘கோவேறு கழுதைகள்’ புதினத்தில் இடம்பெறும் ஆரோக்கியம், நோயாளியாகிவிட்ட தன் கணவனால் குடும்பத்திற்காக ஏதும் செய்ய இயலாத நிலைக்குத் தள்ளப்படும்போது குடும்பத்தின் மொத்தச் சுமையினையும் ஏற்கும் நிலைக்கு ஆளாவதனை,

> “இந்த ஆண்டுத் தொடக்கத்தில் அரசாங்கம் கட்டிக்கொடுத்த இலவசமான கெட்டிமனையும் இவ்விரண்டு குடும்பங்களுக்கும் இல்லை என்றாகிவிட்டது. சொந்தமாகக் காணி இருக்க வேண்டுமாம். புறம்போக்கில் குடியிருப்பவர்களுக்கு இல்லை என்று கூறிவிட்டார்கள். ஆரோக்கியம் யார் காலில் விழுந்தும் பலனில்லை. காணி வேண்டும்; பட்டா வேண்டும்; பூர்வீகம் வேண்டும் என்றார்கள்”[62]

என்பதன் வழியாகக் காட்டுகிறார்.

‘கூகை’ புதினத்தில் இடம்பெறும் பேச்சி, கணவன் இறந்த போதிலும் வாழ்க்கைச் சிக்கல்களைத் துணிச்சலுடன் எதிர்கொள்கிறாள். புல் அறுத்து வந்து குதிரைக்கொட்டகையில் விற்பது, அதன்வழி கிடைக்கும் வருமானத்தில் மானத்துடன் வாழ்வது என, சோர்ந்துகிடக்கும் பெண்களுக்குத் தன்னெழுச்சி தரும் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

### தொகுப்புரை

பிறப்பின் அடிப்படையில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற கருத்தாக்கம் வலுப்பெற்றுள்ளதைப் போன்று, பிறப்பின் பாலால் ஆண் - பெண் பேதம் பார்க்கப்படுகிறது. உலகம் முழுவதும் பெண்களுக்கு எதிரான நிலை இருந்தமையால், பெண்கள் தங்களுக்கான சுயமரியாதையை, சுய விடுதலையை, உரிமைகளை வென்றெடுப்பதற்காகத் தமக்குள்ளாகவே அமைத்துக்கொண்ட இயக்கமே பெண்ணியம் ஆகும். அது பெண்ணுக்குரிய சுய விடுதலையை முன்வைக்கிறது. ஆணைவிடப் பெண் தாழ்ந்தவள் என்ற கருத்தாக்கத்தை மறுதலிக்கிறது. பிறப்பின் அடிப்படையில் பெண் எல்லா நிலைகளிலும் ஆணையே சார்ந்து வாழ வேண்டும் என்ற கருத்தினை எதிர்க்கிறது. இவ்வாறு சமூக அடக்குமுறைக்கு எதிராகத் திரண்ட இயக்கமே பெண்ணியம் ஆகும். இது மார்க்சியக் கொள்கைகளைத் தன்னுள் ஏற்றுக் கொண்டுள்ளது.

பொதுவுடைமை இயக்கம் உலக மக்கள் அனைவரையும் பொதுநிலையில் நோக்குகிறது. எந்தவொரு நிலையிலும் மனிதர்களிடையே பாகுபாடு பார்ப்பதனை வெறுத்தொதுக்குகிறது. நடைமுறையில் சமுதாயப் பாகுபாடுகள், வர்க்கப்பாகுபாடுகள், பாலினப் பாகுபாடுகள் என மக்களைப் பிரித்தாளும் செயல்பாடுகள் நாள்தோறும் நடந்து வந்துகொண்டுள்ளது. இவ்வாறான பிரிவினை அறவே ஒதுக்கி வைத்து, பொதுமைப்படுத்தப்பட்ட சமுதாயம் காண விழைகிறது.

மார்க்சியச் சிந்தனைப் பரவலின் ஒரு கூறாகப் பெண்ணிய இயக்கங்கள் உருப்பெற்றன. அவ்வகையில் வர்க்கப் போராட்டத்தின் ஒரு கூறாகப் பெண்ணியப் புரட்சி திகழ்கிறது. ‘பாலின சமத்துவம் இல்லையேல் பொதுவுடைமை பேசிப் பயன் எதுவும் இல்லை’ என்பதே பொதுவுடைமையின் குறிக்கோள் நெறியாக விளங்குகிறது. ஆகையால் பொதுவுடைமைச் சிந்தனை குறித்த பதிவுகளில் பெண் விடுதலை குறித்த பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

ஆதிகாலச் சமுதாயத்தில் எல்லா உரிமைகளையும் பெற்றவளாகவும், தலைமைத்துவம் மிக்கவளாகவும் விளங்கிய பெண், காலப் போக்கில் இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டாள். ஆண்கள் செய்த உற்பத்திப் பொருள்கள் யாவும் நிலையான சொத்துக்கள் என்னும் வடிவம் பெற்றன. பெண் செய்து வந்தவை மறு உற்பத்தி அவளது கடமை என முத்திரை குத்தப் பெற்றுப் பெண்ணினது உழைப்பு பொருளற்றுப் போனது. சொத்துக்கள் தனிமைப்பட்டவையாக மாறிப் போனதன் விளைவாகப் பெண் பொருளாதாரச் சார்பின்றி ஆணைச் சார்ந்தே வாழவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டாள். நுகர்பொருளாகவும், பிள்ளை பெற்றுத்தரும் இயந்திரமாகவும் அவளது நிலை மாறியது. தியாகத்தின் இருப்பிடம், பொறுமையின் பிறப்பிடம் எனப் பலவாறான அடைமொழிகள் பெண்களை மேன்மேலும் கீழ்நிலைக்குத் தள்ளின.

பொதுவுடைமை இயக்க வளர்ச்சியில் பெண்களின் பங்களிப்பு அளப்பரியதாக இருந்துள்ளது. பெண்கள் ஒன்றிணைந்து போராடுவதன் மூலமாகவும், கருத்தியல் ரீதியாகத் தங்கள் உரிமைகளை நிலைநாட்டுவதன் வழியாகவும் குடும்ப வன்முறைக்கும், தொழிலக அடக்குமுறைக்கும் விடிவு எட்டப்படும் என்பதனைப் புதினங்களில் இடம்பெறும் நிகழ்வுகள் காட்டுகின்றன.

பெரும்பான்மையான சிறு வணிக வளாகங்களிலும், சிறுதொழில் நிறுவனங்களிலும். கட்டடப்பணியிடங்களிலும், ஆயத்த ஆடை ஏற்றுமதி நிறுவனங்களிலும் மிகப்பெருமளவிலான பெண்கள் பணியாற்றுகின்றனர். இவற்றில் அவர்களின் உழைப்பு காலநேரமின்றி உறிஞ்சப்படுகிறது. இவ்வாறு அவர்கள் பணியாற்றும் இடங்களில் உரிய பணிப்பாதுகாப்பும், மருத்துவ வசதி வாய்ப்புகளும், இல்லை என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது.

பெண்களிடம் நிறைந்திருக்கும் உழைப்பு, பல வகைகளிலும் பொருளற்ற பொருளாகப் பார்க்கப்படும் நிலை உள்ளதனைப் புதினங்கள் காட்டுகின்றன. கட்டட வேலைத் தளங்களிலும், தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலும் பெண்கள் எவ்விதப் பாதுகாப்பு உபகரணங்களும் பயன்படுத்திக் கொண்டு பணியாற்றுவதற்கான வாய்ப்புக்கள் இல்லாமையால் அவர்கள் விபத்தில் சிக்குவது காட்டப்பட்டுள்ளது.

சிறுபெண்கள் தங்கள் வறுமையைப் போக்கிக் கொள்வதற்காகவே வீட்டிலிருந்து வெளியுலகத்திற்கு வந்து வேலைகளைச் செய்கின்றனர். இவ்வாறான சிறுபெண்களுக்குப் பணியிடத்தில் பாலியல் தொந்தரவுகள் இயல்பாக இருப்பது காட்டப்பட்டுள்ளது. இவ்வாறான செயல்பாடுகளை எதிர்க்க இயலாத நிலையில் பெண்கள் இருப்பதும் காட்டப்பட்டுள்ளது.

வறுமை வயப்பட்ட, பொருளாதாரத்தில் பின்தங்கிய மக்களுக்கு அடிப்படைக் கல்வியும், உயர்நிலைக் கல்வியும் இலவசமாக மத்திய, மாநில அரசுகள் வழங்கினாலும், அதனைச் சரிவரப் பயன்படுத்திக் கொள்ள இயலாத நிலையில் அவர்களது வாழ்வியல் சிக்கல் நிறைந்ததாக இருப்பதனையே புதினங்கள் காட்டுகின்றன.

ஆதிக்கச் சாதியினர் தம்மிடம் பணியாற்றும் பெண்களிடம் சாதி ஆணவத்தோடு நடந்துகொள்வது காட்டப்பட்டுள்ளது. தீண்டாமையும் பெருமளவில் இருப்பது காட்டப்பட்டுள்ளது.

சாதி ஒழிப்பிலும், சமத்துவ ஒன்றிணைப்பிலும், பாலியல் வன்முறைக்கான எதிர்ப்பிலும் பெண்கள் தங்கள் வலிமையைக் காட்டுவது, பெண்களுக்குத் துணிவையும் மனத்திடத்தையும் அளிக்கும் நிகழ்வுகளாகப் புதினங்களில் காட்டப்பட்டுள்ளன. பல இடங்களில் பெண்கள் பாதிப்புக்கு உள்ளானாலும், அதற்கான பதிலீடுகளைப் பெண்களே நிறைவேற்றிக் காட்டுவது அவர்களின் புரட்சிச் செயலாக அமைந்திருக்கிறது.

பெண்கள் குடும்ப வாழ்வின் தலைமையேற்று நடத்துவதில் திறமை மிக்கவர்களாக விளங்கும் திறம் கோவேறு கழுதைகள், கல்மரம் ஆகிய புதினங்கள் வழியாக உணர்த்தப்பட்டுள்ளது.

உலக நாடுகளில் பெண்கள் எந்தநிலையில் இருந்தாலும் அவர்கள் ஆண்களால் ஏதாவது ஒரு நிலையில் பின்னுக்குத் தள்ளிவைக்கப்படுகின்றனர்; அவர்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்படுகின்றன அல்லது சமூகத்தின் முன்னர் மழுங்கடிக்கப்படுகின்றன. அவ்வகையில் பெண்ணிய விடுதலை உணர்வு இன்றைக்கும் தேவையான ஒன்றாக இருந்து வருகிறது என்பது ஆய்வின் வழியாகத் தெளிவாகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. அபிநவ் சூரியா, பெண்ணியமும் வர்க்க உணர்வும், ப.48.
2. கோவை ஞானி, மார்க்சியமும் மனித விடுதலையும், ப.96.
3. மேலது, ப.99.
4. அரங்க மல்லிகா, தலித் அறம், ப.44.
5. திலகவதி, கல் மரம், ப. 61.
6. பூமணி, பிறகு, ப.101.
7. இமையம், கோவேறு கழுதைகள், ப.33.
8. திலகவதி, கல் மரம், ப. 90.
9. மேலது, பக்.112-113.
10. டி.செல்வராஜ், தோல், ப.3.
11. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.55.
12. பூமணி, பிறகு, ப.64.
13. குறள்.398.
14. பூமணி, பிறகு, ப.57.
15. சோ.தர்மன், கூகை, ப.30.
16. இமையம், கோவேறு கழுதைகள், பக்.159-160.
17. மேலது, ப.30.
18. V.P.Mary Josphin, Empowerment of Women, Women subjugation - An Assessment, p.146.
19. பூமணி, பிறகு, ப.230.
20. டி.செல்வராஜ், மலரும் சருகும் ப.189.
21. இமையம், கோவேறு கழுதைகள், ப.7.
22. அபிநவ் சூரியா, பெண்ணியமும் வர்க்க உணர்வும், ப.36.
23. இமையம், கோவேறு கழுதைகள், ப.38.
24. சோ.தர்மன், கூகை, ப.28.
25. டி.செல்வராஜ், மலரும் சருகும் ப.111.
26. இமையம், கோவேறு கழுதைகள், ப.38.
27. சோலை சுந்தர பெருமாள், செந்நெல், ப.60.
28. மேலது, ப.87.
29. அரங்க மல்லிகா, தலித் பெண் எழுத்தும், தலித் குரல் அதிர்வும், ப.19.
30. டி.செல்வராஜ், மலரும் சருகும் ப.189.
31. பூமணி, பிறகு, ப.149.
32. மேலது, ப.149.

33. திலகவதி, கல்மரம், ப.4.
34. டி.செல்வராஜ், மலரும் சருகும் ப.111.
35. திலகவதி, கல்மரம், ப.45.
36. மேலது, ப. 16.
37. மேலது, ப.89.
38. மேலது, ப.89.
39. அபிநவ் சூரியா, பெண்ணியமும் வர்க்க உணர்வும், ப.48.
40. கே.முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்துவப் போராட்டங்கள், ப.89.
41. ……. சாதியும் வர்க்கமும், முன்னுரை, ப.13.
42. சூ.இன்னாசி, சமயமும் சமுதாயமும், ப.86.
43. பி.ஆர். அம்பேத்கார், சாதியை ஒழிக்க வழி, ப.78.
44. பக்தவசல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.325.
45. ந. பிச்சமுத்து, மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.184.
46. பி. யோகீசுவரன், தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், ப.156.
47. மறைத்திரு சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள், கோகிலாம்பாள் கடிதங்கள், ப.16.
48. தோப்பில் முகமது மீரான், ஒரு கடலோர கிராமத்தின் கதை, ப.58.
49. மேலது, ப.56.
50. பாரதியார், பாரதியார் கட்டுரைகள், ப.63.
51. டி.கே. சீனிவாசன், ஆடும் மாடும், ப.42.
52. தொ.மு.சி.ரகுநாதன், பஞ்சும் பசியும், ப.44.
53. தோப்பில் முகமது மீரான், சாய்வு நாற்காலி, ப.48.
54. அகிலன், சித்திர பாவை, ப.22.
55. பூமணி, பிறகு, ப.98.
56. மேலது, பக்.75-76.
57. சோ.தர்மன், கூகை, ப.152.
58. மேலது. ப.154.
59. டி.செல்வராஜ், தோல், ப.14.
60. மேலது, ப.15.
61. திலகவதி, கல்மரம், ப.5.
62. இமையம், கோவேறு கழுதைகள், ப.83.

## இயல் - 5

## புதினங்களில் வர்க்கப் போராட்டமும் தொழிலாளர் எழுச்சியும்

### முன்னுரை

சுரண்டும், சுரண்டப்படும் வர்க்க பேதத்தை ஒழித்து, உற்பத்திப் பொருள்களைத் தனி மனிதர்களுக்குச் சொந்தமாக்குவது, சமுதாயத்தின் பொதுச்சொத்தாக்குவது, அனைத்து மனிதர்களையும் அவர்களுடைய தகுதிக்கேற்ப வேலை செய்யச் செய்வது, அனைவரும் ஒன்று என்ற நோக்கில் செயல்படுவது உள்ளிட்டவை பொதுவுடைமைச் சிந்தனையால் எழுந்த எழுச்சியாகும். உழைக்கும் மக்களிடையே பொதுவுடைமைக் கருத்துக்களைக் கதைப்போக்கில் தெளிவுறுத்தியவை பொதுவுடைச் சிந்தனைப் பின்புலத்தில் எழுதப்பட்ட புதினங்கள் ஆகும். அவ்வகையில் தமிழ்ப் புதினங்களில் இடம்பெறும் வர்க்கப் போராட்டங்கள் குறித்தும் தொழிலாளர் எழுச்சியும் அதன் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

### வர்க்கம் என்பதன் விளக்கம்

உழைக்கும் மக்கள் திரளை ‘உழைக்கும் வர்க்கம்’ என்ற சொல்லால் குறிக்கின்றனர். அவ்வகையில் வர்க்கம் என்பதன் பொருளறிதல் அவசியமான தாகிறது. ‘வர்க்கம்’ என்பதன் வடிவம் தமிழில் ‘வருக்கம்’ என்று குறிக்கப்படுகிறது. “வருக்கம் என்ற சொல்லுக்கு இனம், ஒழுங்கு, குலம் ஆகிய பொருள்கள் உள்ளதாகத் தமிழ் அகராதி”[1] குறிப்பிடுகிறது. தமிழ் மொழி அகராதி “அத்தியாயம், இனம், ஒழுங்கு, குலம், கூட்டம், சதுரம், சமமாகிய வீரெண்ணின் பெருக்கம், வகுப்பு”[2] என்று பொருள் சுட்டுகிறது.

> “வருக்கம் என்பது பொருளுற்பத்தி முறையில் ஒரு பொதுவான நிலையையும், தத்தம் நலனை அடைவதற்கான ஒரு பொதுவான நோக்கத்தையும் உடைய மக்கள் சேர்ந்த கூட்டம்”[3]

என்று வாழ்வியல் களஞ்சியம் வரையறை செய்கின்றது.

இக்கருத்தாக்கங்களின் அடிப்படையில், வர்க்கம் என்பதற்கு உரியதாகக் குழு, கூட்டம், இனம், குலம், வகுப்பு என்று பொருள் கொண்டாலும் ‘பொதுவான தன்மைகளைத் தமக்குள் கொண்ட ஓர் இனம்’ என்பது தெளிவாகிறது.

### வர்க்கப் போராட்டம்

பொதுவான தன்மைகளைக் கொண்ட ஓர் இனம், மற்றொரு முரண்பட்ட பொதுவான தன்மை கொண்ட இனத்துடன், பொருள் உற்பத்தி முறையில் சம நிலையை அடைவதற்குக் காலம் காலமாகத் தொடர்ந்து நிகழ்த்தும் போராட்டமே ‘வர்க்கப் போராட்டம்’ ஆகும்.

"இந்த வர்க்கப் போராட்டத்தின் மூலமே வரலாறு உருவாகிறது என்றும், சமூகம் என்பதும் ஒன்றுக்கொன்று முரண்பாடான சக்திகளை நிலையாக அமைப்பதற்கான ஒரு தொகுப்பே"[4]

என்று மார்க்ஸும், ஏங்கெல்ஸும் குறிப்பிட்டுச் செல்கின்றனர்.

ஒவ்வொரு சமூகத்திலுமுள்ள முரண்பாடான சக்திகளைச் சுரண்டும் வர்க்கம், சுரண்டப்படும் வர்க்கம் என்று இனம் பிரிக்கிறது மார்க்சியம். அடிப்படையில் சுரண்டும் வர்க்கமாக முதலாளி வர்க்கத்தையும், சுரண்டப்படும் வர்க்கமாகத் தொழிலாளி வர்க்கத்தையும் குறிப்பிடுகிறது. வர்க்க வேறுபாடுகள் சமூகத்தில் பல நிலைகளில் வழக்கிலிருந்து வருகின்றன. அவை முதலாளி x தொழிலாளி, பண்ணையார் x அடிமையாள், உயர்ந்த சாதி x தாழ்ந்த சாதி, ஆண்வர்க்கம் x பெண் வர்க்கம் என்பன போன்றவையாகும்.

**வர்க்கமும் பொதுவுடைமை இயக்கமும்**

பொருளாதாரச் சமநிலையை அடைவதற்கு இருவர்க்கங்களுக்கு இடையேயான தொடர் போராட்டம் மூன்று நிலைகளில் நிகழ்வதாக மார்க்சியம் குறிப்பிடுகிறது.

- பொருளாதாரப் போராட்டம்
- அரசியல் போராட்டம்
- தத்துவப் போராட்டம்

இந்நிலையில் நிகழும் வர்க்கப் போராட்டம், மும்முனைப் போராட்டம் என்றும் குறிப்பிடப்படுகிறது.

பொருளாதாரப் போராட்டம் என்பது "பொருளாதாரத்திற்கு அடிப்படையாக இருக்கும் உற்பத்திச் சாதனங்களைப் பொதுவுடைமையாக்குதலுக்காக நிகழ்த்தப்படும் போராட்டமாகும். இதன்மூலம் உற்பத்திச் சாதனங்களின் உடைமையாளர்களான முதலாளிகள், பொருளாதார ஆதிக்கம், தனியுடைமை, சுரண்டல், பதுக்கல், மூலதனக்குவிப்பு போன்றவற்றை எதிர்த்துப் போராடுவது ஆகும். அரசியல் போராட்டம் என்பது முதலாளிகளின் கைப்பாவையாக இருக்கும் அரசும், அதன் அதிகாரங்களான சட்டம், நீதிமன்றம் முதலானவற்றையும், அதன் அடக்குமுறைச் சாதனங்களான காவல் துறை, இராணுவம் முதலானவற்றைக் கைப்பற்றுவதற்காகவும் நிகழ்த்தப்படும் போராட்டம் ஆகும். இதற்காக உருவாக்கப்பட்ட இயக்கமே 'பொதுவுடைமை இயக்கம்' அல்லது கட்சி ஆகும். தத்துவப் போராட்டம் என்பது சமநிலை எய்தவும் அரசியலில் பொதுவுடைமையை நிலைநாட்டவும் மக்கள் மத்தியில் மார்க்சியக் கருத்துக்களைப் பரப்புவதற்காகவும் நிகழ்த்தப்படும் போராட்டம் ஆகும். இப்போராட்டத்திற்குக் கலை இலக்கியங்களைப் பயன்படுத்துவர். இதனைக் கருத்துப் போராட்டம் என்றும் குறிப்பர்."[5]

**உழைப்பாளர் துயர் தீர வழிமுறைகள்**

உழைக்கும் தொழிலாளர்களின் துயர் நீங்கும் வழிமுறைகளைத் தொழிலாளர்களுக்குக் கற்றுத் தந்தது பொதுவுடைமை இயக்கம் ஆகும். பொதுவுடைமை இயக்கம் வழியாகவே உழைக்கும் வர்க்கம் தங்கள் உரிமைகளைப் பெற்று வந்துகொண்டுள்ளது. தொழிற்சாலையின் பணி நிலை, உற்பத்தி, உபரி வருமானம், பணியாளர்கள், உழைப்புக்கேற்ற கூலி முறை, பணிநேரம், உபரி வருமானத்திற்கான கூடுதல் சம்பளம், பணிக்கொடை என பணியாளர்களுக்கான வாழ்வியல் வளங்கள் யாவும் பொதுவுடைமைச் சிந்தனை தந்தவையாகும். இதன் சிறப்பினை எடுத்துரைப்பதாகவும், தொழிலாளர்கள் ஒற்றுமையே எல்லாக் காலத்திற்கும் துணைநிற்கும் என்பதனையும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் காட்டுகின்றன.

எல்லாச் சிக்கல்களுக்கும் அரசே தீர்வு தரும் என்பதனைவிட, சமூக விடுதலை உணர்வே ஒருவனை அடிமைத்தளையிலிருந்து விடுவிக்கும் என்பதனை புதினங்கள் மையப்பொருளாக்கி எடுத்துரைத்துள்ளன. பொருள் சுரண்டலுக்கும் பாலியல் வன்முறைகளுக்கும் அடித்தட்டு மக்கள் துயர நிலைக்குள் தள்ளப்பட்டு வாழ்வதனைக் காட்டும் இப்புதினங்கள், பாதிப்புக்கு ஆளாகியுள்ள மக்கள் சில நேரங்களில் அரசை நாடி, தங்கள் தரப்புச் சிக்கலுக்கு உரிய நியாயத்தைத் தேடிப் போராட வேண்டிய நிலையில் உள்ளனர். இதனால் அவர்கள் சிந்தித்துச் செயல்படுவதோடு, ஒன்று கூடிப் போராட வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். இவை பொதுவுடைமை இயக்கத்தின்வழியாகவே சாத்தியப்படும் என்பதனை எடுத்துரைப்பதாக ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்கள் அமைந்துள்ளன.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் காட்சிப்படுத்தும் வர்க்கப் போராட்டமும் மானுட எழுச்சியும் குறித்த இயக்கச் சிந்தனைகள்,

- சாதியச் சமத்துவத்தை ஏற்படுத்தல்
- வறுமை ஒழிப்பு
- நில மீட்டெடுப்பு
- கல்வியால் மீண்டெழல்
- தொழிற்சங்கம் அமைத்தல்
- போராடுதல்
- சட்டத்தின் வழியாக உரிமைகளைப் பெறுதல்
- அரசியல் பங்களிப்பும், ஆட்சி - அதிகாரப் பங்கேற்பும்
- வாழ்வியல் முன்னேற்றமும் பொதுவுடைமையும்

என்னும் நிலைகளில் பகுத்தாராயப்படுகின்றன.

## சாதியச் சமத்துவத்தை ஏற்படுத்தல்

இந்தியாவில் சாதியப்பிரிவினை மற்றும் வகுப்புவாதப் போக்கு மக்கள் உழைப்பாளர்கள் வாழ்வியலைச் சீரழிவுக்குள்ளாக்கும் காரணிகளில் முதன்மையானதாகத் திகழ்கிறது. அது நேரடியாகவோ, மறைமுகமாகவோ அட்டவணைச் சாதி மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கும், பொருளியல் சுரண்டலுக்கும், சாதிய மோதல்களுக்கும் வழிவகுக்கிறது. இவ்வாறான அடக்குமுறைகளின் ஆதிக்கப்போக்கினையே ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்கள் கட்டமைத்து உள்ளன. தொழிலாளர் வாழ்வியலில் நேரும் சிக்கல்களை வெளிப்படுத்தும் அதேவேளையில் தொழிலாளர்களின் வாழ்வியல் விடுதலைக்கும் அவை வழிகாண முயன்றுள்ளன. ஒடுக்கப்பட்டோர் உழைப்பின் அறியாமையினையும், அவர்களிடம் நிறைந்துள்ள வறுமையினையும் பயன்படுத்தி ஆதிக்கச் சாதியினர் முன்னேற்றம் கண்டு வருகின்றனர் என்பதே புதினங்களின் மையமாக அமைந்துள்ளது. சாதியத்தால் நேர்ந்த சீர்கேடுகள் குறித்து ஆய்வு மேற்கொண்டுள்ள புதின ஆசிரியர்களின் பார்வை இங்குச் சுட்டத்தக்கது.

## சாதியத்தால் நேர்ந்த சீர்கேடுகள்

பண்டைய தமிழ் மக்கள், “பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்” என்பதையே கோட்பாடாகக் கொண்டிருந்தனர். “மக்கள் பல்வேறு தொழில்களைச் செய்யத் தொடங்கிய காலத்தில் தான் தொழில் அடிப்படையில் சாதிப்பிரிவுகள் ஏற்பட்டதாகத் தெரிகிறது”[6] என்னும் கூற்றினடிப்படையில், செய்யும் தொழில் வேற்றுமை காரணமாகச் சாதிப்பிரிவுகள் தோற்றங் கண்டன என்று கூறமுடிகிறது. இந்திய வரலாற்றின் தன்மையை ஒட்டி சாதிய நிறுவனத்திற்குச் சமூகவியலார் ஓர் இலக்கணம் வகுக்க முயன்றுள்ளனர்.

> “சாதி என்பது பிறப்பினடிப்படையில் தோன்றிய ஊறுப்பினர்களையும் ஒரு பொதுவான பெயரையும் கொண்ட ஓர் அகமணக் குழுவையோ அல்லது அகமணக் குழுக்களின் தொகுதியையோ குறிப்பதாகும். சமூக ஊடாட்டத்தில் உறுப்பினர்களுக்கு ஒரு சில தடைகளை அது விதிக்கிறது. பொதுவாக ஒரே குலத் தொழிலைச் செய்யக் கூடிய அதன் உறுப்பினர்கள், பொதுவான ஒன்றிலிருந்து தாங்கள் தோன்றியதாகக் கூறிக் கொள்கிறார்கள். இக்குழு ஒரே தன்மைத்தான் உறுப்பினர்களுடைய ஒன்றியக்குழு என்று அவர் சமூகத்தினாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும்”[7]

என்பது ஈ.ஏ.எச்.பிளண்ட் என்பார், இக்காலச் சாதிமுறைக்குத் தரும் வரையறையாகிறது. சமுதாயத்திற்குப் பெருந்தீமை பயக்கும் காரணிகளுள் சாதியுணர்ச்சியும் ஒன்றாகிறது. நாட்டுப்பற்றை மங்கச் செய்து ஒற்றுமையைக் குலைக்கும் வகையில் ஆதிக்கம் செலுத்துகிறது.

"இந்திய சாட்டில் சாதியினால் விளைந்த தீமைகள் குறித்து மதிப்பீடு செய்து டாக்டர் குர்யே தன் கருத்துகளை வெளியிடுகின்றனர். சாதிய உணர்வு நாட்டுணர்ச்சியைக் குறைத்து, இந்தியாவில் ஒற்றுமையைக் குலைத்து அன்னியர்கள் வெற்றி பெற்று ஆதிக்கம் செலுத்த வழியமைத்துக் கொடுத்திருக்கிறது. சாதிப்பற்று, ஏனைய சாதியினரை வெறுக்கும்படியாக மக்களைத் தூண்டுகிறது. இதன்கூலம் நாட்டுணர்ச்சி வளரமுடியாத ஒரு சூழ்நிலையை அது உருவாக்கிவிடுகிறது"[8]

என்னும் கருத்து இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது. மேலும்,

"இந்திய நாட்டில் நிலவிடும் சாதிப் பாகுபாடுகள் இந்தியச் சமுதாய வளர்ச்சியையே தடுத்து நிற்கின்றன. அத்தோடு, இந்தியாவின் நாகரிகமும், தர்மும், ஆத்ம ஞானமும் உலகெங்கும் பரவி, அதன்வழி உலகம் ஒரு குலமாகி இருக்கவல்ல உயர்நிலைக்கும் இக்கொடிய சாதி வேற்றுமைகள் கேடு சூழ்ந்துள்ளதாகத் திரு.வி.க. குறிப்பிடுகின்றார்."[9]

இந்தியாவில் சாதியுணர்ச்சிக்கு எதிராக முதல் சீர்திருத்தவாதியான கௌதம புத்தர் குரல் கொடுத்தார். அவரைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் தந்தை பெரியார் சாதி மறுப்புச் சிந்தனையை வலியுறுத்தினார். "சமூகச் சீர்திருத்தத்தை முன்வைத்துத் தொண்டாற்றிய பெரியார் ஈ.வெ.ரா., தமிழ்நாட்டில் சாதி மறுப்புச் சிந்தனை ஓர் இயக்கமாக வளர்ந்து செயல் வடிவம் பெற்றிட முக்கியப் பங்கேற்றுப் பாடுபட்டார். அவர் தொடங்கிய சுயமரியாதை இயக்கத்திற்குச் சாதியொழிப்பே தலையாய குறிக்கோளாகும்"[10] என்னும் கருத்து இங்குக் கோடிட்டுக் காட்டத்தக்கது. சாதியின் ஆதிக்கத்தால் ஏற்படும் துன்பம் குறித்துப் பாரதியும், பாரதிதாசனும் வெகுவாகப் பாடியுள்ளனர். இவர்கள் அமைத்த அடித்தளத்தில் இன்றைய புதின ஆசிரியர்கள் பலரும் சாதிமுறை பற்றியும் தீண்டாமைக் கொடுமை பற்றியும் குறிப்பிட்டுள்ளனர். சாதிவேறுபாடு இந்த நாட்டில் சாதித்ததென்ன? என்பது குறித்துக் கோகிலாம்பாள் மூலம் ஆராய்கிறார் மறைமலையடிகள்.

"சாதி வித்தியாசமே நம்முடைய தேசத்தார்க்கு உய்ர்ந்த தத்துவமாயிருக்கின்றது. சாதி வித்தியாசத்தால் நம்மவர் கண்டன யாவை? அகங்காரமும் கோபமும், பிரிவு, பகையும் அல்லவா? சாதியில் வேறு வேறான நாம் இருவரும் பொருந்தியிருக்க ஐயோ! நம்மைச் சேர்ந்தவர்கள் இணங்குவார்களா? ஒருக்காலும் இணங்கமாட்டார்களே."[11] இக்கருத்து, சாதி வேறுபாடு பாராட்டுவதால் இந்தியச் சமுதாயத்தில் பகைமையே வேரூன்றியிருக்கிறது என்பதைத் தெளிவுபடுத்துகிறது எனலாம்.

இந்திய சமுதாயத்தில் வலுவாகக் காலூன்றியிருக்கும் சாதிச் சிக்கலைத் தீர்க்க வேண்டியது இன்றியமையாத ஒன்றாகிறது.

"திருமணத்தில் ஆதிக்கங் கொண்ட இச்சாதிச் சிக்கலை வீழ்த்துவதற்குச் சமுதாய நலன் நாடுவோர் அதற்குரிய வழியைத் தேடினர். காதல் திருமணமும் கலப்புத்

> திருமணமும் சாதியை வீழ்த்தும் என்ற கருத்து எழுந்தது. சாதிநோயை அறவே நீக்கவல்ல மருந்து தேவை என்று நினைந்தேன்: நிநைந்தேன்: பன்னெடு நாள் நினைந்துேன். ஒன்று கண்டேன். எது? கலப்பு மணம். சாதி நோயின் வேரை அறவே கல்லவல்ல மருந்து கலப்பு மணமே என்று முடிவுக்கு வந்தேன்”[12]

என்று சாதி ஒழிப்பிற்குத் தீர்வாகக் கலப்பு மணத்தை முன்வைக்கிறார் திரு.வி.க. பாரதிதாசன், “சாதிக் கொடுமைகள் ஒழியவும், நாட்டில் சமத்துவம் தழைத்து நிற்கவும் பெண்கள் உரிமைகள் பெற்று ஆண்களோடு சமத்துவம் பெறவும் கலப்பு மணம் ஒன்று தான் சரியான வழி”[13] என்று சுட்டுகிறார்.

புதின ஆசிரியர்கள் சிலரும் சாதிச் சிக்கலுக்குரிய தீர்வாகக் கலப்புமணத்தையே சுட்டிக்காட்டுகின்றனர். “வாழத் தெரிந்தவர்களுக்குத் துன்பமும் இல்லை: சாவும் இல்லை. வாழக்கை நிரந்தரமானது, அது இங்கே தான் இருக்கிறது. அழியாத அன்பின் அடிப்படையில்”[14] என்னும் கருத்தின் மூலமாக, சாதிபோன்ற சமூகத்தடைகளைக் கடந்து இளைஞர் சமுதாயம், அன்பால் ஒன்றுபடவேண்டும் என்று கூறுகிறார் அகிலன். சாகித்திய அகாதெமி வெளியிட்டுள்ள இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் அகிலனின் படைப்புகளை ஆய்ந்த சு. வேங்கடராமன்,

> “சாதிவேறுபாடு நீங்கி சமுதாயம் மாறவேண்டும் என அகிலன் வலியுறுத்துகிறார். சாதி பற்றிக் கவலைப்படாமல், காதல் மணமும் கலப்பு மணமும் செய்துகொள்ள இளைஞர்கள் முன்வரவேண்டுமே என அகிலன் வலியுறுத்துகிறார். அன்பின் அடிப்படையில் தான் வாழ்க்கை அமைய வேண்டுமே அல்லாது, சாதியை முதன்மைப்படுத்தி வாழ்க்கையை அமைத்துக் கொள்வது கூடாது என்று அகிலன் காட்டுகிறார்”[15]

என்று குறிப்பிடும் கருத்து சாதியச் சிக்கலுக்குரிய தீர்வினைத் தெளிவாகச் சுட்டுகிறது.

சாதீயம் உழைக்கும் வர்க்கத்தைப் பிளந்தது முதல் கொடுமை. தொழிலைப் பிரிப்பது வேறு; உழைப்பாளிகளைப் பிரிப்பது வேறு. உழைப்பாளர்களைப் பிரித்திருப்பது மட்டுமல்ல. அவர்களை மேல் என்றும் கீழ் என்றும் தீண்டத்தகாதவர்கள் என்றும் ஒதுக்கிவைத்து, அவர்களுக்குள்ளேயே பலவிதங்களில் பிரிவினையை ஏற்படுத்தி, சாதிய வரலாற்று வேற்றுமைகளை ஏற்படுத்தியிருக்கிறது. வர்க்க உருவாக்கத்திற்கு இது பெரும் தடைச்சுவராக இருக்கிறது. இதனை ஒழிப்பதே முதற்கடமையாக உள்ளது.

சாதியானது மக்கள் ஒரு கணசமூகமாக உருவாவதைத் தடை செய்து விட்டது. பொதுவான சமூகம் என்ற கருத்து ஏற்பட முடியாமல் சமூகம் என்பதே சாதிகளின் சமூகம் என்றாகிவிட்டது. இதனை, “ஒவ்வொரு சாதியின் இருப்புமே பொதுச்சமுதாய உருவாக்கத்திற்குத் தடைதான். இதனால் பொதுச்சமூக மனோபாவம் தோன்றவில்லை என்பது

மட்டுமல்ல. ஒவ்வொரு சாதிச்சமூகமுமே பொதுச்சமூகத்தின் பகையாகப் பொதுச்செயலாக்கம் கொண்டுவிட்டது. இவ்வகையிலான சாதிய அமைப்பின் காரணத்தினாலேயே சமுதாயத்தின் பொதுத் தேவைகளான மராமத்து போன்ற துறைகள் அரசின் கடமைகளாகி விட்டன. இந்தச் சமுதாயம் என்று கருத்தளவில் சொல்லப்படுவதெல்லாம் குறுகிய எண்ணம் கொண்ட பல சாதிகளின் சமூகமே. ஒவ்வொரு சாதியும் தான் ஒரு தனித்தனிச் சாதியாக இருப்பதைத் தொழிலிலும், அந்தஸ்திலும், மணஉறவு முறைகளிலும் நன்றாகவே உணர்ந்திருக்கிறது. உணவு, உடை, பேச்சு, இருப்பிடம் ஆகிய எல்லாமே சாதிகளை நடைமுறை வாழ்வில் பிரித்திருக்கிறது. இத்தகைய சாதிகளைக் கொண்டு ஒரு தேசத்தைக் கட்டியெழுப்ப முடியாது. ஏனெனில் தொழிலிலும், மணஉறவுகளிலும், மற்ற வாழ்நிலை அம்சங்களிலும் எழும் ஒரு சாதி இனத்து மக்களின் கண்ணோட்டங்களும் மற்ற சாதியினருக்கு அதேபோன்று ஏற்படச் சாத்தியமில்லை. பின்னர் எதைப் பகிர்ந்து கொள்வது? வீட்டு நடவடிக்கைகளுக்குச் சாத்தியம் இல்லாமல் போகும்போது கோவில்களும் விழாக்களும் வெறும் கேளிக்கைகளே. ஒரு பொதுச்சமூக உணர்வை உருவாக்குவதில் எப்படிச் சாதி தடையாயிருக்கிறதோ அதேபோல் தேசம் உருவாவதற்கும் தேசிய இன விடுதலைக்கும் அது தடையாக இருக்கிறது, இன்றும் தடையாக இருந்து வருகிறது**”**[16] என்னும் கூற்றின் வாயிலாக அறியலாம்.

சாதியின் பெயரால் ஒரே சாதிப்பிரிவுக்குள் இருப்பவர்கள் தம்மைத் தாமே உயர்த்திக் கொள்வதும், தாழ்த்திப் பேசுவதுமான நிலையால் சாதிப் பிரிவினை வளருமே ஒழிய ஒருநாளும் மறைவதற்கு வாய்ப்பில்லை என்பதனை சிவகாமி,

> “பள்ளன் பறையனைக் கேவலமாயும், பறையன் சக்கிலியைக் கேவலமாயும், சக்கிலியன் பறையனைக் கேவலமாயும் இவனெல்லாம் சேர்ந்து பறவண்ணானை இன்னுங் கேவலமாய்… தனக்குக் கீழே யாராவது கேவலமாய் இருப்பதை விரும்பும் தோரணையாய் அல்லவா இருக்கிறது நிலைமை?”[17]

என்று கூறிச்செல்கிறார். ஒடுக்கப்பட்ட மக்கள் தங்கள் வேற்றுமைகளைக் களைந்து ஒன்றுதிரண்டால் மட்டுமே வெற்றியைப் பெறமுடியும். ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களுக்குள் பரஸ்பர மோதலைத் தவிர்த்து ஒன்றுபடுதலே மேன்மைக்கும் வழி தரும்; ஆதிக்க நிலையை அகற்றுவதற்கு ஒன்றிணைவதே சிறப்பான வழியாக அமைந்திருக்கும் என்பது,

> “இங்கே வர்க்கமும் சாதியும் ஏறக்குறைய ஒன்றாகத் தானிருக்கிறது. கீழ்ச்சாதி இல்லாத வர்க்கம், ஆிக்கச்சாதிஇருக்கும் வர்க்கம் எனத் தெளிவாகப் பிரிந்திருக்கிறது. இந்த இரண்டும் பரஸ்பர மோதலைத் தவிர்க்க முடியாது. கீழ்சாதி பலவாறு பிரிந்திருப்பதால் மேல்சாதியுடன் வலுவாக மோதி தன்னை ஸ்தாபித்துக் கொள்ள இயலவில்லை. கீழ்ச்சாதியினர் தங்கள் உட்பிரிவினைகளைக் களைந்து கொண்டு வர்க்கம் என்னும் தளத்தில் ஒன்று சேரவேண்டும். தலித்துகள் பாட்டாளி வர்க்கத்தின்

கடைசிக் கண்ணி. அவர்களை முன்னிறுத்திப் போராடுவதன் மூலம் சாதி வர்க்கப் பிரிச்சினைகளுக்குத் தீர்வு காணமுடியும்”[18]

என்னும் கூற்றின் மூலம் தெளிவுபடுத்தப்படுகிறது. ஒடுக்கப்பட்ட மக்களிடையே சாதி ஒற்றுமையின்மையினையும், அவ்வாறு ஒன்றிணைவதற்கு அந்தந்தச் சாதியைச் சார்ந்த மக்களே காரணமாக இருப்பதனையும் சோலை சுந்தரபெருமாள் ‘செந்நெல்’ புதினத்தில் பதிவு செய்துள்ளார். காதலில், திருமணத்தில் அட்டவணைச் சாதிகளுக்குள்ளேயே பிரிவினை இருப்பதனை இப்புதினம் காட்டுகிறது.

தாழ்த்தப்பட்ட மக்களிடையே உண்ணும் உணவை வைத்துச் சாதிபேதம் பார்க்கும் நிலை இருப்பதை இப்புதினம் காட்டுகிறது.

மாட்டுக்கறியைத் உண்ணும் இளைஞனைத் திருமணம் செய்து வைத்தால், மணப்பெண்ணின் தங்கையை யாரும் மணம் செய்துகொள்ள வரமாட்டார்கள் என்று கருதி, தாழ்த்தப்பட்ட மக்களின் காதலுக்குத் தடை போடுவதை,

“பொண்ணா பொறந்தவ மாடு உறிக்கிற பறப்பயலக் கட்டிக்கிட்டா எவனும் உன்னோட சின்னப்பொண்ணக் கட்டிக்க வரமாட்டான்.”[19]

என்று குறிப்பிடுகிறார் சோலை சுந்தர பெருமாள். இந்நிகழ்வு தாழ்த்தப்பட்ட மக்களிடையே காணப்படும் வேற்றுமையை நடப்பியல் நிகழ்வின் போக்கில் எடுத்துக்காட்டுகிறது.

பொதுவுடைமை இயக்கம் சாதி, மதத்தை அடியோடு வெறுத்து ஒதுக்குகிறது. அடித்தட்டு மக்கள் உயர்வடைவதற்கும், ஒன்றிணைவதற்கும் தடைக்கற்களாக விளங்குவதாகக் குறிப்பிடுகிறது. சாதியின் பெயரால், மதத்தின் பெயரால் மக்கள் ஒன்று திரள்வதைப் பொதுவுடைமை இயக்கம் தவிர்க்கிறது. இயக்கச் சிந்தனையால் மட்டுமே ஒன்றுபடுதல் வேண்டும் இவை களையப்பட வேண்டும் என்பதனை எடுத்துக்காட்டும் விதமாக இப்புதினத்தில் இருவேறுபட்ட சாதியைச் சார்ந்த இருவரும் திருமணம் செய்துகொள்வது காட்டப்படுகிறது. இந்நிகழ்வு பொதுவுடைமை இயக்கச் சிந்தனையின் விளைவால் நடைபெற்றதாகப் படைத்துக் காட்டப்படுகிறது.

**சாதி மறுப்புத் திருமணம் செய்தல்**

இந்தியச் சட்டப்படி, திருமண வயதில் இருக்கும் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் தங்கள் வாழ்க்கைத் துணையைத் தாமகவே தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை உண்டு. இதில் யாரும் தலையிட முடியாது. பிள்ளைகளுக்கு ஆலோசனை சொல்லலாம்; வழிகாட்டலாம்; தோழமையோடு அறிவுரை சொல்லலாம்; கொலை செய்யவும், தண்டிக்கவும் பெற்றோருக்கு எவ்விதத்திலும் உரிமையில்லை.

‘மலரும் சருகும்’ நாவலில் இடம்பெறும் புஷ்பமும், ரத்தினமும் சாதி மறுப்புத் திருமணம் செய்து கொள்கின்றனர். அவர்களது வாழ்க்கை சமூகத்திற்கு ஒரு படிப்பினையாகவும், சமூக மாற்றத்திற்குரிய அடித்தள -மாகவும் அமைவதனைக் காட்டுகிறார் ஆசிரியர். மேலும் காதல் என்பது, உடல்பார்த்து வருவது இல்லை என்பதனையும் அது இரு உள்ளங்களின் இணைப்பால் உருவாவது என்பதனையும்,

> “நீங்கள் இரண்டுபேரும் ஒன்றரை ஆண்டுகள் பிரிந்திருக்க வேண்டும். ஒருவரை ஒருவர் சந்திக்கக் கூடாது. இது உண்மையான காதல் தானா அல்லது வெறும் உடல் அவஸ்தையின் வெறியா என்று நாங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்”[20]

என்று வெளிப்படுத்துகிறார். உடலைப் பார்த்துக் காதல் எழுவதை எந்தவொரு நிறுவனமும் ஏற்றுக் கொள்வதில்லை. சாதி எந்தவொரு வடிவத்திலும் ஆதிக்கம் செலுத்துவதைப் பொதுவுடைமை இயக்கம் அனுமதிப்பதில்லை. சாதியை ஒழிப்பதற்கான ஒரே தீர்வு அவரவர்களும் தங்கள் சாதிபேதங்களைத் துறந்து ஒன்றிணைவது தான் என்று அறிவுறுத்துகிறது. இந்த அறிவுறுத்தலின் சான்றாக இந்நிகழ்வு இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளது தெளிவாகிறது.

‘தோல்’ புதினத்தில் இடம்பெறும் கிறித்துவ மதபோதகரான இருதயசாமியும், பார்ப்பனரான சங்கரனும் தங்கள் சாதி, மதங்களைத் துறந்து உழைக்கும் தொழிலாளர்கள் போராட்டங்களில் ஈடுபடுவது மார்க்சியச் சிந்தனையின் வெளிப்பாடே ஆகும். தொழிலாளர்களும் சாதி, மதத்தைத் துறந்து ‘தோழர்’களாக ஒன்றிணையும் போதே சமத்துவச் சமுதாயம் மலரும் என்பதை இப்புதினத்தின் வழியாகக் காட்டுகிறார் டி. செல்வராஜ்.

**சமத்துவத்தை நிலைநாட்டல்**

உழைக்கும் மக்களின் உற்பத்தியினைத் தனக்குச் சாதமாக்கிக் கொண்டு பொருளாதார வல்லாண்மை பெறுவதே பொருளியல் சுரண்டலாகும். அது ஆதிக்கச் சாதியினரின் சூழ்ச்சியால் விளைந்த ஒன்றாகும். அரசியல் ஆட்சியாளர்களின் அதிகாரமும், பணபலமும், மக்கள் செல்வாக்கும், சாதியின் உயர்தகைமையும் அவர்களது பொருளியல் சுரண்டலுக்கான வாழ்வியலுக்குத் துணைநிற்கின்றன. இத்தகு இயல்புகள் இல்லாத சிறுபான்மை மக்களாகிய பொருள்சுரண்டலுக்கு உள்ளாகின்ற, உரிமைகள் மறுக்கப்படுகின்ற மக்கள், அட்டவணைச் சாதியினர் அனைவரும் மேற்குறித்த நபர்களை எதிர்த்துப் போராட வேண்டிய தேவை உள்ளது.

பொருளியல் சுரண்டலுக்கு எதிரான போராட்டத்தில் நடக்கும் செயல்பாடுகளில் மனிதாபிமானத்துடன் கலந்துகொண்டு போராடுகின்ற எல்லா சாதி மக்களையும் ஏற்றுக்கொண்டு போராடுவதே கம்யூனிஸத்தின் கொள்கையும் கோட்பாடுமாகும். இவ்வாறு மக்களிடையே எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லாமல் ஒட்டுமொத்த விடுதலையினையும் எதிர்நோக்கி -

யிருப்பதே அதன் முக்கிய நோக்கமாகவும் அமைந்திருக்கிறது. சமத்துவ நிலைநாட்டுதலின் முதல்படியாக அனைவரும் பிறப்பால் சமம் என்ற கருத்தினைப் பதிவு செய்வதோடு, நடைமுறையில் சாத்தியப்படுத்துவதாகவும் அமைந்திருக்கிறது.

"அரசாங்க நிதியிலிருந்து கட்டப்பட்ட பள்ளிகள், மருத்துவமனைகள், சத்திரங்கள், நீதி மன்றங்கள் அனைத்திலும் தாழ்த்தப்பட்டோருக்கும் உரிமை உண்டு. ஆதலால் அங்கெல்லாம் அவர்கள் பேதமின்றி அனுமதிக்கப்பட வேண்டும். ஆறுகள், ஏரிகள், குளங்கள் போன்ற நீர்நிலைகள் அரசாங்கத்திற்குச் சொந்தமானவை. அவற்றிலிருந்து தண்ணீர் எடுப்பதற்கும், குடிப்பதற்கும், தாழத்தப்பட்டோருக்கும் உரிமை உண்டு என்று சட்டம் இயற்றப்பட வேண்டும்"[21] என்பதில், பொதுவுடைமையின் நோக்கும் போக்கும் தெளிவாகப் புலனாகிறது. இதன் ஒரு நிகழ்வாகத் தாழ்த்தப்பட்டவர்கள் இறந்தவரின் பிணத்தைப் பொதுவழியில் எடுத்துச் செல்வதற்கு நிகழ்த்தப்பட்ட போராட்டமும் அதன் வெற்றியும் 'தோல்' புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

காலம் காலமாகப் பிணத்தை எடுத்துச் செல்வதிலும் ஆதிக்கம் செலுத்தி வந்த ஆதிக்கச் சாதியினரின் காலம் தொடர்ச்சியான போராட்டத்தின் விளைவால் இன்றைக்குச் சட்டம் இயற்றப்பட்டு நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டுள்ளது.

திண்டுக்கல் நகரில் தொழிலாளர் ஒற்றுமையால் ஆதிக்கச் சாதியினர் சாதி அரசியலைச் செய்ய இயலாமல் தவிப்புக்கு உள்ளாவதனையும், பிணத்தைப் பொதுவழியில் எடுத்துச் செல்ல அனுமதிப்பதனையும், தொழிலாளர்கள் எழுச்சியோடு பிணத்தைத் தூக்கிச் செல்வதனையும்,

> "இதுகாறும் மிரண்டு போய் பாதை ஓரங்களிலும், சாலி மரங்களுக்கடியிலும் பீதியுடன் கூடி நின்ற சேரி மக்கள் ஏகமாகத் திரண்டு வந்து பிண ஊர்வலத்தில் கலந்துகொண்டதைக் கண்டு மன காவலன் பிள்ளையும், மேல்ஜாதிப் பெரிய தனக்காரர்களும் மிரண்டு போனார்கள். எதையும் எதிர்கொள்ளும் தைரியமும், தெம்பும் சமாளிக்கவும், சமர் புரியவும் தயார் என்பது போன்ற வேகம் ஊர்வலத்தில் தென்பட்டது. மேல்ஜாதிக்காரர்கள் பயந்து பின்வாங்கலானார்கள்"[22]

என்ற நிகழ்வின்மூலம் காட்டியுள்ளார் டி. செல்வராஜ். அடித்தட்டு மக்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்காகப் போராட வேண்டிய நிலையில் உள்ளனர் என்பது இந்நிகழ்வின் வழியாகக் காட்டப்படுகிறது.

**இரட்டைக்குவளைக்கு எதிர்வினை**

பூமணியின் 'பிறகு' நாவலில் இடம்பெறும் ஒரு கிராமத்தின் தேநீர்க் கடையில் கடைக்காரர் சாதிப்பாகுபாடெல்லாம் தற்போது இல்லை. 'எல்லோரும் ஒன்றுதான்' என்று கூறுகிறார். இக்கூற்றைக் கேட்டுக் கொண்டிருந்த தாழ்த்தப்-பட்ட சாதியைச் சார்ந்த

(சக்கிலியர்) வேதமுத்து என்பவர், அப்படியென்றால் எனக்கும் எல்லோர்க்கும் கொடுக்கும் தம்பளரிலேயே தேநீர் தருமாறு கேட்கிறார். இதனை,

“கடக்காரரு சாதியெல்லாம் ஒண்ணுன்னு சொன்னாரு.

அதே காலா புடிச்சிக்கிட்டாக.

ஒண்ணுன்னு சொன்னீகல்ல...

அப்பிடின்னா எனக்கும் எல்லாரப் போல பீங்கான் கௌாசுல காப்பி குடுங்க.

எனக்கு மட்டும் ஈயப்போகணியில ஏன் ஊத்தனும்.

இதுதான் வேதமுத்து புடிச்சபுடி”[23]

என்று சுட்டிச் செல்கிறார். சாதி ஆணவத்திற்கு எதிர்க் குரல் எழுப்புவதன் வழியாகவே சமத்துவ நிலை வென்றெடுக்கப்படும் என்பது இந்நிகழ்வின் வழியாக எடுத்துரைக்கப்படுகிறது. எதிர்ப்புக்குரலின் வழியாகவே உரிய தீர்வுகள் கிடைக்கும் என்பது பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தந்த பாடமாகும். இதனை நிலைநிறுத்துவதாக இக்காட்சி அமைந்துள்ளது.

**வறுமை ஒழிப்பு**

மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் எதுவும் கிடைக்கப் பெறாமல் தவிப்புக்குள்ளாகும் நிலையைக் குறிப்பதே வறுமை. வாழ்க்கைக்கு இன்றியமையாத அடிப்படைப் பொருள்களான உணவு, உடை, இருப்பிடம் ஆகியன கிடைக்காத மக்கள் வறுமையில் உழல்வோர் என்று அழைக்கப் -படுகின்றனர். இவர்களை ‘வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ளவர்கள்’ (People under the poverty line) என்றும் கூறுவர். குறிப்பாக உணவு, உடை, இருப்பிடம் முதலானவை இத்தகையோர்க்கு மிகவும் தட்டுப்பாடாக இருக்கும். பொதுவுடைமை இயக்கத்தின் தோற்றமே தொழிலாளர் வறுமையின் காரணமாக உருவானதுதான். இதனால் வறுமை ஒழிப்பையே பொதுவுடைமை இயக்கம் தனது முதற்கடமையாகக் கொண்டு இயங்குகிறது.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட புதினங்களில் இடம்பெறும் விவசாயக் கூலிகள், தொழிலாளர்கள் வறுமைவயப்பட்ட வாழ்க்கையில் உழல்பவர்களாக உள்ளனர். இவர்கள் நிலவுடைமையாளர்களிடம் கூலிப்பணியாளர்களாகப் பணி செய்கின்றனர். தங்களது முதலாளிகளே தங்களது வாழ்க்கைக்குப் பொறுப்பானவர்கள் என்ற நம்பிக்கையினை அவர்கள்மீது கொண்டிருக்கின்றனர். அதன்பொருட்டுத் தம் வாழ்க்கையையே அவர்களுக்காக அர்ப்பணித்துக் கொண்டு பணியாற்றுகின்றனர். இத்தகு தொழிலாளிகளின் பட்டினியையும் வறுமையையும் முதலாளிகள் கண்டுகொள்வதில்லை. தங்களைப் போன்று தொழிலாளர்களும் வாழ்வில் முன்னேற்றம்பெற வேண்டும் என்று கருதுவதில்லை.

பெரிய எதிர்ப்பார்ப்புகள் எதுவும் இல்லாமல் ஆண்டைகளை அண்டிப் பிழைக்கும் வாழ்க்கையை மட்டுமே விவசாயக் கூலிகள் மேற்கொண்டிருந்தனர் என்பதனைப் 'பிறகு' புதினத்தில் பூமணி,

"சரி சாமி….!

எங்க இருந்தா என்ன?

ஒழைக்கப்போறோம். பொழைக்கப் போறோம்…

தேடித் தெரட்டிக் கொட்டிக் கோடிகோவரமா கொட்டப் போறோம்..

என் குடும்பத்துக்கு வழிபண்ணாமத் தெருவுலயா நிறுத்திருவீக.."[24]

என்று எடுத்துக்காட்டுகிறார். தங்களுக்குள் நிரந்தரமாகத் தங்கிவிட்ட வறுமையை ஒழிப்பதற்கான செயல்திட்டங்கள் எதுவுமின்றி, ஆண்டைகளின் சொல்கேட்டு வாழும் கூலிகளின் நிலைமை இதன்வழி எடுத்துரைக்கப்படுகிறது. இந்நிலை மாற்றம் பெறவேண்டும்; உழைப்பாளர்கள் தங்கள் வறுமைக்குரிய காரணங்கள் எவை என்று சிந்திப்பதன் வழியாகவே வாழ்வில் மேன்மைபெற முடியும் என்று பொதுவுடைமை இயக்கம் வலியுறுத்துகிறது. அஞ்சி நடுங்கி ஒடுங்கிப் போகும் நிலையினை வெறுத்தொதுக்குகிறது.

## நிலம் மீட்டெடுப்பு

உழைக்கும் தொழிலாளர்கள் பொருளாதாரத்தில் மேம்பாடு அடையாதவரை சமூகத்தில் சமநிலை ஏற்படாது. ஒரு தனிமனிதன் சமநிலை பெற வேண்டுமானால் அவன் வாழ்வியல் மேம்பாடு அடைய வேண்டும். விவசாயக் கூலித் தொழிலாளர்களின் பொருளாதார மேம்பாட்டிற்கு அடிப்படை ஆதாரமாக விளங்குவது நிலம். நிலத்தை இழந்த விவசாயக் கூலிகள் தாங்கள் இழந்த நிலத்தைத் திரும்பப் பெறுவதன் வழியாகவே அவர்கள் தன்னிறைவைப் பெற முடியும் என்று அறிவுறுத்துகிறது பொதுவுடைமை இயக்கம்.

உழைத்துக் களைத்த தாழ்த்தப்பட்ட மக்கள் இன்னும் கூலிகளாகவே தங்கள் வாழ்க்கையை நடத்தி வருகின்றனர். உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்பது நடைமுறைக்கு வந்தால் மட்டுமே அவர்களின் பொருளாதாரம் மேம்பாடு பெறும் என்பதனை 'செந்நெல்' நாவலில்,

"நம்ம குந்திருக்கிற எடம் அவங்களோடதுப்பா….

அதுக்குத்தான் நம்ம பாட்டன்பூட்டன் காலத்திலேருந்து ஒழைச்சிக் கொடுத்துட்டோமே….

அதுக்கு இந்தப் பத்துக் குழின்னு வச்சிக்கேயேன்.

இந்த நெலம் எல்லாம் எல்லாம் நெத்தி வேர்வ நெலத்திலச் சொட்டச் சொட்ட வேலை பார்த்துச் சம்பாதிச்ச சொத்தா.

பட்டாப் போட்டா வாங்கி வச்சிருக்காரு?

பொதுவடைவதெடதிட்டெல்லாத்தையும் வளைச்சிப் போட்டுக்கிட்டு நம்மள ஏமாத்திக்கிட்டு இருக்காங்கம்மா…”[25]

என்று எடுத்துரைக்கிறார்.

தொழிற்சங்கங்கள் நடத்தும் போராட்டம் வெறும் மிகை ஊதியம் கூலி உயர்வு என்பதாக இல்லாமல் நிலச் சீர்திருத்தம் போன்ற அடிப்படைச் சமூக மாற்றத்திற்காக போராட்டங்களையும் முன்னெடுத்துச் செல்வதன் மூலமே வறியவர்களின் துயர் துடைக்க முடியும் என்பதை ‘மலரும் சருகும்’ புதினம் வழியாக எடுத்துக்காட்டுகிறார் டி. செல்வராஜ்.

‘மலரும் சருகும்’ புதினத்தில் இடம்பெறும் காக்கையனின் நிலம் ஒத்திக்குக் கொடுக்கப்பட்டு, அந்நிலம் மீட்க முடியாமல் காந்திமதிநாதப் பிள்ளைக்குப் போய்ச் சேர்கிறது. அந்நிலத்தில் கூலியாக அக்குடும்பம் வாழ்நாள் முழுவதும் வேலை செய்யும் நிலைக்குத் தள்ளப்படுகிறது. தங்கள் நிலம் தங்களுக்குத் திரும்பி வரும் என்ற நம்பிக்கை இல்லாமல் அவர்கள் தவிப்புக்கு உள்ளாவது காட்டப்படுகிறது. ‘உழைப்பவனுக்கே நிலம் சொந்தம்’ என்னும் பொதுவுடைமைக் கோட்பாடு செயலாக்கப் பட்டால் இதற்கு உரிய தீர்வு கிடைக்கும். இவற்றோடு நிலஉச்சவரம்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டால் உழுபவனுக்கே நிலம் சொந்தமாகும் நிலை ஏற்படும்.

**கல்வியால் மீண்டெழல்**

மானுட வளர்ச்சிக்குத் துணைசெய்யும் ஒரே கருவி, கல்வி மட்டுமே. கல்வியால் சமுதாயம் மேம்பாடு பெறும் நிலையினைத் தமிழ் இலக்கியங்கள் காலம் காலமாக அறிவுறுத்தி வந்துள்ளன. இதனை,

“ஒரு குடிப்பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசம் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே”[26]

என்னும் ஆரியப்படை கடந்த பாண்டிய நெடுஞ்செழியனின் பாடல் மூலம் அறியவியலுகிறது.

கல்வி பெற்று முன்னேற்றம் அடைவது எல்லோர்க்கும் அடிப்படைத் தேவையானது என்றாலும், குறிப்பாக, அடித்தட்டு பாட்டாளி வர்க்க மக்கள் மேலெழுவதற்குக் கல்வியே துணைசெய்யும் என்பதனைப் புதினங்கள் எடுத்துரைக்கின்றன. எழுதப் படிக்கத் தெரியாமையால் தங்கள் நிலங்களையும் உடைமைகளையும், தாங்கள் சேர்த்து வைத்த சொத்துக்களையும் இழந்து, ஆண்டைகள் காட்டிய இடங்களில் எல்லாம் கைநாட்டை வைத்துவிட்டு தவிப்புக்குள்ளான மக்கள் மேலேறி வருவதற்குக் கல்வியே துணைசெய்யும் என்பதனைப் ‘பிறகு’, ‘கல்மரம்’, ‘மலரும் சருகும்’, ‘தோல்’இ ‘கூகை’ ஆகிய புதினங்கள் நிகழ்வுகளின் போக்கில் எடுத்துரைக்கின்றன.

அனைவருக்குமான பொதுக்கல்வியை மார்க்சியம் வலியுறுத்துகிறது. மேலும் மானிட அறிவைத்தூண்டும் கல்வியே, மனித ஆற்றலை வளப்படுத்தும் முற்போக்குச் சிந்தனைகளைப் புகட்டும் கல்வியே காலத்தின் தேவையாக இருப்பதனையும் எடுத்துரைக்கிறது.

தாழ்த்தப்பட்ட அடித்தட்டு மக்கள் கல்விபெறுவதன் வழியாகவே அரசியல், ஆட்சியில், அதிகாரத்தில் பங்கேற்ற முடியும் என்பதனை உணரத் தொடங்கி விட்டனர். தம் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்பி வைப்பதே தமது முதற்கடமையாக இருக்க வேண்டும் என்பதனைக் ‘கூகை’ புதினத்தில்,

> “கூடிய சிக்கிரம் படிக்க வச்சிருவம்,
>
> நம்ம தலமொறயோட இந்தக் கைநாட்டுக் கேசுக்கு முழுக்குப் போட்ரணும்”[27]

எடுத்துக்காட்டுகிறார்.

பூமணியின் ‘பிறகு’ புதினத்தில் இடம்பெறும் தாழ்த்தப்பட்டவர்களாகிய சக்கிலியர்கள், அருந்ததியர் ஆகியோர் இறந்த மாடுகளைத் தோலுரித்துப் பிழைப்பதும், அதன் மாமிசத்தை உண்பதுமான வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். இந்நிலையை மாற்றுவதற்காகச் சக்கிலியக் குடியைச் சார்ந்த இளைஞர்கள் கல்வி பயில்கின்றனர். சமுதாயத்தில் மேல்தட்டு வர்க்கத்தினர் செய்யும் தொழில்களையும், படித்த இளைஞர்கள் செய்ய முயல்கின்றனர். இது குறித்து அமையும்,

> “மாடு மேய்க்கும் தொழிலையே தங்களுக்கு அதிகபட்சத் தொழிலாகக் கொண்டிருந்த சக்கிலியக் குடியினர் பின் இராணுவத்தில் சேருவதோடு மட்டுமல்ல. உயர்கல்வி கற்று, உயர்ந்த வேலைக்குப் போக நினைப்பதை, அழகிரி தன்மகன் வயிற்றுப் பேரனான சுடலையை உயர்ந்த படிப்பு படிக்க வைத்து உயர்ந்த வேலைக்கு அனுப்ப வேண்டுமென்று நினைப்பதன்மூலம் காட்டி, கல்வி ஒன்றே வறிய மக்களின் வாழ்வியல் மேம்பாட்டிற்கு உறுதுணை புரியும் என்று நம்பிக்கை கொள்கிறார் பூமணி”[28]

என்னும் பூமணியின் கருத்தாக எஸ். ஸ்ரீகுமார் வெளிப்படுத்துவது கல்வி ஒன்றே அடித்தட்டு மக்கள் எழுச்சி பெறுவதற்குரிய தீர்வாக அமையும் என்பதைத் தெளிவாக்குகிறது.

தங்களுக்கு உரிய சிறிய அளவிலான நிலத்தை இழந்தேனும் கல்வி பெறுவதே நமது சமூக மறுமலர்ச்சிக்குத் துணைசெய்யும் என்பதனை, 'மலரும் சருகும்' புதினத்தில்,

> "என் தங்கச்சி பையன் படிச்சு முன்னுக்கு வரணுங்கறதுக்காக வேண்டித்தாண்டா என் நெலத்தை ஒத்திக்கு வச்சு பணம் கொடுத்தேன்"[29]

என்னும் பகுதி வெளிப்படுத்துகின்றது. இளமையில் கல்வி கற்பதனைத் தள்ளி வைக்கக் கூடாது என்ற கருத்தினையும். படித்துப் பொருளாதார வசதி வாய்ப்புகள் ஏற்பட்ட பின்னர் இழந்த நிலத்தைப் பெற்றுக்கொள்ளலாம் என்ற அறிவுறுத்தலையும் இப்பகுதியால் எடுத்துரைக்கிறார். பின்னர் ஒடுக்கப்பட்ட மக்கள் சட்ட அறிவினைப் பெறுவதன்வழியாகவே தங்கள் பொறுப்புக்களையும் உரிமைகளையும் அறியும் வாய்ப்பு ஏற்படும். தங்கள் பிரச்சினைகளுக்குச் சட்டரீதியிலான தீர்வுகளை எட்டமுடியும் ஆதலால், சட்டக்கல்வியைப் பயில்வதே அடித்தட்டு மக்கள் உரிமை மீட்டெடுப்புக்கு வழிவகுக்கும் என்பதனைக் 'கூகை' புதினத்தில்,

> "இந்தப் பயகளுக்குச் சட்டம் வேற சொல்லிக் குடுப்பீரு போலிருக்கு.
>
> சட்டமும் பொதுதான்.
>
> நமக்குவேற சட்டம், அவங்களுக்கு வேற சட்டங் கெடையாது. நம்மகிட்ட ஒழைக்காங்க, சாப்பிடுறாங்க அவ்வளவுதான்."[30]

என்பதன் வழியாகப் படைத்துக்காட்டுகிறார் சோ. தர்மன்.

'பிறகு' புதினத்தில் இடம்பெறும் அழகிரி படிப்பின் அருமை தெரியாத இளம் பருவத்தில் தன் மகளைப் பள்ளிக்கூடம் அனுப்பி வைக்க மறுத்து, ஆடு மாடுகளை மேய்ப்பதற்குப் பழக்குகிறான். காலவோட்டத்தில் அவன் பெறும் அனுபவங்களால் கல்வி ஒன்றுதான் தாழ்ந்த நிலையில் உள்ள நமது சமூகம் மேலெழுந்து வருவதற்கான முதற்படியாக அமைந்திருக்கும் என்பதனை உணர்ந்து, தனது பேரனைப் பள்ளிக்கூடம் அனுப்பிவைக்கிறான். இதனை,

> "என்னமோ படிக்குது புள்ள. சீத்துவம் இருக்கிற வெரைக்கு படிக்க வைக்க வேண்டியதுதான்."[31]

என்று காட்டுகிறார் பூமணி. ஒவ்வொரு மனிதனுக்கும் கட்டாயக்கல்வி தருவதன் வழியாகவே ஒடுக்கப்பட்ட சமூகம் பொருளாதார மேம்பாடு பெறும் என்பது இச் செயல்பாட்டின் வழியாக உணர்த்தப்படுகிறது.

**உயர்கல்வி பெறுதல்**

ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்கள் கல்விபெறுவதில் பல்வேறு சிக்கல்கள் உள்ளன. கிராமங்களில் உயர்நிலைப் பள்ளிகள் இல்லாமை, வெளியூர்களுக்குச் சென்று படிக்க வசதி வாய்ப்பின்மை, பொருளாதார நலிவு எனப் பலகாரணங்களால் அடிப்படைக் கல்வியை மட்டுமே கற்று மேற்கல்வி பெறுவதனைத் தவிர்த்து வருகின்றனர். இதனால் தாம் படித்த கல்வியின் தகுதிக்கு ஏற்றாற்போன்ற வேலைகளைத் தேடிக்கொள்கின்றனர். இந்நிலை மாற்றம் பெறவேண்டும். அடித்தட்டு மக்கள் அரசாங்கத்தின் உயர்பதவிகளை அடையும் போதுதான், அம்மக்களுக்கான நலத்திட்ட உதவிகள் சென்று சேரும் என்ற உண்மையை உணர்த்தும் விதத்தில் 'பிறகு' புதினத்தில் இடம்பெறும் அழகிரி, தனது பேரனைப் பெரிய வேலைக்குச் செல்லவேண்டும் என அறிவுறுத்துகிறான். இதனை,

> "தாத்தா தாத்தா. அங்க ஊருல அனயம் பேரு தொப்பி வச்ச போலுசா வந்தாக. நான் பத்துப் படிச்சிட்டு பட்டாளத்துப் பேறென். அங்கயும் தொப்பி தருவாகல்ல.
>
> ..............
>
> அதக்காட்டி பெரிய வேலைக்குப் போகணுண்டா..!"[32]

என்னும் பகுதியால் சுட்டுகிறார் பூமணி.

'தோல்' புதினத்தில் இடம்பெறும் தாசியர் குலத்தைச் சார்ந்த கோதை நாச்சியார், தனது குலத்தொழிலை விடுத்துத் தன் மகள் கல்வி கற்று உயர்நிலையை அடைய வேண்டும் என்று கருதுவதோடு, சமூக மாற்றம் கல்வியால் மட்டுமே ஏற்படும் என்பதனைத் தனது செயல்வழி காட்டுகிறாள். கல்வியால் மட்டுமே தன் சமூகத்தின் இழிநிலை மாற்றம் பெறும் என்பதனை உணர்ந்து தன் மகளை மேல்நாட்டுக் கல்வி பயில அனுப்பிவைக்கிறாள். இதனை,

> "கோதை நாச்சியாரைப் பொறுத்த மட்டில், தனக்குக் கிடைக்க வாய்ப்பில்லாமல் போன மேல்நாட்டுக் கல்வி தனது மகளுக்குக் கிடைக்க வேண்டும் என்று பெரிதும் விரும்பினார். எனவே, தனக்கும் தன் குடும்பத்தார்க்கும் தொழில் முறையாகவும், பரம்பரைப் பரத்தையாகவும் வந்த சதிர் கலையையும் இசையையும் மகள் வடிவாம்பாளுக்குப் பயிற்றுவித்த போதிலும், மேலைநாட்டுக் கல்வி பெற வேண்டும் என்பதற்காக வேண்டி கிறிஸ்துவ மெஷினரியார் நடத்திய உயர்நிலைப் பள்ளியில் சேர்த்துவிட்டார்."[33]

என்று காட்சிப்படுத்துகிறார் டி. செல்வராஜ். இதில் கோதை நாச்சியின் மகள் உயர்கல்வியைப் பெற்றதால் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றுவதனைக் காட்டி, கல்வியால் எத்தகு மேன்மையைப் பெறலாம் என்பதனை நிகழ்வுகளின் போக்கில் எடுத்துரைக்கிறார்.

தொழிலாளர்களுக்குக் கல்வி அவசியம் என்பதனை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் அனைத்தும் காட்டுகின்றன. கட்டிடத் தொழிலாளர்கள் படிப்பறிவு பெறாமையினால்,

சமுதாயத்தில் அவர்களுக்குள்ள உரிமைகள் தெரியாமலேயே போய்விடுகிறது. சுசீலா என்னும் பெண் எம்.ஏ. வரை படித்து ஆராய்ச்சி செய்து பட்டம் பெற்றுள்ளவள். அவள்தான் இத்தொழிலாளிகளிடம் நிறைந்துள்ள அறியாமையைப் போக்குகிறாள். கல்வி பயில்வதன் அவசியத்தையும் படிப்பதால் கிடைக்கும் நன்மைகளையும், தொழிலாளர்களுக்கு அறிவுறுத்துகிறாள். இதுவரை தாம் அனுபவித்து வந்த இழிநிலை கல்வியால் மாற்றம் பெறும் என்ற நம்பிக்கையினைக் கட்டடத் தொழிலாளர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். இதனை நிகழ்வுகளாக்கிக் காட்டுகிறார் திலகவதி.

'கற்பதால் அறியாமை அகலும்' என்பது பொதுவுடைமை வகுத்தளித்த புதுப்பாதை ஆகும். ஒருவன் தன் நிலையிலிருந்து மேலெழுந்து வருவதற்குக் கல்வி மட்டுமே துணைநிற்கும். யாராலும் அழிக்க இயலாதது, அபகரிக்க முடியாதது கல்வி மட்டுமே. கல்வியால் மேன்மைபெற முடியும் என்பதனை,

> "பொன்னுசாமி அதிகமாக ஊரில் தங்காதவன், கொஞ்சம் படித்தவன். படிக்கும்போதே நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கப் போராடிய கட்சியில் இருந்தான். பிறகு வேறு கட்சி, இப்போது அந்தக் கட்சியில் பெரிய மனிதன். நல்ல வருமானம். மந்திரியை அழைத்து வந்து பெரிய பள்ளிக்கூடம் திறந்தான். காலனி வீடு கட்டினான். இப்போது தெருத்தெருவாக கிராவல் மண் அடித்துக் கொண்டிருக்கிறான்"[34]

என்னும் பகுதியால் எடுத்துரைக்கிறார் இமையம்.

**தொழிற்கல்வியும் வேலைவாய்ப்பும்**

தொழிற்கல்வியும் வேலைவாய்ப்பும் தொழிலாளர்களின் தொடர்ச்சியான போராட்டத்தால் விளைந்தவை ஆகும். இதனால் விளைந்த நன்மைகளை, "அமைப்பு சாராத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் நலனைப் பாதுகாப்பதற்கு அரசு முன்னுரிமை வழங்கியுள்ளது. அமைப்பு சாராத் தொழிலாளர்களுக்கு சமூகப் பாதுகாப்பு வழங்குவதற்காக தமிழ்நாடு கட்டுமானத் தொழிலாளர் நல வாரியம், தமிழ்நாடு உடலுழைப்புத் தொழிலாளர் சமூகப் பாதுகாப்பு நல வாரியம் போன்றவற்றுடன் மேலும் 12 நல வாரியங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்வாரியங்களால் செயல்படுத்தப்படும் முக்கியமான நலத் திட்டங்களாவன: 10ஆம் வகுப்பு, 12ஆம் வகுப்பு தேர்ச்சி பெற்ற, முறையான பட்டப் படிப்பு, முறையான பட்ட மேற்படிப்பு, தொழிற்கல்வி பட்ட மேற்படிப்பு, தொழிற் பயிற்சிப் பள்ளிகள் அல்லது பல்தொழில் பட்டயப் படிப்பு பயிலும் மாணவர்களுக்கு கல்வி உதவித் தொகை வழங்குதல், விபத்துக் காப்பீட்டுத் திட்டம், இயற்கை மரணம், ஈமச்சடங்கு செலவுகளுக்கு உதவித் தொகை வழங்குதல், திருமணத்திற்கும், மகப்பேற்றிற்கும் உதவித் தொகைகளும், மூக்குக் கண்ணாடி வாங்க உதவித் தொகைகளும் வழங்குதல் ஆகியனவாகும்"[35] என்று தொழிலாளர் நலவாரிய அறிக்கை குறிப்பிடுகிறது. தொழிலாளர்களின் தொடர்ச்சியான போராட்டத்தால் அரசால் ஏற்படுத்தப்பட்ட நன்மைகள் இதுவாகும்.

உழைக்கும் தொழிலாளர்கள் தன்முனைப்புடன் செயலாற்றுவதற்கும், அரசின் உதவித்தொகைகளைப் பெற்று சுயமாகத் தொழில் தொடங்குவதற்கும் தொழிற்கல்வி படிக்க வேண்டும். அப்போதுதான் தன்னைப் போன்ற பலருக்கும் தான் ஒரு முன்னுதாரணமாக இருந்து வழிநடத்திச் செல்ல முடியும். தொழிற்கல்வியின் அவசியத்தைக் 'கல்மரம்' புதினத்தில் எடுத்துரைக்கிறார் திலகவதி. தொழிற்கல்வியை ஆண் பெண் இருவரும் படித்துப் பயன்பெறலாம் என்பதனை,

"ராகினிக்கும், காவேரிக்கும் மேஸ்திரி டிரெயினிங்குக்கு இடம் கிடைச்சிருக்கு"[36]

என்னும் பகுதி வாயிலாக அறியலாம். முறையான தொழிற்கல்வியைப் பெற்றவர்களால் அரசின் நலத்திட்டங்களைப் பெறமுடியும். தொழிற்கல்வி ஆண்-பெண் இருவருக்கும் பொதுவானதாக உள்ளதால், பெண்களும் சுயமாகத் தொழில் தொடங்கவும், வாழ்க்கையை முன்னேற்றப்பாதையில் மேல்நோக்கிச் செல்லவும் முடியும் என்பது, 'கல்மரம்' புதினத்தில்,

> "நாம்பயெல்லாம் கடைசி வர பொம்பளைங்கிறவ சித்தாள் வேலக்குத்தான் லாயக்கானவங்க'ன்னு நெனச்சுக்கிட்டிருக்கோம். பொம்பளங்க கொத்தனார்கூட ஆவலாமாம்"[37]

என்று எடுத்துரைக்கப்படுகிறது.

சமூக மாற்றத்திற்கான கல்வியை, வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தரும் கல்வியைப் பொதுவுடைமை இயக்கம் ஆதரிக்கிறது. மூட நம்பிக்கைகளை வளர்க்கும், அறிவியலுக்கு ஒவ்வாத கல்வியைப் புறந்தள்ளுகிறது. மானுட வளர்ச்சிக்கும் தன்முனைப்பிற்கும், சிந்தனைத் தெளிவிற்கும், சமத்துவத்தை வளர்த்தெடுப்பதற்கும் உதவும் கல்வியே காலத்திற்கு ஏற்றது என்ற பொதுவுடைமை இயக்கச் சிந்தனையை எடுத்துரைப்பதாக ஆய்வு மேற்கொண்டுள்ள புதினங்களில் நிகழ்வுகள் அமைந்துள்ளன.

**மார்க்சியக் கல்வி புகட்டுதல்**

மானுட விடுதலைக்கான முன்னெடுப்புக்களை மார்க்சியம் கற்றுத் தருகிறது. மானிட பேதம், சமுதாய விடுதலை, பாலின பேதங்களை அகற்றி பொதுமைச்சமுதாயம் காண்பதற்கான வழிகளை விஞ்ஞானப் பூர்வமாகக் கற்றுத் தருகிறது. மார்க்சிய நூல்களைக் கற்றறிவதாலும், மார்க்சிய அறிஞர்களோடு உரையாடுவதாலும் மார்க்சியத்தில் தெளிவுபெறலாம். விடுதலை உணர்ச்சியை, மனித விடுதலையை மார்க்சியம் ஒன்றே பெற்றுத் தரும் என்பதனைத் தொழிலாளர்களுக்கு உணர்த்துபவராகத் தொழிலாளர் சங்கத் தலைவர் வேலாயுதம் திகழ்வதை 'தோல்' புதினம் எடுத்துரைக்கிறது. அவரது மார்க்சியக் கல்வி புகட்டும் செயல்பாடு,

> “வேலாயுதம் அவர்கள் இருந்த சிறைக்கொட்டடியை ஒரு கல்விச்சாலையாக மாற்றியிருந்தார். வறுமையின் காரணமாகப் பள்ளிக்கூடமே போக முடியாத பரிதாப நிலைமையில் இருந்த ஓசேப்புக்கும் மினிசாமிக்கும் இருதயசாமி கல்வி புகட்டும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார்.”[38]

என்பதன்வழி புலப்படுகிறது. சிறைச்சாலை மனிதர்களைப் புடம்போட்ட சிற்பங்களாக மாற்றுவதோடு, மானுட வளர்ச்சிக்குத் துணைநிற்கும் அறிஞர் -களாகவும் ஆவதற்குத் துணைசெய்துள்ளது. சிறைச்சாலையிலேயே ஏராளமான சிந்தனைகள் உருப்பெற்றுள்ளன. சிறைச்சாலை மார்க்சியத் தோழர்களுக்குக் கல்வி புகட்டும் அறச்சாலையாகத் திகழ்ந்த திறத்தை,

> “சங்கரன் ஜெயிலரின் அனுமதி பெற்று, வேலாயுதம் படிப்பதற்காகத் தத்துவார்த்தப் புத்தகங்களைக் கொண்டு வந்து கொடுத்ததுடன் இருதயசாமி படிப்பதற்கும். ஜெபம் செய்வதற்கும் பைபிளும், வேதநாயகம் பிள்ளை கீர்த்தனம் அடங்கிய பாட்டுப் புஸ்தகத்தையும் ஓசேப்பும் மினிசாமியும் ஆரம்பக்கல்வி பயில்வதற்காக தமிழ் ஆங்கிலப் பாடப்புத்தகங்களையும் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனதற்குப் பின்பு அவரது வாழ்வில் ஏதோ புதிய ஒளி பரவுவதாக இருதயசாமி உணர்ந்தார்”[39]

என்று ‘தோல்’ புதினம் காட்டுகிறது. இவற்றோடு சிறைச்சாலை தந்த அனுபவங்களைச் சங்கரன் வாயிலாக,

> “சிறைக்கொடுமைகளை எதிர்த்துப் போராடும் அதேவேளையில் அவர்களால் சிறைக்கூடம் அறச்சாலையாகவும், கல்விக்கூடமாகவும் மாற்றம் பெற்றிருந்தது. தான் படிக்கவிட்டுப் போன தத்துவார்த்தப் புஸ்தகங்களைப் படிப்பதற்கான வாய்ப்பும் சங்கரனுக்கு ஏற்பட்டிருந்தது.”[40]

என்று எடுத்துரைக்கிறார் டி. செல்வராஜ்.

தான் படிக்கவிட்டுப் போன தத்துவார்த்த புத்தகங்களைப் படிப்பதற்கான வாய்ப்பு சங்கரனுக்குக் கிடைத்ததாகவும், சங்கரனைப் போன்றவர்கள் சிறைச்சாலையில் பிறரோடு பழகினால் அவர்களும் அதைப் போல் ஆகிவிடுவார்களோ என்ற ஐயத்தினால், காவல்துறையினர் சங்கரனை மதுரை, சேலம், கடலூர் எனச் சிறைச்சாலைகளுக்கு மாற்றிக் கொண்டே இருந்தனர். இத்தனை அவலங்களும் இன்னல்களும் ஏற்பட்டிருந்த போதும் மாதர் சங்கப் பெண்களும், தொழிலாளர் தலைவர்களும், சங்க நிர்வாகிகளும் மனம் தளராமல் ஒன்றுபட்டு நின்றதை டி. செல்வராஜ் ‘தோல்’ புதினத்தில் பல இடங்களிலும் பதிவு செய்துள்ளமை சிறப்பாகக் குறிக்கத்தக்கது

சமூகப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணக்கூடிய கல்வி முறையையே பொதுவுடைமை இயக்கம் கற்றுத்தரவேண்டும் என்று அறிவுறுத்துகிறது. மானுட சமூகம் பொதுமைப்பட்ட

வாழ்வியலுக்குள் தன்னை இணைத்துக் கொள்ள வேண்டும் என்றால் அனைவருக்குமான பொதுவுடைமைக் கல்வி உருவாக்கப் பட வேண்டும் என்று அறிவுறுத்துகிறது. பொருளாதார சமூகப் பிரச்சினைகளுக்கு தீர்வுகாண, முழுமையாக வளர்ச்சி பெற்ற மனிதர்களை வளர்த்தெடுக்க, கல்வியும் உற்பத்தி உழைப்பும் திட்டமிட்டு இணைக்கப்பட்ட பல்தொழில்நுட்ப கல்வியை அடிப்படையாகக் கொண்டு கல்வி அமைப்பு உருவாக்க வேண்டுமென கூறியதுடன், சோஷலிச சோவியத் யூனியனில் அதை வளர்த்தெடுத்தும் காண்பித்தார் மாமேதை லெனின்.

பொதுவுடைமைக் கல்வியின் தேவையினை உணர்ந்த தேசியத் தலைவர்கள் பலரும் இதற்கான முன்முயற்சிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர். மாற்றாக கல்வியின் உள்ளடக்கம் - பயிற்றுமொழியைக் குறித்தெல்லாம் விடுதலைப் போரில் பங்கெடுத்த தேசியத் தலைவர்கள், காங்கிரஸ்காரர்கள், கம்யூனிஸ்டுகள் கூர்மையான கருத்துக்களை, விமர்சனங்களை முன்வைத்து வந்தனர். ஒரு சில இடங்களில் அதைப் பரிசோதனையாகவே செய்து காட்டவும் முயன்றனர். ஜோதிராவ் பூலே, சாவித்திரி பாய் பூலே தொடங்கி தாகூர், காந்தி, பெரியார், அம்பேத்கர், சிங்காரவேலர் உள்ளிட்ட பலர் கல்வித் தளத்தில் ஆற்றிய பங்கு குறிப்பிடத்தக்கது.

**பொதுவுடைமைக் கல்வியின் பயன்**

மனிதன் மனிதனாக வாழக் கற்றுக் கொடுக்கிறது பொதுவுடைமை இயக்கம். எல்லாவற்றையும் அப்படியே எந்தவிமான மறுப்பும் இன்றி ஏற்றுக் கொள்வதையும், எதனையும் ஆய்வுக்கு உட்படுத்தாமல் செயல்படுத்துவதையும் மறுக்கிறது. மனித வளர்ச்சிக்கு உகந்தவற்றைச் சிந்திக்க வைப்பதையும் செயலாற்றுவதையுமே பொதுவுடைமைக் கல்வி வலியுறுத்துகிறது. இதனை விவசாயக் கூலிகளுக்கு அறிவுறுத்துவதாக,

> "மனுஷனுக்குக் கொஞ்சமாவது சொரணை வேண்டாமாடா? விக்கணும்னு சொன்ன ஒடனே கோயில் மாடுக மாதிரி தலையாட்டிறதுதானாடா? விக்க விடமாட்டோம், அப்படி வித்தாலும் எங்களுக்குத்தான் விக்கணும் ரூவாயக் கொஞ்சம் கொஞ்சமா அஞ்சாறு தவணையில அடச்சிருவம், நாங்க இத்தன வருசம் பாடுபட்டவங்க, வேற எவனும் வாங்கட்டும் பார்ப்பம், அப்பிடினு ஒரு பயலாவது சொல்வாம்னு பார்த்தன்.... எல்லாப் பயல்களும் முட்டாப்பயலாத் தான் இருக்கான். சரி அதுதான் போகட்டும், கையெழுத்து, ரேக கேக்கனே எதுக்குனு ஒரு பயலாவது கேட்டா என்னடா? பைத்தியக்காரப் பயகளா இப்பிடி இருந்தா நீங்க இப்பிடியே இருக்க வேண்டியதுதான், ஒரு காலத்துலயும் முன்னேறிக்கிர மாட்டங்க..."[41]

என்னும் பகுதி அமைந்துள்ளது. விவசாயக் கூலித் தொழிலாளர்களின் வாழ்வியலில் வறுமையும் அடிமைத்தனமும் நிறைந்துகிடப்பதற்கு அவர்களின் அறியாமை ஒன்றே காரணம் என்பதும் அதுவே முதலாளிகளுக்கு மூலதனம் என்பதும் இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

சமூகத்தில் நிலவும் இழிநிலை மாறவேண்டும் என்றால் கல்வி ஒன்றே அதற்குத் தீர்வாக இருக்கும் என்பதனை உணர்ந்த பொதுவுடைமை இயக்கச் சார்புடைய தோழர்கள் பல்வேறு போரட்டங்கள் நிகழ்த்திய பின்னரே கல்வி பயிலும் வாய்ப்பினை விவசாயக் கூலிகள் பெற்றனர். இந்த இழிநிலைக்கு எதிராக சமூக சீர்திருத்தப் போராளிகள் தொடுத்த இடைவிடாத சித்தாந்தக் அறப்போராட்டங்கள் வாயிலாகவே, ஒடுக்கப்பட்ட பிரிவினர் கல்வி வாசனையை நுகர முடிந்தது என்று கூறலாம்.

தொழிலாளர்களும், விவசாயக் கூலிகளும் பொதுவுடைமைச் சித்தாந்த அறிவினைப் பெற்றமையால் அவர்கள் வாழ்வில் ஏற்பட்ட எழுச்சிகளையும், ஏற்றங்களையும், பெற்ற மாற்றங்களையும் புதினங்கள் காட்டுகின்றன. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்களில் இடம்பெறும் மாந்தர்களில் எவரேனும் ஒருவர் பொதுவுடைமைச் சித்தாந்தத்தால் ஈர்க்கப்பட்டவராகவும், தான் பெற்ற பொதுவுடைமைச் சிந்தனையைத் தொழிலாளர்களிடம் எடுத்துரைத்து அவர்களை ஊக்கப்படுத்துபவர்களாகவும் பங்காற்றியிருப்பதைக் காணமுடிகிறது. இதுவே மார்க்சியம் தன் தோழர்களுக்குக் கற்றுத் தரும் படிப்பினையாகும். தாம் படித்தறிந்துகொள்வதோடு நில்லாது மற்றவர்க்கும் அது பயன்பட வைப்பதே சிறப்பு என்று அறிவுறுத்துகிறது.

‘மலரும் சருகும்’ புதினத்தில் இடம்பெறும் பட்டாளத்து ரெங்கன் பாத்திரமும், ‘கூகை’ புதினத்தில் இடம்பெறும் நடராஜ அய்யரும், ‘கல்மரம்’ புதினத்தில் இடம்பெறும் சுசீலாவும், ‘தோல்’ புதினத்தில் இடம்பெறும் சங்கர அய்யரும் பொதுவுடைமைச் சிந்தனையை வளர்த்தெடுப்பதில் தீவிரமாகச் செயலாற்றுவது காட்டப்படுகிறது. தொழிலாளர்கள் இவர்களின் சொல்கேட்டு நடந்துகொண்டமையும், அதனால் வெற்றிபெற்றதையும் நிகழ்வுகளின் போக்கில் படைப்பாளர்கள் காட்டியுள்ளனர்.

ஒரு மனிதன் தன் வாழ்வில் மேன்மேலும் பின்னோக்கிச் சென்று உழன்று கொண்டிருப்பதற்கும், அடிமைச் சங்கிலியில் சிக்கித் தவிப்பதற்கும் அவனிடம் நிறைந்துள்ள தாழ்வு மனப்பாங்கே காரணமாக அமைந்திருக்கிறது. தாழ்வு மனப்பாங்கை அகற்றும் பணியினையே எப்பணிக்கும் முதற்பணியாக மேற்கொண்டு செயலாற்றுகிறது மார்க்சியம். அதற்கு மார்க்சியக் கல்வி பெருந்துணை புரிகிறது.

தொழிலாளர்களிடம் நிறைந்திருந்த தாழ்வு மனப்பாங்கைக் களைந்ததில் பொதுவுடைமை இயக்கத்திற்குப் பெரும்பங்கு உள்ளது. மக்களிடையே நிலவும் அறியாமையை அகற்றுவதன் வழியாகத் தாழ்வு மனப்பாங்கைப் போக்க இயலும். தொழிலாளர்கள் தனித்தனித் தீவுகளாக இயங்கும்போது பலவிதமான பாதிப்புக்கு உள்ளாகிறார்கள். அதனைக் களைந்து அவர்களை ஒன்றாக ஒன்றிணைப்பதன் வழியாகவே அவர்களிடம் நிறைந்துள்ள தாழ்வு மனப்பான்மையை அகற்ற முடியும் அதற்குப் பொதுவுடைமைக் கொள்கை ஒன்றே துணைசெய்யும் என்பதனைத் ‘தோல்’ புதினத்தில்,

"தோல் ஷாப்புத் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக முதலாளிகள் சங்கத்துக்கு வைத்திருக்கும் கோரிக்கைகளை விளக்கிச் சொன்னதோடு, எட்டுமணிநேர வேலை, எட்டு மணி ஓய்வு என்ற கோரிக்கைக்காக சிக்காகோ மாநகரில் தொழிலாளர்கள் நட்த்திய மகத்தான போராட்டம், தியாகம் மற்றும் சோவியத் ருஷ்யாவில் தொழிலாளர்களுக்கான அரசு நடப்பதையும், அங்கே தொழிலாளர் வர்க்கம் ஈட்டிய வெற்றிகள் பற்றியெல்லாம் பேசினார். தாங்களும் அப்படிப்பட்ட மகத்தான பாரம்பரியத்தைச் சேர்ந்தவர்கள் என்று சங்கரன் சொன்னபோது அவர்களின் தாழ்வு உணர்வு சன்னம் சன்னமாகக் கழன்று போவதாக இருந்தது"[42]

என்று எடுத்துக்காட்டுகிறார்.

'மக்கள் யாவரும் சமம்' என்ற மகத்துவத்தைக் கற்றுத் தந்தது மார்க்சியம். எந்தவொரு நிலையிலும் மக்களை உயர்வு தாழ்வு நோக்கிப் பார்ப்பதும் பிரித்தாள்வதும் இல்லை. தொழிலாளர்களை, மனிதர்களாகப் பாவித்துச் சரிசமமாக நடத்த வேண்டும் என்று அறிவுறுத்துகிறது. இதனை உணர்த்தும் விதமாகத் தனது செயல்பாடுகளையும் வகுத்துத் தந்துள்ளது.

போராட்டத்தில் கலந்துகொள்வதற்காகச் சென்ற தொழிலாளர்களையும், முதலாளிகளையும் சரிசமமாக வைத்துப் பேச்சுவார்த்தையில் ஈடுபட வைத்த நிகழ்வினையும், அக்காட்சியைக் கண்ட மக்களின் ஆச்சரியப் போக்கினையும், 'தோல்' புதினத்தில்,

"மேல்ஜாதிக்காரர்களின் வாடையே தட்டுப்படாத தூரத்தில் கைகட்டி வாய் புதைத்துக் கூனிக்குறுகித் தெண்டனிட்டுப் பணிசெய்யும் பறையர்களான அந்த அடிமைத் தொழிலாளர்கள் கலெக்டருக்கும் மற்றைய அதிகாரிகளுக்கும் சமமாக நாற்காலி போட்டு உட்கார வைக்கப்பட்டிருக்கிறார்கள். இப்படி ஒரு காட்சியை முதலாளிகள் அவர்களது வாழ்நாளில் என்ன அவர்களின் மூதாதையர்களின் வாழ்நாளிலும் கண்டது கிடையாது"[43]

என்று பதிவுசெய்துள்ளார்.

"முதலாளித்துவச் சமுதாயத்தில் உற்பத்திக்குத் தேவையான இயந்திரங்கள், கட்டமைப்பு அனைத்தும் தனிநபர் உடமைகளே. உழைப்பாளர் -களிடம் அவை இல்லாமையால் அவர்கள் தங்கள் உழைப்புச் சக்தியை விற்பனை செய்ய வேண்டிய கட்டாய நிலை உள்ளது. அவன் கொடுக்கும் கூலி என்பது தொழிலாளர்களின் உழைப்புச் சக்தியைவிட மிகக்குறைவாகவே உள்ளது. அவ்வாறு கூடுதலாக வாங்கும் உழைப்பு மிகை உழைப்பு. அந்த உழைப்புத்தான் முதலாளிக்கு லாபமாகவும், மூலதனமாகவும் வளர்கிறது."[44] அதன் விளைவுகள் முதலாளி தொழிலாளி முரண்பாடுகள் முற்றி வர்க்கப் போராட்டமாக வெடிக்கிறது. இதற்கான விடிவு தொழிலாளர்கள் அனைவரும் உழைப்பாளர் வர்க்கமாகத்

தம்மை உருவாக்கிக்கொள்வதின் வழியாகவே நிகழும் என்று பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தருகிறது.

உழைக்கும் தொழிலாளர்களை ஒன்றிணைத்ததே மகத்தான பணியாகும். மக்கள் சாதியின் பெயராலும், மதத்தின் பெயராலும் மொழியின் பெயராலும் தனித்தனித் தீவுகளாக இயங்கிக் கொண்டிருந்த காலகட்டத்தில், அவர்களைத் தொழிலாளர்கள் என்ற கருத்தியலில் ஒன்றுதிரட்டி உணர்வுப் பூர்வமாக இணைய வைத்தது.

உழைக்கும் கூலித்தொழிலாளர்கள் இதுவரையிலும் தம்மிடம் எதுவும் இல்லையென்று தங்களையே இழிவாகப் பார்த்துக்கொள்ளும் நிலை பொதுவுடைமை எழுச்சியால் மாற்றம் பெற்றமை ‘கூகை’ புதினத்தில் காட்டப்படுகிறது. தம்மிடம் பொன்னும் பொருளும் எதுவும் இல்லையென்றாலும் ஒன்றுபட்டுச் சாதிக்க வேண்டும் என்ற ஒருங்கிணைந்த ஒற்றுமை உணர்வே வெற்றியைத் தருவதாக அமைந்தது என்பதனை,

> “இயற்கையின் சுழற்சிதான் பள்ளக்குடி ஜனங்களுக்கு வயக்காடுகளைத் தந்தது. வண்டி இல்லை; மாடு இல்லை; கலப்பை இல்லை; உரமில்லை; ஏராளமான கூடை இருந்தது. மண்வெட்டி இருந்தது. கடப்பாறைக்கம்பி இருந்தது. சம்மட்டி இருந்தது. சுத்தியல் இருந்தது. பன்னரிவாள் இருந்தது. காய்ப்பேறிய கைகள் இருந்தன; உழைக்கும் தெம்பிருந்தது; திடம் இருந்தது; சாதிக்க வேண்டும் என்ற வெறி இருந்தது. சல்லி வேர்களும் ஆணிவேரும் சமபங்காளிகள் தானே!”[45]

என்று எடுத்துரைக்கிறார் சோ. தர்மன். தொழிலாளத் தோழர்களின் மன உறுதியே இழந்த யாவற்றையும் பெற்றுத் தருவதற்குரிய வலிமையைத் தரும் என்பது இதன்வழியாக அறிவுறுத்தப்படுகிறது.

தொழிலாளர்கள் ஒற்றுமையாகச் செயலாற்ற வேண்டியதன் தேவையையும், அவ்வாறு கூட்டுறவாக இணைந்து செயலாற்றுவதன் வழியாகவே முதலாளி களுக்குத் தங்கள் எதிர்ப்பினைப் பதிவு செய்ய இயலும் என்பதனையும் பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தந்தது. தொழிலாளர்கள் இல்லாமல் எந்தத் தொழிலகமும் இயங்காது என்ற அறிவுறுத்தலைக் ‘கல்மரம்’ புதினத்தில்,

> “தொள்ளாளி பொழப்பு அத்தினி கேவலமா பூடுச்சி. எப்படி தொள்ளாளியெல்லாம் மாடி வூடும் கட்டிப்புடுவாங்க பாக்கலாம். இவுங்க கையில இருக்கிற துட்டும், பாங்கியிலக்கிற துட்டும் வந்து சாரத்து மேல நின்னுக்கினு வேல செய்யுதான்னு பாக்கலாம். நம்பள அவங்களே வந்து கூப்பிட்டுத்தான ஆவணும். அப்ப நாம்ப ஒத்துமயா இருக்கணும்”[46]

என்று எடுத்துக்காட்டுகிறார் திலகவதி. தொழிலாளர்களின் குரலைச் செவிமடுக்க முதலாளிகள் தம் நிலையில் இருந்து கீழே இறங்கி வந்துதான் ஆக வேண்டும் என்பது இதன்வழியாகப் புலப்படுத்தப்படுகிறது.

தொழிலாளர்கள், காலம் காலமாக அடிமைகளாகவும், பண்ணைச் சேவகர்களாகவும் கண்மூடி, வாய்பேசா மடந்தைகளாகவும் வாழ்ந்துவந்ததன் பயனை அனுபவிக்கத் தொடங்கியுள்ளனர். முதலாளிகளின் நிலை தற்போது மாற்றம் பெற்றுள்ளது. அடக்குமுறை மற்றும் ஆதிக்கம் செய்பவர்களை ஒடுக்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. தொழிலாளர்களுக்குப் புரட்சியையும் எழுச்சியையும் பொதுவுடைமை இயக்கம் கற்றுத் தந்துள்ளது. பொதுவுடைமை வகுத்துத் தந்த புதுப்பாதை இதுவாகும். போராட்டத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள் ஒற்றுமையுடன் ஆதிக்கச் சாதியினரின் தெருக்களில் வீராவேசமாகப் பொங்கி எழுந்து கம்பீரமாக நடைபோட்டுச் சென்றதை ‘தோல்’ புதினம்,

> “தீண்டப்படாதவர்கள் என்றும் சண்டாளர்கள் என்றும் ஒதுக்கப்பட்டு எந்த வீதிகளுக்குள்ளும் தெருவுகளுக்குள்ளும் வரக் கூடாது என்றும் தடுக்கப்பட்டிருந்தனரோ, அந்தத் தெருக்கள் வழியாகவும், அந்த நகரத்தின் ராஜவீதிகளின் வழியாகவும் விலக்கப்பட்ட வெறுத்தொதுக்கப்பட்ட தாரை தப்பட்டைப் பறை மேளத்தின் நாதம் வான்முகட்டைப் பெயர்த்தெறியும் ஆங்கார ஓசையுடன் எக்களாளமிக்க அந்த மக்களின் கம்பீர ஊர்வலம் கடந்து போனது”[47]

என்று காட்சிப்படுத்துகிறது.

தவறுகள் செய்பவர் யாராக இருந்தாலும் அவர்களுக்கு உரிய தண்டனை வழங்கப்பட வேண்டும். அப்போதுதான் மீண்டும் அத்தவறு நிகழ வாய்ப்புக்கள் இல்லாத நிலை உருவாகும். இது பொதுவுடைமை கற்றுத் தந்த பாடமாகும். தோல் பதனிடும் தொழிலகங்களில் பணியாற்றும் சிறுபெண்களைத் தங்கள் உரிமைப் பொருள்களாகவும், உடமைப் பொருள்களாகவும் கருதி, தமக்குத் தேவைப்பட்ட பொழுதெல்லாம் நுகரத் தொடங்கும் பாதகர்களின் செயலைக் கண்டிப்பதன் வழியாக இச்செயல் உணர்த்தப்படுகிறது. தோல் தொழிற்சாலையில் பணியாற்றும் சிறுபெண்ணான அன்னக்கிளியை முஸ்தபா பாலியல் வன்கொடுமை செய்யும்போது அவனை அடித்து உதைக்கும் ஓசேப்பின் செயல்பாட்டினையும் அதனால் நிகழ்ந்த எதிர்வினையும்,

> “அந்த நகரத்தில் தோல் ஷாப்புத் தொழில் ஆரம்பிக்கப்பட்ட காலம் முதல் நடவாத சம்பவம். இதுநாள் வரையில் ஒரு பறையனுடைய கரம் எந்தவொரு தோல் ஷாப்பு முதலாளியின் மீதும் பட்டது கிடையாது.”[48]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ்.

தவறுகளைச் சுட்டிக்காட்டுவதும், தொடர்ந்து தவறுகளைச் செய்தால் தட்டிக் கேட்பதுமே மானுட வளர்ச்சிக்கு வழிவகுக்கும். பாதகம் செய்பவர்களை ஓங்கி உதைக்கச் சொல்லி அறிவுறுத்துகிறது மார்க்சியம். இதனை ஓசேப்பின் செயல்பாட்டின் வழியாகக் காட்டுகிறார் ஆசிரியர் டி. செல்வராஜ். ஆண்களும் பெண்களும் இணைந்து பணியாற்றும் தொழிற்சாலைக்கு உள்ளேயே புதிதாய் வேலைக்குச் சேர்ந்த பெண்களைப் பாலியல் வன்முறைக்கு உள்ளாக்கும் அவல நிலை இருப்பதனைக் கண்டு பொங்கியெழும் ஓசேப்பு, தவறு செய்யும் பாதகனைத் தட்டிக்கேட்கவும் செய்கிறான். இந்நிகழ்வினை,

> "நிலைமையின் கடுமையை உணர்ந்த மேஸ்திரி.
>
> அல்லாரும் சும்மா இருக்கையில ஒனக்கு எதுக்கு வம்பு. தோல் ஷாப்புவள்லே நடக்காத அலுவுசமா நடந்து போச்சு. பொத்திக்கிட்டு சும்மா கெடக்காம என்று நடந்த அநியாயத்தை நியாயப்படுத்த முற்பட்டபோது,
>
> 'பெத்த மவளையே கூட்டிக்கொடுத்துச் சம்பாத்தியம் பண்ணற பேமானி ஒனக்கு எப்படி ரோஷம் வரும். பருந்து கோழிக்குஞ்சியத் தூக்கிட்டுப் போரதாட்டம், பச்சை மண்ணெ கதறக் கதற சேலைய உறிஞ்சி தூக்கிட்டுப் போறான். பாத்திட்டு நிக்கச் சொல்லுதியா
>
> என்று ஓசேப்பு எரிந்து விழுந்ததைக் கேட்டு விக்கிட்டுப் போன மேஸ்திரி"[49]

என்னும் பாத்திர உரையாடலின் வழியாகக் காட்டுகிறார் டி. செல்வராஜ். தொழிலாளர்களுக்கு ஆண்மையும் வீரமும் கற்றுத்தந்தது பொதுவுடைமை இயக்கச் சிந்தனையே என்பது இந்நிகழ்வின் மூலம் காட்டப்படுகிறது.

பூமணியின் 'பிறகு' புதினத்தில் சாதியால் ஒடுக்கப்பட்ட சக்கிலியர்கள், நெடுங்காலமாக அடிமைகளாகக் கிடந்த சூழலையும் அச்சூழலில் இருந்து விடுபடத் துடிக்கும் ஒரு ஆவேசக்குரலையும் படைப்பாசிரியர் பதிவு செய்துள்ளார். இதனை,

> "பணிந்து போனால் தலையில ஏறி மோண்டுட்டே இருப்பான். நாமளும் தலை முழுகிக் குளிச்சிக்கிட்டே இருக்கணும்"[50]

என்று பதிவு செய்துள்ளார். அதுவரை ஆண்டைகளுக்குப் பணிந்தே போன அழகிரி, வறுமையில் வாழ்ந்தாலும் தாங்கள் அடிமைகளிலில்லை என்று மற்றவர்களுக்கு உணர்த்துகிறான். இதோடு அநீதிகளைக் காணும் போதெல்லாம் எதிர்ப்புக்குரல் கொடுக்கும் கந்தையாவையும் ஆசிரியர் ஒருசேரப் படைத்துக் காட்டுகிறார் ஆசிரியர். அடிமைத்தனத்திலிருந்து மக்கள் விடுதலை பெற, முதலாளித்துவத்திற்கு எதிராகக் கண்டனக்குரல் எழுப்ப வேண்டும் என்பதையும் ஆசிரியர் வலியுறுத்துவது இதனால் தெளிவாகிறது.

சக்கிலியச் சாதியைச் சார்ந்த மாடன் மாடறுக்கப் போயிருக்கிறான். அவன் மனைவி தனியே வீட்டிலிருக்கிறாள். அப்போது அப்பைய நாயக்கர் வீட்டுக்குள் நுழைந்து மாடனின் மனைவியைப் பாலுறவுக்கு அழைக்கிறான். மாடனின் மனைவி அவனிடம் மன்றாடினாலும் அவன் விடுவதாக இல்லை. அப்போது அங்கு வரும் அழகிரி அப்பைய நாயக்கரை அடித்து உதைத்து அனுப்பி வைக்கிறான். இதனால் சாதியத்திற்கு எதிரான செயல்பாடு காட்டப்படுகிறது. தவறு செய்பவனுக்குத் தகுந்த தண்டனை உடனடியாகத் தந்தால் மட்டுமே உரிய தீர்வு கிட்டும் என்பது இந்நிகழ்வின்வழி உணர்த்தப்படுகிறது. அழகிரி, மாடனின் மனைவிக்கு,

> “ஒண்ணு மட்டும் மனசுல வச்சுக்கோ. கம்பக் கக்கத்துல தூக்கிட்டு அலையிற வெரைக்கும்தான் அவன் கட செல்லும். அதுவே அவன் மண்டைக்கு நேரா ஓங்கயில என்ன செய்வான்? வகுத்துல அடிச்சா அதுதான வழியாத் தெரியுது”[51]

என்று அறிவுறுத்தி, பாதகச் செயலுக்கு எதிர்வினையாற்றச் சொல்லித் தருகிறான். ஒவ்வொரு வினைக்கும் சரியான எதிர்வினையே சரியானது என்பது இங்குக் காட்டப்படுகிறது. பெண்களுக்குத் துணிவைக் கற்றுத்தந்தது மார்க்சியம் என்பது இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

அடிமைப்பட்டும் சிறுமைப்பட்டும் ஆதிக்கச் சாதிகளின் அடக்குமுறைகளுக்கு அடங்கியும் ஒடுங்கியும் வாழ்ந்த தொழிலாளர்கள் இன்றைக்கு எழுத்தறிவும், ஏட்டறிவும் பெற ஆரம்பித்துவிட்டனர். ஒற்றுமையின் வலிமையை உணரத் தலைப்பட்டுள்ளனர். ஒற்றுமையின் விளைவால் தொழிலாளர்கள் வாலிபர் சங்கங்கள், விவசாயச் சங்கங்கள் அமைத்துக் கொண்டு அதன்வழி சட்டப் படியாகக் கிடைக்க வேண்டியவற்றைப் பெறுவதற்குத் துணிந்துவிட்டனர். கல்வியறிவும் அதன்வழிப் பெறப்பட்ட தொழிலாளர் உரிமைச் சிந்தனையும் அவர்களை, அவர்களது உரிமைகளைப் பெறுவதற்கான வழிமுறைகளைக் கற்றுத் தந்துள்ளன. ஆதிக்கச் சாதியினர், தங்கள் வல்லாண்மையால் தங்களை அடக்கமுயலும்போது, இவர்கள் காட்டும் எதிர்ப்புணர்வு அவர்களைப் பின்னுக்குத் தள்ளவே செய்துள்ளது என்பது மறுக்கவியலாத உண்மை.

விவசாயிகளின் ஒற்றுமையால் பண்ணை முதலாளிகள், குத்தகைதாரர்கள் கலங்க ஆரம்பித்துவிட்டனர். இதுவரை தாங்கள் மட்டுமே ஏகபோகமாக அனுபவித்து வந்த சுகபோகங்களை, இழக்கும் நிலைக்குத் வந்துவிட்டனர். தாங்கள் வைத்ததே சட்டம்; தாங்கள் அளிப்பதே சம்பளம்; என்ற நிலைமை மாற்றம் பெற்றுள்ளது. இந்த மாற்றத்திற்கெல்லாம் காரணம் பொதுவுடைமைச் சிந்தாந்த வளர்ச்சியே என்பது ‘செந்நெல்’ புதினத்தில்,

> “ஓழைச்சுப்பாட்டுக்குத் தீனி இது தான்னு போட்டு தங்களோட அலைக்கட்டுக்கு மீறிடாமல் பார்த்துக்கிட்டு வந்த ஏகபோகம் இப்ப களைஞ்சிடுமோங்கிற பயமும் நாளாவட்டத்தில வந்திருக்கு. சில விவசாயத் தொழிலாளிங்க அப்படி இப்படி

சலசலப்பு செஞ்சி கேள்விகேக்க ஆரம்பிக்கிறதுதான் பண்ணக்கட்டால தாங்க முடியல. அந்த வலிய வெளிய காட்டி இன்னும்… உள்ளங்கை இடத்தில கட்டிருக்கிற குடிசைதான் உனக்குச் சொந்தமா இருக்கலாம். அதுக்கு மேல நீ யோசிக்காதே'ன்னு பண்ணை சொல்லியும் சிலரு எகணைக்கு மொகனையா பேசுறப்ப பண்ணைக்கட்டு ஆடித்தான் போவுது."[52]

என்னும் செயல்பாட்டின் மூலம் காட்டுகின்றார் சோலை. சுந்தரபெருமாள்.

ஆண்டாண்டுகளாக அடிமைகளாகவே வாழ்ந்து பழகிய மக்கள் ஒரே நாளில் எதிர்த்து நிற்பது முதலாளிகளுக்குக் கலக்கத்தை ஏற்படுத்தியது. தொழிலாளர்கள் எதுவந்தாலும் எதிர்த்து நிற்பது என்ற எதிர்மனநிலைக்குச் சென்றதைக் 'கூகை' புதினத்தில்

"என்ன செய்வாக அடிச்சுக் கொல்லத்தான செய்வாக, கழுத நித்தம் செத்துப் பிழைக்கறதுக்குப் பதிலு ஒரே நாள்ல செத்திட்டுப் போறது."[53]

என்று எடுத்துரைக்கப்படுகிறது.

காலம் காலமாகத் தாழ்த்தப்பட்ட மக்களின் உடைமைகளையும், உரிமைகளையும் தனக்கானதாக மட்டுமே வைத்துக் கொண்டு அவர்களின் பெண்களையும், நிலங்களையும், சொத்துக்களையும் அபகரித்துவந்த கூட்டத்திடம் கைகட்டி, வாய்பொத்தி, மௌனிகளாய் இருந்த இழி நிலையை மாற்றிக் காட்டியது பொதுவுடைமை இயக்கம்.

'கூகை' புதினத்தில் இடம்பெறும் செந்தூர்ப்பாண்டியன் ஆதிக்கச் சாதியின் குறியீடாகத் திகழ்கிறான். ஊரில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்த்த மக்களை அடிப்பதும், வதைப்பதும், அவர்களிடம் உள்ள பொருள்களைச் சூறையாடிப் பிழைப்பதும், அவர்களின் பெண்களைத் தன் உரிமைப் பொருளாக்கிக் கொண்டு அனுபவிப்பதுமாக இருக்கிறான். அவனது செயல்களால் பொன்னும் பொருளும் இழந்து தவிக்கும் அப்புச்சுப்பன், அவனது அடாவடிச் செயல்களைப் பொறுக்க வொண்ணாமல் அவன் கேட்ட பொருள்களைத் தர மறுக்கிறான். இதனால் செந்தூர்பாண்டி அப்புச்சுப்பனிடம் கத்தியைக் காட்டி மிரட்டுவதோடு, அடிக்கவும் செய்கிறான். அதுவரைப் பொறுமையாக இருந்த அப்புச்சுப்பன் வெகுண்டெழுந்து செந்தூர்பாண்டியைத் தாக்குகிறான். எதிர்த்தாக்குதலில் செந்தூர்பாண்டி இறந்துபோகிறான். அதுவரை அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்த மக்களுக்கு விடிவினை ஏற்படுத்தித் தருகிறான். இந்நிகழ்வை,

"ஏன்டா தாயிளி திருப்பி அடிக்கவா செய்ற?

செந்தூர்ப்பாண்டியன் ஒரே பாய்ச்சலில் கடைக்குள் தாவிக்குதித்து உள்ளே புகுந்தார். முழுவெறியுடன் ஆக்ரோஷமாக ஓங்கி வெட்டினார். பலகையால் தடுத்தபடியே ஒதுங்கிக் கொண்டான் அய்யனார். குறி தவறிய அரிவாள் கண்ணாடிப் பாட்டில்களை

> நொறுக்கித் தள்ளியது. அடுத்த வினாடி பலகையின் விளிம்பு செந்தூர்ப்பாண்டியின் நெற்றியைப் பிளந்தது. அரிவாளைக் கீழே போட்டுவிட்டு இரு கைகளாலும் நெற்றியைப் பிடித்தபடி உட்கார்ந்தார். அடுத்த அடியில் உச்சந்தலை இரண்டாகப் பிளந்தது. இரத்தத்தில் குழைத்த மூளை தராசுத்தட்டில் விழுந்து சிதறியது. அப்புச்சுப்பன் வீட்டிலிருந்து வேகமாய் ஓடிவந்தான். கீழே கிடந்த அரிவாளை எடுத்துத் தலையைத் துண்டித்தான்."[54]

என்று காட்சிப்படுத்துகிறார் சோ. தர்மன். இச்செயலுக்குப் பின்னர் ஆதிக்கச் சாதியினர் தாழ்த்தப்பட்ட மக்களிடம் அடங்கியும் பயந்தும் வாழத் தலைப்பட்டது காட்டப்படுகிறது.

**தொழிற் சங்கம் அமைத்தல்**

"உடைமை வர்க்கம் x உழைப்பை மட்டுமே மூலதனமாகக் கொண்ட உழைக்கும் வர்க்கம் எனச் சமூகம் பிளவுபட்ட பொழுது இல்லாதவர்களை உடைமையாளர்கள் சுரண்டவும் அடிப்பமைப்படுத்தவும் முற்பட்டனர். இதன் விளைவாக வர்க்க ரீதியான முரண்பாடுகள் தோன்றி வந்தன. இந்த முரண்பாடுகள் தீவிரமாகின்ற பொழுது போராட்டம் தவிர்க்க முடியாததாகிறது. ஆனால் வலிமை மிக்க சுரண்டும் வர்க்கத்தை எதிர்கொள்ள வலிமையற்ற தனி மனிதனால் இயலாது. எனவே, ஒடுக்கப்பட்ட, அடித்தள மக்கள் ஒன்றிணைவதன் மூலமாகவே ஆதிக்கச் சக்திகளை எதிர்கொள்ள முடியும. இவ்வாறு ஒடுக்கப்பட்ட மக்களின் ஒன்றிணைவிற்கு உதவும் நோக்கில் சங்கங்கள் தோன்றின எனலாம்"[55] என்னும் கூற்று தொழிலாளர் சங்கம் தோன்றியமைக்கான வரலாற்றுப் பின்புலத்தைக் காட்டுகிறது.

நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படையான உரிமைகளுள் ஒன்று தொழிலாளர்கள் சங்கம் ஒன்றினை அமைத்துத் தங்கள் உரிமைக்காகப் போராடலாம் என்பதாகும். அது தொழிலாளர் நலன் காக்கும் அமைப்பாகத் திகழ்கிறது. அது தனி ஒரு தொழிலாளி பாதிப்புக்கு உள்ளாகும்போது கூட்டு மனிதப் போரட்டத்தின் வழியாகப் பிரச்சினைக்குத் தீர்வு காணவழிவகை செய்கிறது. படித்தவர்களுக்குத் தான் சங்கம் எல்லாம் என்று அறியாமையில் கட்டடத்தொழிலாளர்கள் இருப்பது கல்மரத்தில்,

> "படிச்சவுங்களுக்குத்தான் வெவரமா சங்கம்லாம் வைக்கத் தெரியும். எதுனாச்சும் உருப்படியா பண்ண முடியும். படிச்சவுங்க என்னாத்துக்கு கொல்லு வேலக்கு வரப்போறாங்க..."[56]

என்று எடுத்துரைக்கப்படுகிறது. தொழிலாளர்கள் எவ்வாறு ஒன்றிணைந்து சங்கம் என்னும் குழு அமைப்பினை எப்படி உருவாக்குவது என்பதனைத் தொழிலாளர்களுக்குக் கற்றுத் தரும் பகுதியாக,

> "முதலில் ஒரு அமைப்பு ஜாதி அமைப்பாக உருவாகலாம். இந்த அமைப்பின் உள்ளடக்கத்தைப் பார்க்க வேண்டும். இவர்கள் அத்தனை பேரும் உழைப்பாளர்கள்.

உழைப்பே அவர்கள் மூலதனம். நாளாவட்டத்தில் அது வலுவான ஒரு வர்க்க ஸ்தாபனமாக உருவாகும். இந்த அமைப்புக்குள் அக்னிக்குஞ்சாக ஒரு கரு இருப்பதை நாம் உணரவேணும். எதையுமே யாந்தீரிகமாகப் பார்க்கக் கூடாது."[57]

என்பது அமைந்துள்ளது. பொதுவுடைமை வளர்த்த மாற்றுக் கருத்தியல்களால் மனம் கவரப்பட்ட தொழிலாளர்கள் சங்கம் ஒன்றை நிறுவி அதன்வழியாகப் போராடும்போதே தங்கள் பிரச்சினைகளுக்குரிய தீர்வுகள் கிடைக்கும் என்ற நம்பிக்கைக் கொள்கின்றனர். இதனை,

"காலம் காலமாக வதைபட்டுக் கேட்பாரும் எடுப்பாருமற்றுக் கிடந்த தோல் பதனிடும் தொழிலாளர்கள் தங்களின் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்காக ஒரு சங்கத்தை அமைக்கப் போகிறார்கள் என்கிற உணர்வு தொழிலாளர் மத்தியில் கரை கடந்து காணப்படுகிறது. அக்கம் பக்கத்துச் சேரி மக்களெல்லாம் பேரேடு மைதானத்தை நோக்கி அணிவகுக்கலானார்கள்"[58]

என்று எடுத்துரைக்கிறார் டி. செல்வராஜ்.

தொழிலாளர் ஒற்றுமையே அவர்கள் வாழ்வியல் பிரச்சினைகளுக்கு உரிய தீர்வினைப் பெற்றுத்தரும், ஆதிக்க விடுதலைக்கு வழிவகுக்கும். விவசாயத் தொழிலாளர் சங்கத்தால் மட்டுமே விவசாயக் கூலிகளுக்கு விடிவுகாலம் பிறக்கும் என்பதனைச் 'செந்நெல்' புதினத்தில் சோலை சுந்தர பெருமாள்,

"பண்ணை அடிச்சது போதும்மா… உழைச்சதுக்கு கைமேல காசு வாங்கிக்கிட்டு வந்து நாமும் அவங்களைப் போல மனுசனா நிக்கிறதுக்குத்தாம்மா நம்ம விவசாயத் தொழிலாளர் சங்கம் கத்துக் கொடுக்குது"[59]

என்னும் பகுதியால் புலப்படுத்துகிறார்.

தொழிலாளர்களின் தொடர்ச்சியான போராட்டத்தாலும், தொடர் முழக்கங்களாலும் தொழிலாளர்களுக்கான நல வாரியங்கள் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. தொழிலாளர் சீர்திருத்தப் பணிகள் உருவாக்கம் பெற்று, கண்காணிக்கப்பட்டு வருகின்றன. இதனை, "பாதுகாப்பான பணிச்சூழலை ஏற்படுத்துதல், தொழில் தகராறுகளை சுமுகமாகத் தீர்த்துக்கொள்வதற்கான வழிமுறைகளை வழங்குதல், குறைந்த அளவு கூலி வழங்கப்படுவதை உறுதிப்படுத்துதல், வருங்கால சேமிப்பு நிதி, பணிக்கொடை, ஊக்கத் தொகை, பிற சட்டப்பூர்வமான பயன்களைத் தொழிலாளர்கள் பெறுவதற்கு உதவுதல் ஆகியவையே தொழிலாளர் நலச் சட்டங்களின் தலையாயக் குறிக்கோள்களாகும். நடுவண் அரசின் ஒப்புதலுடன், தேவைக்கேற்ப தொழிலாளர் நலச் சட்டங்களில் திருத்தங்கள் மேற்கொள்ள இரண்டாவது தேசியத் தொழிலாளர் குழு பரிந்துரைத்துள்ளது. மனிதநேயத்துடன் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்திட வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும். இசைவான போட்டிப் பணிச்சூழலை உருவாக்குதல், உற்பத்தித் திறனுக்கு உரிய வெகுமதியளித்தல்,

மகளிரின் வருவாய் ஈட்டிடும் திறன்களைப் பயன்படுத்திடப் போதிய நெகிழ்ச்சித் தன்மையை உருவாக்குதல் என்பனவற்றையும் கருத்தில் கொள்ள வேண்டும்"[60] என்பதன் வழியாக அறியலாம்.

**போராடுதல்**

முதலாளித்துவத்தின் உச்சகட்டத்தில்தான் ஏகாதிபத்தியம் உருவாகும். அந்த ஏகாதிபத்தியம்தான் முதலாளித்துவத்தின் இறுதிக் கட்டமாகும். முதலாளித்துவச் சமுதாயத்தில் உற்பத்தி உறவு என்பது முதலாளி - தொழிலாளி என்ற முறையில் அமைவதாக மார்க்சிய விஞ்ஞானிகள் குறிப்பிடுவர். இவ்வாறான முதலாளி x தொழிலாளி ஆகியோர் வர்க்கப் போராட்டங்களைப் புதினங்கள் காட்சிப்படுத்துகின்றன.

'தோல்' புதினத்தில் ராஜதுரோகக் குற்றம் சாட்டப்பட்டுச் சங்கரன் கைது செய்யப்பட்ட போது, தோல் தொழிலாளர்களும், நகர சுத்திகரிப்புத் தொழிலாளர்களும் போராட்டத்தில் ஈடுபட்டு, சாலை மறியல் செய்ததையும், இரயில் மறியல் செய்ததையும் கண்ட காவல்துறை மிரண்டு போனதையும், மேல்சாதிக்காரனும், நகர சபை ஊழியனுமான வேலுநாயக்கனை ஒரு கீழ்ச்சாதி அதிலும் கடைக்கோடி சாதிக்காரனான மலம் அள்ளும் தொழிலாளி சுப்பவாடன், தன் சங்கத் தலைவர்களை இழிவாகப் பேசியதற்காக மலக்கழிவு நிரம்பி வழியும் வண்டியில் போய் விழும்படி அடித்தான் என்ற செய்தியைக் கேட்ட அவ்வூர் மக்கள் வாயடைத்து நின்றனர் என்பதனையும் தோல் புதினம் படம்பிடித்துக் காட்டுகிறது.

இவ்வாறான செயல்கள் எல்லாம் திட்டமிட்டு நடத்தப்பட்டவை அல்ல. அடித்தட்டு மக்களின் ஒடுக்கப்பட்ட, ஆழ்த்தப்பட்ட உணர்வுகள் ஒருநாள் கிளர்ந்தெழத்தான் செய்யும் என்பதனையே இந்நிகழ்வுகள் காட்டுகின்றன. இவை லெனின் குறிப்பிடும் வர்க்கப் போராட்டத்தின் கருப்பருவமாக அமைந்தவையாகும். இச்செயல்பாட்டின் மூல வடிவத்தை "இப்படி யாரும் உருவாக்காமலே உணர்ச்சி வயப்பட்ட நிலையில், ஒரு எழுச்சி தானே முழுமையடைந்து விடுகிறது. உணர்ச்சி வயப்பட்ட நிலையில் இப்போராட்டம் திட்டமிட்ட அரசியல் உணர்வோடு நடைபெறவில்லை. எவ்வித பொருளாதாரக் கோரிக்கைகளை முன்வைத்தும் துவக்கப்படவில்லை. மனிதத் தன்மை அற்ற முறையில் தாங்கள் நடத்தப்படுவதைக் கண்டித்து, சில உடனடி பிரச்சினைகளுக்கான தீர்வு வேண்டி, முரட்டுத்தனமான கோபத்தில் தானே வெடித்துக் கிளம்புகிறது. தெளிவான சிந்தனை அற்ற நிலையிலேயே நேற்றுவரை தாங்கள் எப்படி நடத்தப்பட்டார்களோ, அப்படி இனிமே நடக்க அனுமதிக்க முடியாது என்று அறைகூவத் தொடங்கிவிட்டார்கள். நேற்றுவரை நிலைபெற்று வந்த தொழிலாளர் சமூக உரிமைகளை இன்னொரு சவாலுக்கு உள்ளாக்கி விட்டார்கள். இதுதான் வர்க்கச் சிந்தனையின் கருப்பருவம்"[61] என்பதன் வழியாக அறிந்துகொள்ளலாம்.

'மக்கள் இயக்கமே மகத்தானது' என்பதைப் புதினங்களில் இடம் பெற்றுள்ள நிகழ்வுகள் காட்சிப்படுத்துகின்றன. பாட்டாளி வர்க்கம் தன்னை நாளும் கரைத்துக் கொண்டு

ஒரு முழுவடிவம் பெற்றதாக உருவாகிற போது, முதலாளித்துவம் அழியும்; பொதுவுடைமைச் சமுதாயம் மலரும் என்பது புதினங்களின் நிகழ்வுகளின்வழியாக உறுதிப்படுத்தப்படுகிறது.

"உணர்ச்சிப் பூர்வமான இந்த இயக்கங்கள்தான் அமைப்பு ரீதியான இயக்கங்களுக்கான முன்னோடிகள். ஒடுக்கப்பட்டவர்களும், உரிய பங்கை இழந்தவர்களும், நடத்திய இத்தகு தாமே கிளம்பிய தெளிவான சிந்தனையற்ற, தொடர்பில்லாத ஆரம்பகால நடவடிக்கைகளில் இருந்து தான் பெருந்திரளான பாட்டாளி வர்க்கத்தின், திட்டமிட்ட ஒருங்கமைக்கப்பட்ட போராட்டம் உருவெடுக்கிறது. இதுதான் வர்க்கப் போராட்டத்தின் வரலாறு." [62]

தொழிலாளர் சங்கம் என்னும் அமைப்பின் வழியாகவே தொழிலாளர்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வு கிட்டும் என்ற நம்பிக்கை இன்றைக்கு நிலைத்து விட்டது. தனிநபர் போராட்டங்கள் எடுபடாத காலகட்டத்தில் கூட்டிணைவுப் போராட்டமே தீர்வுக்கு வழிவகுக்கும் என்பதும், அதன்வழியாகக் கட்டடத் தொழிலாளர் சிக்கலுக்கு உரிய தீர்வு கிடைக்கும் என்பதும் 'கல்மரம்' புதினத்தில் காட்டப்பட்டுள்ளது. இதுவரை பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த தொழிலாளர்கள் எல்லாம் தம் முதலாளிகளின் செயல்களைத் தட்டிக் கேட்பதற்குத் துணிந்துவிட்டனர் என்பதனை,

> "தப்புப்பண்ணா தண்டன தரட்டும். வேண்டாங்கல. ஆனா, எடுத்த எடுப்பில தொழிலாளி மேல கைய நீட்டறது அவங்கள வாய்க்கு வந்தமாதிரி திட்டுறதுங்கறதெல்லாம் மோசமான சமாசாரம். இத இப்படியே விட்டுரக் கூடாது"[63]

என்னும் பகுதியால் காட்டுகிறார் திலகவதி.

தொழிலாளர்களின் தொடர்ப்போரட்டங்களால் எங்கெல்லாம் அடிமை முறை இருந்துவருகிறதோ, அவற்றை அகற்றும் பணியை அரசு முனைப்புடன் செயல்படுத்தி வருகிறது. தொழிலாளர்களை அடிமையாக முறி எழுதி வேலைக்கு அமர்த்திக் கொள்வது சட்டப்படி குற்றம் என்று அரசாணையையும் வெளியிட்டுவிட்டது. இச்செயல்பாட்டுக்கு அடித்தளமாக அமைந்தது பொதுவுடைமை இயக்கத்தின் தொடர்ப்போராட்டச் செயல்பாடுகளே ஆகும்.

'தோல்' புதினத்தில் இடம்பெறும் ஓசேப்பின் தொடர்ச்சியான எதிர்ப்பாலும் தொழிலாளர்களின் ஒன்றிணைந்த போராட்டத்தாலும் தொடர் முழக்கங்களாலும், முதலாளிகள் தொழிலாளர்களை அடிமைப்படுத்தி, முறி எழுதிக் கொண்டு வேலைக்கு அமர்த்திக் கொள்வது முற்றிலுமாக அழிக்கப் பட்டது என்பதை,

> "தோல் ஷாப்பு முதலாளிகளால் தொழிலாளர்களை முன்னைப் போல் கொத்தடிமைகளாக நடத்த முடியவில்லை. பட்டினி கிடந்தால் அவர்கள் பணிக்குத் திரும்பிவிடுவார்கள் என்ற முதலாளிகளின் எதிர்பார்ப்பெல்லம் பகல் கனவாகிப்

போய்விட்டது. அடிமைச் சாசனமான முறிச்சீட்டுக்கு மொத்தமாக முடிவு கட்டப்பட்டுப் போயிற்று"[64]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ்.

மார்க்சியம் மனித விடுதலைக்கான முன்னெடுப்புகளைக் கற்றுத் தருகிறது. மனிதனை மனிதன் எந்தவொரு நிலையிலும் தாழ்த்தப்படுவதனையும், அடிமைப் படுத்துவதையும் நிராகரிக்கிறது. இதனை, 'சுதந்திரம் பிரிவு படாதது' (Freedom is indivisible) என்று கூறினார் மார்க்ஸ். அதாவது, இன்னொருவனை அடிமைப்படுத்துபவன் தான் சுதந்திரவானாக இருக்கமுடியாது. இன்னொருவனை அடிமைப்படுத்தும்போதே இவன் தன் சுதந்திரத்தை இழக்கிறான். பணம், பதவி, அதிகாரம் முதலியவற்றை அபகரித்துக் கொள்ளும் எவரும் சுதந்திரம் உடையவரென்று சொல்வதற்கில்லை. இவர்கள் பணத்திற்கும் பதவிக்கும் தம்மை இழந்தவர்கள். நான் பெரும்பட்டங்கள் பெற்றவன் என்று கருதுபவனும் ஒருவகையில் அடிமை நிலையில் உள்ளவனே."[65]

**போராட்டமே தீர்வு**

'உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்!' என்ற அறைகூவல் தொழிலாளர்களை இணைப்பதற்குரிய வாசகமாக இருந்து வருகிறது. தொழிலகங்களில் எந்தவொரு தொழிலாளிக்கும் துன்பம் நேரக்கூடாது என்பதே இதன் நோக்கமாகும். தனிமனிதத் தாக்குதல்கள் முதலாளிகளால் ஏற்பட்ட போதெல்லாம் அவற்றை எதிர்கொள்ள முடியாமல் அவர்களுக்கு அடிபணிந்து அடங்கி ஒடுங்கி வாழ்ந்த காலம் மலையேறிவிட்டது. இன்றைக்குத் தொழிலாளர்கள் சக தொழிலாளிக்காக முன்களப் பணியாளனாக வந்து நிற்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. உலகின் எங்கோ ஒரு மூலையில் ஒரு தொழிலாளிக்குத் துன்பம் நேர்ந்தது என்றால் மற்ற எல்லா தொழிலாளர்களும் ஒன்று திரண்டு போராடும் நிலைக்கு வந்துள்ளனர். பொதுவுடைமை இயக்கம் வளர்த்த உலகளாவிய சிந்தனையின்பாற்பட்டது இதுவாகும்.

தொழிலாளர் துயர் பல்வேறு போராட்டங்களின் மூலமே தீர்வாகியிருக்கிறது. உலகத் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள் என்று மார்க்ஸ், தொழிலாளர்களை ஒன்றுதிரட்டி மாபெரும் புரட்சியை அவர்களுக்குள் விதைத்தார். அடக்குமுறை -களுக்கு எதிரான போராட்டத்தை அடக்குவதற்கும், ஒடுக்குவதற்கும் ஆளும் அரசுகளும், ஆட்சியாளர்களும், அதிகாரிகளும், காவல்துறையும் எப்போதும் துணிந்து நிற்கும். இவ்வாறு யார் எதிர்த்து நின்றாலும் இலக்கை அடைவதற்குப் போராட்டமே தீர்வாகும் என்பதனை, 'செந்நெல்' புதினத்தில் இடம்பெறும் கண்ணுசாமியின் கூற்றாக,

"பாம்புல குட்டின்னும் பெரிசுன்னும் பிரிச்சுப் பாக்கவா முடியும்? ரெண்டும் எந்த நேரத்திலேயும் வெஷத்தக் கக்கிப்புடும். எதுவும் இனத்தோட இனம் சேந்திடும். இல்ல

> இனத்தோட இனம் சேர இனமே பயம் காட்டி சேத்திடும். நாமும் அப்படித்தான். நம்மோட உரிமைய வாங்க போராடித்தான் ஆவணும்"[66]

என்று எடுத்துரைக்கிறார் சோலை. சுந்தரபெருமாள்.

**சட்டத்தின் வழியாக உரிமைகளைப் பெறுதல்**

1948ஆம் ஆண்டு தொழிற்சாலைகள் சட்டத்தின்கீழும், பிற தொழிலாளர் சட்டத்தின்கீழும் பதிவு பெற்ற தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர் -களின் பாதுகாப்பு, மருத்துவ வசதி, அவர்களது நலம்பேணுதல் ஆகியவற்றில் மாநிலஅரசு பெரும்பங்கு ஆற்றிவருகிறது. அபாயகரமான பணிகள் நடைபெறும் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்களின் நலம், பாதுகாப்பு குறித்து காலமுறை ஆய்வுகள் நடத்தப்பட்டு வருகின்றன. பேரபாயமிக்க தொழிற்-சாலைகளை ஆய்வுசெய்து பேரபாயங்கள் ஏற்படாமல் தடுக்கக்கூடிய வழிமுறைகளைக் கடைப்பிடிக்க நிருவாகத்தினருக்குப் பேரபாயத் தடுப்புக் குழு பரிந்துரைக்கிறது. மாநில பாதுகாப்புத் தணிக்கைக் குழு, பெரும் விபத்து, பேரபாயத் தொழிற்சாலைகளிலிருந்து பெறப்படும் பாதுகாப்புத் தணிக்கை அறிக்கைகளைக் கூர்ந்தாய்வு செய்து, மேற்குறிப்பிட்ட தொழிற்சாலைகளில் பாதுகாப்பு, மருத்துவ வசதி, சுற்றுச்சூழல் ஆகியவற்றை மேம்படுத்த ஆலோசனைகள் வழங்கி வருகிறது. பாதுகாப்பினைப் பற்றிய ஆய்வுகள், பாதுகாப்புப் பயிற்சிவகுப்புகள் வழியாக பாதுகாப்பினை மேம்படுத்தும் செயற்பாடுகள் வளர்ந்து வருகின்றன. தொழிற்சாலைகளின் எண்ணிக்கையும், தொழிலாளர்களின் எண்ணிக்கையும் மேன்மேலும் பெருகி வந்தாலும் தொழிற்சாலைகளில் விபத்து நிகழ்வுகள் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன."[67]

தொழிலாளர்களுக்குப் பாதிப்பு ஏற்படும் காலங்களில் முதலில் வந்து அவர்களுக்கு ஆதரவுக்குரல் கொடுப்பது தொழிலாளத் தோழர்கள் தான். ஒன்றுபட்டுக் கூட்டாகச் செயலாற்றுவதன் வழியாகவே உரிமைகளைப் பெற முடியும் என்று கற்றுத் தந்தது பொதுவுடைமை இயக்கம் ஆகும். இச்சிந்தனையைப் பின்பற்றித் தொழிலாளர்கள் ஒன்றிணைந்து முதலாளிகளுக்குத் தங்கள் கோரிக்கைகளைப் பேச்சுவார்த்தையின் மூலம் தீர்ப்பதற்கு முனைந்து செயலாற்றுகின்றனர். பேச்சுவார்த்தையின் மூலமே தீர்வுகள் எட்டப்பட வேண்டும் என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொண்டு இயங்கும் இயக்கம் பொதுவுடைமை இயக்கம் ஆகும். பேச்சு வார்த்தைப் பயனிக்காத போது வேலை நிறுத்தத்திலும், போராட்டத்திலும் பங்கேற்று உரிமைப்போரில் வெற்றியை நிலைநாட்டுகின்றனர் என்பதனைத் 'தோல்' புதினத்தில்,

> "லேபர் கமிஷனர் முன்னால் நடைபெற்ற முத்தரப்புப் பேச்சுவார்த்தையின் போது தோல் ஷாப்பு முதலாளிகள் தொழிலாளர்களின் கோரிக்கையை முற்றாக நிராகரித்து விட்டதால் பேச்சுவார்த்தை முறிவுற்றுச் சங்கத்தின் சார்பில் வேலை நிறுத்த நோட்டீஸ் ஒவ்வொரு தோல் ஷாப்புக்கும் அரசுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது"[68]

என்று எடுத்துரைக்கிறார் டி. செல்வராஜ்.

**உரிய இழப்பீடு பெற்றுத்தருதல்**

தொழிலாளர்கள் தங்கள் உரிமைகளை வென்றெடுப்பதன் ஒரு கூறாகப் போராட்ட நிகழ்வுகள் நடைபெறுகின்றன. உலகத்தில் புரட்சியின் வழியாகவே உரிமைகள் வென்றெடுக்கப்பட்டுள்ளன என்பது பொதுவுடைமை இயக்கம் கற்றுத்தந்த படிப்பினையாகும். தனியொரு தொழிலாளி பாதிப்புக்கு உள்ளாகும் போது, அவனுக்காகவும் அவனது குடும்பத்திற்காகவும் மற்ற தொழிலாளர்கள் தங்கள் சுமைகளையும் வலிகளையும் துயரங்களையும் மறந்து தன்னலமின்றி, பாதிக்கப்பட்டவர்க்கு உரிய நீதி கிடைக்க வேண்டும் என்பதற்காகப் போராடுகின்றனர். அவ்வாறு தோல் தொழிற்கூடத்தில் தொழிலாளிகள் விபத்துக்குள்ளாகும் போதும், உயிரிழக்கும் போதும் இறந்த தொழிலாளிக்கு உரிய இழப்பீட்டைத் தொழிலாளர்களுக்கு முதலாளிகள் வழங்க வேண்டும் என்று போராட்டம் நிகழ்த்துகின்றனர். முதலில் கோரிக்கையாக முதலாளிகளுக்கு எழுத்துப்பூர்வமாக அனுப்பி வைக்கின்றனர். முதலாளிகள் தொழிலாளர்களின் கோரிக்கையை ஏற்கமறுக்கும் போது வேலை நிறுத்தம் செய்வதோடு, தொழிற்கூடத்தின் முன்பாகப் போராட்டங்கள் நிகழ்த்தி, தொழிலாளியின் உண்மை நிலவரத்தையும், முதலாளிகளின் எதேச்சதிகாரத்தையும் பொதுக்கூட்டங்கள் போட்டு, அதன்மூலம் தெரியப்படுத்துகின்றனர். இந்நிகழ்வினைத் 'தோல்' புதினம்,

> "சங்கத்தின் சார்பில் ஒவ்வொரு தோல் ஷாப்பு முன்னாலும் தோல் ஷாப்புத் தொழிலாளர்கள் அதிகமாக வசிக்கும் பகுதிகளிலும், கேட் கூட்டங்களும் பொதுக்கூட்டங்களும் முறையாக நடைபெற்றுக் கொண்டிருந்தன"[69]

என்று படைத்துக்காட்டுகிறார் டி. செல்வராஜ். நியாயம் கிடைக்கும் வரை போராடுவதும், போராட்டத்தின் வழியாகவே உண்மை நிலையை எடுத்துரைப்பதும் தொழிலாளர்களின் உள்ளத்திண்மையைக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. இத்தகு வலிமையான உணர்வுக்கூறுகளைத் தட்டியெழுப்பச் செய்தது பொதுவுடைமை இயக்கமே என்பது இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

தோல் தொழிற்சாலையில் தொழிலாளர்களுக்குச் சிக்கல் நேர்ந்த மாத்திரத்தில் மற்ற தொழிற்சாலைகளில் பணியில் இருந்த தொழிலாளர்கள் ஒன்று திரண்டு போராட்டத்தில் இறங்கி, தங்கள் பிரச்சினையை அரசின் கவனத்திற்குக் கொண்டு சென்ற நிகழ்வு,

> "அம்மக்களின் இதயங்களில் கனன்று கொண்டிருந்த கோபாக்கினிக்கு உருவம் கொடுத்தது போன்ற சம்பவத்தைக் கேட்ட அம்மக்கள் தங்கள் தங்களது வேலைகளை அப்படியே போட்டுவிட்டு மதுரை ரஸ்தாவில், அஸன் பாய் தோல் ஷாப்புக்கு எதிரில் குவிந்துவிட்டனர்.

எந்தவொரு தோல் ஷாப்பிலும் பணி நடக்கவில்லை”[70]

என்று காட்டப்படுகிறது.

**அரசியல் பங்களிப்பும், ஆட்சி அதிகாரப் பங்கேற்பும்**

எல்லோர்க்குமான அடிப்படைக் கல்வி, கல்வியின் வழியாகச் சிந்திக்கும் திறன், திறன் வழியிலான சுயமரியாதை, தன்முனைப்பு, தன்முனைப்பின் வழியாகத் தொழிலாளர்களை ஒன்றிணைக்கும் பணி ஆகியவற்றோடு, ஒடுக்கப்பட்ட தொழிலாளர்கள் அரசியல் பங்களிப்பினைச் செய்ய முன்வர வேண்டும் என்று பொதுவுடைமை இயக்கம் வலியுறுத்துகிறது.

எந்த ஒரு அரசியல் செயல்பாட்டிலும் நாம் உடனடி கோரிக்கையையும் இணைக்க வேண்டி இருக்கிறது பாட்டாளி வர்க்க விடுதலையே அரசியல் விடுதலை எனவும், மாந்தர் விடுதலை எனவும் இரண்டாகச் சொல்வர். வாக்குரிமை உள்ளிட்ட மனிதஉரிமைகளைப் பெறுதலை ‘அரசியல் விடுதலை’ எனவும், சமூகப் பொருளாதார ஒழுங்கமைவுகளைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதன் மூலம் கிட்டுவதை ‘மாந்தர் விடுதலை’ என்றும் குறிப்பிடுவர். எனவே வாக்குரிமை, வாழ்வுரிமை, எட்டுமணி நேர வேலையுரிமை என்கிற உடனடிக் கொள்கைகளுக்குப் போராடும்போதே, உச்சபட்சக் கோரிக்கையான சமூக, பொருளாதாரப் புரட்சியையும் இலக்காகக் கொண்டு அத்துமீறல், இடஒதுக்கீடு, இரட்டை வாக்குரிமை என்பனவற்றையும் வைத்துப் போராடி, முதலாளியம், பார்ப்பனீயம் என்கிற இலக்கைக் குறிவைத்துச் சமூகப்புரட்சி என்கிற உச்சபட்சச் செயல்பாட்டை நோக்கி முன்னேறிச் செல்வதே”[71] என்று மோகன் லார்பீர் அரசியலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

**பாட்டாளிகளின் அரசியல் பங்களிப்பு**

“புரட்சிகரமான மனிதாபிமானம், இந்தச் சமுதாயத்தின் உற்பத்தியை நடத்தும் உழைக்கும் வர்க்கம்தான் இந்தச் சமுதாயத்தையே தாங்குகிறது. எனவேதான் இந்த உழைக்கும் வர்க்கம் இந்தச் சமுதாயத்தின் ஆளும் வர்க்கமாக இருக்கத் தகுதியும் நியாயமும் உடையதாகிறது. இந்த உழைக்கும் வர்க்கத்தின் நோக்கில்தான் புதிய சமுதாயம் உருவாக முடியும்”[72] என்கிறார் ஞானி. இந்த உழைக்கும் மக்களின் திறத்தால் அரசியலில் புதுப்பொலிவு எழக்கூடும் என்பது இதன்வழியாகத் தெளிவாகிறது. இதனை மெய்ப்பிக்கும் விதத்தில் ‘தோல்’ புதினத்தில் இடம்பெறும் தொழிலாளர்கள் தேர்தலில் நின்று வெற்றிபெற்றுத் தொழிலாளர்களை நகரசபை மன்றத்துக்கு அனுப்பிவைப்பது காட்டப்படுகிறது.

தோல் பதனிடும் தொழிற்சாலைத் தொழிலாளர்களும் மற்ற பிற தொழில்களைச் செய்யும் தொழிலாளர்களும் தங்களுக்குள் ஒரு தலைமையை ஏற்று, ஒன்று கூடி தேர்தலில் பங்கேற்பதும், வெற்றிபெற்றுத் தலைவரை உருவாக்குவதும் ‘தோல்’ புதினத்தில்,

"பணபலமும் அதிகார பலமும் அவர்களுக்குக் கைகொடுக்க வில்லை. மாறாகத் தடை செய்யப்பட்ட கட்சியின் வேட்பாளர்கள் பல பேர் சிறைக்கூடத்தில் அடைக்கப்பட்டிருந்த போதும் பலபேருடைய தலைக்கு அரசால் விலை வைக்கப்பட்டுத் தலைமறைவு வாழ்க்கை நடத்தியவர்களில் பலபேர் தேர்தலில் அமோக வெற்றி பெற்றனர்"[73]

என்று எடுத்துரைக்கப்படுகிறது. மக்களுக்காக, மக்கள் நலனில் அக்கறை காட்டுகிற அரசியலே தற்போதைய தேவை என்பதும் சாமானியனிலிருந்து ஒரு தலைவன் தேவை என்பதும் இச்செயல்பாட்டின் வழியாக உணர்த்தப்படுகிறது.

**தொழிலாளர் அரசியலின் இன்றியமையாமை**

இந்தியத் தமிழகச் சூலில், தீண்டாமை, சாதியம், முதலாளியம் ஆகியவை எல்லாத் தளங்களிலும் பரவி, மனித உரிமை மீறல்கள் நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. அரசியல் மாறும் தன்மை கொண்டது. ஆனால் இங்குத் தன்னலம் கொண்ட அரசியல் தலைவர்கள் வல்லரசு நாடுகளின் கைப்பாவையாகவே செயல்படுகிறார்கள். சமுதாய அமைப்பு மாறுவதற்கோ மாற்றுவதற்கோ தடைக்கல்லாக உள்ள முதலாளித்துவம் பண்பாட்டுத் தளத்தில் வேரூன்றி ஊடுருவி உள்ளதால் மாற்றத்திற்குத் தொழிலாளர் அரசியல் பங்களிப்பு இன்றியமையாததாக இருக்கிறது. உழைக்கும் பாட்டாளி வர்க்கம் ஒன்று திரண்டு தமக்கான அரசியல் பங்களிப்பினைச் செய்வதே முறையான செயலாக இருக்கும் என்பதனைத் தற்போது உணர்ந்துள்ளனர்.

காலம் காலமாக ஆண்டைகளின் சொற்பேச்சைக் கேட்டு அவர்களுக்கே தங்கள் ஓட்டுக்களை அளித்து வந்த மக்கள் தற்போது அரசியல் களத்தில், தங்கள் எதிர்ப்புக்குரலைப் பதிவு செய்யத் தொடங்கிவிட்டனர். இதனைப் 'பிறகு' புதினத்தில்,

"ஓட்டுக்கு நிக்கப் போறது வேண்டிய ஆளுங்கீக. ஒரு மொகத் தாச்சனைக்கு வேணும்னாப் போடுவோம்...

எல்லோரும் அடங்கியிருந்தனர்.....

வில்லிசேரிக்காரர் முகம் இஞ்சிகட்டிப் போனது"[74]

என்று காட்டுகிறார் பூமணி. இனித் தங்களுக்குள் ஒரு தகுதியான தலைவனை உருவாக்க முயலும் எதிர்ப்புணர்வு இதன்வழி உணர்த்தப்படுகிறது.

அரசியல்வாதிகள் தங்கள் வாக்கு வங்கிகள் குப்பத்தில் வாழும் மக்களிடமே இருப்பதாகக் கருதி, அவர்களுக்கு இலவசமாகப் பொருள்களை அளித்து, அவர்தம் வாக்குகளை விலைபேசி வாங்கிவிடுகின்றனர். அரசியல்வாதிகளின் உண்மை நிலை அறியாமல் குப்பத்து மக்கள் அந்த அரசியல்வாதியை, வள்ளல் என்றும் மகராசன் என்றும்

போற்றும் நிலையில் உள்ளனர். இந்த இழிநிலை மாறி குப்பத்து மக்களும் சிந்திக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார் திலகவதி.

மக்களைச் சிந்திக்கவிடாமல் மழுங்கடிக்கும் கூறுகளில் ஒன்று இலவசம் என்பது. அரசியல்வாதிகள் தங்களுக்கு ஓட்டுப் போடச் சொல்லி மக்களைச் சந்திக்கின்றனர். தங்கள் செல்வாக்கைக் காட்டிக்கொள்வதற்காக இலவசப் பொருட்களைத் தந்து ஓட்டுக்களை எளிமையாகப் பெற்றுவிடுகின்றனர். ஒருமுறை பெறும் இலவசப் பொருளால் ஐந்து ஆண்டுக்கு அலையும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். பாட்டாளி மக்கள் அரசியல்வாதிகள் தரும் இலவசங்களைத் தவிர்த்து, உண்மையான தலைவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதனைக் 'கல்மரம்' புதினத்தில் இடம்பெறும் சுசீலாவின் குரல்வழியாக,

> "சரியாச் சொன்னா வள்ளல்ங்குறவரு யாரு? தங்களைப் பெரிய மனுசங்களாகக் காட்டிக்கிட்டு சிந்திக்க விரும்பாத ஜனங்களை ஏய்க்கிறதுக்கும், தங்களுக்கு விருப்பமான நேரத்திலே பிறருக்குத் தர்றதுக்கு சௌகர்யமாக இருக்குற பொருளை எடுத்துக்கொடுத்து விட்டு நெஜமாகக் கொடுத்ததை விடப் பலமடங்கு கொடுத்ததாகக் கணக்குக் காட்டி, அந்தத் தொகையைவிட அதிகமான தொகை செலவு பண்ணி நாங்க என்னமோ வாரி வாரி வழங்கினதா விளம்பரம் செஞ்சு ஒரு பெரிய கூட்டத்தோட மனசுக்குள்ள இடம்புடிக்கப் பாக்குறவங்க. இதுக்கெல்லாம் வசதியாகத் தங்களைச் சுற்றி இருக்கிற லட்சோப லட்சம் பேரை வறுமைக்குழிக்குள்ளே வச்சிருக்கிறவங்க. வள்ளலுங்க எல்லோருமே நல்லவங்கன்னு நெனக்கிறமே அது தப்பு. வள்ளலுங்க தங்களுடைய வஞ்சகத்தால் வறுமையை ஊட்டி வளர்க்கிறவங்க. தன்மானமுடைய சுதந்திர நாட்டோட, குடிமக்கள் நாம்பங்றது உண்மையானா, இப்படிச் சும்மா எதுனா குடுத்தா வாங்கிக்கலாமுங்கற நெனப்பை முதல்ல ஒழிக்கனும்"[75]

என்று பதிவு செய்கிறார் திலகவதி. சுசீலா சொல்லிய சொற்களைக் கேட்ட கட்டடத் தொழிலாளர்கள் தாம் இதுவரை பெற்றுவந்த இலவசங்களை ஒதுக்கித் தள்ளுவதையும் இனிமேல் தன்மானத்தோடு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் சுயஉணர்வினைப் பெறுவதனையும் இப்புதினத்தில்,

> "அதுவரை கேட்டுக் கொண்டிருந்தவர்கள் நெஞ்சுக்குள் வெளிச்சம் விழுந்தது. அந்தக் கணம் வரை தலைவர் தரப்போகிற இலவசக் குடத்துக்கு டோக்கன் வாங்க உள்ளூர் அரசியல் பிரமுகரை அணுகவேண்டும் என்று அவசரப்பட்டுக் கொண்டிருந்தவர்கள் அதைப்பற்றி மறுபரிசீலனை செய்ய ஆரம்பித்தார்கள். இலவசமாக எதையும் ஏற்றுக்கொள்வது தன்மானத்தை இழந்து கையேந்துகிற பிச்சைக்காரச் செயல் என்றல்லவா சொல்லிவிட்டாள்"[76]

என்று குறிப்பிடுகிறார் திலகவதி. அரசியலில் பெண்களுக்கு 33மூ சதவிகித இடஒதுக்கீடு வழங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை நீண்ட காலமாகப் பேச்சளவிலேயே இருந்து

வருகிறது. பெண்களுக்கு இடஒதுக்கீட்டின் அடிப்படையில் அரசியல் பங்களிப்பினைத் தருவதன் மூலம் பெண்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் பெறுவது சாத்தியமாகும். அரசியல் பங்களிப்பைத் தொடர்ந்து ஆட்சி அதிகாரப் பங்கேற்பதற்காகத் தங்களைத் தகுதிப்படுத்தும் முகமாகத் தலைமைப் பண்பை வளர்ப்பது குறித்துப் பல புதினங்கள் பதிவு செய்துள்ளன.

**தலைமைப் பண்பு வளர்த்தல்**

தாழ்த்தப்பட்ட விவசாயக் கூலித்தொழிலாளர்களை இணைப்பதற்குப் படித்த, அறிவுத்திறம் பெற்ற இளைஞர்கள் ஒவ்வொரு ஊரிலும் தேவை. கற்றறிந்த செயலாக்கம் மிக்கவர்களாலேயே தங்கள் சந்ததியினரை வழிநடத்திச் செல்ல முடியும். அறியாமையில் சிக்கித் தவிக்கும் மக்களின் அறிவுக்கண் திறக்கச் செய்ய முடியும். இதன் ஒரு கூறாகவே, புதினங்களில் ஒடுக்கப்பட்ட மக்களை ஒன்றிணைத்துச் செயலாற்றும் தலைமைப் பண்புள்ள மக்களின் தேவை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த மக்கள் அறிவிலும், சிந்தனைத் திறமையிலும் பின்தங்கியவர்கள்; அவர்களால் ஒருபொழுதும் முன்னேற இயலாது என்ற பிற்போக்குத்தனமாக நம்பிக்கை தோல் ஷாப் முதலாளிகளின் மனத்தில் நிறைந்திருந்ததை,

> "தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த எந்த மனிதனும் தொழில் நடத்தத் தகுதியற்றவர்கள். அந்த அளவுக்கு அவர்களுக்கு மூலதனமும் கிடையாது. புத்தியும் கிடையாது என்பது அப்துல்லா மட்டுமல்ல, பெரும்பாலான தோல் ஷாப்பு முதலாளிகளும் எண்ணலானார்கள்"[77]

என்று காட்டுகிறார் டி. செல்வராஜ். இன்றைக்குப் படித்த இளைஞர்கள் பெரும் பதவிகளை வகிப்பதும், தொழிற்சாலைகளை நிர்வகிப்பதுமாக நிலைக்கு உயர்ந்துள்ளமை இவ்வாறான பேச்சின் எதிர்வினையால் நிகழ்ந்ததாகும்.

இந்திய ராணுவத்தில் பணியாற்றிவிட்டு, கிராமத்துக்குள் திரும்பி வந்த ரெங்கன் தாழ்த்தப்பட்டவர்களுக்கான உரிமைகளைப் பற்றியும் சட்டங்களையும் அறிந்தவனாக உள்ளான். இதனால் அவனால் ஆதிக்கச்சாதியினர் செய்யும் அட்டூழியங்களை எளிதாக எதிர்கொள்ள வழி ஏற்படுகிறது. தான் கற்ற கல்வியால் அவன் அவ்வூரின் பிள்ளைகளுக்கு நல்லதோர் வழிகாட்டியாகத் திகழ்ந்தான் என்பதனை 'மலரும் சருகும்' புதினத்தில்,

> "பட்டாளத்து ரெங்கன் என்றால் அந்த ஊர் பறைச்சேரியில் சின்னஞ்சிறு குழந்தைக்குக் கூடத் தெரியும்"[78]

என்பதன் வழியாக இராணுவீரன் பெறும் மதிப்பும் மரியாதையும் காட்டப்படுகிறது.

**இலட்சிய மாந்தன் உருவாக்கப்படுதல்**

மக்கள் எல்லோரும் தங்களுக்கான தேவைகளைப் பிறரைப் பார்த்தே கற்றறிந்து கொள்கின்றனர். இதனால் இலட்சிமாந்தர்கள் அவரவர் இருப்பிடங்களிலிருந்தே உருவாக்கம் பெறவேண்டும். அப்போதுதான் தம்மாலும் சிகரங்களை எட்ட முடியும் என்ற நம்பிக்கை உருவாகும். தாழ்த்தப்பட்ட சமூகத்திலிருந்து உயர்ந்து இராணுவ வீரனாகப் பணியாற்றி, மீண்டும் தன் கிராமத்திற்கு வந்து, அந்த மக்களுக்குப் பொதுவுடைமைக் கருத்துக்களை எடுத்துரைத்த விளங்கிய ரெங்கனை ஊர்மக்கள் பாராட்டி மகிழ்ந்ததை,

> "சேரி வாலிபர்களுக்கு மட்டுமென்ன, சேரிப் பெண்களுக்குக் கூட அவன் ஒரு லட்சிய மனிதனாகப் பட்டான். நகரத்துக்குச் சென்று கிராப்பு வெட்டிக்கொண்டு வரும் அவன், தலையில் எண்ணெய் வழியவழிய சீவிச் சிங்காரித்தவண்ணம் உள்பாடி தெரிய வாயில் சட்டையைப் போட்டுக்கொண்டு தெருவில் நடக்கும்போது, சேரிப்பெண்கள் மட்டுமல்ல, மேல்சாதிப் பெண்கள் கூட அவன்மீது ஆசைப்பட்டார்கள்"[79]

என்றும் காட்டுகிறார் ஆசிரியர். அடிமைப்பட்ட சமூகத்திற்கு இவ்வாறான தலைமையே தேவை என்பது இதன்வழி காட்டப்படுகிறது. சுயநலமில்லாத, தன் இனவிடுதலையை முன்நிறுத்தும் தலைமைப்பண்பின் துணையுடன் எதிரிகளை எளிதில் வெல்லலாம் என்பதும் இதன்வழியாக உணர்த்தப்-படுகிறது. அவ்வகையில் பொதுவுடைமைச் சிந்தாந்த வளர்ச்சியில் புதினங்கள் தலைமைப் பண்புள்ள தலைவர்களை உருவாக்கியதில் சிறப்பிடம் பெறுவது புலனாகிறது.

'செந்நெல்' புதினத்தில் இடம்பெறும் கண்ணுசாமி, விவசாயக் கூலிகளை ஒன்றிணைத்து, மிராசுகளுக்கும் அவர்களது செயல்பாடுகளுக்கும் எதிராகத் துணிந்து செயலாற்றுவதையும், அதனால் எழும் நன்மைகளையும் ஊர்மக்களே வியந்து பாராட்டுவதனை,

> "புத்திசாலிப்புள்ள ஊருக்கே வழிகாட்டிக்கிட்டு நிக்கிது"[80]

என்னும் பகுதியால் காட்டுகிறார் ஆசிரியர்.

காலம்காலமாக அடிமைப்பட்டுக் கிடந்த ஒடுக்கப்பட்ட மக்கள் வயல்களில் கூலிகளாகவும், துப்புரவுத் தொழிலாளர்களாகவும், கடுமையான உடலுழைப்பில் ஈடுபடும் மக்களாகவும் இருந்து வருகின்றனர். இந்நிலை மாற்றம் பெறுவதற்கு ஓரே வழி இவர்கள் தொழிலில் மேன்மை பெறுவதுதான். சிந்திக்காமல் செயலாற்றி வருவதே இவர்களைக் கல்வியறிவற்றவர்களாகவும், சுயமாகச் சிந்திக்கத் திராணியற்றவர்களாகவும் ஆக்கி வருகிறது. மேலும் இவர்கள் அரசியலில் கால்பதித்து வெற்றி காணாமைக்கு ஒரு காரணமாக அமைந்திருக்கிறது. தொழில் சமஉரிமை பெறும்போது தொழிலாளர்கள் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படும் என்பது மறுக்கவியலாத உண்மையாகும். இதனைக் 'கூகை' புதினத்தில் இடம்பெறும் பேச்சியின் கூற்றாக,

“பட்டிக்காட்டுல நாங்க இருந்தப்போ எங்க கையில மம்பட்டியும் களைவெட்டியும் கோடாலியும் பண்ணருவாளும் கடகாப் பெட்டியும் இருந்துச்சு. ஒங்க கையில காடு, தோட்டம், வயக்காடு அம்புட்டும் இருந்துச்சு. நாங்க ஒழச்சு ஓடாப் போனதுதான் மிச்சம். டவுனுக்குப் போயிப் பொழச்சுக்கிறலாம்னு ஊரவிட்டு வெளியேறிப் போனா எங்க கையில சாந்துச்சட்டியும் தார்ச்சட்டியும் ஜல்லி ஒடைக்க சுத்தியலும் சம்மட்டியும் மூட தூக்குற கொக்கியும் கெடச்சது ஒங்க கையில தீப்பெட்டிக் கம்பெனி, ஜின்னிங் பாக்டரி, காண்ராக்ட்டு, மெடிக்கல், ஆஸ்பத்திரி, பைனான்ஸ், கல்குவாரி, மணல்குவாரி, ஆட்டுச்சந்தை, மாட்டுச்சந்தை, பஸ் ஸ்டாண்டு எல்லாம் இருந்துச்சு, இதை எல்லாத்தையும் விட்டுட்டு சீரழிஞ்சுது போதும்னு தெகச்சு நிக்கும்போது, ஒவ்வொருத்தன் கிட்டயும் ஒரு கையில கட்சிக் கொடியவும் இன்னொரு கையில பிராந்திப் பாடலயும் திணிச்சுட்டீக, இனிமெ அதிகாரமெ ஒங்க கையில, நாங்க கூகையைப்போல மறைந்து, பயந்து, ஒளிஞ்சு, பதுங்கி…அடக் கடவுளே ஒனக்குக் கண்ணு இல்லையா? இந்த வேகாரிப் பயகலுக்கு நல்ல புத்தி குடுக்க மாட்டியா? காலம் பூராவும் இப்பிடியா சீரழியணும்”[81]

என்று காட்டப்படுகிறது. தொழிலாளர்கள் தொழில் மாற்றம் பெறவேண்டிய சூழல் இதில் காட்டப்படுகிறது.

**தன்னிறைவடைதல்**

ஒன்றுபட்ட உழைப்பாளர்களின் ஒன்றிணைந்த செயல்பாட்டினால் விளைந்த நன்மைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது ‘கூகை’ புதினம். தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்கெனத் தனியாகக் கிணறு வெட்டிக் கொண்ட நிகழ்வும், தங்களுக்கான நிலங்களில் ஒற்றுமையுடன் வேலைசெய்து ஈட்டியவற்றைச் சமமாகப் பங்கிக்கொண்டதுமான நிகழ்வுகள் பொதுவுடைமையின் தீவிரச் செயல்பாட்டினைக் காட்டுகின்றன. இதனால் நிகழ்ந்த விளைவுகளை,

“சாப்பாட்டுக்கு நெல் இருக்கு. துட்டுக்குப் பயறு பச்ச வெளஞ்சிருச்சு, டவுன்ல போயித் துட்டுக்கு வேலையும் செய்றாங்க, கையில துட்டு ஏறிப்போச்சு”[82]

ன்று காட்டுகின்றார் சோ. தர்மன். நிலமற்ற கூலிகளாய் வேலை பார்த்து ஓய்ந்த மக்கள், சொந்தமாக நிலங்களை ஏற்படுத்திக் கொண்ட பின்னர் நிகழ்ந்த மாற்றத்தை இதன்வழி தெளிவுறுத்துகிறார். இவ்வாறு ஒவ்வொரு தேவைக்கும் தொழிலாளர்கள் கூடி இணைந்து பணியாற்றினால் எளிதில் தன்னிறைவினை எட்டலாம் என்ற நம்பிக்கைச் செய்தி இதன்வழி உணர்த்தப்படுகிறது.

தொழிற்சங்கங்கள் கற்றுத்தந்தவை ஏராளம். காலம் காலமாக அடிமைகள் போல அகத்திலும் புறத்திலும் வாழ்ந்து வந்த கூலித் தொழிலாளர்கள் உரிமைகளைப் பெற்று

மனிதன் பெறத்தக்க வாழ்வியல் வளங்கள் எல்லாவற்றையும் பெறத் தொடங்கிவிட்டனர். கல்வி, வேலை வாய்ப்பு, நாகரிகமான வாழ்க்கை என எல்லாவற்றையும் அடையத் தொடங்கி விட்டனர். தொழிலகங்களில் தொழிலாளிகளுக்கெனத் தனியான உடை வழங்கப்பட்டு வருகிறது.

ஒடுக்கப்பட்டவர்கள் எப்போதும் அழுக்குப்படிந்த கீழ்மையான ஆடைகளையே அணியவேண்டும் என்றிருந்த நிலைமை மாறி, தற்போது தங்கள் எதிர்ப்பினைத் தாம் அணியும் ஆடைகளின் வழியாகக் காட்டத் தொடங்கியுள்ளனர் என்பதனைக் 'கூகை' புதினத்தில்,

> "என்ன சோப்புக் கீப்புப் போட்டு ரொம்ப பொடுசாக் குளிக்கிறாப்புலருக்கு. துட்டிக்கா இல்ல கல்யாணத்துக்கா?
>
> ......
>
> துட்டிக்குப் போனா சோப்புப் போடக்கூடாதுனு சட்டமால இருக்கு, ஒன்னய மாதிரி செக்கடிக்கிற பய மாதிரி அட்டுப்பிடிச்ச வேட்டியோடயும் கத்தாழ நாத்தத்தோடயும் போகச் சொல்றயா?"[83]

என்று காட்டுகிறார் சோ. தர்மன். சாதிக்கொரு தொழில் என்ற நிலையும் மாற்றம் பெற்றுள்ளது என்பதனைக் 'கோவேறு கழுதைகள்' புதினம்,

> "முன்பு பறையர்களுக்குக் குடித்தெருப் பரியாறி முடிவெட்டுவதில்லை. டீக்கடையில் கூட அவர்களை நுழையவிட்டதில்லை. புளிய மரத்தடியில், வேப்ப மரத்தடியில் உட்கார்ந்து தாங்களே வெட்டிக்கொள்வார்கள். ... ஊரில் இப்போது நிறைய கடைகளை வெளியூர் ஆட்கள் வைத்து வித்தியாசம் காட்டாமல் வெட்டுகிறார்கள்"[84]

என்று எடுத்துரைக்கிறது.

**வாழ்வியல் முன்னேற்றமும் பொதுவுடைமையும்**

வாழ்வியல் முன்னேற்றம் என்பது பொருளாதாரத் தன்னிறைவு சார்ந்தே அமைகிறது. உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் என்பவை அத்தியாவசியமான அடிப்படைப் பொருள்களாக அமைந்திருக்க, அதற்கடுத்த நிலையில் அமைவது யாவும் வசதி வாய்ப்புகளாகவே இருக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. மாறிவரும் கிராமங்களின் நிலையினையும், ஒடுக்கப்பட்ட மக்களின் வளர்ச்சியையும் 'கூகை' புதினத்தில்,

> "இப்ப ரெண்டுப் பயக சைக்கிள் வேற வாங்கிட்டான். நாலு பயக கோயில்பட்டி பள்ளிக்கூடத்துப் படிக்கப் போறான். முந்தி மாட்டுவண்டியிலக்கூட ஏறிப் பத்தமாட்டான். இப்ப கிணிங்கிணிங்னு மணியடிச்சுட்டுப் பயக சைக்கிளவிட்டு எறங்காமப் போறான்"[85]

என்று எடுத்துக்காட்டுகிறார் சோ. தர்மன்.

காலம்காலமாகப் பரம்பரையாகச் செய்துவந்த தொழில்களைச் செய்வதற்கு இன்றைய காலகட்டத்தில் படித்த இளைஞர்கள் முன்வருவதில்லை. தொழில்முறைச் சமூகங்களின் இழிநிலைப் போக்கே இதற்குக் காரணம் ஆகும். விவசாயக் கூலித் தொழிலாளர்கள் தங்கள் பரம்பரைச் செய்தொழிலை விடுத்து, மாற்றுத்தொழிலுக்குச் சென்றுள்ளதால் முன்னேற்றம் கண்டு வருகின்றனர். இதனால் அவர்களது பொருளாதாரநிலை மேம்பட்டுள்ளது. வாழ்வியல் வளம்பெற்றுள்ளது. அவர்களின் பிள்ளைகள் கல்விபெறுவதற்கும், அரசாங்கப் பதவிகளில் உயர்பதவிகளைப் பெறுவதற்குமான சூழல் உருவாகியுள்ளது. இத்தகைய மாற்றத்தினைக் கண்டு ஆதிக்கச்சாதிகளே அஞ்சுவதனை, 'கூகை' புதினத்தில்,

> "யாருக்கும் வேலைக்கு வரமாட்டம்னு சொல்லிட்டாங்க. பரம்பரையா இருந்த சாவு வீட்டு வேலைக்கும் முடியாதுன்னுட்டாங்க, அம்மிக்குழவி சொமக்கிற பழக்கம் அறவே மறந்துபோச்சு, தனியா கெணறு வெட்டிக்கிட்டாங்க, தனியாக கட வச்சிக்கிட்டாங்க, போதாக் கொறைக்கு நம்ம செந்தூர்ப்பாண்டியக் கொன்னுட்டு கொஞ்சங்கூடப் பயமில்லாம லாந்துறாங்க, போறப் போக்கப் பாத்தா நாளைக்கு நமக்குச் சமதையா ஒக்காந்து கால்மேல் கால்போட்டுப் பேசுவாம் போலிருக்கு"[86]

என்று காட்டுகின்றார் சோ. தர்மன்.

**பெண்கள் எழுச்சி**

பணியாற்றும் களத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமவாய்ப்பும், சம உரிமையும் வழங்கப்பட வேண்டும் என்று பொதுவுடைமை இயக்கம் வலியுறுத்துகிறது.

"பெண்கள் மத்தியிலான கம்யூனிஸ்டுகளின் பணி, கட்சியின் தத்துவ மற்றும் உயிரோட்டமான பணிகளோடு எத்தனை இணைக்கப்பட்டிருந்தாலும், இந்தப் பணிகளை மேற்கொள்ள சிறப்பான அமைப்புகளும் தேவை என்பதும் தெளிவாக நிறுவப்பட்டுள்ளது"[87] என்பதில் பெண்களின் பாதுகாப்பிற்குத் துணையாக இருப்பது பொதுவுடைமை இயக்கமே என்பது தெளிவுறுத்தப்படுகிறது. இதற்கென ஜனநாயக மகளிர் அமைப்பு உருவாக்கப்பட்டு, பெண்களை ஒன்றுதிரட்டி, அவர்களின் கோரிக்கைகளை வென்றெடுக்கும் பணியில் முனைப்பு ஏற்படுத்தப்பட்டது. ஆண் - பெண் சமத்துவத்தை முன்னெடுத்துச் செல்லத் தொழிற்சங்கங்கள் நல்ல வாய்ப்பாக அமைந்தன.

**உரிமைகளை வென்றெடுத்தல்**

பெண் தொழிலாளர்கள் பெறத்தக்க உரிமைகள் எல்லாவற்றையும் பல்லாண்டுகளாக முதலாளிகள் அபகரித்துக் கொண்டு வந்ததைச் சமூக வரலாறுகள் எடுத்துரைக்கின்றன. கேட்காமலே கொடுப்பார்கள் என்ற நிலை மாறிவிட்டது. கேட்டால்தான் கிடைக்கும் என்ற நிலை உருவாகிவிட்டது. தொழிலாளர் பெறத்தக்க உரிமைகளைக் கேட்டுப்பெறுவதும்,

முதலாளிகள் கடமையாக அது இருப்பதும் ‘கல்மரம்’ புதினத்தில் இடம்பெறும் சுசீலாவின் வாயிலாக,

> “சுதந்திரம் வாங்கிட்டோம்னு சொல்றோம். சுதந்திரமான இந்த நாட்டிலே உழைக்கிறது நம்ப கடம. உழைச்சவனுக்குக் கெடக்க வேண்டியதைக் கேட்டு வாங்குறது நம்ப உரிம. அதுக்கு மேலயும் போய் உழச்சவனுக்கு ஊதியத்தையும், நல்ல உழப்பாளிய ஊக்கப்படுத்துறதுக்கு சலுகைகள், பரிசுகள் கொடுக்க வேண்டியது ஜனநாயக நாட்டிலே ஒரு அரசாங்கத்துக்குப் பெருமை. அத விட்டுட்டு எதுனா கொடுப்பாங்க’ன்னு பேசுறதெல்லம் ஒரு பேச்சா?”[88]

என்று சுட்டப்படுகிறது. பெண் தொழிலாளர்கள் தங்கள் உரிமைகளைக் கேட்டுப் பெற வேண்டும்; அதுவே அவர்கள் உரிமை என்பது இதன்வழி உணர்த்தப்படுகிறது.

**பாலினப் பாகுபாட்டைக் களைதல்**

பொதுவுடைமை இயக்கம் பெண்களைச் சமமாகவும் மதிப்புடனும் நடத்த வேண்டிய தேவையை வலியுறுத்துகிறது. வீடுகளிலும், பொது இடங்களிலும், தொழிலகங்களிலும், பணியாற்றும் இடங்களிலும் சமத்துவத்தை நிலைநாட்ட வழிவகை செய்கிறது. பெண்களுக்குத் தரப்பட வேண்டிய உரிமைகளாகப் பொதுவுடைமை இயக்கம்,

1. ஆண் - பெண் இருவரும் சமம். எனவே, சமத்துவத்தை நிலை நாட்டுதல்
2. உழைக்கும் பெண்களை உயர்த்துதல்.
3. தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்கும் பிரத்தியேக பாதுகாப்பு அளித்தல்.

என்பனவற்றைக் கற்றுத்தருகிறது.

பொது இடங்களிலும், அரசு அலுவலகங்களிலும் தொழிலாளர்களைச் சாதியின் பெயரால் அழைப்பதும், அவர்களை மரியாதை இல்லாமல் பேசுவதும், ஒருமையில் பேசுவதும் திட்டுவதும் அன்றாடம் நடைபெறும் நிகழ்வுகளாகவே இருந்து வருகின்றன. பெண்களை மரியாதைக் குறைவாக வாடி, போடி என அழைக்கும் பண்பாடற்ற செயல்பாட்டினைப் போராட்டங்களின் மூலமாகவே தடுக்க முடிந்தது என்பது வரலாறு. அவ்வாறு வெண்மணி கிராமத்தில் வயலில் கூலிக்கு வேலை செய்யும் பெண்களை மரியாதைக் குறைவாக அழைக்கும் பாங்கினையும், அதற்கு எதிர்ப்புக்குரல் கொடுத்த பெண்களின் நிலையினையும்,

> “அம்பத்தெட்டு ஆளுக வராளுங்க…ன்னு சொல்ல வந்ததைச் சொல்லாம முழுங்கினார். வாராளுங்க’ன்னு சொல்லவே அவரு மனசுக்குள்ள இப்பெல்லாம் கொஞ்சம் பயம் இருக்கு”[89]

என்று சுட்டிக்காட்டுகிறார். பொதுவுடைமை அறிவுறுத்திய பெண்விடுதலைச் செயல்பாட்டில் இது ஒன்றாகத் திகழ்வதனை இச்செயல்பாட்டின் மூலம் அறியலாம்.

பெண்களை ஒருமையில் மரியாதைக் குறைவாகப் பேசுவது தொடர்ந்தால் அது போராட்டத்தின் மூலமாகவே தீர்க்கப்பட வேண்டும் என்ற அறிவுறுத்தலை,

> “போன சித்தரை மாசம் ஆளுபடைங்க தொண்டு தேவூருல நடந்த கூட்டத்துக்குப் போகும்போது கூப்புடாதே... கூப்புடாதே... அவ, இவ, வாடி... போடி'ன்னு கூப்புடாதேன்னு கோஷம் போட்டுக்கிட்டு போனது அவரோட நெனப்புல வரவும் தான் வாராளுங்கங்கிறத சொல்லாம முழுங்கினாரு வேலுநாடாரு.”[90]

என்று பதிவுசெய்கிறார் பூமணி. தொழிலாளர் ஒற்றுமையால் பண்ணையார்களின் ஆதிக்க வெறியை அடக்கமுடியும் என்பதனை,

> “இதுவரைக்கும் நம்ம மேல ஏறி சவாரி செஞ்சிக்கிட்டு இருக்கிறத கேள்வி கேக்குற தெம்பு நமக்கு வந்துடுங்கற பயந்தான். அத வெளியே காட்டிக்காம மெரட்டிப் பாக்கிறாங்க. இப்ப நாமும் கொஞ்சம் நெஞ்ச நிமித்திப் பேச ஆரம்பிச்சிட்டோம்ன்னா அவனுங்க பாடு வங்கணம்தான். அதப் புரிஞ்சிக்கட்டவனுங்க நம்பள குனிய வச்சி முள்ளெலும்ப ஒடிக்கத்தான் பாக்கிறானுங்க. விசுவாசமா இருக்கிற நம்மவங்களுக்கு அவனுங்க நாயிக்கு எலும்புத்துண்டு போடுறாப்போல போட்டு நிமிர விடாம குட்டுறத தடுத்து ஆவனும்மா”[91]

என்று எடுத்துரைக்கின்றார் சோலை சுந்தரபெருமாள். சுரண்டல் இல்லாத ஒரு அமைப்பில் மட்டுமே மனிதன் சுதந்திரமாக வாழ இயலும். அதனால்தான், பெண் விடுதலை என்பது மானுட விடுதலையுடன் பின்னிப் பிணைந்தது என்பதை முன்வைத்து அத்தகைய சமூக, பொருளாதார முன்னேற்றத்திற்கான பாதையை வகுக்கவேண்டும். மானுட விடுதலையை சோசலிசம் மட்டுமே சாத்தியமாக்கும்.

தாழ்த்தப்பட்ட மக்கள் இதுவரை அனுபவித்து வந்த கொடுமைகளுக்கும் அடக்குமுறைகளுக்கும் விடிவு காலம் பிறக்க வேண்டும் என்றால் எதிர்த்தாக்குதல் நிகழ்த்தினால் மட்டுமே உரிய தீர்வு கிடைக்கும் என்பதனைச் சோ. தர்மன் ‘கூகை’ புதினத்தின்வழி எடுத்துரைக்கிறார்.

தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த பெண்களை அவர்களின் வீடுகளுக்குள் நுழைந்து பாலியல் வன்புணர்ச்சி செய்யும் முத்தையாப்பாண்டியனின் அடாத செயல்களைக் கண்டு மனம் வெறுத்த நிலையில் அவனுக்குத் தக்க தண்டனை தரும் நிலைப்பாட்டினை இப்புதினத்தில் பதிவு செய்துள்ளார்.

தன் மகளைப் பாலியல் வன்கொடுமை செய்ய வந்த முத்தையாப் பாண்டியனைச் சண்முகம் வதைத்து, தகுந்த தண்டனை கொடுத்து, தைரியத்துடன் வெளியேறியதை,

> “குடிசைக்குள் புகுந்து வெள்ளையம்மாளைத் தூக்கி வந்தான். வாசலுக்கு வெளியே தலைநீட்டிக் கிடந்த முத்தையாப்பாண்டியனின் உடலை வீட்டுக்குள் தள்ளிக் கதவைப் பூட்டினான். சக்கிலியக்குடி தீப்பற்றி எரிந்தது. தீ நாக்குகள் சுழன்று ருத்ரதாண்டவமாடின. ஜனங்கள் திரண்டு வந்தார்கள்.
>
> அத்தனை உடைமைகளையும் இழந்து மானத்தை மட்டும் சுமையேற்றி நடந்தார்கள் சக்கிலிய ஜனங்கள்”[92]

என்று காட்சிப்படுத்துகிறார் சோ. தர்மன். மாதர் தம்மை இழிவு செய்வோரை வதைத்தல் எவ்விதத்திலும் கொலையின் பாற்படாது என்பதனைக் காட்டுவதாக இந்நிகழ்வு இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளது.

காலங்காலமாக அடக்குமுறைக்கும் ஆதிக்கப் போக்கிற்கும் உள்ளாக்கப்பட்டு வந்த தொழிலாளர் வர்க்கம், தான் இக்காலம்வரை இச்செயல்களுக்கெல்லாம் அடிபணிந்து வந்துள்ளோம் என்பதனை உணரத் தொடங்கியுள்ளது. அந்த உணர்வின் எழுச்சி பொதுவுடைமைக் கொள்கை முழக்கமாக உருப்பெற்று வளரத் தொடங்கியுள்ளது.

பெண்கள் தங்களைப் பாலியல் ரீதியாக யாரேனும் துன்புறுத்தச் செய்தால் அச்செயலுக்கு அஞ்சி அடங்கி ஒடுங்கி இருப்பதால் எந்தவொரு பயனுமில்லை. தம்மால் முடிந்த அளவுக்குப் போராடிப் பார்க்க வேண்டும். போராட்டம் இல்லையேல் வெற்றி இல்லை என்பதை உணர வேண்டும். எந்தவொரு எதிர்ப்பினையும் காட்டாது பயந்து ஒடுங்கிக் கொண்டிருந்தால், பெண்ணுக்குப் பாதுகாப்பு கிடைப்பது அரிதான செயலாகவே அமைந்துவிடும். அந்த வகையில் பெண்தொழிலாளர்களைத் தன் பாலியல் இச்சைகளுக்குப் பலியாக்கிக் கொண்டிருந்த முஸ்தபாவின் செயல்பாடுகளை அடக்குவதற்குப் பெண்ணே துணிந்து செயலாற்றுவது ‘தோல்’ புதினத்தில் காட்டப்பட்டுள்ளது.

> “பெண்மையைக் காப்பாற்றிக் கொள்ள அவளுள் வெறி பிறந்தது. காட்டேறியாக அவள் வெறிகொண்டு அவனை உதறித்தள்ளவும், தூக்கி வீசப்பட்ட பல்லியாகப் பறந்துபோய் அப்பால் விழுந்தான். அவனது பிடறியும் பின்னந்தலையும் புண்ணாக்கு ஆட்டும் ஆட்டுக்கல்லில் மோதியது. அவன் நிலை குலைந்து போனான்”[93]

என்பதில் தன்னுடைய கற்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் போராடும் பெண்ணின் எதிர்ச்செயல்பாடு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. பாதிக்கப்பட்ட பெண் தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காக நிகழ்ந்த கொலை இது என்று சொல்லி நீதிமன்றமும் அவளைத் தண்டனையிலிருந்து விடுவிப்பது இதன்வழியாகக் காட்டப்படுகிறது.

சிறைச்சாலையில் பெண் தொழிலாளர்கள் அடைக்கப்பட்டிருந்த அறையில் கலகம் செய்யும் அம்மாளு அம்மாளை எதிர்க்கஇயலாது ஒவ்வொரு பெண்தோழரும் உடல் நலிவுக்கு உள்ளாகின்றனர். தனியாளாக அவளை எதிர்க்கவியலாது தவிக்கின்றனர். ஒட்டுமொத்தப்

பெண்தோழர்களும் எதிர்த்து நிற்கும்போது அவளால் ஒன்றும் செய்யவியலாது அஞ்சி ஒடுங்குகிறாள். மார்க்சியப் பொதுவுடைமை கற்றுத்தந்த பாடமே பெண்தொழிலாளர்களை இவ்வாறு இயங்க வைத்தது என்பதனைத் ‘தோல்’ புதினத்தில்,

> “பெண் கைதிகளிடம் ஏற்பட்டிருந்த எதிர்பாராத ஒற்றுமையும் ஆவேசமும் அம்மாளு அம்மாளைக் கதிகலங்கச் செய்தது. சற்று நேரம் நின்றிருந்தாலே அவர்கள் அவளையும் அவளது பரிவாரத்தையும் பீறிப் போடுவார்கள் என்பது போல் பட்டது”[94]

என்று எடுத்துரைக்கிறார் டி. செல்வராஜ்.

‘கூகை’ புதினத்தில் இடம்பெறும் பேச்சி, தம்மைத் தாக்க வந்த நாயக்கரை அருவாளைக் காட்டி, எதிர்வினையாற்றுவதை,

> “எங்கப் பன்னி, அந்தா அந்தா நாயக்கரு தோட்டத்துல போயி முண்டிப் போட்டுச்சாம். நாய்க்கரு சண்ட போட்டு அம்மாள அடிக்க வந்தாரு, அம்மா அருவாளைத் தூக்கிக்கிட்டு வெட்டப் போனா, அவரு போயி போலீசக் கூட்டிட்டு வந்துட்டாரு”[95]

என்று காட்டுகிறார் சோ. தர்மன். பன்றி மேய்ந்தமைக்காக பன்றியின் உரிமையாளரைத் தாக்குவதும், தம்மால் எதிர்க்கவியலாத போது காவல்துறையின் உதவியை நாடுவதும் ஆண்டைகளின் செயல்பாடாக இருப்பதனை இதன்வழியாகக் காட்டுகிறார். பொறுத்துப் போவதால் எந்த நன்மையும் கிடைக்கப் போவதில்லை என்பதையும், பொங்கி எழுந்தால் மட்டுமே தீர்வு கிடைக்கும் என்பதும் இதன்வழியாக உணர்த்தப்படுகிறது.

தொழிலாளர்களில் பெண்கள் ஒன்றிணைந்து போராட வேண்டும். போராட்டத்தின் வழியாகவே இதுவரை தீர்வுகள் கிட்டியுள்ளன என்பதனை உணர்தல் வேண்டும். அடித்தட்டுப் பெண்களுக்குத் தீர்வு கிடைப்பதற்குப் போராட்டமே தீர்வாக அமையும் என்பது ‘கல்மரம்’ புதினத்தில்,

> “பெண்கள் எதயும் சாதிக்க முடியும்’னு காட்டுறதுக்கு எதச் செய்ய முடியுமோ அதயெல்லாம் செய்யணும். நான் மேல்தட்டுப் பெண்களப் பத்திச் சொல்ல வரல. அடித்தட்டுல வாழுற தொழிலாளி வர்க்கத்தப் பத்திச் சொல்றேன்”[96]

என்று காட்டப்படுகிறது. உழைக்கும் தொழிலாளர்கள் அனைவரும் தம்மை தொழிலாளர் சங்கத்துடன் இணைத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் தான் ஒரு தனியாள் இல்லை என்ற உணர்வு எழும். அதற்கான அடிப்படைத் தகுதி தொழிலாளர் சங்க இணைப்பே என்பதனை,

> “இவங்களயெல்லாம் முதல்ல நாம்ப தொழிற்சங்கத்தில் சேர்க்கணும். நாம்ப தனியா இல்லங்கற உறுதி இவங்களுக்கு வரணும்”[97]

என்று எடுத்துரைக்கிறார் திலகவதி. பயமில்லாத, நிம்மதியான வாழ்க்கை வாழ வேண்டும் என்றால் தொழிலாளர்களின் ஒற்றுமைதான் அதற்கு வழி ஏற்படுத்தித் தரும் என்பது,

"ஒருத்தன் ஒழப்ப ஒருத்தன் சுரண்டறத நாம்ப விடக்கூடாது.

சுசீலாக்கா சொல்றாப்ல நம்ப உரிமைங்கள நாம்ப போராடித்தான் அடைஞ்சாவணும்.

நாளைக்கு நமக்கு வேல தரமாட்டாங்களோன்னு பயந்து பயந்து இன்னிக்கிக் கெடக்க வேண்டிய சம்பளத்த வுட்டுடக் கூடாது"[98]

என்னும் கூற்றின் வாயிலாகப் புலப்படுத்தப்படுகிறது.

கட்டடத் தொழிலில் ஈடுபடும் பெண்கள் தங்களுக்கான உரிமைகளைப் போராட்டத்தின் வழியாகவே பெறமுடியும் என்பதனை உணரத்தொடங்கிய நிலையினைத் திலவகதி 'கல்மரம்' புதினத்தில்,

"நாம்ப எல்லோரும் அந்தக் காம்பவுண்டு வாசல்ல போய் உட்கார்ந்துக்கிறது. நம்ப யூனியன்காரங்க நம்பகூட வருவாங்க. நம்ம கோரிக்கய நிறைவேத்தாம அந்த ஆள் காம்பவுண்டுள்ளார நுழைய முடியாது"[99]

என்று எடுத்துக்காட்டுகிறார். அதிகாரிகளாக இருந்தாலும், முதலாளிகளாக இருந்தாலும் தவறுகளைச் செய்யும்போது தட்டிக் கேட்பதற்கு ஒன்றுபட்ட போராட்டக்குணமே துணைநிற்கும் என்பதனையும், மார்க்சியமே அதற்குத் துணைநிற்கும் என்பதனையும் 'கல்மரம்' புதினத்தில்,

"இருக்கட்டும் அவன் யாராயிருந்தா லென்ன?

ஒற்றுமப்பட்ட தொழிலாளி வர்க்கத்தவிட உலகத்தில் பலமானது எதுவுமே இல்லன்னு ஜீவா சொல்லியிருக்கார். காவேரியும் மற்றவர்களும் 'இது சாவில்லாத வார்த்தை' என்றார்கள்"[100]

என்று எடுத்துரைக்கிறார் திலகவதி.

சோசலிச நாடுகளில் அனைத்து வளங்களும் பொது உடமையாக்கப்படுகின்றன. இதனால் பெண்களுக்கு அவற்றை பெறுவதில் சிரமங்கள் குறைவு பெண் கல்வி, ஆரோக்கியம் ஆகியவை மிக முக்கியம் வாய்ந்தவை எனக் கருதப்படுகிறது. நூறு சதம் சமத்துவம் இல்லை என்ற போதிலும் அதை நோக்கிச் செல்வதற்குத் தேவையான அடித்தளத்தைச் சோசலிச வளர்ச்சிப் பாதை உருவாக்குகிறது.

காலந்தோறும் ஆதிக்கச் சக்தியே அடக்குமுறையைக் கட்டமைத்தும், ஏவியும் வந்துள்ளது. காலமாற்றத்தில் சமூக இயக்கங்கள் எதிர்கொள்ள வேண்டிய பிரச்சனைகள் ஏராளமாய் இருந்து வருகின்றன. அதற்கேற்ற வகையில் சமூக நடைமுறைக்கு

ஒவ்வாதவற்றைத் தள்ளியும், சமூக முன்னேற்றத்திற்கு ஏற்றவற்றைத் தூக்கிப்பிடித்தும் வாழவேண்டிய தேவை உள்ளது. ஆகையால் புதுப்புதுத் தத்துவங்களும், கோட்பாடுகளும் சமூகவிய-லாளர்களால் உருவாக்கப்பட வேண்டிய நிலைப்பாடு உள்ளன. அவ்வகையில் உருவானதே மார்க்சியப் பெண்ணியம் ஆகும். அது பெண்களுக்கு மனத்திடத்தையும் எதையும் தைரியத்துடன் செயலாற்றும் வல்லாண்மையையும் கற்றுத் தருகிறது.

> "அதயெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா மாத்திக்கணும் கன்னியம்மா. அவங்கவங்க சொந்தக் கால்லே நிக்கக் கத்துக்கணும்' என்றாள் சுசீலா.
>
> அக்கா நீங்கதான் அதைப் பண்ணனும். மொள்ளமா மாத்தணும் என்றாள் காவேரி"[101]

என்று 'கல்மரத்'தில் இடம்பெறும் பகுதி, பெண்கள் துணிவுடன் செயலாற்றப் பழகிக் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தக் காணலாம். இது ஒரே நாளில் நிகழக்கூடிய அற்புத நிகழ்வல்ல என்பதனையும், காலப்போக்கில் மெல்ல மெல்ல வளர்த்துக் கொள்ள வேண்டிய பண்பாகும் என்று உரைப்பதனையும் இச்செயல்பாட்டின்வழி அறியலாம்.

**பொதுவுடைமை பேணுதல்**

தொழிலாளி x முதலாளி; இருப்பவன் x இல்லாதவன் நிலைமை மாறவேண்டும் என்றால், இருப்பவன் தன்னிடம் நிறைந்துள்ள பொருள்களைப் பிறருக்குப் பகிர்ந்தளிப்பதன் வாயிலாகச் சாத்தியமாக்க முடியும். இது நடைமுறைச் சாத்தியம் இல்லை. ஆதலால் தொழிலாளர்கள் ஒன்றிணைந்து சங்கமாக இணைந்து போராடினால் மட்டுமே முதலாளிகளின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும். அதற்கான தீர்வுகளைத் தொழிற்சங்கமே உருவாக்கும்.

உலகில் உள்ள பொருள்கள் யாவற்றையும் சமநிலைப்படுத்தினால் மட்டுமே தொழிலாளர் நிலைமை மாற்றம் அடையும் என்பதனைச் சிங்காரவேலர்,

> "ஆதிகாலம் தொட்டு உலகநாகரிகம் இவ்வாறு தான் இருந்திருக்கிறது. ஆனால் இயந்திரத்தொழில் வலுத்த பின்னர் தொழிலாளியின் நிலைமை இன்னும் கேடாகிவிட்டது. இப்பொது தொழிலாளி தன் திக்கற்ற நிலையை உணர்ந்து தற்காப்புச் சிகரங்களை நாட்ட ஆரம்பிக்கிறார்கள். நாளுக்கு நாள் வறுமையையும், முதலாளியின் கொடுமையையும் எதிர்த்துத் தனது உரிமைகளுக்காகப் போராடத் தொழிலாளிக்கு இச்சங்கத்தையன்றி வேறுசாதனம் கிடையாது. இவ்வாறாக முதலாளிகள் ஒரு புறத்திலும் தொழிலாளிகள் மற்றொரு புறத்திலும் சேர்ந்து போராட்டத்திற்குச் சித்தமாயுள்ளனர். உலகிலுள்ள பொருள் உற்பத்திச் சாதனங்களைக் கைப்பற்றிக் கொள்ளும் பொருட்டு இப்போராட்டத்தை ஒழிப்பதற்கு ஒரு வழிதான் உண்டு. உலகில் உயிர்வாழ்வதற்கு அவசியமான பொருள் தனிப்பட்டவர்களின் சொந்த சொத்தாக இல்லாமல் செய்து எல்லோருக்கும் சமமாகப் பயன்படுமாறு செய்யவேண்டும்"[102]

என்று அறிவு புகட்டுகிறார். இச்சிந்தனையின் வெளிப்பாடே பொதுவுடைமை என்பதாக வெளிப்படுத்தப்படுவதனையும் இதன்வழியாக அறியலாம்.

தெளிவாகக் கூறவேண்டுமானால், "பொதுவுடைமை என்பது உலகப் பொருள்களைக் கையாளும் ஒருவகையாகும். உலகப் பொருள்களைப் பல வகைகளில் கையாண்டு வருகின்றோம். சிலவற்றைப் பொதுவாகக் கைக்கொள்கிறோம். கடல், ஏரி, மண், காடு முதலிய உலகப்பொருள்களைப் பொது உபயோகமானவை என்று நினைத்து வருகிறோம். நகரங்களில் வழி ரோடு, வாராவதி முதலிய ஸ்தாபனங்கள் அனைவருக்கும் பொது உபயோகத்திற்கு ஏற்பட்டுள்ளன எனக் கருதப்படுகின்றன. மற்றப் பொருள்கள் யாவும் தனிஉபயோகத்திற்கே ஆண்டு வரப்படுகின்றன. நிலம், சுரங்கம், இரயில்வே, கப்பல், தொழிற்சாலை முதலிய ஸ்தாபனங்களைச் சிற்சிலரே ஆண்டு அனுபவித்து வருகின்றனர். உலகப்பொருள்களைக் கையாண்டு வரும் விதங்களில் பொதுவுடைமை என்பது ஒன்று"[103] என்ற விளக்கம் சிறப்பானதாக அமைகின்றது.

### தொகுப்புரை

உலகின் முதலாளித்துவம் நிறைந்த நாடுகளில் ஆதிக்கவர்க்கம் x அடிமை வர்க்கம் என்ற காலனித்துவத் தொடர்ச்சி நிலைபெற்று வந்து கொண்டுள்ளது. எங்கெங்கு அடக்குமுறைகளின் வீரியம் நிறைந்துள்ளதோ, அங்கெல்லாம் அடக்குமுறைகளுக்கு எதிரான புரட்சியும், கலகக்குரல்களும் தொடர்ந்து ஒலித்து வருவதனையும் இன்றைக்கும் உலக வரலாறுகள் நமக்கு எடுத்துரைக்கின்றன.

உலகில் எங்கெல்லாம் அடக்குமுறை நிலவுகின்றதோ, அங்கெல்லாம் விடுதலை பற்றிய தேவை உள்ளது. உலகில் முதலாளி x தொழிலாளி; உயர்வு x தாழ்வு; என்ற முரண்பாடுகள் உள்ளவரை அடக்குமுறைக்கு எதிரான எழுத்தின் தேவை இருந்துகொண்டே இருக்கும் என்பதனைச் சமூக வரலாறுகள் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறு சமூகக் கடப்பாடுடைய படைப்பாளர், சமூகத்தில் மக்கள் அனைவரும் சமம்; அவர்கள் உணர்ச்சிகளும், பயன் மதிப்புகளும் சமம் என்ற கொள்கை அடிப்படையிலும், சமூகப் பொருளாதார அரசியல் மாற்றங்களுக்கு ஏற்றவகையில் மாறி வரும் சமுதாயத்தைப் பிரதிபலிப்பதோடு நில்லாது, சமுதாயத்தை ஆக்கப்பூர்வமான வழியில் செலுத்தத் தூண்டும் கலைச் சாதனமாகவும் படைக்கும் இலக்கியமே மக்கள் இலக்கியம் அல்லது சமூக இலக்கியம் ஆகும். இத்தகு மக்கள் இலக்கியமாகப் பொதுவுடைமை இயக்க இலக்கியங்கள் திகழ்கின்றன.

பொதுவான தன்மைகளைக் கொண்ட ஓர் இனம், மற்றொரு முரண்பட்ட பொதுவான தன்மை கொண்ட இனத்துடன், பொருள் உற்பத்தி முறையில் சம நிலையை அடைவதற்குக்

காலம் காலமாகத் தொடர்ந்து நிகழ்த்தும் போராட்டமே ‘வர்க்கப் போராட்டம்’ ஆகும் என்று உரைக்கப்படுகிறது.

இந்த வர்க்கப் போராட்டத்தின் மூலமே வரலாறு உருவாகிறது என்றும், சமூகம் என்பதும் ஒன்றுக்கொன்று முரண்பாடான சக்திகளை நிலையாக அமைப்பதற்கான ஒரு தொகுப்பே என்று மார்க்ஸும், ஏங்கெல்ஸும் கூறுவது கருதத்தக்கது.

ஒவ்வொரு சமூகத்திலுமுள்ள முரண்பாடான சக்திகளைச் சுரண்டும் வர்க்கம், சுரண்டப்படும் வர்க்கம் என்று இனம் பிரிக்கிறது மார்க்சியம். அடிப்படையில் சுரண்டும் வர்க்கமாக முதலாளி வர்க்கத்தையும், சுரண்டப்படும் வர்க்கமாகத் தொழிலாளி வர்க்கத்தையும் மார்க்சியம் குறிப்பிட்டுச் செல்வதைக் காணமுடிகிறது.

பொதுவுடைமை இயக்கம், பொருளாதாரச் சமநிலையை அடைவதற்கு இருவர்க்கங்களுக்கு இடையேயான மும்முனைப் போராட்டங்களாகப் பொருளாதாரப் போராட்டம், அரசியல் போராட்டம், தத்துவப் போராட்டம் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

உழைக்கும் தொழிலாளர்களின் துயர் நீங்கும் வழிமுறைகளைத் தொழிலாளர்களுக்குக் கற்றுத் தந்தது பொதுவுடைமை இயக்கம் ஆகும். பொதுவுடைமை இயக்கம் வழியாகவே உழைக்கும் வர்க்கம் தங்கள் உரிமைகளைப் பெற்று வந்துள்ளது என்பது வரலாற்றியல் உண்மையாகும். தொழிற்சாலையின் பணி நிலை, உற்பத்தி, உபரி வருமானம், பணியாளர்கள், உழைப்புக்கேற்ற கூலி முறை, பணிநேரம், உபரி வருமானத்திற்கான கூடுதல் சம்பளம், பணிக்கொடை என பணியாளர்களுக்கான வாழ்வியல் வளங்கள் யாவும் பொதுவுடைமை இயக்கத்தால் ஏற்பட்டவை ஆகும். இதன் சிறப்பினை எடுத்துரைப்பதாகவும், தொழிலாளர்கள் ஒற்றுமையே எல்லாக் காலத்திற்கும் துணைநிற்கும் என்பதனையும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் காட்டுகின்றன.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட புதினங்கள் காட்சிப்படுத்தும் வர்க்கப் போராட்டமும் மானுட எழுச்சியும் குறித்த இயக்கச் சிந்தனைகள், சாதி சமத்துவ ஒற்றுமை ஏற்படுத்தல், வறுமை ஒழிப்பு, இழந்த நிலங்களின் மீட்டெடுப்பு, கல்வியால் மீண்டெழல், தொழிற்சங்கம் அமைத்தல், போராட்டங்கள் நடத்துதல், வெற்றி அடைதல், சட்டத்தின் வழியாக இழந்த உரிமைகளைப் பெறுதல், ஆட்சி, அதிகாரத்தில் பங்கேற்றல், தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பும் இழப்பீடும் வழங்கல் என்ற நிலைகளில் அமைந்துள்ளன.

பொதுவுடைமை இயக்கத்தால் ஒன்றிணைந்த தொழிலாளர்கள் பெற்ற எழுச்சிகள், தொழிலாளர்களிடையே நிலவிய தாழ்வு மனப்பாங்கை அகற்றியது, சமமாகப் பாவிக்க வைத்தது, சாதி ஒற்றுமையை ஏற்படுத்தியது, வர்க்கமாக இயங்க வைத்தது, எழுச்சி பெற வைத்தது, தவறுகளைத் தட்டிக் கேட்க வைத்தது, வீரத்தை வரவழைத்தது, எதிர்ப்பினைக் காட்ட வைத்தது, பெண் தொழிலாளர்களுக்குத் துணிவை ஏற்படுத்திக் கொடுத்தது, எதிர்ப்புக்

குரல் கொடுக்க வைத்தது ஆகிய நிலைகளில் உருவாக்கம் பெற்றமை ஆய்வுப் புதினங்களின் வழி தெளிவாகிறது.

தொழிலாளர் நலச் சங்கம் பெற்றுத் தந்த உரிமைகளாக, தொழிலாளர் பாதுகாப்பும், நலவாழ்வும் கிட்டியமை, அடிமை முறை ஒழிப்பு, பேச்சுவார்த்தையின் மூலம் தீர்வு காண்பது, உரிய இழப்பீடு பெற்றுத் தந்தது, பாட்டாளிகளை அரசியலில் பங்கேற்க வைத்தது, அரசியல்வாதிகள் தரும் இலவசங்களை மறுத்தல், தலைமைப் பண்பு வளர்த்தல். இலட்சிய மாந்தர் உருவாக்கல், தொழில் சமத்துவமின்மையை வென்றெடுத்தல். தன்னிறைவு அடைதல், உடை அரசியல் மாறுதல் ஏற்படுத்தல், பெண்கள் தங்கள் உரிமைகளை வென்றெடுத்தல், பாலினப் பாகுபாட்டைக் களைதல், பெண்களின் துயர் களைதல், பெண்கள் எழுச்சி பெறல், பெண்ணிய அறிவு புகட்டல், பொதுவுடைமை பேணுதல் முதலானவை புதினங்களில் இடம்பெற்றுள்ளதனைக் காணமுடிகிறது.

அடிமைகள். விவசாயக் கூலிகள். தொழிலாளர்கள் ஆகியோர் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் மலர்ச்சிக்கும் பொதுவுடைமை இயக்கமே எல்லா நிலைகளிலும் துணைபுரியும் இயக்கமாக இருக்கும் என்பது ஆய்வுப் புதினங்களின் ஒட்டுமொத்தப் பார்வையாக அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

